

# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு

## மூன்றாஞ் சிலம்பு

இதழாசிரிய கூட்டத் தலைவர்:

**கா. சுப்பிரமணியபிள்ளை,**

எம். ஏ., எம். எல்., அட்வகேட்:

திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக,
லிமிடெ

இரக்தாட்சி-குரோதன



The South India Saiva Siddhanta Works
Publishing Society, Tinnevelly Ltd.
Tinnevelly & Madras.

ரூ 5.

# உள்ளுறை

[* இக்குறியிடப்பட்ட பொருள்கள் மூன்றாஞ் சிலம்பில் முடிவுபெறாது நான்காவது சிலம்பில் தொடர்புபெறுவன.]

## திருவுருவப் படங்கள்



திருநெல்வேலி, ஸ்ரீ காந்திமதியம்மை கோவில் சந்நிதி

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள்தோறும் வெளிவருவது.


| | | |
|---|---|---|
| சிலம்பு ௫ | மெய்கண்டான் ஆண்டு-௭௱௨ தைத் திங்கள் 1925ஆம் ஜனவரி௴—பிப்ரவரி௴ | பரல் ௧ |


திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

---

## சைவசித்தாந்த சங்கம்

ஒவ்வொரு சமயத்தாரும் தத்தம் சமயத்தைப் பாதுகாத்தற் பொருட்டும், பரவச் செய்தற் பொருட்டும் சமயப் பேரவைகள் வகுத்துள்ளார்கள். கிறித்து சமயம், மகமதிய சமயம், புத்த சமயம் முதலியவைகளுக்குச் செம்மையான ஏற்பாடுகள் அமைந்துள்ளன. கிறித்து மதத்தில் அச்சமயக் கொள்கை கற பிக்கப்படாத சிறுவர் சிறுமியர்களில்லை. கிறித்து மதத்தார் வைத்திருக்கும் பாடசாலைகளில் ஒவ்வொரு மாணவனும் விவிலிய நூல் (Bible) வகுப்பிற்குப் போய்ப் பாடங்கேட்க வேண்டுமென்ற கட்டாயவிதி ஏற்பட்டுள்ளது. கிறித்துமதக் கொள்கை

யைப் போதிக்கும் ஆசிரியர்கள் யாவரும் அச்சமயநூற் பரிசோதனையிற் றேறியவர்களாகவே காணப்படுகின்றார்கள். அச்சமய நூற் பரிசோதனைகளும் படிப்படியாகப் பலவகைப் பட்டுள்ளன. பரிசோதனைகளில் தேறுவதுடன் அச்சமய அங்கத்தினர்களாகவும் இருந்தாலொழிய அச்சமய போதக ஆசிரியராதல் முடியாது. சைவசமயி ஒருவன் கிறித்து சமய பரிசோதனையில் தேறியிருந்தாலும் கிறித்துமத பாடசாலைகளில் அச்சமய போதகாசிரியராதற்கு இடம்பெறான். இவ்வித சமய போதனைக்கு மாத்திரமல்ல கோயிலில் வழிபாடுசெய்யும் குருக்களாக இருத்தலும் அச்சமய பரிசோதனையில் தேறாதவர்களுக்கு ஏலாதொன்றே. இவ்வாறு சமயக்கொள்கை உணர்ச்சியில்லாதவர்கள் சமயத்தைப் போதிக்கவாதல் சமயக் குருக்களாய் வழிபாடுசெய்யவாதல் இடம்பெறாதவண்ணம் செய்திருக்கும் நல்ல ஏற்பாடுகளினாலேயும், சமயத்திற் பிறந்த ஒவ்வொருவரும் சமயக்கொள்கையை எளிதில் அறிந்து கொள்ளத் தக்க வழிகள் வகுத்திருப்பதினாலேயும், தஞ்சமயக்கொள்கை பிற சமயத்தார் யாவரும் எளிதாக உணரும் வண்ணம் சிறு நூல்கள் பரவப் பெற்றிருப்பதினாலேயும் கிறித்து மதமானது தன்னியல்பில் தளராது தழைத்தோங்கி நிலவுகின்றது.

மகமதிய மதத்திலும் மகமதியர் யாவரும் தமது கொள்கைகளை அறியத்தக்க வழிகளும் சமய ஒற்றுமையும் சிறந்து விளங்குகின்றன. புத்தர்களும் தமது சமய சங்கத்தை மிகவும் போற்றுகின்றார்கள்.

இந்நாட்டிலே இந்து மதத்தார் என்று சொல்லப்படுபவர்களுள் சுமார்த்தப் பிராமணர்கள், வைணவப் பிராமணர்கள், மாத்துவப் பிராமணர்கள் என்னும் வகையார் தத்தம் சமயக்கொள்கைகளை நன்கு உணர்ந்திருக்கின்றார்கள். சுமார்த்தப் பிராமணர் தஞ்சமய அறிவில்லாத பிராமணரல்லாதாரிடத்தே சுமார்த்த மதமே இந்து மதம் என்றும், இந்து மதத்திற்கு வருணாசிரம தருமம் இன்றியமையாததென்றும் பிராமணர் ஒழிந்த ஏனையோர் சிறந்த சமய நூல்களைத் தாமே கல்லாது பிராமணரிடங்

கேட்டுக் கற்று அவர்வழி நின்று அவர்க்கே தான தருமஞ் செய்யக் கடவரென்றும் போதித்து அன்னோர் பலரைத் தமது சுமார்த்த மதத்தில் ஈடுபடச் செய்து விட்டார்கள். சிவாலயத்திற்குச் செல்வதினாலும், சிவசின்னங்களணிவதினாலும் சுமார்த்தப் பிராமணரும் தம்மதத்தரென்றும் தமக்குத் தலைவரென்றும் சைவசமயத்துட் பிறந்த பலர் தப்பெண்ணங் கொண்டு தமது சைவசமயக் கொள்கையைச் சிறிதும் உணராது ஆரியவருண ஒழுக்கத்தில் நம்பிக்கைவைத்து சுமார்த்தர் வழிநின்று அவர்க்கு வேண்டுவன யாவும் செய்து வாணாள் வீணாளாகக் கழிக்கின்றார்கள்.

இவர்கள் தமது சமயக் கொள்கையை அறிந்து கொள்வதற்குப் போதிய வாயில்களில்லை. சைவர் என்று தம்மைச் சொல்லிக் கொள்வதற் கேற்ப சிவசின்ன மணிகின்றார்களே யொழிய உண்மையில் மயக்கவுணர்ச்சி யுடையவர்களாய் சுமார்த்த மதத்தையே சைவசமய மென்று திரியக்கொண்டு அம்மதத்தலைவர்க்கு அடிமையாக இருக்கின்றார்கள். இவர்களது ஆசிரியன்மாரும் தமது சைவசித்தாந்த சமய உண்மை உணராதும், தாம்வணங்கும் கடவுள் யாரென்று அறியாதும், தஞ்சமய நூல் இன்னதென்று தேராதும் சுமார்த்த மதவலையிற் பெரிதும் சிக்குண்டு உழல்கின்றார்கள். இங்ஙனம சைவ சமயத்திற் பிறந்தவரும், சைவ சமய ஆசிரியர்களும் தமது சமய அறிவு சிறிதுமின்றி உழல்கின்ற பரிதாபநிலை பிற எம்மதத்தினரிடத்தும் எம்மத ஆசிரியரிடத்தும் இந்நிலவுலகத்தில் பார்க்க முடியாது. சைவசமயம் வளர்ப்பதற்காக எத்துணையோ சமய நிலையங்களும் அறநிலையங்களும் அளவிறந்த அருள் நூல்களும் ஏற்பட்டிருந்தும் சைவர்கள் அவற்றாற் சிறிதும் பயனெய்தாது ஒழியும் நிலை பாற்கடலுட் பிறந்த மீன் பாலை உண்ணாது அழுக்கை உண்ணுந் தன்மையதொக்கும்.

இரங்கத்தக்க இப்பரிதாபநிலை நீங்கும் வண்ணம் சைவ சித்தாந்த சங்கம் என்னும் ஓர் ' கழகமானது ' சைவசித்தாந்த சமயத்தின் விழுமிய கொள்கைகளை ஒப்புக் கொண்டு அக்-

கொள்கைக் கிணங்க ஒழுகுதலே தமது கடமை யென்ற கருத்துடையவர் யாவரும் ஒன்று சேரும் வண்ணம் திருநெல்வேலியிற்கண் நிறுவப் பட்டுள்ளது. அக்கழக அங்கத்தினர் ஒவ்வொருவரும் பின் வருஞ் சிறந்த கொள்கைகளை உடையவர்களாக இருத்தல் வேண்டும்:—

(1) சைவசித்தாந்த நூல்களுள் கூறப்பட்ட இலக்கணங்கள் உடைய தத்துவங் கடந்த முழுமுதற் கடவுளாய சிவபெருமான் தமது கடவுள் என்ற நம்பிக்கை.

கிறித்தவர்கள் பிதா, குமாரன், பரிசுத்த ஆவி என்பவரையும், மகமதியர் அல்லாவையும் வழிபடுவார்களே யன்றிப் பிற தெய்வங்களை வழிபடார். வைணவர்கள் மும்மூர்த்திகளிலொருவராய திருமாலை எத்தெய்வத்தினும் பெரிய கடவுளாக வழிபடுகின்றார்கள். சுமார்த்தர்கள் மும்மூர்த்திகளையும் கடவுட்பகுதியாக வழிபடுகிறார்கள். உண்மைச் சைவர்கள், 'சுமார்த்தர்களால் வணங்கப்படும் மும்மூர்த்திகளும் கடவுளல்லர், ஆன்மாக்களே' என்ற கொள்கையை யுடையவராயிருத்தல் வேண்டும். உலகத்திலுள்ள எல்லாவற்றையும் சிவபெருமான் இரண்டற்ற நிலையிற் கலந்து நடத்துவதால் தேவாரத்திலே அவர் 'மண்ணானாய், மலையானாய்' என்று கூறப்பட்டிருப்பது போல 'மும்மூர்த்திகளாயினை' என்று அவரைக் குறித்த இடத்தும் எப்படிப் பொருட்டன்மையால் அவர் மண்ணும் மலையுமாக மாட்டாரோ அவ்வாறே அவர் மும்மூர்த்திகளாகவு மாட்டார் என்று உணர வேண்டும். அது 'மண்ணல்லை, விண்ணல்லை' என்ற தேவாரத்தாலும், 'மூவருமறிகிலர் யாவர்மற்றறிவார்' 'மூவர் கோனாய் நின்றமுதல்' என்ற திருவாசகத்தாலும் அறியப்படும். ஆதலால் திரிமூர்த்திகளுக்கு வேறாகவே உள்ளவர் சிவபெருமான் என்பது சைவக்கொள்கையாகும். இனி சுமார்த்த சமயத்தாரும், 'இருபத்தெட்டு அல்லது இருபத்துநான்கு தத்துவங்களே உள்ளன, அவற்றிற்கப்பாற் பட்டவரே கடவுள்' என்று கூறுவர். ஆனால் தேவாரம், திருவாசகம், சிவஞானபோதம், சிவஞான சித்தியார் முதலிய சைவசித்தாந்த நூல்கள் முப்பத்

தாறு தத்துவங்களுங் கடந்த முழுமுதற் கடவுளே சிவபெருமா னென்றுங் கூறும். சிவ சத்திக்கு ஆண் வடிவம்பற்றி விஷ்ணு என்ற பெயர் இருந்தாலும் அச்சிவ சத்தியாய விஷ்ணுவை வைணவர் வழிபடுவதில்லை. இருபத்து நான்கு தத்துவங்களையுங் கடந்து இருபத்தைந்தாவது தத்துவத்திலுள்ள வாசுதேவனே வைணவருடைய பரம்பொருள். அப்பரம்பொருள் ஆன்மாவே, கடவுளல்ல. விஷ்ணு என்று கூறப்படும் சிவசத்தி சிவனோடு பிரிவில்லாததாய் முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்துள்ளது. அச்சிவசத்தியே வாசுதேவன் முதலிய உயிர்த் தெய்வங்களை இயக்குவது. இந்த உண்மையைச் சைவர்கள் யாவரும் மனதில் பதித்துக் கொள்ளுதல்வேண்டும்.

சுமார்த்தர்கள் ஆன்மாவையே கடவுள் என்றும் பரமாத்மா என்றும் கூறுகின்றார்கள். அவர்களுடைய ஆரவாரச்சொற்களினால் சைவர்கள் ஏமாந்துபோதல் கூடாது. சுமார்த்தர்கள் சிவாலயத்திலேயுள்ள கடவுள் மும்மூர்த்திகளுள் ஒருவராகிய உருத்திரன் என்கின்றார்கள். அவ்வுருத்திர மூர்த்தியையே அவர்கள் சிவனென்று வழிபடுகின்றார்கள். அக்கொள்கை சைவாகமத்திற்கும் சைவசித்தாந்த நூல்களுக்கும் மாறுபட்டது. ஆதலால் சிவாலயத்திலே வழிபடுகின்ற கடவுள் மும்மூர்த்திகளில் ஒருவரல்லர். அவர்களுக்கு வேறாய் முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்த சிவபெருமான் என்றும் அவருடைய சாரூபத்தைப் பெற்றமையால் மும்மூர்த்திகளில் ஒருவராய உருத்திரன் சிவனெனப்படுகின்றானென்றும் நம்பாது திருநீறு மாத்திரமணிவோர் சமயிகளல்லர் என்னுங்கொள்கையை சைவசித்தாந்த சங்க அங்கத்தினர் ஒவ்வொருவரும் கடைப்பிடிக்கவேண்டும்.

(2) 'அன்பே சிவம்' என்றுணர்ந்து தனக்கும் பிறவுயிர்களுக்கும் கேடு விளைக்கின்ற கள், ஊன் முதலியவற்றை விலக்கித் தூய உணவு கொள்ளுதல் இன்றியமையாத தென்ற நம்பிக்கை.

(3) சமயத்திற்கு அடிப்படையானது அறவொழுக்க மாதலால் அறவழி நிற்றல் இன்றியமையாத தென்ற கொள்கை.

(4) சைவ சமய சம்பந்தமான கிரியைகள் யாவற்றையும் சைவசமய ஆசிரியரைக் கொண்டே செய்வித்துக்கொள்ள வேண்டுமென்ற கொள்கை.

சைவ சமயிகள் என்று கூறிக்கொள்ளும் பலர் சைவசமயக் கொள்கையும், சைவசமயத்திற்குரிய தீக்கையும் இல்லாத சுமார்த்தப் பிராமணர், வைணவப்பிராமணர் முதலியோரைக்கொண்டு மணச்சடங்கு, இழவுச்சடங்கு முதலிய எல்லாச்சடங்குகளையும் செய்வித்துக்கொண்டு அந்த அன்னிய சமய ஆசிரியர் காலில் விழுந்து தமது இழிவையும் சமய உணர்ச்சி இல்லாமையையும் புலப்படுத்துகின்றார்கள். இது மிகவும் பரிதபிக்கத்தக்கது. இனியேனும் சைவசமய ஆசிரியர் என்பவர் நல்லொழுக்கமுடையவராய் சைவநூல் விதித்தபடி மூன்று தீக்கையும் ஆசாரியாபிடேகமும் உடையவராய் சைவசித்தாந்தக் கொள்கையை நன்குணர்ந்தவராய் இருத்தல் வேண்டுமென்று இவர்கள் தமது மனதிற் பதித்துக் கொள்வார்களாக. நல்லொழுக்கமும், சைவசித்தாந்தக் கொள்கை உணர்ச்சியுமாதல் எச்சைவாசிரியர்க்கு மிருத்தல் வேண்டும். அவைகளில்லாதவரைக் கொண்டு செய்விக்கும் கிரியைகள்யாவும் பயன்படா. ஆதலால் இக்கொள்கையைக் கடைப்பிடித்தல் சைவசித்தாந்திகள் யாவர்க்கும் ஒருதலையாக உரிய தொன்றும்.

மேற்கூறிய கொள்கைகள் அனைத்தையும் நம்புகின்றவர்கள் சைவசித்தாந்த அங்கத்தினராதற் குரியர். அக்கொள்கைகளை நம்புவதுடன் அறவழி நிற்பவராய், கள் ஊன் விலக்கியவராய் ஐந்தெழுத்துப் பேறு (தீக்கை) உடையவராய், சைவசமயத்தைப் பரப்புதற்குத் தம்மாலானவரை முயலுங் கருத்தினராய் இருப்பவர் யாவரும் ஒழுக்க அங்கத்தினர் எனப்படுவர். அவர் இச்சங்கத்தின் உட்பிரிவாகிய திருநெறித் தொண்டர் குழாத்தின் உறுப்பினராதற் குரியர். கொள்கையும் ஒழுக்கமுமே பணத்திலும் அதிகாரத்திலும் சிறந்தன. ஆதலால் சைவசித்தாந்த சங்கத்தின் அங்கத்தினராதற்குரிய கொள்கையில்லாதோர் பெரும்பொருள் உடையராயிருந்தும் சங்கத்தின் அங்கத்தின ராவதற்

பயனென்? அவ்வாறே கொள்கைக் கேற்ற ஒழுக்க மில்லாது பொருளும் அதிகாரமுமாத்திர முடையோர் திருநெறிக்குழாத்தின் உறுப்பினராவதால் பயனென்? கொள்கையும் ஒழுக்கமும் நிலைபெற்றவிடத்து முன்னியது முடித்தற்குரிய பொருளும் நல்ல கருவியேயாகும். அதுபற்றி இச்சங்கத்திற் சேர விரும்பும் ஒவ்வொருவரும் ரூபா ஒன்றிற்குக் குறையாமல் தம்மாலியன்றது கொடுக்கற் பாலர். கொடுத்த அளவில் அவர்கள் யாவரும் ஆயுள் அங்கத்தினராவர்.

மேலேகூறிய சைவக் கொள்கையுடைய எக்குலத்தாரும் எவ்வகையாரும் இச்சைவ சித்தாந்த சங்கத்திலே 'அங்கத்தினராக வேண்டுமென்றும், அங்ஙனம் எல்லா அங்கத்தினருங்கூடிய சைவசித்தாந்தப் பெருங்கழகமே சைவசமய நிலையங்களைப் பாதுகாக்கும் ஆற்றலுடையதாய் இருத்தல் கூடுமென்றும் ஈண்டுத் தெரிக்கப்படுகின்றது.

'மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்
றுதிசெயு நாயன்மார் தூய சொன்மலர்ப்
பொதிநல நுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை யுலகினில் விளங்கி வெல்கவே.'

---

# தமிழ் மொழி யாக்கம்

## I

செந்தமிழ் மொழி எல்லையற்ற சொற்களீட்டங்களை யுடையவோர் உயர்தனிச் செம்மொழி. அஃது இமயமுதற் குமரிவரை பரவியிருந்ததென்று கூறுவர் சிலர். இந்திய நாட்டின் தென் பகுதி யெங்கணும் வழங்கப்பட்டதென்பர் மற்றும் சிலர். எங்ஙனமாயினும், இப்போழ்து தமிழ் கூறும் நல்லுலகம் பண்டைத் தமிழுலகினும் சுருங்கிய எல்லைத் தென்பதில் ஐயம் சிறிது மின்று. குமரிக்குத் தெற்கிலிருந்த தமிழ் நாடுகள் பல கடலாற்

கொள்ளப்பட்டது பண்டைச் செய்தி. விரிந்த நிலத்தை ஒரு மொழியைத் துலக்காண்டவள் தமிழணங்கு.

அன்றியும் தமிழ் மிகத் தொன்மொழி. அம்மொழிக்கண் உள்ள சொற்கள் எண்ணிலடங்கா. அச்சொற்களும் காலத்தா லுருவினும் பொருளினும் எளிதிற் காணவொண்ணு வேற்றுமை கள் பல அடைந்துள்ளன. செம்மொழிகள் பலவற்றினும் சில சிறப்பியல்புகளையுடையது தமிழ்மொழியாம். அச்சிறப்பியல்பு களைப் பின்னர் இடம் நேர்ந்துழிக் கூறுதும். சொற்பெருக்கத் தில் தமிழின் மிக்குநிற்கும் மொழியொன்றுமில்லை : இணையாய் நிற்பதுமில்லை. அம்மட்டோ அதன் சீர்மை? அன்று: அது சொற்களை வேண்டுமேல் புதியனவாகப் படைத்துக் கொள்ளும் ஆற்றலுமுடையது. சொற்களுக்கு முதலாகவிருக்கும் முதல் நிலைகளை யெண்ணிலவாகவுடையது.

ஞாயிறும் திங்களும் தோன்றியகாலத்தே தோன்றிய மொழியாம் தமிழ். செந்தமிழ்மொழி இப்போழ்து வழக்கி லிருக்கும் மொழிகள் பலவற்றினும், எவ்வகையானும் முதிர்ந்த மொழியாதலின், அம்மொழிக்கண் உள்ள சொற்களில் உருவை யும் பொருளையும் அவைகளின் வேறுபாட்டையும், வேறு பாட்டின் வரலாற்றையும், உள்ளவாகாண்டற்குச் சிறிது முட்டுப் பாடு நேர்கின்றது. ஆனல் அதுசுட்டி அறிவுடையோர் மொழியாராய்ச்சி செய்யாது வாளாவிருத்தலும், அதன்கட் டளர் தலும் செய்யார். மொழியாராய்ச்சி தமிழ்மொழி யுணர்ச் சிக்கு இன்றியமையாது வேண்டப்படுவது ; அன்றியும் மதிநுட் பம் நூலோடுடையோர் விரும்புவதும் அது. உலப்பிலவாந் தமிழ்ச்சொற்களை முற்று மாராயப்புகுவார்க்கு யாண்டுகளும் உலப்பிலவாக வேண்டுமாதலின், ஈண்டு சில தமிழ்ச்சொற் களையே ஆராய்வதெங் கருத்து. இவ்வாராய்ச்சிக்கட் காணப் படும் முடிபுகள் முடிந்த முடிபுகள் அல்ல : அவை உண்மை காண்டற்கெழுந்த மனவெழுச்சியின் பலனெனக் கொள்க.

'தமிழ்' என்னும் சொற்குப் பொருள்கண்டாரும் பலர்: அவர்கள் கொண்டபொருளும் பல. அவையிற்றையெல்லாம்

இங்குவிரித்தற்கும் இடமில்லை: அவையுட் சிலவற்றையேனும், இங்குக் கூறுதிருத்தலும் முறையன்று. 'திரவிடம்' என்று வடமொழியாளர்கள் நம் செந்தமிழ்மொழிக் கிட்டபேரே நாளடைவில் 'தமிழ்' என உருத்திரிந்ததெனக் கூறி மகிழ்வர் ஒருசிலர். அஃது உண்மையற்ற வெற்றுரையென எவரும் எளிதில் அறிவர். செம்மொழியாம் ஒருமொழி பேசும் நன் மக்கள் தங்கள் மொழிக்குத்தாம் வேறுபேருமிடாது, தங்கள் நாட்டிற் பின்வந்து குடியேறிக் கலந்தவரும், கலந்தவக்காலத் தும் தங்களால் நன்குமதிக்கப்படாது அயலாராகக் கருதப்பட்ட வருமாகிய வடமொழியாளர்கள் தம்மொழிக்கிட்ட பேர் கொண்டே தம்மொழியைச்சுட்டினார்களெனின் அஃது எங்ஙனம் பொருந்தும்? அன்றியும் அதுபொருளாயின் தமிழ் நன்மக்கள் தம்மொழி சுட்டும் குறியீடு ஒன்றும் பண்டைக்காலத்துப் பெற் றிலரென்றேனும், அல்லது குறியீடு ஒன்று பெற்றிருந்தும் வட மொழியாள ரிட்டபேரே சாலுமெனக்கருதித் தங்குறியீட்டைக் கைவிட்டதனால் அதுவழக்கு வீழ்ந்ததென்றேனுங் கொள்ளல் வேண்டும்? அங்ஙனம் கொள்ளல் சாலுமா?, தமிழ் நன்மக்கள் தம்மொழிக்குத் தாமே பேரிட்டு வழங்கினரென்றும், அப்பேரே இன்றும் வழக்கிலுள்ளதெனக் கோடலே சாலும். மேலும், அக்கோளார் தம்மை, 'திரவிடம்' 'தமிழ்' என மாறியது யாங் ஙனம் என வினவுவார்க்கு, அவர் கூறும் விடை அவர்க்கே இனிமை பயக்குமல்லால், வேறெவர்க்கும் உண்மையின் நழுவி வீழ்ந்ததாகக் காணப்படும்.

வேறுசிலர் 'தமிழ்' என்பது இனிமையென்னும் பொருட்டு என்றும், இனிமை யுடையதாந் தன்மைபற்றித் 'தமிழ்' எனத் தம்மொழிக்குப் பெயரிட்டனர் தமிழர் என்றும் கூறுவர். தம் மொழியாந் தமிழ்மொழியின் இனிமை கண்டுவந்து, இனி மைக்கே 'தமிழ்' எனப் பெயரிட்டன ரெனலே சாலப்பொருத்த முடைத்து.

சிலர் அமிழ்தினினிய தமிழ் மொழியைத் தமிழர் 'அமிழ்து' எனப் பெயரிட்டாரென்றும், 'அமிழ்து' காலச் செலவில் 'தமிழ்' ஆயிற்றென்றும், 'அமிழ்து' 'அமிழ்து' எனப்

.பன் முறையடுக்கிக் கூறின் இயல்பாகவே 'அமிழ்து', 'தமிழ்' ஆகின்றதென்றும் கூறி மகிழ்கின்றார். இக்கொள்கை தானும், தோற்றத்திற் காணப்படுவதுபோல் அத்துணை உண்மையுடைய தில்லை, 'அமிழ்து'ம் 'அமிர்தம்' என்ற வடசொல்லின் திரிபு எனக் கோடல் பொருந்து மாதலானும், மீட்டும் வடசொற் பேராலேயே, வடமொழியாளர் கலப்பின் பின்னே தம்மொழிக் குப் பேரிட்டாரெனக் கோடல் வேண்டுமாதலானும், அங்ஙனம் கோடல் பொருந்தாதாகலானும.

'தமிழ்' என்ற சொல் தம் + இழு(ம்) என்ற இரண்டு தமிழ்ச்சொற்களின் சேர்க்கையாற் பிறந்த ஒரு சொற்றொடராம் எனக் கருத இடம் உண்டு. இனிய வோசை தழுவிய சொற் களும, இயல்புகளும் உடைய தம்மொழிக்குத் 'தமிழு' எனப் பெயரிட்டனரென்றும், அது 'தம்' எனும் சொல்லை எடுத்து ஒலித்தவிறல், இறுதிக்கணுள்ள 'உகரம்' நலிந்து கேடுற்றுத் 'தமிழ்' என்றாயிற் றென்றும் கொள்ளினும் இழுக்கில்லை. 'இழுமென் மொழியான்' எனப் பண்டையோர் கூற்றும் இங்கு நோக்கத்தக்கது.

தம்மொழி எனும் இரண்டு சொற்களாலாய சொற்றொடர் காலச் செலவில் 'தமொழி', 'தமிழி', 'தமிழ்' என்றாயிற்றென்று கொள்ளல் சாலும். ஆகவே தமிழர் 'தம்மொழி'யே தமிழாம் எனலே சிறப்புடைத் தெனத் தோன்றுகிறது.

தமிழ் மக்கள் வழங்கும் முறைப் பெயர்கள் பலவற்றை நுனித்து நோக்கின், அப்பெயர்களுட் பெரும்பான்மையன தன்மைப்பெயரும், வேறுபெயரும் சேர்ந்து, இரண்டும் ஒன்றாய் ஒருசொன்னீர்மையாய் வழங்குவதைக் காணலாம். எங்ஙன மெனிற்காட்டுதும் :

தம் + ஐயன் = தமையன்
தன் + ஐயன் = தனையன்
தம + முன் = தம்முன்
தம் + பின் = தம் பின் தம்பி (ன்)
தம்பி

இச்சொல் முதலில் தம்பின் என்றிருந்து, பின் 'தம்' என்ற சொல்லை எடுத்து மிக்கொலித்தலான், 'ன்' நலிந்து கெடுற்றுப் பின் தம்பியாயிற்று. 'எம்+பின்' னும், 'உம் + பின்' னும் அங்ஙனமே எம்பி, உம்பி யாயின. அங்ஙனமன்றி எம்+தம்பி 'எம்பி' யாயிற்றெனக்கோடல் சாலாது: அப்படிக்கோடல் 'தம்பி' யின் உண்மை வடிவினைக் காணுதார் செய்கையாம். தெலுங்கில் என்று 'தம்பினுகி' வேற்றுமை உருபேற்ற விடத்து வழக்கிலிருப் பதைக் காண்க.

தம் + ஐ = தம்மை : அம்மை
தன் + ஐ = தன்னை : அன்னை.
தன்றி

'ஐ' சிறப்பையும், சிறப்பினை யுடையவரையும் சுட்டுகின் றது. 'ஐயை' என்ற பண்டையோர் கூற்றுமிங்கு நோக்கத் தக் கது. தமக்கை, தங்கை 'தம் மோய்,' முதலிய சொற்களினும் தன்மைப் பெயரின் புணர்ச்சியைக் காணலாம். ஆதலின் தாம் உண்ணும் உணவினும், போற்றும் உயிரினும், தம்மொழியைச் சிறப்புடைத்ததாகக் கருதிய தமிழ் நன்மக்கள், தாம் வழங்கு மொழிக்கு, உரிமையான், 'தம்மொழி' யெனப் பெரியட்டார்கள் என்றும், 'தம்மொழியே' காலச்செலவில் 'தமிழ்' என்று ஆயிற் றென்றும் கூறுதல் தகும்.

(தொடரும்)

T. S. கந்தசாமி முதலியார்,
சாத்தூர்.

---

## திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கத்தின் 4-வது ஆண்டு நிறைவு விழாவில்

**(1-1-1925)**

தலைமை வகித்த சைவத்திருவாளர்

**C. K. சுப்பிரமணிய முதலியார், B.A., F.M.U.**

(வழக்கறிஞர், கோயமுத்தூர்)

அவர்கள் செய்த

# முன்னுரைச் சுருக்கம்

*"மனத்தகத்தான் தலைமேலான் வாக்கின் உள்ளான்*
*வாயாரத் தன்னடியே பாடுந்தொண்டர்*
*இனத்தகத்தான் இமையவர்தஞ் சிரத்தின்மேலான*
*ஏழண்டத் தப்பலான் இப்பாற் செம்பொற்*
*புனத்தகத்தார் நறுங்கொன்றைப் போதின் உள்ளான்*
*பொருப்பிடையான் நெருப்பிடையான் காற்றினுள்ளான்*
*கனத்தகத்தான் கயிலாயத்துச்சி யுள்ளான்*
*காளத்தியான் அவனென்கண் ணுளானே"*

வாகீசர்

*பெரியோர்களே! சகோதர சகோதரிகளே!!*

இம் மகாசபைக்குத் தலைமை வகிக்கும்படி உங்கள் அமைச்சர் எனக்கு எழுதியபோது எனக்கு ஒருவகையான மனக்கலக்கம் உண்டாயிற்று. ஏன்? பேரறிஞர் நிறைந்த கூட்டத்திலே தலைமைவகிக்க எனது மாட்டாமையே. ஆனால் கலங்கிப் பின்மனந்தெளிந்துகொண்டேன் உங்கள் அன்பும் ஆதரவும் எல்லாக்குறைபாடுகளையும் நிறைவாக்கிக்கொள்ளும் என்னும் துணிபால். தெய்வத்தமிழ்த் தென்பாண்டிநாட்டில் உள்ள பெருந் துணைவர்களா யுள்ள உங்களை எல்லாம் கண்டுகளித்துப் பெரும் பயன் அடையலாம் என்ற ஆசை ஒரு புறம் தூண்டவே எனது

தேக வசதியின்மையையும் கருதாது உடனே உங்கள் அழைப்புக்கு இணக்கமாகிய மறுமொழியை எழுதி விடுத்தேன். இப்பேரவையிலே தலைமை வகிக்குமாறு எனக்குக் கட்டளையிட்டமைக்குப் பெரிதும் வந்தனமளிக்கிறேன்,

இப்போது வரவேற்பு உபசாரப் பத்திரம் ஒன்று வாசிக்கப்பெற்றது கேட்டீர்கள். அதிலே என்மீது வைத்த அன்பினாலே பல நன்மொழிகளை நீங்கள் சொல்லியிருக்கிறீர்கள். அதிற் குறித்த குணஞ்செயல்களுக்கு நான் தகுதியுள்ளேனல்லனாயினும் அன்னனாகுக என்று பெரியார் கூறும் ஆசி மொழிகளாக அதை ஏற்றுக்கொண்டு அவற்றிற்காக மீண்டும் ஒரு முறை உங்களுக்கு வந்தன மளிக்கின்றேன்.

உங்கள் அமைச்சர் அறிக்கைப் பத்திரம் ஒன்று வாசிக்கக் கேட்டீர்கள். அதிலே தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினது சென்ற ஆண்டின் முயற்சிகளையும், அதைச்சார்ந்த தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தின் முயற்சிகளையும் தெளிவாய் எடுத்துக் கூறினார்கள். அவற்றைக்கேட்டு நான் மிகவும் களிகொண்டேன். இக்கழகத்தார் சைவ நூல்களைப் பதித்து வெளியிடுவதன்றியும் பிரசங்கங்களின் வாயிலாக சைவப் பிரசாரமும் தமிழ்ப் பிரசாரமும் நடத்திவருகின்றமையும், சாத்திரங் கற்பித்து வருகின்றமையும், தமிழ்ச்சர்வகலாசங்கமாக இதனை நிறுவ முயற்சித்து வருவதனையும் கேட்கத் தமிழ்மக்கள் யாவரும் களிகூர்வர். இதன்மூலமான புத்தக வெளியீடுகள் உயர்ந்த பதிப்புக்களாகவும் கண்கவர் வனப்பினவாகவும் உள்ளமையால் அமைச்சரவர்கள் அறிக்கையிட்டபடி கழகத்தாருக்கு வியாபாரமுறையிலும் ஆதாயம் கொடுத்திருப்பது மிகவும் மகிழ்ச்சியைத் தருகின்றது. இதன் சார்பாக ஒரு அச்சுக்கூடம் நிறுவப் பெறுதல்வேண்டுமென்பது மிக அவசியமாகும்

இனி இக்கழகத்தின் சார்பாகத் தாபிக்கப்பெற்ற இச் சைவ சித்தாந்த சங்கம் செய்துவரும் வேலைகளும் நமக்குக்களிப்பூட்டுவனவே யாம். முதலாவதாக முழுமதி, முளைமதித் தினங்களிலும், நாயன்மார்கள் குருபூசை நாட்களிலும் இன்னிசைக்கருவிகளுடன்

கதை உருவமான பிரசங்கங்கள் நடந்தன. இரண்டாவதாக, திருக்குறட் பாடங்களில் பரீட்சைகள் வைத்து அவற்றிற் றேர்ந்த மாணவ மாணவிகளுக்கு வெகுமதிகள் கொடுத்து வருதலால் இந் நாடெங்கும் திருக்குறள் பயிலப்பெற்று வரக்காரணமாயிற்று. மூன்றாவதாக, திருக்குற்றாலத் தலத்தில் சாரற்பருவகாலமகாநாடு என ஒன்று ஆரம்பித்து அதிற் பல பெரியார்கள் பெருஞ் சொற் பொழிவுகள்நிகழ்த்தி உபகரித்தமையும் நந்தனார்சரிதம், மாணிக்க வாசகர் சரிதம், சைவசமயம், சுந்தரமூர்த்தி மாண்பு, என்ற விசேட உரைகள் நிகழ்ந்தமையும் சேட்க உவகையூத்தது. நான் காவது முயற்சியாக நூற்கருவூலம் ஒன்று தாபித்து ஒழுங்கு செய் யப்பெற்று வருவதும் கவனித்து மகிழ்தற்பாலதேயாம். ஐந்தாவ தாக, நெல்லைத் திரு நெறித்தொண்டர் குழாம் என ஒன்று தாபிக் கப்பெற்று அதன் அங்கத்தினர் அரிய திருப்பணிகளை மேற் கொண்டு நடத்திவருதல் கழிபேருவகை பயப்பதாம். வாரங்களி லும் தினந்தோறுமாகக் குறித்த காலங்களில் இக்குழாத்தினர் திருவள்ளுவர் சாத்திரத்தைப் பரப்புதல், தமிழ்மறை ஓதல், ஓது வித்தல், கோல்லாமையைப் பரப்புதல், சிவசின்னங்களை யாவரும் அணியச்செய்தல், வீடுகளிற் சென்று பெண்பாலார்க்குச் சைவத் தமிழ்க் கல்வி பயிற்றுவித்தல் ஆதிய பதினொரு நோக்கங்களைக் கைக்கொண்டவர்களாய் மிகவும் ஆர்வத்தோடும் நடத்திவருவது நாம் எல்லாரும் போற்றத்தகுந்த முயற்சியாகும். இவ்வாறு கழக மும் சங்கமும் குழாமுமாகக் கூடி நடத்திவரும் உண்மைத் திருத் தொண்டானது இறைவன் றிருவருளாலே இனிது நிலவுவதாக.

சபையோர்களே!

நிகழ்ச்சிக்குறிப்பிலே தலைவர் முன்னுரை என ஒருபொருள் குறித்து அதற்குச்சிறிது காலமும் தரப்பெற்றிருக்கிறது. ஆத லால் முன்னுரையாகச் சில வசனங்கள் சொல்லவேண்டிய தவ சியமாகிறது. இச்சங்கமானது சைவசித்தாந்த சங்கம் என்று பெயர் பெற்றிருக்கிறது. சைவம் என்றால் சிவசம்பந்தமானது என்று பொருள். சித்தாந்தம் என்றபதம் முடிந்த முடிபு எனப் பொருள்தரும். சங்கம் என்றால் கூட்டம். எனவே சிவ சம்பந்த

மாணமுடிந்த முடிபாகிய உண்மைகளேயே கோட்பாடாகக் கொண்ட கூட்டம் என்பது இச்சங்கத்தின் பெயர்ப்பொருளாம். முடிந்தமுடிபு என்று சொன்னமாத்திரத்தாலே இந்த முடிப்புகளுக்கு மேற்பட்ட முடிபுகளும் கருத்துக்களும் வேறொன்றும் காணலாகாது என்பது போதரும். எனவே சைவசித்தாந்தத்திலே முடித்துக்காட்டும் கொள்கைகளை யொட்டி அவற்றிற்கு மேற்பட்டு நிற்கக்கூடிய உண்மைகள் வேறு எச்சமயத்தும் இல்லை என்பது சைவர்கள் கொள்கையாகும். ஆனால் என்ன சைவசித்தாந்திகள் என்பார் ஒரு சிறு கூட்டத்தினர். சிறு தொகையினர். உலகிலே கோடிக் கணக்கான பெருந்தொகையினராலே தழுவி நிற்கப்பெற்று கிறித்தவமென்ன மகமதியமென்ன பௌத்தமென்ன என்பன வாதி பலப்பல நின்று விளங்கவும் இவர் தம் கொள்கையே முடிந்த முடிபுகள் என்று சொல்லிக்கொள்வது கிணற்றுத்தவளை போன்ற நியாயமேயாகும் என்றும் இவர்கள் குறுகிய நோக்கமும் குறுகிய கொள்கையுமுடைய சிறு கூட்டத்தார் என்றும் சிலர் நம்மைப்பற்றிப் பேசுவார்கள். எதனையும் பெருந்தொகையாரைப் பின்பற்றியே கொண்டு நடக்கும் (Rule of the Majority) இக்காலத்தில் அவர் கூற்றுவலியுடைத்துப்போலவே காட்டும். ஆனால் உண்மை நிலை அதுவல்ல. பெருந்தொகையாரின் முடிபு என்பது போலி நியாயமேயாகும். உதாரணமாக உயிருடனிருக்கின்ற ஒருவன் உயிருடனிருக்கிறானா என்பதற்கு அபிப்பிராயங் கேட்டால் ஒரு கூட்டத்தில் அவன் உயிருடனில்லை என்று பெருந்தொகையார் சொல்லிவிட்டார்களானால் அவன் இறந்து பட்டான் என்று கொள்ளுதல் கூடுமோ? பொய்பேசும் ஒருவன் சொல்வன்மையினால் மெய் போலக் காட்டி விடுதல்கூடும். அது மெய்யாகிவிடுமோ? உலகிலே உண்மை ஞானி கோடிக் கொருவன் என்று சொல்லப்பெறுகின்றது. அப்படி அரிதாகி ஒருவனாகிய ஞானியின் கூற்றே மற்றெல்லாராலும் போற்றப்படும். இப்படி அறிவால் உயர்ந்தோருடையதே உலகம். "உலகமென்பது உயர்ந்தோர் மேற்றே" என்பது முதுரை. தொகையிற் பெருத்திருக்கிறதென்று கள்ளியைக் கைக்கொண்டு முள்ளியை விடுவாருமுண்டோ? ஆகவே

பெருந்தொகையார் என்ற கொள்கை பித்துப்பிடித்த புதிய உலகத்துக்கேற்குமேயன்றி உண்மையுலகிற்கு ஏலாது.

இது நிற்க. முடிந்தமுடிபு என்ற தகுதியைச் சைவசித்தாந்தத்திலே உள்ளபடி சிறிது ஆராய்ந்து பார்ப்போம். உலகத்தைப்பற்றியும் உலக வாழ்க்கையைப் பற்றியும் ஆராய்ந்து தாம் தாம் கண்ட முடிபுகளைப் பொறுத்தேதான் அந்தந்த சமயங்களின் உயர்வு தாழ்வுகள் நிற்கின்றன என்பது எல்லாரும் ஒப்ப வேண்டிய உண்மையாம். உதாரணமாக நாம் சாப்பிடுகிறோம். நாம் இருக்கிறோம். இதுபோலவே மற்று எல்லாம் உலகநிலையாம். கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்பது சிலர் கொள்கை. வேறு சிலர் அப்படியல்ல. நாம் வேறு. நாம் சாப்பிடுதல் இருத்தல் ஆகிய நமது (வினைகள்) செயல்கள் வேறு. இவைகள் இப்போது நிகழ்கின்றதுபோலவே நேற்று நிகழ்ந்தன. நாளையும் நிகழும் என்று செய்கின்றவனை வேறாகவும் செய்வினையை வேறாகவும் பிரித்து உணர்ந்து அது முன் பின்னாக மூன்று காலத்தும் நிகழுமாற்றை உணர்வார்கள். இவர்கள் முந்திச் சொல்லிய "கண்டதே காட்சி" கொள்கைக்காரர்களைவிட உயர்ந்தவர்கள் தானே. இனி இதற்கு மேலும் சிலர் செய்கின்றவர் வேறு, செய்கின்ற தொழில்—அல்லது வினை—வேறு, செய்வினையின் பயன் வேறு என்று மூன்று பொருள் காண்பார்கள். இவர்கள் மேற் சொல்லிய இரண்டு கொள்கைக்காரர்களைவிட உயர்ந்தவர்கள் என்பதில் என்ன ஆட்சேபனை? இனி, இம்மூன்றின் மேலும் வினையின் பயனை அறிந்து அவரவர்களுக்குக் கொடுப்பான் ஒருவன் உண்டு என நான்காவது ஒரு பொருளைக் காண்பார்கள் வேறு சிலர்.

(தொடரும்)

# சேக்கிழார் செய்யுண் மாட்சி

பெரியபுராணம் என வழங்கும் திருத்தொண்டர் புராணத்தை அருளிச்செய்த ஆசிரியர் சேக்கிழார், ஏறக்குறைய எண்ணூறு ஆண்டுகளின் முன்பு, தொண்டைமண்டலத்திலே புலியூர்க் கோட்டத்துக் குன்றத்தூரில் வேளாளர் குலத்தில் திருவவதாரஞ் செய்தருளியவர். அருண்மொழித்தேவர் என்னும் பிள்ளைத் திருநாமம் உடையவர். தாம் பிறந்தருளிய சேக்கிழார் குடிக்கு இணையற்ற பெரும்புகழ் விளைத்து, அக்குடிப் பெயராலே வழங்கப் பெறுபவர். அக்காலத்துத் தமிழகத்தே செங்கோலோச்சிய அநபாய சோழ வேந்தர்க்கு' முதலமைச்சராய்த் திகழ்ந்து, அம்மன்னர் பெருமான் உவந்தளித்த 'உத்தமச் சோழப் பல்லவன்' என்னும் பட்டமும் பெற்றவர். இவர் தம் அரசாகிய வளவர் பெருமானுக்குச் சிவனடியார்கள் வரலாற்றில் ஆர்வம் பெருகச்செய்து, பின் அவர் வேண்டிக்கொண்டவாறு சிதம்பரமெய்தித், திருச்சிற்றம்பலமுடையார் அருளிய 'உலகெலாம்' என்னும் மறையினை முதலாகக்கொண்டு திருத்தொண்டர் புராணத்தைப் பாடியருளினர் என்ப. இவ்வரலாறு உமாபதி சிவாசாரியர் பாடியருளிய சேக்கிழார் புராணத்தில் மிக்க அழகும் தெளிவும் பொருந்த 'விரித்துக் கூறப்பெற்றுளது. மெய்கண்ட சாத்திரம் எனவழங்கும் சைவசித்தாந்த நூல்களுட் பலவற்றை அருளியவரும், சைவசந்தான குரவருள் ஒருவராகப் போற்றப் படுவோரும் ஆகிய உமாபதிசிவாசாரியர் சேக்கிழார் மீது புராணம்பாடிப் பரவியிருப்பதும், திருத்தொண்டர் புராணமானது ஆளுடைய பிள்ளையார் முதலிய திருநெறித் தலைவர்களும், மெய்யடியார்களும் அருளிய அருட்பாக்களின் திருமுறைகளோடு ஓர் திருமுறையாக ஒருங்குவைத்துப் போற்றப்பட்டு வருவதுமாகிய இவைகளே சேக்கிழார் பெருமையையும், திருத்தொண்டர் புராணத்தின் அருமையையும், பொதுவகையால் அறிந்துகொள்ளப் போதியனவாகும்.

உமாபதிசிவனார் ஒரு பாட்டில், 'உலகின்கண் எத்தகைய அரிய செயலுஞ் செய்தல்கூடும்; திருத்தொண்டர் புரா

ண்டதை அளவிட நம் சேக்கிழார்க்கு .எளிதலது தேவர்க்கும் அரிது' என்று கூறுகின்றார். பிற்காலத்துப் பல்வகைப் புலமையும் ஒருங்கு வாய்ந்த பேரறிஞராகிய சிவஞானமுனிவர் தாம் இயற்றிய காஞ்சிப்புராணத்தில் தொண்டை நாட்டை வருணிக்குமிடத்தே, 'திருத்தொண்டை நன்னாட்டு நானிலத்து ஐந்திணை வளமும் தெரித்துக்காட்டக் குன்றைநகர்க் குலக்கவியாகிய சேக்கிழாரே வல்லரல்லால், கருத்தொண்டராகிய எம்போல்வார் வல்லரல்லர்' எனக் கூறுகின்றனர். அண்மைக்காலத்து விளங்கிய கவிஞர் சிகாமணியாகிய மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் தாம் இயற்றிய சேக்கிழார் பிள்ளைத்தமிழில் பெரியபுராணத்தின் சிறப்பாகக் கூறியிருப்பன அளவிட்டுரைக் கற்பால வல்ல. இவற்றைப் படிக்கும்பொழுது, 'கவியின் பெருமையை உள்ளவாறறிவோன் கவியேயாவன்' என்னுங் கருத்து உறுதி பெறுவதாகும். பிள்ளையவர்கள் ஒரு பாட்டில் 'அடியார் பெருமையும் அருமையும் நாளும் அறி அம்பலவாணர் அவர் வரலாறு விரித்துரை செய்பவர் ஆர் என உட்கருதி, அவர் அன்பு அத்தனையும் கண் காண்படி செய்து, முதலும் எடுத்துத் தந்தருளினர்' என்கின்றனர். இவையெல்லாம் முழு உண்மைக் கூற்றுக்களேயன்றிச் சிறிதும் புனைந்துரையல்லவென்பது பெரியபுராணத்தை நன்கு கற்றுணரும் பேறுடையார்க்குப் புலனாகாமற் போகாது. இறைவனிடத்தும் அடியாரிடத்தும் உண்மையன்பும், மெய்யுணர் வநுபவங்களும், உலகியலறிவும், பலகலையுணர்வும், சரித்திர அறிவும், கவித்துவவிறலும் ஒருங்குவாய்க்கப் பெற்றாரொருவர் இயற்றிய இந்நூல் என்பதனை இஃது ஆண்டாண்டு நன்கு புலப்படுத்திச் செல்லுதல் காணலாகும். மெய்யன்பும், திருவருளின்றோய்வும் பெறாதாரொருவர், எத்துணைப் பெரும்புலமையும், கவித்துவமும் வாய்ந்தாரேனும் அவரால் இந்நூல் இயற்றலாவ தொன்றன்று என்பது ஒருதலை. இதனைக் கற்பவரென்போர், பழுத்த செந்தமிழ்ச் செய்யுளாகிய பொன் வள்ளத்தில், அடியார்களின் அன்பின் நலமும், இறைவன் றிருவருள் நலமும் ஆகிய பாலையும் தேனையும் குழைத்துப்பருகுகின்றவரே யென்னலாம்.

இனி, இங்ஙனம் கூறிவந்து, யாமும் ஏதோ ஒருவகையாற் பெரியபுராணம் படித்துளோமென்பது காட்டாது விடுதல் முறையன்றாகலின், எமது சிற்றறிவுகொண்டு அதன்கண் யாம் கண்டு நுகர்ந்துவரும் பொருள்களுள் ஒரு சில இங்கே எடுத்துக் காட்டி இக்கட்டுரையை முடிக்கக் கருதுகின்றேம். திருவருள் கூட்டுவிக்குமேல் பின் நேர்ந்துழி நேர்ந்துழி வெவ்வேறு வகையான அழகுகளை யாம் அறிந்தவாறு எடுத்து விளக்குதலும் ஆகும்.

'மன்று ளாடுமது வின் னசையாலே மறைச் சுரும்
பறை புரத்தின் மருங்கே
குன்று போலுமணி மாமதில் சூழுங் குண்டகழ்க் கமல
வண்டலர் கைதைத்
துன்று நீறு புனை மேனியவாகித் தூய நீறு புனை
தொண்டர்க ளென்னச்
சென்று சென்று முரல் கின்றன கண்டு சிந்தையன்
பொடு திளைத்தெதிர் சென்றார்.'

சிதம்பரத்திலே ஆநந்தக் கூத்தாடும் ஐயனைத் தொழுங் குறிப்புடன் செல்கின்ற நம்பியாரூரர் நெறியிலே காணுங் காட்சிகளை வருணிக்கின்ற திருப்பாட்டுக்களில் ஒன்று இது. இப்பாட்டிலே, எல்லாவுயிர்கட்கும் இன்பம் நல்கும் பேரின்ப வடிவினனாகிய இறைவனை 'மது' என்றும், இறைவனது பொருள் சேர் புகழை இடையறாது பாடும் மறைகளின் இசையை அம்மதுவின் விருப்பாற் பாடுகின்ற சுரும்பின் இசையென்றும் உருவகப்படுத்துரைத்து, அதனைத் தில்லைத்திருப்பதிக்கு விசேடணமாக்கிய பெருமை உள்ளுதோறுள்ளுதோ றுள்ளமுருக்குந் தன்மையது. இங்ஙனம் தில்லையைக் குறிக்குமாறு கருதிய சில சொற்களில், இறைவனது வடிவின் பெற்றியும், அவனது திருக்கூத்தின் நோக்கமும், மறைகளின் கருத்தும், அப்பதியின் பெருமையும் என்றிவை யெல்லாம் விளங்க உரைத்தருளினமை காண்க. இறைவன் மதுவாகச்செய்தே அம்மதுவின குனிப்பால் விளைவது மது வென்பது பெறப்படும். 'நினைத்தொறுங் காண்டொறும்

பேசுந்தொறும் எப்போதும் அனைத்தெலும் புண்ணெக ஆநந்தத் தேன் சொரியும் குனிப்புடையான்' என்பது மணிவாசகமன்றோ? இங்ஙனமாகக் 'கோதிலாத்தேறல் குனிக்கும் திருமன்ற'த்தை யுடையதாய், மறைச்சுரும் பறைவதாயுள்ள அப்பதியினை மதிலும் அகழியும் சூழ்ந்திருக்குமாறு கூறுவார் 'குன்று போலு மணிமா மதில் சூழுங் குண்டகழ்க்கமலம்' என்றனர். மதிலகழிகளின் தோற்றமும் அமைவும் முதலியவற்றை விரித்துரைத்துக் கொள்ளுமாறு அவை சுருங்கிய சொற்களில் உலகவரம்பிறவாது அழகுபெறக் கூறப்பெற்றுள்ளமை காண்க. அகழியிலே கமலத்தில் உறையும் வண்டுகள் தாழையின் நறுந்தாதாகிய நீற்றினைப் பூசிக்கொள்ளுகின்றன என்கின்றனர். இதனால் பொருத்தமான திணைமயக்கமும் கூறியவாறாயிற்று. இங்ஙனமாக மதில், அகழி, கமலம், வண்டு, கைதை, நீறு என்பனவற்றைக் கூறியொழிந்திருப்பின் ஆசிரியர் ஓர் கவியாக மாத்திரமே கருதப்படுவர். பின்னர், அவ்வண்டுகள், 'தூயநீறு புனை தொண்டர்களென்னச் சென்று சென்று முரல்கின்றன' என்றும், அதனைக் கண்டு, நம்பியாரூரர் 'சிந்தையன்பொடு திளைத்தெதிர் சென்றார்' என்றுங் கூறுகின்றனர். இங்கேதான் ஆசிரியருடைய பல்வகைப் பெருமையும் ஒருங்கு விளங்குகின்றன. வண்டின்மேல் வைத்துத் தொண்டின் இலக்கணம் விளக்கப்பட்டன! 'தாவில் சராசரங்களெலாம்' சிவம் விளங்குமுண்மை காணப் பெறும் சீரடியார் இவ்வாறன்றி வேறெங்ஙனம் கூறற்பாலராவர்! அப்பதி தான் மன்றுளாடு மதுவின் நசையாலே மறைச் சுரும்பறை புரமாகவே, அதனைச் சார்ந்துள்ள கமலவண்டுகள் தூயநீறு புனை தொண்டர்களென்னச் சென்று சென்று முரலாமல் வேறென்ன செய்வன! நம்பிகள் 'என்னுடையதோழனுமாய்' என்று உரிமையாற் கொண்ட தம் தலைவனைக் கூடுதல் விதுப்புற்று ஆற்றாமை மிஞ்சி ஊடலும் இரங்கலும் உடையராகின்றனர் என்பது குறிப்பிடத்தானே மருதமும் நெய்தலும் மயங்க வைக்கின்றனர்? இன்னும் சிறிது பொழுதில் 'ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள, அளப்பருங்கரணங்கள் நான்கும் சிந்தையேயாக, குணமொரு மூன்றும் திருந்துசாத்துவிகமேயாக, இந்துவாழ்

சடையான் ஆடும் ஆநந்த எல்லையில் தனிப்பெருங் கூத்தின் வீந்த பேரின்ப வெள்ளத்துட் டிளைத்துமாறில்லா மகிழ்ச்சியின் மலர்தல் ஆகிய அநுபவத்தைப்பெற விருக்கும் அவர்க்கு ஊடலும் இரங்கலும் உளவாதல் பற்றி நாம் கவலையுறுதல் வேண்டா!

எம் சிறுதகைமைக் கேலாத ஒரு பெருந்திருப் பாட்டையெடுத்துக் கொண்டு ஏதேதோ சொல்லி எம் அறியாமையை விரித்து விட்டேம்போலும் என அச்சம் எழுகின்றது. இனி இவ்வளவில் நிறுத்துதும். ஆனால் 'ஒரு சில எடுத்துக் காட்டுவேம்' எனறு தொடங்கி, ஒன்றுடன் நிறுத்துதலாகிய குற்றத்திற்கு மாத்திரமேனும உட்படாவாறு, நங்கள். திருநாவுக்கரசர் திருத்தில்லையை யெய்தும் பொழுது ஆசிரியர் சேக்கிழார் பெருமான் அந்நெறியை வருணிக்கும் பாட்டுக்களில் இரண்டு எடுத்தெழுதி அடங்குவேமாக.

'முருகிற் செறியிதழ் முளரிப் படுகரின் முதுமேதிகள்
புது மலர் மேயும்
அருகிற் செறிவனம் எனமிக் குயர்கழை யளவிற்
பெருகிட வளரிக்குப்
பெருகிப் புடைமுதிர் தாளஞ் சொரிவன பெரியோ
ரவர்திருவடி வைக்கண்
டுருகிப் பரிவுறு புனல்கண் பொழிவன
எனமுன்புள வளவயலெங்கும்'

'அவர்முன் பணிவொடு தொழுதங் கணைவுற
அணிகொம் பரின்மிசை அருகெங்கும்
தவமுன் புரிதலில் வருதொண் டெனுநிலை
தலைநின் றுயர்தமிழ் இறையோராம்
இவர்தம் திருவடி வதுகண் டதிசயம்
எனவந் தெதிர் அரகர வென்றே
சிவமுன் பயில்மொழி பகர்கின் றனவளர்
சிறைமென் கிளியொடு சிறுபூவை'

மூங்கில்போற் பணைத்து வளர்ந்த கரும்புகண் முற்றி முத்துக்களைச் சொரிவன பெரியோராகிய திருநாவுக்கரசரது திருவடிவைக்கண்டு நெஞ்சுருகி அன்பு நீரைக் கண்களாற் பொழிவன போன்றுள்ளன; என்றும், அருகெங்கும் கொம்புகளில் இருக்கின்ற கிளிகளும், நாகணவாய்ப் பறவைகளும் திருத்தொண்டின் நிலைமையில் தலைமையுற்றுயர்ந்த தமிழிறைவராகிய இவரது திருவடிவைக் கண்டு, 'இங்ஙனம் ஓர் திருவடிவுளதாவது அதிசயம்' என வியந்து, 'அரகர' என ஆர்த்து, தாம் முன் பயின்ற சிவநாமங்களைக் கூறுநின்றன; என்றும் தொண்டர் சீர் பரவும் சேக்கிழார் பெருமான் கூறியருளிய அருமைப்பாட்டை யாம் எங்ஙனம் அளவிட்டுரைக்கற்பாலம்? திருச்சிற்றம்பலத்தை நோக்கி ஆராக்காதலின் அணைகின்ற திருநாவுக்கரசரது ஆர்வம் விஞ்சிய நடையை உள்ளத்தாலுணர்ந்து, ஆசிரியர் அதனைத் தமது செய்யுளின் கதியாற் புலப்படுத்துக்கின்றனர்போலுமெனக் கருதுமாறு இத்திருப்பாட்டுக்களின் நடை அமைந்துள்ளது. சேக்கிழார் பெருமான் சிந்தனைக்குரிய மெய்ப்பொருளாகவுள்ளது திருநாவுக்கரசரின் திருவுருவமென்பது நாம் பலபடியாலும் காணலாகின்ற உண்மை.

பண்டிதர், மு. வேங்கடசாமி நாட்டார்.

---

# அன்பு

(முன் உ-ம் சிலம்பு சஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

முந்திய நன்றிமறவா நல்லறிவு வாயிலாக வரும் அன்பிற்கு நாம் கடவுளிடங் காட்டும் அன்பும், பிந்திய பிறர் படுந் துன்பத்தை யுணர்தல் வாயிலாக வரும் அன்பிற்குக் கடவுள் நம்பாற் காட்டும் அன்பும் எடுத்துக் காட்டுக்களாகும். இவைகளோடு பொறிக்கவர்ச்சி வாயிலாக வரும் அன்பும் ஒன்று உளதாதல் கொள்ளப்படும்.

நிற்க, விலங்கு பறவை முதலியவை தாந்தாம் ஈன்ற குட்டி குஞ்சுகளிடம் அன்புகாட்டி வருவது எக்காரணத்தா லெனச் சிலர் ஐயுறலாம். அன்பின் பெருக்கத்திற்கு வேண்டப்படும் அவ் விருகாரணங்களும் மனவுணர்ச்சியுடையார் மாட்டே காணப் படும். விலங்கு பறவை முதலியவைகளிடமோ அப்பகுத்தறிவு இலதாகும். அன்றியும், அவைகள் தாந்தாம் ஈன்ற குட்டி குஞ்சு கள் வளரவளர அவைகளின் பால் அன்பில்லா தொழிதலும் நேரிற்கண்டது. ஆகலின், அவைகள் வளரும் பொருட்டு இறை வன் அன்பே அத் தாய்விலங்கு பறவைகளின் மாட்டு நிகழ்வ தாகும். அவைகள் வளர்ந்த பின்னர் அவ்வன்பு ஆண்டு நின்று தொழிற்படுவதில்லை. எனவே, நாம் ஈண்டு வரைந்துவரும் அன்பு மனவுணர்ச்சி யற்றவைகளிடமும் இருப்பதாக வைத்துக் காரணம் உசாவ முற்படுதல் திரிவுணர்ச்சியின்பாற் பட்டதாகும்.

இனி, பிறர்படுந்துன்பத்தை யுணர்தல் வாயிலாகவரும் அன் பும் எல்லாவுயிர்கண் மாட்டும் ஒத்துச் செலுத்தப்படுவதில்லை. இவ்வுண்மையை "அல்லவை புரியா ரேனு மறிவினிற் பெரியா ரேனு—மெல்லவர் தமக்கு நண்பா யினியவே புரிதற் பாற்றோ— பல்லுயிர்த் தொகைக்கு மின்பம் பயந்திடு மதிகண் டன்றோ— புல்லிய கமல மெல்லாம் பொலிவழிந் திட்டவன்றே." என்னுங் கந்தபுராணச் செய்யுளைக்கொண்டு விளங்கிக்கொள்க. ஆகலி னன்றோ அன்பின் வடிவெனப் பல நூல்களானும் புகழப்படும் எல்லாம் வல்ல சிவபரம்பொருளே துன்ப மடைந்தவர்களால் 'கண்ணற்றதெய்வமே' யென்று இகழவும், நல்லவர்களாற் பல வாறு புகழவும் பட்டுவருகிறார். நாத்திகர் அத்துன்ப மடைந்த வர்களினும் நீண்டு சென்று அவ்விறைவனை இல்லை யென்றே சொல்லிவிடுவர்.

இன்னும் நம்முது தாய் நம்பாற் செலுத்தும் அன்பு "பால் நினைந்தூட்டுந் தாய்" எனவும், "கற்றாவின் மனம்" என வும் நமது மணிவாசகப் பெருமானாற் புகழப் பட்டதொன்று. அத்தகைய தாய்மார்கள் தமது அன்பின் காரியமாகிய பாலைத் தாந்தாம் பெற்ற பிள்ளைகட்கே நினைந்தூட்டுவதன்றிப் பிறதாய்

மார்பெற்ற பிள்ளைகட்கு ஊட்டுவதில்லை. புதல்வர்களும் தந்தமைப் பெற்ற தாய்க்காளாவதுபோன்று பிறதாய்மாருக்காளாவதில்லை. ஆவும் தானீன்ற கன்றின் பின்னன்றிப் பிற கன்றுகளின் பின் செல்வதில்லை. இவைகளே யியல்பும், பொருத்தமும், கண்கூடுமாகும்.

உண்மை யிங்ஙனமாகவும், "கடவுள் நமக்கெல்லாந் தந்தை: நாமெல்லாம் உடன் பிறப்புக்கள். நமக்குள் ஒத்த தகுதியும் உரிமையுமே யுள்ளன. ஆகலின் நமக்குள் சகோதரபாவம் இருத்தல் வேண்டும்" என்றோருண்மையைச் சிற்சில மேற்கோள்களை ஆதாரமாக வைத்துப் பேசிவரும் சில நண்பர்கள இக்காலத்து ஆண்டாண்டுக் காணப்படுகிறார்கள். சகோதரபாவம் என்பது அப்பாவங்கொண்ட அன்பை யாவர்மாட்டும் ஒக்கக்காட்டுதல் என்னும்பொருளது. இஃது அவர்கள்கொள்கை. இப்பொருளைக் கொள்ளும் அவர்களே தம்பேச்சுப்படி உலகத்தாரிடத்தில தமது சகோதர பாவங்கொண்ட அன்பைச் செயலிற் காட்டமாட்டார்கள். ஆகலின், அக்கொள்கை போலியேயாகும். ஆயினும் அவர்கள் தங்கருத்தை வலியுறுத்தற்கு எடுத்தாளும் மேற்கோள்களின் உட்கிடைதான் யாதென ஆராய்தல் யாவர்க்கும் இன்றியமையாத கடனாகும். அங்ஙனம் ஆராய்வாருக்கு அருள் நூல்களின் கருத்தையெல்லாம் அருள்வழி நின்று உள்ளவாறே விளக்கத் திருவவதாரஞ் செய்தருளிய ஸ்ரீசிவஞான சுவாமிகள் அவைகளின் கருத்தைச் செவ்வனே விளக்கி யுள்ளார்கள். "மகவெனப் பல்லுயிரனைத்தையும் ஒக்கப் பார்த்தலாவது அவை படுந்துன்பங் கண்டுழி அதற்குப் பரிதன் மாத்திரையேயாம். 'நான்பெற்ற வின்பம் பெறுகவிவ்வையகம்' என்பதும் இக்கருத்தே நோக்கி யென்க," என்னும் அவர்களது அமுதவாசகமே அம்மேற் கோள்களுக் கெல்லாம கருத்தாக நிற்கின்றது. ஆகவே, எல்லாவுயிர்க ளிடத்திலும் ஒக்கக் காட்டப்படுவது உள்ளத்தளவில் அமையும் இரக்கம் ஒன்றேயாகும். "எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணியிரங்கவு முன்—தெய்வ வருட்கருணை செய்யாய் பராபரமே," என்ற நமது தாயு

மாறாது திருவார்த்தையும் இரக்கத்தையே யாவர்மாட்டுங் காட்டுதல் வேண்டுமென்றே விதிக்கிறது. இக்கருத்தையே அறிவுடையார் தழுவுவர். நல்லவர் தீயர் எனாது யாவர் மாட்டும் இரக்கமே கொள்ளுதல் வேண்டும். ஆயினும் அவ்விரக்கத்தைக் காரணமாக வைத்து மெய்யன்பர்கள் நல்லவர்களை யன்றித் தீயவர்களையும் தம்மில் ஒருவராக வைத்து அவர்களோடு அளவளாவார்கள். "மும்மலங்கள் அஞ்ஞானத்தை யுணர்த்துதல் இலக்குவாய்த்துழி ஏது வாதன் மாத்திரையே. இவ்வாறன்றி, வாயாதவழி வாய்க்குமாறு செய்துகொண்டு பல வகை உபாயங்களானும் தம்மோடொப்ப விபரீத வுணர்விற் செலுத்தியே விடுவாராகலான் சிவபத்தி யில்லாதார் அம்மலங்களினுங் கொடியாராகலின் அவரை அவற்றினும் அஞ்சிவிட்டொழிதலே அறிவுடைமைக்குச சால்பு," என்று ஸ்ரீசிவஞான சுவாமிகளும், "உரைத்தளர்ந்துடலார் நடுங்காமுனம்—நரை விடை யுடையானிட நல்லமே—பரவுமின் பணிமின் பணிவாரோடே—விரவுமின் விரவாரை விடுமினே" என்று ஸ்ரீ ஞான சம்பந்தப்பெருமானும் தந்த கட்டளையே அவ்வளவளாவாமைக்குக் காரணமாகும். அன்றியும் அன்பு தொழிலாகப் பரிணமித்துத் தீயவர்பாற் செலவதாயின் அஃது அவர்களைத் துன்புறுத்தியே பின்னர் அவர்களுக்குப் பயனைத்தரும். அத்துன்புறுத்தலை வைத்து அது வன்பென ஒதுக்கப்படாமல் மறக்கருணையென அறிஞரால் ஏற்றுக்கொள்ளப்படும்.

இன்னுஞ் சிலர் தீயவர்களிடத்திலுள்ள தீமைகள் மட்டும் வெறுக்கற் பாலனவன்றி அவைகளையுடையார் வெறுக்கற் பாலாரல்ல ரென்கின்றார்கள். அத்தீயாரை வெறுத்தொதுக்குதல் பாவமென்பதும் அவர்கள் கருத்து. அப்படியாயின் நல்லவர்களிடத்திலுள்ள நன்மைகள் மட்டும் விரும்பற் பாலனவன்றி அவைகளையுடைய நல்லவர்கள் விரும்பற் பாலா ரல்லரென்பது பெறப்படும். நன்மை தீமைகள் தம்மை யுடையவர்களை விட்டு வேறுபடுக்கப்படாமையின் உடையவர்களை விட்டு உடைமைகள் நம்மால் யாண்டும் விரும்பவும் வெறுக்கவும் படா.

எங்கள் பாக்கியப் பயனாய்ப் பதிகூன்றைவாழ் ஸ்ரீ சேக்கிழார் பெருமான் "கூடும் அன்பினிற் கும்பிடலேயன்றி—வீடும் வேண்டார் விறலின்விளங்கினார்" என்றொரு திருப்பாட்டையருளியுள்ளார்கள். அதன் கருத்திது. சிவபிரான் நமக்கு இன்றுவரைச் செய்திருக்கும் உபகாரத்துக்கு அளவேயில்லை. அதனை நாம் சிந்திக்கச் சிந்திக்க நமது அன்பு இடையீடின்றி அவர்பாற் செல்லுகின்றது. அவரது இயல்பை நாம் ஆராயப் புகின் அவர் நமது வேண்டுதலை எதிர்பாராமலே நமக்கு உபகரிப்பவர் என்பது விளங்கும். இவ்வுண்மையை மறந்து சிற்சில சமயங்களில் நாம் முனைத்து நின்று நமக்கு வேண்டுமென்று தோன்றுகின்றவைகளையெல்லாம் அவரை வினவுகின்றோம். பேரறிஞராகிய அவர் நாம் வேண்டிய வேண்டியாங்குத் தாமே யறிந்து நமக்கருள்பவர். ஆகலின் அவர் நமது வேண்டுதல்களுக் கெல்லாம் இசையார். உடனே நமக்கு அவரிடம் வெறுப்புத் தோன்றி அவர் இன்றுவரை புரிந்து வந்த அருளப்பாடுகளை யெல்லாம் நாம் அவமதிக்கத் துணிகின்றோம். அத்துணிவு "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லைச்—செய்ந்நன்றி கொன்ற மகற்கு," என்று திருவள்ளுவதேவ ரருளிய படி நம்மைச் செய்ந்நன்றி கொன்ற மாபாவிகளாக்கி விடுவதிற் றடையில்லை. ஆகலின் இப்படியாவதைச் சிறிதும் விரும்பாத நாம், பரசிவப்பிரபு நமக்கு இன்றுவரை செய்து வந்த உபகாரத்தை நினைந்து நினைந்து நெஞ்சழிவோமே யன்றி வேறுமோர் உபகாரத்தை எதிர்பார்த்து அவர்பால் அன்பு காட்டுவோ மல்லோம். அவர் நம்மை எடுத்துச் சுமப்பவர் என்னும் உண்மையில் நமக்குக் களங்க மற்ற நிறைந்த நம்பிக்கை யுண்டு. ஆகலின் "நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ விதற்கு நாயகமே," என்றருளிய ஸ்ரீ மணிவாசகப்பெருமான சென்றவழிச் செல்வதே நமக்கு அடுக்கும். இறைவன் செய்யும் நன்றியை எதிர் பாராமல், செய்த, செய்கின்ற நன்றியில் ஈடுபட்டு அவரைக் கும்பிடலே "கூடு மன்பினிற் கும்பிடலாம்." இக்கருத்தின் வழிச் சிவபிரானிடம் காட்டப்படும் அன்பே இறவாத அன்பாகும். இத்தகைய அன்பின் முயன்றுவரும் நமக்கு நாம் எதிர்பாரா

விடினும் வருவது இறவாத இன்பமே. ஆகலின் நாமனைவரும் அத்தகைய அன்பின்வழி சிவபெருமான் திருவடிகளை யிறுகப் பற்றி நாமற்று வாழ்வோமாக.

கடயம், ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை.

---

# ஐஞ்செழுத் துண்மை

ஊர்பயின் றுண் கோலவைகைக் குண்மைமல மானதுபோற்
சார்தருநல் லிந்திரியந் தன்னுகர்ச்சி - யாருயிருக்
கெவ்வமற வெப்பொழுது மின்பமதா கச்செய்யு
நவ்வெழுத்தென் றுள்ளே நவில். க

கூருமழைக் காலிருளை வாளாக்கிக் கூரிருளற்
றாருயிரின் மூலியவிழ்ப் பாயிரண்டற் - றேருயிரின்
வெவ்வரவி னஞ்சின் மிகுமயக்கம் போன்மயக்கு
மவ்வெழுத்தென் றுள்ளே மதி. உ

சொன்னவிரண் டஞ்செழுத்தித் தோன்றாத் துணையாகித்
துன்னுசட சித்தனைத்துந் தொல்வினையின் - முன்னருத்தி
யுய்யுமருள் வீசிவினை யொப்பாக்கி யொப்புருவாஞ்
சிய்யெழுத்தென் றுள்ளே தெளி. ந

சாருயிரின் றொன்மைவினை தன்மறைப்பு தத்துவப்பொய்
பேரறிவு பேரின்பம் பிற்றெளித - லாருயிர்க்குத்
தேவளித்தல் பாகமிகச் சிந்தித்துள் ளேமுறுகும்
வாவெழுத்தென் றுள்ளே மதி. ச

தற்பரமே தன்னளவாய்த் தானு யறியாது
அற்றவுட லொத்திட் டவையவையாய்-முற்செய்வினை
யெவ்வயினுந் தேடுமரு ளெல்லையிலே மீட்சிபெறும்
யவ்வருணைத் தின்னியல்பென் றெண். ரு

பண்டிட் L. உலகநாதபிள்ளை.

# கடவுள் நம்பிக்கை

கடவுள் நம்பிக்கை என்ற சொற்றொடர் எப்பொழுதும் மக்கள் வாய்மொழியாக விளங்கினும் இத்தொடரில் அமைந்து கிடக்கும் ஆழ்ந்தபொருளை அறிந்து தெளிபவர்தாம் அரியர். கடவுளை உண்மையாகவே நம்புகின்றவர் எப்படிப்பட்டவராயிருப்ப ரெனின் விசுவாசமாகிய கண்ணால் பார்த்தறிகின்ற உண்மை நம்பிக்கையுள்ள வராயும், எல்லா முணர்ந்தவராகிய தலைவர் இவ்வுலகத்தை ஒழுக்க வழியில் நிலைபெறச் செய்கின்றார் என்பதை உணர்ந்திருக்கின்றவராயும், கடவுள் தந்தை தாயன்பினில் தனயரைத்தழுவு மியல்புடையவர் என்பதைத் தெளிந்தவராயும் இருப்பர். நம்பிக்கையாவது அன்பின் அருங்கனியாகிய பக்தியின் முதிர்ச்சி. கடவுளை மெய்யாக நம்பி அவரிடத்தில் பொய்யற்ற அன்பு செலுத்துகின்றவர்களே நம்பிக்கை என்ற வார்த்தையால் குறிக்கப்பெறும் ஆன்மசுகம், இன்பநிலை இவற்றை அடையக்கூடும். கடவுளை உண்மையாக விசுவசித்து நேசிப்பது வாழ்க்கையில் அருமையான காரியம் (செய்கை). கடவுள் ஒருவர் இருக்கிறார் என்று கேள்விப்பட்டிருக்கின்றவர் பலர்; அவரை உண்மையாக. உணர்ந்திருப்பவரோ மிகச்சிலர் என்று உபநிடதமும் உரைக்கின்றது. அநேகர் கடவுளென ஒருவர் உளரா இலரா என்ற விசாரம் புரியவும் விரும்பாமலே கடவுள் நம்பிக்கையை உறுதியாகக் கொண்டிருக்கின்றார்கள். இங்ஙனம் உறுதியான கொள்கையினராதல் அவரவர் மூளையின் இயல்பைப்பொறுத்து ஏற்படும். ஆனால் இங்ஙனம் மௌன(விசாரணையற்ற) நம்பிக்கை ஞானவாழ்வை யளித்து பிரவிர்த்திக்கச் செய்கின்ற (வளர்க்கின்ற) உண்மை நம்பிக்கை முற்றும் வேறுபட்டதே. உண்மை நம்பிக்கை யென்றால் கடவுளை யுண்மையாகவே யுணர்ந்து நம்புதல். இந்த நன்னிலையை யெய்தக்கருதுவதே ஆத்மமுயற்சி. ஆனால் உண்மை நம்பிக்கைநிலை ஒருவர்க்கு எளிதில் விரைவில் ஏற்படுவதன்று. நாளடைவில் படிப்படியாக அமைவது. தெய்வீக உண்மைகளை ஞானக்கண்ணால் ஓர்ந்து பார்ப்பதினாலும், நம்மை நாடோறும் சூழ்ந்திருக்கின்ற உலகமா

யையில் உழலவிடாது. உறுதிப்படுத்துவதினாலும், நித்தியமும் ஆத்மீகமுமான விஷயங்களை அடிக்கடி இடையறாது சிந்திப்பதினாலுமே பரமான்மாவுக்கும் ஜீவான்மாவுக்கும் (பதிக்கும் பசுவுக்கும்) உள்ள சம்பந்தத்தை (ஐக்கியத்தை) உறுதிப்படுத்தக் கூடியவர்களாகின்றோம். நம்முடைய உள்ளத்தூய்மைக்கும் ஓர்மைக்கும் ஒத்தபடி கடவுளை உண்மையாகவே காண்கின்றோம். கடவுள் உண்மையை உணர்கின்ற உணர்ச்சியே நம்பிக்கையென்க. எப்பொழுது நாம் கடவுளை உண்மையாக நம்பமுற்படுகின்றோமோ அப்பொழுதுதான் அவரை உண்மையாக நேசிக்க ஆரம்பிக்கின்றவரும் ஆகின்றோம். மதம் அன்பு இவ்விரண்டின் கூட்டுறவினால் தோன்றுவதே நம்பிக்கை. ஆத்மீக வாழ்வில் ஆத்மீக அனுபவத்தால் பூரணநம்பிக்கை அடைவதைப் போன்ற அருமையான விஷயம் மற்றொன்றில்லை.

நம்மைச் சுற்றிலும் பொருந்தியிருக்கும் விஷயங்கள் கடவுளிடத்தில் உண்டாயிருக்கும் நமது நம்பிக்கையை அசைத்து அழிக்கக் கூடியவை. நமது தனிவாழ்வில் ஏற்படும் சோதனை கஷ்டங்களும், ஆத்ம சமாதானத்தை அடிக்கடி கெடுக்கும் ஆசைப்போராட்டமும் நம்மனதை அவநம்பிக்கைக்கு உள்ளாக்கிக் கடவுள் அருகில் இருக்கின்றார் என்பதையும் ஐயுறும்படி செய்கின்றன. இவ்விதச் சோதனைகளையும் இடுக்கண்களையும் பொறுத்துவருவோமாயின், நல்லெண்ணம் நாளடைவில் நிலைப்படும் நம்கொள்கையின் உறுதியைப் பரீட்சிக்கின்ற சந்தர்ப்பங்கள் இப்படிப்பட்டவைகளே.' கடவுளை நம்பி அவரை யுண்மையாக நேசிக்கின்ற ஒருவன் நம்பிக்கைக்குறைவுக் காளாகாமல், தன்னுடைய கஷ்டங்களிலும் கடவுள் துணைபுரிவார் என்னும் உறுதியான நம்பிக்கையுடையவனாக விருப்பான். கடவுள் நம்பிக்கை தளர்வதற்கு மற்றொரு காரணமும் உண்டு. உலகத்தில் அறம்தேய்ந்து மறம்பெருகுவதைக் காண்கின்றோம். இந்த நிலைமையிலும் நம்பிக்கையுடையவருள்ளம் கடவுளே கதியென்று கருதிக் கடவுளே ஏழைக்கிரங்கு, உதவிசெய் என்று ஓலமிட்டிறைஞ்சமுற்படுகின்றது. ஊக்கித்தாங்கொண்ட விரதங்கள் உள்ளுடையத் தாக்கருந்துன்பங்கள் தாம் தலைவந்தக்கால் நீக்கி

நிறாவும் உரவோர்கள். இப்படிப்பட்ட துன்ப சமயங்களில் நம்பிக்கையாலேற்படுவதாகிய நல்லொழுக்க மென்னும் மன அமைதியைக் காக்கும் பலமுடையவாரவர். இப்பலமே யாவர்க்கும் வேண்டப் பெறுவது. தெய்வீகவளர்ச்சிக்குரிய தனிமுயற்சிகளைச் சில எதிர்பாராத சந்தர்ப்பங்கள் தத்தளிக்கச்செய்கின்றன. இத்தகைய தத்தளிப்புதடுமாற்றங்களினின்று கரையேறிச் சமாதானம் அடைவதற்காக நாம் கைக்கொள்ளும் நன்முயற்சிகளும் பயன்படாம லொழிகின்றன. இக்காலங்களில் நாம் மிகுந்த விசனத்துடன் கடவுளை நோக்கி முறையிட்டாலும் உடனே ஏற்றபலனும் ஏற்படுவதில்லை. ஆத்ம இன்னமுதமாகிய தியானமும் விருப்பமில்லாத பொருளாகின்றது. உண்மையொளியை உறுகின்றவகையில் எண்ணிறந்த கஷ்டங்கள் இருக்கின்றன. அநேகர் துன்பம் பொறுக்கமாட்டாமல் தியானத்திற் பயனில்லை என்று தியானஞ் செய்வதை விட்டுவிடுகின்றார்கள். ஆனால் கடவுளிடத்து உண்மையான பற்றுவைத்திருப்பவன் உறுதியாயிருந்து கடவுளருளையே எதிர்பார்க்கின்றான். கடவுட்டியானம் செய்யாதபடி பிரித்துக் கவலைப்படுத்தக்கூடிய துன்பங்கள அத்தகையவனைக் கடவுள் தியானத்தைப் பதின்மடங்கு ஆர்வத்துடன் செய்யும்படி தூண்டுகின்றன. இதனால் துன்பங்கள் ஒருவற்கு ஏற்படுவன அவனுடைய உள்ளத்தைச்சுத்தப் படுத்திக் கடவுட் பற்றை அதிகரிப்பிக்கின்றன என்ற உணர்ச்சி யுண்டாகின்றது. ஆகவே தனக்கு இடர் ஏற்படும் பொழுதெல்லாம் கருத்துடன் கடவுளை நோக்கித் தியானம் புரிந்து துன்பத்தைப் பொறுத்தலைத் தனது கடமை யென்று உணர்கின்றான் இவ்வித உணர்ச்சியே ஆன்ம வளர்ச்சிக்கறிகுறி. ஆன்ம வளர்ச்சியின் பெருக்கம் அல்லது மேம்பாடு உண்மை நம்பிக்கையின் உயர்வைப் பொறுத்து விளங்கும். இவ்வித உண்மை நம்பிக்கையே கடவுள் பக்தியை நிலைபெற்றதாகவும் கனிவுற்றதாகவும் செய்வது. ஆகவே இம்மையில் தமக்கு உண்டாகுந் துன்பங்களைப் பொறுத்துக்கடவுளிடத்திலும் குறையாத நம்பிக்கையுடன் தியானம் செய்கின்றவர் திடமான அன்பையும் ஆன்ம இன்பையும் அடைந்து சிறப்பார் என்க.

“குறுமுடியான்”

# தென்மொழி வடமொழி மயக்கம்

நமது சொற்களை நம்முடையதென்று உரிமை காட்டி நிலை நாட்ட முயல்வது தகுதியே யன்றி மிகுதியாகாது. 'மொழிகள் வெளியிடுமுண்மை' என்ற தலைப்பின்கீழ் யான் எழுதியவற்றில் ஆங்காங்கு தென்மொழிச்சொற்கள் வடமொழியிற் புகுந்தது காட்டப்பட்டது. சென்ற சில நூற்றாண்டுகளாக ஆரியத்திலிருந்து தமிழ் தோன்றிய தென்ற எண்ணம் பெருகியிருந்தாலும், அக்காலத்து நூல் செய்தாரிற் பலர் வடமொழிப்போக்கையே பெரிதும் பின்பற்றி வேண்டியவாறு கூறிச்சென்றதாலும், பின் வந்தவர் பலர் ஊன்றியுணராது அவர் கூறியதே உண்மையென உரைத்துப் போந்ததாலும், இக்காலத்தில் வடமொழிக் கிளவிகளென்று பெரும்பாலோரால் கருதப்படும் சொற்களின் தொகை மிகவும் உயர்வதாயிற்று. அவற்றிற் சிலவற்றை எடுத்து ஆராய்தலைத் தமிழன்பர் விரும்புவாரென்ற நம்பிக்கையுடன் இக்கட்டுரை எழுதப்படுகிறது. பிறன் கையிலுள்ளது நமது பொருளென ஐயப்பட இடமுண்டாயின் அவனோடு வழக்காடி நம்முடையதை நாம்பெற முன்வருவது தவறென்று எவரும் சொல்லார். ஆனால், மொழியை யொட்டிய சில உரிமைகளை நாம் நிலைநிறுத்திக்கொள்ள யாதாயினும் எழுத அல்லது பேசப்புகுந்தால், "ஆரியத்தின்மீது பொறாமை கொண்டு தமிழர் பலவாறு தூற்றுகின்றனர்" என்றும், "வடமொழி மக்கள்மேலுள்ள பகையைக்காட்ட இவர்கள் வழி தேடிக்கொண்டனர்" என்றும் பறைசாற்றுவோர் பலரிருக்கின்றனர். இங்ஙனம் பேசுகிறவர்கள் நாம் சொல்வது உண்மையோ அன்றோ என்ற கேள்வியை எழுப்பி அதற்கு விடையளிக்காமல் அழுக்காற்றால் மனம் புழுங்கி அழுபவர் என்று நம்மீது குறை சொல்லித் தமிழையும் தமிழரையும் பொதுவாகப் பழித்து மகிழ்கின்றனர். இப்படி இவர்கள் செய்வதெல்லாம் "தமக்கென ஒன்றிலாகிய பேதையரைத் தம் மாட்டீர்த்துக்கொள்வதற்கேயன்றி" வேறு எதற்கு? நாம் பகர்வதே உண்மை என்றும் பிறர் கூறுவது பிழை என்றும்

நாம் சொல்லவில்லை. ஆனால், எடுத்துக்கொண்ட ஒரு பொருளின் உண்மை விளங்கவேண்டுமாயின், அதைத் தீரக்கண்டு தெளிவதற்கு வேண்டிய வகைகளைக் கையாடாமுன் பழிப்புரை யாடுவதாற் பயனென்னை? செல்வியில் வெளிவருஞ் சிலவற்றைப் பற்றி அறியா அயலார் உளம்போனவாறு எழுதியதால் இவ்வளவு கூறலாயிற்று.

இங்கு நாம் பார்க்கப்புகுவது ஒரு ஆராய்ச்சியின் தொடக்கமேயன்றி முடிவு அன்று. இதில் யாதாயினும் பிழை படுமாயின் அதை நமக்கு எடுத்துக் காட்டி உண்மையை விளங்க வைத்தல் அறிஞர் கடமையாகும். காலம, உலகம் என்பன தமிழ்ச் சொற்களே என்று நச்சினார்க்கினியர் கூறி இருக்கவும், அதைக் கருத்திற்கொள்ளாது இவை வடமொழியே என்று திண்ணமாய்ச் சொல்பவர் இன்னுமுளர். உலகம் என்பது लोक (லோக) என்ற வடமொழியின் சிதைவு என்றுரைக்கின்றனர். இரும்பு, பொன், வெள்ளி முதலிய வற்றைக் குறிக்கும் லோஹம் लोह (லோஹ) என்ற வடசொல் தமிழில் உலோகம் என்று வந்திருக்க, வையகம் என்று பொருள் பெற்ற லோகம், தமிழில் உலகம் என வருவானேன். உலகம் என்பதில் 'அம்' எனும் ஈற்றை நீக்கிய பின் எஞ்சி நிற்பது 'உலகு'. இது குற்றியலுகர இறுதி பெற்று நிற்கின்றமையால் தமிழ்ச்சொல்லே யாகும். 'அம்' ஈறு இன்றியே இச்சொல் தமிழில் பன்னூல்களில் வழங்கப்படுவது காண்க. ஊன்றி நோக்குமிடத்து, உலகம் எனும் தமிழ்ச் சொல்லே வடமொழியில் லோகம் என்றாயிற்று என நினைக்க இடமுண்டாகிறது. 'எனக்கு' என்பதை 'நேக்கு' என்றும், 'உனக்கு' என்பதை 'நோக்கு' என்றும் பேச வல்லார், உலகம் என்பதை லோகம் என்றாக்கிக் கொள்ளாரோ? உலகு என்பது தமிழில் நிலத்தைத்தவிர உயர்ந்தோர் ஒழுக்கம் என்றவற்றையுங் குறிக்கும். இஃதுடன் அலகு, அறுகு, அழகு, சிறகு முதலிய சொற்களையும் ஒத்திட்டுப் பார்க்க. உல என்ற முன்னிலைக்குத் தமிழில் ஒழி, கெடு, சா, குறை என்ற பொருள் உண்டு. ஆதலின் இதை அறிஞர் ஊன்றியுணர்ந்து நச்சினார்க்கினியர் கூறியதை உறுதிப்படுத்த வேண்டும். காலம் என்ற சொல்லையும் இவ்வாறு

எடுத்துப் பார்க்க, அது கால் என்னும் முன்னிலையிலிருந்து உண்டாவது என்று தெரிகிறது. 'அவன் ஒருகால் வருவான்' என ஒருவர் பேசுவாராயின், கால் என்பது வேளை எனப்பொருள் படுதல் வெளிப்படை. அன்றியும், *அஃது அளவு, வழி, முறை, காற்று என்றும் பொருள் படும். காலை என்ற பெயர்ச்சொல், விடியும் நேரத்தையே யன்றிப் பொதுவாகப் பொழுதையும் உணர்த்தும். 'யான் சென்னையிலிருந்தகாலை' என வருஞ்சொற்றொடரை ஆராய்ந்து பார்க்க.

இலக்கணம் என்ற சொல் வடமொழியாகிய 'லக்ஷணம்' என்பதன் சிதைவு என்று பலர் நம்புகின்றனர். இதற்கு அவர்கள் கூறும் வரலாறு பொருத்தமுடையதாயில்லை. தமிழில் இலக்கணம் எனப்படுவது எழுத்து, சொல், பொருள் ஆகியவற்றின் தோற்றம், வழக்கு, தன்மை முதலியவற்றை விளக்கும் நூலாகும். இதை வடநூலார் 'வியாகரணம்' என்ற சொல்லாற் குறித்திருக்கின்றனரே யன்றி 'லக்ஷணம்' என்ற மொழியாற் குறித்ததில்லை. எழுத்து, சொல், பொருள், முதலியவற்றின் வரலாற்றை எடுத்தியம்பும் நூலுக்குத் தமிழில் மொழி இல்லை என்று வைத்துக்கொள்வோம். அக்குறையை நீக்குவதற்குத் தமிழர் வடமொழியிலிருந்து கடன் வாங்கச் சென்றார்களாயின், அவர்களது கருத்திற்கிசைந்த 'வியாகரணம்' என்ற சொல் இருக்க, அதை விடுத்து, சிறப்புத் தன்மை அல்லது அழகு என்று பொருள்படும் 'லக்ஷணம்' என்பதை அவர்கள் எடுப்பானேன்? அவர்கள் கொண்ட நோக்கத்தை எளிதாய் முடித்துக் கொள்ள இடமிருக்க வலிந்து பொருள்கொண்டு இடர்ப்பட வேண்டிய கட்டளை என்னை? 'லக்ஷணம்' என்பதற்குத் தமிழில் மாத்திரம் ஏன் 'வியாகரணம்' என்ற பொருள்வரவேண்டும். தொல்காப்பியம் என்னும் சொற்றொடரில் காப்பியம் என்பது காவ்யம் என்ற வடசொல்லின் திரிபு என்று கூறியவரை நம்பி மயங்கியிருந்த காலமுண்டு. காவ்யம் என்பதன் பொருளை உற்று நோக்காமலே, அது தொல்காப்பியம் என்ற தொடரில் காப்பியம் ஆயிற்று என்று சொல்லத்துணிந்தவர், 'லக்ஷணம்' இலக்கணம்

ஆயிற்று என்று கூறத்தடையென்ன விருக்கிறது. தமிழ் இலக்கியத்திற்கும், வடமொழி .லக்ஷணத்திற்கும் யாதொரு தொடர்பையுங் காணோம். இவ்வாறே, நூறுயிரமெனப்பொருள் தரும் வடமொழி 'லக்ஷம்' என்பதற்கும், தமிழ் 'இலக்கம்' என்ற சொல்லிற்கும், ஒற்றுமை இல்லை. இலக்கம்-எண், குறி; இதில் இலக்கு என்பது முன்னிலை. இலக்கம் பார்த்தல்-கணக்குப் பார்த்தல். ஆதலின், இலக்கியம் என்பதனை வடமொழி 'லக்ஷ்யம்' என்பதிலிருந்து பெறுவதிலும் ஐயமுண்டாகிறது. தமிழில் இலக்கியம் என்று சொல்லும் போது நமக்குத் தோன்றும் எண்ணத்தை 'லக்ஷ்யம்' என்னும் வடமொழிதாராது. உண்மை இன்னதெனக் காண்பதன்முன் இவற்றை வடமொழிச் சொற்களென விட்டுவிடலாகாது.

க. ப. சந்தோஷம், B.A., L.T.

---

# பரப்பிரம்மோபநிஷத்

பத்திரம் கர்ணேபிஷ் என்பது சாந்தி. திவ்வியமாய பிரமபுரத்துள் இனிது வைகும் பொருள் யாது என்னும் இன்றோரன்னவாய் பிரமவாதிகள் விஞ்யவழி அதனுள் விரசம் நிட்களம் விசோகம் விபாதியாய அட்சரப்பொருள் வைகுகின்றது என்று கூறி எவ்விப்பொருளுளது அவ்விப்பொருளே உயிரினுள் அந்தர்யாமியாம். ஆயினும் அஃது அசங்கசித்து ரூபப்பிரமமாம். பிரணவம் அம்சம் இரண்டும் பிரமமென்றோதப்படும். பிராணன் பிரமமாகாது. பிராணன் ஜீவனும். இங்ஙனம் அப்பிரமப் பொருளியல்பு அறியற்பாற்றும். அறிந்து அதனுள் அடங்கற்பாற்று. அங்ஙனமாயின் ஜீவன் சிவமயமாவன். இத்தன்மைத்தாய இச்சீவனது அகச்சிகை உபவீதங்கள் யாவெனில் சத்துப் பொருளேயாம். அன்றி அசத்துப் பொருளன்று. இவ்வகச் செயல் உபவீதம் தரித்தவனெவன் அவனே பிராமணன். இரு

கத்த கர்மமுடையவனெவன் அவன் புறத்துக் காணப்படும் சிகை உபவீதங்களுடையனும். இனி அவ்வக உபவீத தந்து வாவது புற உபவீத தந்து ஒப்ப அரூபமாய அகத்தத்துவ தந்துக்களேயாம். இனி அதன் முடிவாவது அசத்து சூத்து. அவற்றின் பொதுமை அவ்வாறே பின்னம் முதலிய மூன்றும் அங்ஙனமே கூறு முதலிய மூன்றும் அல்லவாம். அது பிரமமாய அவ்வொன்றென்றே நன்றாயறியற்பாற்று. இதனின் வேறாய பொய்ம்மையும் ஏதுவின்மையுமுடைய புறச்சிகை உபவீதங்கள் கைவிடற்பாற்று. ஐம்பாதப் பிரமமென்றொன்றின்றாம். நாற்பாதப் பிரமம் வைகும் அகமுடைய உயிர்க்கு அவ்வகத்தானம் நான்கு. அவை நாபி குஹ்யம் கண்டம் சிரமென்பன. அவற்றைப் பற்றி நிகழும் அவத்தை சாக்கிரம் முதலிய நான்காம். அவற்றிற்குரிய அங்கி அசயாங்கியிறாய நான்காம். அவற்றைச் செலுத்தும் அதிதெய்வம் அட்சரமீறாய நான்காம். ஆகலின், அவ்வவத்தை நான்கற் குரிய தத்துவம் தொண்ணூற்றாறுமே மேலோதும் அவ்வக உபவீத தந்துக்களாம். இங்ஙனமன்றி புற உபவீதத்ந்து அஞ்ஞானமயமாய முக்குணமே யாம். ஞானகிரந்தியாய அத்வைத கிரந்தி பற்றியாய அம்சமெனப்படும் ஈரக்கரங்களே அகச்சிகை உபவீதங்களென்பது துணிபாம். ஆதலின் புறந்தோன்றாத அவ்வகச் சிகை உபவீதமுடைமையே பிரமத்தியானத்துக்கு அருகமாய ஏதித்துவமுடைமையொன்றே பிராமணத்தன்மை யெனப்படும். இருந்தவாற்றால் புறந்தோன்றும் கருமச்சிகை உபவீதங்கள் மயிர்க்கூட்டம் பற்றியாய சிகையும், பருத்திநூல் பற்றியாய உபவீதமுமாம். ஆகலின் அவையுடைமை கிருதகத்தமுடைய போலிப் பிராமணத்தன்மையே யாம். ஆகலின் அவை விருத்திப்பொருட்டு பலவேறு வழிபற்றி முயற்சித்தற்கு செய்து கொண்ட போலிவேஷமே யல்லது உண்மைப் பிராமணத்தன்மை அன்றாம்.

பிரமப்பொருள் ஒன்றேயன்றி இரண்டின்றாம். தேவர் முனிவர் மனிதர் எவரும் அவ்வொன்றாய பிரமத்தின் வசமுடை

யரேயாம். முத்தி ஒன்றேயன்றி இரண்டின்றாம். அதனை ஈயும் பிரமம் ஒன்றேயன்றி இரண்டின்றாம். ஆகலின் அதற்குச் சாதனமாய பிராமணத்துவம் ஒன்றேயன்றி இரண்டின்றாம். சாதியாச்சிரமங்கள் பலவேறாயினும் சிகைச்சாதியாச்சிரமம் ஒன்றேயன்றி இரண்டின்றாம். முத்திக்கேதுவாய சிகை உபவீதங்களுக்கு மூலமாய பிரணவம் ஒன்றென்றே அறிவர் கூறுவர். அம்சமே சிகை. பிரணவமே உபவீதம். நாதம் அவ்விரண்டன் இயைபாம். இவ்வியே தருமமென் றுயர்த்தோதப்படும். இவற்றின் வேறாய போலிப் பிராமணக் கருமங்கள் தருமமாகமாட்டா. இவற்றியல்பு இங்ஙனமேயாம் இனி பிரணவம் அம்சம் நாதம் என்ற தத்துவம் மூன்றால் முறுக்கிய உபவீதம் இதய அறிவின் கணுள்ளது. இஃதாகலின் அப்பிரமம் முத்திறமென்றறிக. ஆகலின் இவ்வுலகப் போலிச்சிகை உபவீதங்கள் நீக்கற்பாற்று. அவற்றுள் சிகையை வபனஞ்செய்து புற உபவீதத்தை நீக்கிவிடுக. இவ்வியல்புணர்ந்துடையான் அவற்றை நீக்கி அட்சரமாய பரப்பிரம சூத்திரமே தரிக்கற்பாற்று. தரித்துவரும் சென்மம் இன்றாதற்கு முத்திக்கேதுவாய அச்சூத்திரம் பிரமம ஒன்றனையே இரவுபகல் தியானிக்கற்பாற்று. அச்சூத்திரமாவது பரமபதமேயாம். சூசனமுடைமைபற்றி அது சூத்திரமெனப் படும். அத்தன்மைத்தாய அச்சூத்திரம் தரித்தவனெவன் அவனே முமுட்சு. அவனே சந்நியாசி. அவனே ஞானி. அவனே நல்லொழுக்க முடையன். அவனே பந்திக்குரிய சுத்தமுடைப் பிராமணன். தந்துதாரகமாக மணிகணம் நிற்றல் காண்டுமன்றே. அதுபோல இச்சூத்திரதாரகத்தன்றே இவ்வுலகெலாம் நிலைபெறுவன. ஆகலின் இச்சூத்திரம் தரித்தவனெவன் அவனே யோக இயல்புணர்ந்துடைய யோகி. அவனே பிராமணன். அவ்வியல்புணராதான் பிராமணனல்லன். ஆகலின் புறச்சிகை சூத்திரங்களை நீக்கியோனெவன் அவனேயோகி. அவனே ஞானி. அவனே பிராமணன். அவை நீக்காதான் பிராமணனல்லன். பிரமமாய சூத்திரந்தரித்தவனெவன் அவனே முத்திக்குரிய பிராமணன். அந்நியன் அதற்குரியனாகாத போலிப் பிராமணன். அச்சூத்திரந் தரித்தோனெவன்

அவனுக்கு அசுத்தம் உச்சிட்டமென்பன இல்லை. இத்தன்மைத்தாய அகச்சூத்திரமே ஞான உபவீதமாம். இச்சூத்திர இயல் புணர்ந்தோனெவன் அவனேஉண்மை உபவீதமுடைய உண்மைப் பிராமணன். இஃதுணராதான் போலிப் பிராமணன். ஞான சிகை ஞானஉபவீதமுடையனெவன் அவனே ஞானப்பிராமணன். அவையில்லான் அஞ்ஞானப் பிராமணன். ஞானமொன்றே எவற்றினும் மேற்றும். ஆகலின் ஞானமுடையோனெவன் அவன் சுத்தப் பிராமணன். அஃதில்லான் அசுத்தப் பிராமணன். அவன் தாழ்ந்தவனன்றி உயர்ந்தவனாகான், அசுத்த முடையவனாகலின். ஞானசிகையே அக்கினிபோல் அசுத்தத்தைப்போக்கும். அஞ்ஞானப் போலிச்சிகை அசுத்த முடைத்தாம். அகச்சிகையுடையனெவன் அவனே அறிவுடைப் பிராமணன். அஞ்ஞானச்சிகையுடையனெவன் அவன் அறிவில்லாப் போலிப்பிராமணன். அப்போலிப் பிராமணனது வைதீக லௌகீக அதிகார நிமித்தமாய பிராமணத்துவம் வயிறு நிறைத்துச் சீவித்தற்பொருட்டு கற்பித்துக்கொண்ட போலிப் பிராமணத்துவமேயாம். அன்றி உண்மைப் பிராமணத்துவமன்று. அத்தன்மைத்தாய போலிப பிரமாணத்துவம் முத்திக்கேதுவாகாது. மற்று நிரயத்துக்கேதுவேயாம்; அன்றி எண்ணிறந்த பிறவிக்கேதுவுமாம். இடது தோள்முதல் வலது இடைகாறும் புற உபவீதம் பாவித்து வலமாகச்செய்க. அப் புற உபவீத மொப்ப தத்துவ தந்துவாலாய அகச்சூத்திரம் இப்பெற்றி பற்றிச் செய்ததொன்று. இனி நாபிமுதல் பிரமரந்திரம்காறும் ஞானவான் தரித்துக்கோடலொன்று. இரண்டனுள் மேலோது மொன்று கிரியாதந்துவாலாய தொன்றும். கீழோது மொன்றன் சிகை ஞானமயம்; உபவீதமும் அம்மயமேயாம். இவ்விருவேறு திற முடைமையே பிராமணத்துவமாம். இவ்விரண்டற்கு வேறாயது சிறிதும் பிராமணத்துவமாகாது. இவ்வுபவீத மொன்றே மேலாயது. இதனை உடைய னெவன் அவனே பிராமணன். இது தரித்தவனெவன் அவனே ஞானி. அவனே முத்திக்குரியன். இவ்வாறு அகம்புறமாய உபவீத மிரண்டு முடையனெவன் அவனே உண்மைப் பிராமணன்: அவனே சந்நியாசத்துக் குரி

யன்; அவனே மோக்ஷ அபேக்ஷையுடையன். ஆகலின் அவ்வபேக்ஷைப் பொருட்டு எல்லா முயற்சி பற்றியும் புறச் சூத்திரம் நீக்கி இயல்பானமைந்த அகசசூத்திரமே தரிக்கற்பாற்று. புறச் சிகை உபவீதமுடைய போலிப்பிராமணத்துவ மொழித்து பிரணவ அம்சமயமாய சிகா சூத்திரந்தரித்தலானாய உண்மைப் பிராமணத்துவமாய முத்தி சாதனம் செய்யற்பாற்று எனச் சௌனகமுனி கூறினனென்பது பரப்பிரம்மோபநிஷத். ஓம் சாந்தி சாந்தி சாந்தி.

சந்திரசேகரர்.

---

## செஞ்சொற் சதங்கை

இவ்வுலகில் வழங்கும் மொழிகள் தனிமொழி யென்றும், கிளைமொழி யென்றும் இருவகைப்படும். இவற்றுள் தனிமொழியானது மக்கள் தமது உளத்தில் ஊறிய கருத்துக்களை வெளிப்படுத்தும் பொருட்டு அமைத்து வழங்கும் சொற்களை தன்னகத்தே கொண்டு விளங்கும். ஆகலின், ஓர் தனிமொழியில் வழங்குஞ் சொற்களை நன்கு ஆராய்வோமானால் அம்மொழியைத் தாய் மொழியாகக்கொண்ட மக்களது மனப்பான்மை செம்மையாய் அறியப்படும். இம்முறையில் நம் தமிழ் மொழியில் வழங்கும் சில செஞ்சொற்களை ஈண்டு எடுத்து ஆராய்வாம்.

தமிழ் மொழியின் உண்மைத் தன்மையை உணராதார் சிலர் அதன்கண் அவசியமின்றிப் பல சொற்கள் அமைந்து கிடக்கின்றன வென்றும், அவற்றை வழக்காற்றினின்றும் அகற்றி, செந்தமிழ் மொழியைச் செம்மைப்படுத்த வேண்டுமென்றும் கருதுகின்றார்கள். ஒரு மொழியில் ஒரு பொருளைக் குறிப்பதற்கு ஒரு சொல்லே போதியதாயிருப்ப பல சொற்கள் வழங்குவது தவறென்று அன்னார் கருதுகின்றார்கள். நமது தமிழ் மொழியில் ஒரு பொருள்குறிக்கும் பல சொற்களும் ஒரு

பொருளின் பல நிலைமைகளைக் குறிக்கும் பலசொற்களும் அமைந்திருக்கக் காண்கின்றோம். இதற்குச் சான்றாக பூ வென்னும் அழகிய சொல்லின் தன்மையை உற்று நோக்குவாம். அரும்பு, முகை, போது, மலர், அலர் ஆகிய ஐந்து சொற்களும் பூவின் பல பருவங்களை உணர்த்துகின்றன வென்பது தமிழ் நய முணர்ந்தார் கண்டறிந்த உண்மையாகும். நறுமணங் கமழும் ஓர் நந்தன வனத்திற் செல்வானொருவன் அங்கு பல திறப்பட்ட பருவமமைந்த மலர்களைக் கண்டு மகிழ்வான். அப்பூக்களிற் சில அரும்பாகவும், சில முகையாகவும், சில போதாகவும், சில மல ராகவும் இலங்கக் காண்பான். செடி கொடிகளில் அரும்பித் தோன்றி இலங்கும் முதற் பருவ நிலையே அரும்பு என்று அழைக் கப் பெறும். அரும்பே பூவின் முதற் பருவமென்பது

"அரவின் வாயின் முள்ளெயி றேய்ப்ப அரும்பீன்று
குரவம் பாவை முருகமர் சோலைக் குற்றாலம்"

என்னும் ஞானசம்பந்தப்பெருமான் திருவாக்கால் நன்கு அறியப் படும். இத்தகைய 'அரும்பு' பொழுது செல்லச் செல்ல முதி ரும் நிலையில் முகை யென்று பெயர் பெறும். முகையெனினும் மொட்டு எனினும் பொருள் ஒன்றேயாம். இம்முகை அவிழும் பருவத்தில் போது என்று பெயர் பெறும். போது மலரும் நிலை யில் மலர் என்று பெயர் பெறும். நன்றாக மலர்ந்த மலர் அலர் என்று பெயர் பெறும். ஆகவே ஒரு பூவின் முதற் பருவம் அரும்பென்றும், இரண்டாம் பருவம் முகை யென்றும், மூன் றாம் பருவம் போது என்றும், நான்காம் பருவம் மலர் என்றும், ஐந்தாம் பருவம் அலர் என்றும் வழங்கக் காண்கின்றோம். இந்த நயத்தை நமக்கு உணர்த்தக் கருதிய நாயனார்,

"காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்"

என்று காதல் மலரின் பருவங்களை அழகாக அமைத்துப் போந் தார். காலைப்பொழுதில் அரும்பித் தோன்றும் காதல் அரும் பெனப்பட்டது. அவ்வரும்பு பொழுது செல்லச் செல்ல முகை

யாகி முதிர்ந்து தளையவிழும் நிலையில் போதெனப்பட்டது. மாலைப் பொழுதில் அப்போது இதழ் விரிந்து மலர்தலால் மலரெனப்பட்டது. இத்தன்மையை சிலப்பதிகார ஆசிரியர் அந்திப் பொழுதின் அழகைக் கூறப்போந்த இடத்து,

"கூடினார் பால்நிழலாய் கூடார்பால் வெய்யதாய்
காவலன் வெண்குடைபோல் காட்டிற்றே-கூடிய
மாதவிக்குங் கண்ணகிக்கும் வானூர் மதிவிரிந்து
போதவிழ்க்குங் கங்குற் பொழுது"

என்னும் வெண்பாவின் ஈற்றடியில விளங்க வைத்தார். வானத்தில் ஊர்ந்து செல்லுந் திங்கள் போதாய் நிற்கும் பூக்களை நெகிழ்த்து மலர் விக்குந் தன்மையை ஆசிரியர் அழகாக அமைத்திருப்பது போற்றுதற் குரியதாகும். இவ்வாறு ஒரு பொருளின் பல நிலைகளைக் குறிப்பதற்குப் பல சொற்கள் இன்றியமையாதெனவென்பது சொல்லாமலே அமையும்.

இனி ஒரு பொருளை உணர்த்தும் பல சொற்கள் ஒருமொழியில் அமைந்திருப்பதன் அவசியத்தைச் சிறிது ஆராய்வாம். பாவகையிலேனும், உரைநடையிலேனும் ஓர் விழுமிய பொருளை உணர்த்தக் கருதும் அறிஞன் அப்பொருளை இனிய சொற்களால் எழிலுற அமைத்து அவ்வழகினைக் கண்டு மகிழ்கின்றான். இவ்வுண்மை பழந் தமிழ் நூலாய தொல்காப்பியத்தில் "இழுமென் மொழியால் விழுமியது மொழிதல்" என்று வியந்து கூறப்படும் கட்டுரையால் இனிது விளங்கும். அஃதாவது விழுமிய பொருளை விளங்க வுரைக்கக் கருதும் வினையினீங்கிய அறிஞன் அப்பொருளைச் செவிக்கின்பம் பயக்கும் செஞ்சொற்களால் அமைப்பான் என்பதே ஆசிரியர் கருத்தாகும். இவ்வாறு சொற்களை அமைப்பதால் வரு மின்பத்தைக் கம்பர் பெருமான், 'செஞ்சொற் கவியின்பம்' என்று அமைத்துப் போந்தார்.

"பொன்னின் சோதி போதினின் நாற்றம் பொலிவே போல்
தென்னுண் டேனிற் றீஞ்சுவை செஞ்சொற் கவியின்பம்!"

என்னும் அழகிய சொற்கள் அளவிலா இன்பந் தருவன வாகும் என்று அழகாக அமைத்திருக்கின்றார். இவ்வின்பம் பயப்ப தற்கு இடம் தெரிந்து சொற்களை அமைத்தல் இன்றியமையாத தாகும். செஞ்சொற்களால் கவிமாடம் அமைக்கும் அருஞ் செயலை மேற்கொண்ட அறிஞனுக்கு எல்லா இடங்களிலும் அமைத்தற்கேற்ற பல சொற்கள் ஒரு மொழியில் அமைந்திருந் தால் அல்லது பொருந்திய சொற்களைத் தேர்ந்தெடுத் தமைத்தல் இயலாததாகும். ஒரு மொழியில் ஒரு பொருளைக் குறிப்ப தற்கு ஒரு சொல்லே அமைந்திருக்குமாயின் அச்சொல்லை ஆளும் முறையில் அது செவிக்கின்பம் பயவாது போதலும் கூடும். ஆனால் பலசொற்கள் ஒரு பொருளையே குறித்து நிற்கு மாயின் இடத்திற் கேற்ற சொல்லை இனிதெடுத் தமைத்து கற்போரது சிந்தைக்கும் செவிக்கும் அளவிலா வின்பம் அளித் தல் இயலும். இத்தகைய சொல்லின்பம் தமிழ் நூல்களில் நிறைந் திருப்பதைச் செவிச்சுவை யுடைய செல்வர்கள் நன்கறி வர்கள். இனி இத்தகைய செஞ்சொற்புலவன் செவ்விய நூல் செய்யுந் தன்மையைச் சிறிது ஆராய்வாம்.

இவ்வுலகில் அழகுறத் தோன்றும் பொருள்களை அறிஞர் பலவகையாகப் போற்றி மகிழ்வர். இயற்கைத் தோற்றத்தின் இனிய அழகினை ஓவியப் புலவன் சித்திரத்தில் சிங்காரமாக அமைத்து மகிழ்வான். சிற்ப நூல்வல்லான் அவ்வழகினைச் சிலையில் எழிலுற அமைத்து இன்புறுவான். அவ்வாறே அவ் வழகினை ஓர் கவிஞன் செஞ்சொற்களில் அமைத்து மகிழ்வான். முன்னர்க் கூறிய ஓவியமும், சிற்பமும் கண்களைக் கவர்ந்து மன திற்கு இன்ப மூட்டுகின்றன. ஆனால் கவியின்பம் செவியினைக் கவர்ந்து உளத்திற்கு உவகை ஊட்டுகின்றது. இவ்வுண்மையைச் சிறிது ஊன்றிச் சிந்துப்போமாயின் கவிஞனது செயல் நன்கு உணரப்படும். சிற்பநூல் வல்லானொருவன் முதலில் ஓர் மலையி னின்றோ பாறையினின்றோ ஓர் கல்லைப் பெயர்த்தெடுக்கின்றான். அப்பால் அக்கல்லில் தான் அமைக்கக் கருதும் வடிவத்திற்கு வேண்டாத பாகங்களைப்பெயர்த் தெறிகின்றான். இவ்வாறு கல்லி

னின்றும் வடித்தெடுத்த உருவமே வடிவம் (Form) எனப்படும். அவ்வடிவம் அழகுற அமைந்திருக்குமேயாயின அவ்வழகு வடிவு என்று வழங்கப்பெறும்

ஆகவே ஒரு கல்லினின்றும் சிற்பநூல் வல்லானால் வடித்தெடுக்கப்பட்டு அழகுற இலங்கும் உருவமே வடிவு என்று பெயர் பெறும். இத்தன்மையே கவிஞனிடத்தும் அமைந்திருப்பதைக் காணலாம் கவிஞன் ஒரு மொழியினின்றும் செஞ்சொற்களை வடித்தெடுத்துப் படிப்போருள்ளத்தில் ஓர் வடிவை எழுதி அமைக்கின்றான். இத்தகைய செஞ்சொற்களை வடித்த சொற்களென்று நம் முன்னோர் வழங்கினார்கள். வடித்த சொற்கள் எனவே வடியாச் சொற்களும் உள்ளனவென்பது சொல்லாமலே அமையும். உலக வழக்கில் வடித்தசோறு, வடித்த தங்கம், வடித்த எண்ணெய் என்று வழங்கக் காண்கின்றோம். இச்சொற்களை ஆராயும்பொழுது வடி என்னும் சொல்லின் உண்மைத் தன்மை நன்குணரப்படும். கஞ்சி முதலிய வேண்டாத பொருள்களோடு கலந்து நிற்கின்ற சோற்றை அவற்றினின்றும் பிரித்து வடித்தெடுப்பதே வடித்தல் என்பதின் பொருளாகும். அவ்வாறே மாசு மறுவோடு கலந்து நிற்கும் பொன்னைப் புடம் வைத்துப் பிரித்தெடுக்கும் செயலே வடித்தல் என்று சொல்லப்படும். அதுபோலவே கடுகு முதலிய மாசினின்றும் வடிகட்டி எடுக்கப்படும் எண்ணெய் வடியெண்ணெய் என்று வழங்கப்பெறும். உலகவழக்கில் வடி என்னும் பதம் இவ்வாறு அமைந்திருப்பது போலவே நூல் வழக்கிலும் வடித்த நூலோர் [illegible]றும், வடியாக் கிளவி யென்றும் வழங்கக் காண்கின்றோ[illegible]லப்பதிகாரத்தில் கோவலனுக்கு மாதவி எழுதிய திருமுகத்தில்,

“என் வடியாக்கிளவிமனம் கொளல் வேண்டும்”

என்றும் ஆசிரியர் அமைத்திருப்பது சிந்திக்தற் குரியதாகும். “வடியாக் கிளவி” என்னும் சொற்றொடருக்கு உரை யெழுதப் போந்த அடியார்க்கு நல்லார் “குற்றமறுத சொல்” என்று பொருள் கூறி யிருப்பதும் ஈண்டு கருதுதற் குரியதாகும்.

ஆகவே குற்றமற்ற சொல் வடித்த சொல்லென்றும், குற்றமுற்ற சொல் வடியாச் சொல்லென்றும் அடியார்க்கு நல்லார் கருதுவ தாகத் தெரிகின்றது. இத்தகைய வடித்த சொற்களே செஞ் சொற்களா மென்பதும், அச்செஞ்சொற்களாலாய சதங்கையே சிறிய இலக்கிய நூலா மென்பதும், செஞ்சொற் சதங்கையின் ஒலியே செவிக்கும் சிந்தைக்கும் அளவிலா இன்பம் பயப்பதா மென்பதும் இனிது உணரப்படும்.

---

# திருப்புறம்பியத்துக் கல்வெட்டுகள்.

[திருப்புறம்பியம் என்பது கும்பகோணத்திற்கு வடமேற்கில் ஐந்துமைல் தூரத்தில் மண்ணியாற்றின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். இத்தலம் சைவசமயாசிரியர் நால்வராலும் பாடப்பெற்றது. இது கி. பி. 880-ல் பல்லவர்க்கும் சோழர்க்கும் பெரும்போர் நடைபெற்ற இடம். அப்போரில் வாகைசூடிய முதல் ஆதித்த சோழதேவர் இங்குச் சிறந்த கற்றளி ஒன்று அமைத்துள்ளனர். அஃது அவர் பெயராலேயே ஆதித்தேச்சுரம் என்று அந்நாளில் அழைக்கப்பெற்றதென்பது கல்வெட்டு களால் அறியப்படுகிறது. அக்கற்றளியில் பல கல்வெட்டுகள் உள்ளன. அவையெல்லாம் முதல்பராந்தக சோழதேவர், முதல் இராஜராஜ சோழதேவர், முதல் இராஜேந்திர சோழ தேவர், முதல் குலோத்துங்கசோழதேவர், விக்கிரமசோழதேவர், இரண்டாம் இராஜராஜ சோழதேவர், மூன்றாங் குலோத்துங்க சோழதேவர், மூன்றாம் இராஜராஜ சோழதேவர் ஆகிய பல சோழ மன்னர்களது ஆட்சிக் காலங்களில் வெட்டப்பட்டவை என்று தெரிகின்றன. அவை சோழமன்னர்களின் சரித்திரங் களை ஆராயும் அறிஞர்களுக்குப் பெரிதும் பயன்படக்கூடியன வாதலின் அவற்றுள் யான் பெயர்த்தெழுதி யுள்ளவற்றை வெளி யிடுகின்றேன்.]

I

காலம்:—முதல் இராஜராஜ சோழனது ௫-ஆம் ஆண்டு.
இடம்:—கர்ப்பக் கிரகத்தின் தென்புறம்.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திருமகள்போல பெருநிலச் செல்வியும் தனக்கே யுரிமை பூண்டமை மனக்கொளக் காந்தளூர் சாலைகல மறுத்தருளி கங்கைபாடியும் நுளம்பப்பாடியும் தடிகைப்பாடியும் குடமலை நாடும் கொல்லமுங் கலிங்கமும் திண்டிறல் வென்றித்தண் (2) டாற்கொண்ட தன்னெழில்வள ரூழியில் யெல்லா யாண்டுந்தொழு தகைவிளங்கும் யாண்டே செழியரைத் தேசு கொள்கோ இராஜகேசரிவம்மர்க்கு யாண்டு பத்தாவது வடகரை அண்டாட்டுக் கூற்றத்து திருப்புறம்பியத் தாழியானுகிற (3) கூத்த பெருமானுடைய நம்பிராட்டியார் திருப்பள்ளிக் கட்டிலுக்கு இவ்வூர் வளஞ்சியர் வைத்த நொந்தா விளக்கு இவை பற்றுக்கு பழைய வாநவன் மாதேவி நிலம் வானவன் மாதேவி நதிக்கு கிழக்கு ராஜேந்திரி வாய்க்காலுக்கு மேற்கு நின்று (4) சம்மதித்து கையோலைசெய்து கொடுத்தோம் தேவகன்மிகளோம் இவை கோயில் கன்மிக்கு புறம்பிய உடையான் பிராளயன் புறம்பியன் எழுத்து இது மஹேசுர சாட்சி.

II

காலம்:—முதல் இராஜராஜ சோழனது பத்தாம் ஆண்டு.
இடம்:—கர்ப்பக்கிரகத்தின் தென்புறம்.

ஸ்வஸ்தி ஸ்ரீ கோவிராஜ கேசரிவம்மற்கு யாண்டு ௰-வது அண்டாட்டுக் கூற்றத்து நீங்கிய தேவதானம் திருப்புறம்பியத்து பட்டாலகற்குப் பல்லவப் பேரரையன் வீரசிகாமணிப் பல்லவரையன் சந்திராதித்த வல்லெரிக்கவைத்த நொந்தா விளக்கு+ஒன்று நிக்குநிசம் உழக்கு நெய்க்குவைத்த சாவா மூவாப்பேராடு கூடு தொண்ணூறு பன்மாஹேஸ்வரரக்ஷை.

III

காலம்:—முதல் இராஜராஜ சோழனது ஏழாம் ஆண்டு.
இடம்:—மேலே குறித்துள்ள கல்வெட்டிற்குக்கீழ்

ஸ்வஸ்தி ஸ்ரீகோவிராஜ கேசரிவம்மற்கு யாண்டு எ-ஆவது திருப்புறம்பிய பட்டாலகற்கு இருமுடிசோழ (வ) ளுக்கரில் ராஜமா நாயகன் இத்தேவற்கு சந்திராதித்தவல் எரிக்க வைத்த திருநொந்தா விளக்கு ௧ ஒன்றுனிக்கு நிசதம் உழக்கு நெய்யாக வைத்த ஆடு ௯0 தொண்ணூறு.

## IV

காலம்:—முதல் இராஜராஜ சோழனது ஐந்தாம் ஆண்டு.
இடம்:—கர்ப்பக் கிரகத்தின் தென்புறம்.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோவிராஜ கேசரிவம்மற்கு யாண்டு ரு ஆவது வடகரை அண்டாட்டுக் கூற்றத்து நின்று நீங்கிய தேவ தானந் திருப்புறம்பியம் வானவன் மூவேந்தவேளான் ஆராதித்த புறம்பியமுடைய (2) மஹாதேவர் பண்டாரத்து இராஜாவதிக்கு யாண்டு 2-வது முதல் ரு-ஆவது வரை செலவு நீக்கி உடலா யீந்த பொன்னில் இ மஹாதேவர்க்கு சந்திராதித்தவல் சாத்தி யருளயிட்ட பட்டமூன்றிறை பொன்னூற்றைம்பதிற் (3) கழஞ் சும் பொற்பூ ௧ நிறை ஐங்கழஞ்சும் இதிற் சந்திராதித்தவற் சாத் தவும் தண்ணீரமுது செய்ய இட்ட வெள்ளிவட்டில் ௧ நிறை நாற்பத்து முக்கழஞ்சேய் மூன்றுமஞ்சாடியு மரைமாவுமாக இவை யித்தனையும் மாஹேஸ்வரரக்ஷை.

## V

காலம்:—முதல் இராஜராஜ சோழனது உ0ரு-ஆம் ஆண்டு.
இடம்:—கர்ப்பக் கிரகத்தின் மேற்புறம்.

(1) ஸ்வஸ்தி ஸ்ரீகோவிராஜகேசரி வம்மரான (2) ஸ்ரீ ராஜ ராஜ தேவர்க்கு யாண்டு உ0ரு (3) ஆவது இராஜேந்திர சிங்க வள நாட்டு அண் (4) டாட்டுக் கூற்றத்து நின்று நீங்கிய தேவதா (5) நந்திருப்புறம்பியத்து திருப்புறம்பிய முடைய மஹாதே (6) வர்க்கு இத்தேவர் தேவதானம் பிரம்பியன் காசு..............இருக்கும் வெள் (7) ளாளன் பொருநபாடியுடை

யான் அரணிதி மண்ணியகமுடையான் (8) ஒழியாப்பகை பசு வதி வைத்த திருநொந்தா விளக்கு+ஒன்று இதில் முன்பு (9) இவன் பக்கல் காசுகொண்டு இவ்வூர் ஸ்ரீ கோயிலுடையான் மாறன் முன் (10) னூற்றுவபட்டன் எரிக்கக் கடவ விளக்குரு அரையும் (11) இவன் மக்கள் பக்கல் காசுகொண்டு இவ்வூர் ஸ்ரீ கோயி (12) லுடையார்கள் எரிக்கக்கடவ விளக்குரு அரையும் ஆக விளக்கு ஒன்று—பஞ்சபோசு.........

## VI

காலம்:—முதல் இராஜராஜ சோழனது கஎ-ஆம் ஆண்டு.
இடம்:—கர்ப்பக்கிரகத்தின் தென்புறம்.

(1) ஸ்வஸ்தி ஸ்ரீ திருமகள்போல பெரு நிலச் செல்வியும் தனக்கே யுரிமை பூண்ட மனக்கொளக்காந்தளூர் சாலை கல மறுத் தருளி கங்கை பாடியும் நுளம்பாடியும் தடிகை வழியும் குடமலை நாடும் கொல்லமுங் கலிங்கமும் திண்டிறல் வென்றி (2) செழி யனைத் தேசு கொள்கோ ராஜராஜ கேசரிவம்மற்கு யாண்டு லீஎ ஆவது வடகரை அண்டாட்டுக் கூற்றத்து நின்று நீங்கிய தேவ தாநந் திருப்புறம்பிய முடைய மஹாதேவற்கு மல்லிவைத்த நொந்தா விளக்குக்கு கோயில் வெட்டிச்சு அரையும்படி யாப்பில் வெட்டிச்சு அ.....................(3) மாக விளக்கு + மன்றாடி சொற்படி கண்ணன் எழுத்து. இது............

(தொடரும்)

T. V. சதாசிவ பண்டாரத்தார்,
தலைமைத் தமிழ்ப் பண்டிதர்,
வாணாதுறை ஹைஸ்கூல்,
கும்பகோணம்.

திருக்கைலாய பரம்பரை

திருவாவடுதுறை ஆதீனத்துக்

# குருபரம்பரை யகவல்

ஷை ஆதீனத்து மஹாவித்துவான் திரிசிரபுரம்
ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களியற்றியது.

திருவளர் கைலைச் சிலம்பில்வீற் றிருக்கு
மருவளர் கடுக்கை மாலிகைப் பெருமா
னருள்பெறு நந்தி யடிகடம் பான்மெய்ப்
பொருள்பெறு கருணைப் புகழ்சனற் குமாரர்
மற்றவ ரருளுறீஇ வையகத் தியங்கிய
நற்றவர் சத்திய ஞானதரி சனிக
ளவர்தெறு வாய்மைப் பரஞ்சோதி யடிக
ளத்தகு குரவ ரருளடைந் துயர்ந்த
வித்தகர் வெண்ணெய் மெய்கண்ட தேவ
ரிவர்முதற் குரவ ரியைந்திரு நாமந்
தவர்புகழ் சமாதித் தலமடை மதிநா
னிவைமுறை யுரைப்பா மிசைத்த மெய்கண்டர்
சுவையமை வெண்ணெய் நல்லமதி சோதி
தவலருங் கருணை தழையரு ணந்தியார்
கவலருந் துறையூர் கன்னிமதி பூரம்
படர்மறை ஞானசம் பந்தர்வண் டில்லை
வடகரைச் சேரி மடங்கன்மதி யுத்தரந்
திக்கொத் திறைஞ்சத் திகழுமா பதியார்
மெய்க்கொற் றவன்குடி மேடமதி யத்தம்
வாய்ந்தவரு ணமச்சி வாயதே சிகர்மேல்
வேய்ந்த கொற்றவன்குடி மின்மதி யாதிரை
திண்ணிய சித்தர் சிவப்பிர காசர்
நண்ணிய தலமதி நாளவர்க் கில்லை
யளவா வருளுற் றவிர்நமச் சிவாயர்
வளவா வடுதுறை மகரமதி மூலம்

ணலமலி தருமறை ஞானர்மே லுற்றத்த
வலமலி துறைசை மகரமதி சோதி
வளம்பயி லம்பல வாணர் மேலெடுத்து
'விளம்பிய துறைசை மேடமதி யவிட்ட
மொருவா வருண்மலி யுருத்திர கோடிக
டிருவால வாய்விருச் சிகமதி யனுட
மணவிய வருள்வே லப்பர் திருப்பூ
வணநகர் விருச்சிகமதியுத் தராடந்
தரமலி குமார சாமிகள் சுசீந்திரம்
வரமலி விருச்சிக மதியுத்தராடந்
தரைசொல்பிற் குமார சாமிகள் சுசீந்திர
முரைமடங் கன்மதி யுத்தரட் டாதி
மருவு மெஞ்ஞான மாசிலா மணியார்
வெருவில் வெண்காடு மேடமதி யுரோகிணி
யிராம லிங்கர்மு னிசைத்தகோ முத்தி
பராவு விருச்சிகம் படர்மதி யனுடந
தாவில் வேலப்பர் சங்கர நயினார்
கோவில் வான்கன்னி குலாமதி மூலம்
பின்வே லப்பர் பெருநதுறை கோட்டிற்
பொன்வேய் சேமதி பூரட் டாதி
யாய்புகழ்த் திருச்சிற் றம்பல தேசிகர்
வேய்புகழ்த் துறைசை மிதுனமதி பரணி
யம்பல வாண ராவடு துறையே
நம்பலர் கொடுஞ்சிலை நகுமதி கேட்டை
வளமலி சுப்பிரமணிய மணிய தேசிக
ரளவரும் புகழ்த்திரு வாவடு துறையே
தெளிதர வொளிர்விருச் சிகமதி கார்த்திகை
தெளிதர வுரைத்தேன் வேணவா வானே.

ஷை ஆதீனத்துச் சீடன்

மு. அப்பாவு பிள்ளை,

வாங்கல்.

# மனுநீதிகண்ட சோழன் வரலாறு

(உ-ம் சிலம்பு ௯௨-ம் பக்கத் தொடர்ச்சி)

இவன் காலத்தில் அவ்வடமொழி மனுதர்ம சாத்திரத்தின் பெயரே தமிழர்களுக்குத் தெரியாதென்பது தேற்றம். ஆகவே இம்மன்னவன் அரசியல் தமிழர்களின் அறநூல்களைப் பின்பற்றி நிகழ்ந்திருக்கவேண்டுமே யொழிய மனு இயற்றிய வடமொழி அற நூலின்படி நிகழ்ந்திருக்கமுடியாது. எனவே மனுநீதி கண்ட சோழன் என்னும் இப்புனைபெயர் பொருந்தாதெனக் கொள்ள இடந்தருகின்றது.

## இவன் உறைவிடத்தைப்பற்றிய ஆராய்ச்சி

இச்சோழன் கடைச்சங்க காலத்திற்கு முன்னிருந்தவன் என்பதற்கு யாதோர் ஐய மின்மையாலும், அக்காலத்திற் சோழ மன்னர்களுக்குத் தலைநகராக இருந்தது புகார்நகரமென்றே அறியப்படுதலாலும், இவன் காவிரிப்பூம்பட்டினத்தில்தான் இருந்திருக்கவேண்டும் என்று கொள்ளலாம். பழைய நூலாகிய சிலப்பதிகாரமும் இவன் காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்தவன் என்றே கூறிச் செல்லுதலும் இதற்குத் தகுந்த சான்றாகும். இஃதன்றித் திருவாரூரில் உறைந்தான் என்பதற்கு அவ்வூரில் உள்ள சில அடையாளங்களும், திருத்தொண்டர் வரலாறும், அவ்வூரைப்பற்றிய நூல்களும் அன்றி வேறு பழைய நூற் சான்று யாதொன்றும் காணக்கிடைக்கவில்லை. ஆதலால் இவன் திருவாரூரில் அரசாட்சி செய்தான் என்பது உண்மையோ? அன்றோ? என ஐயுறற்கு இடந்தருகின்றது.

## வரலாற்று நிகழ்ச்சியைப்பற்றிய ஆராய்ச்சி

'சால மறைத்தோம்பி' என்னும் பழமொழிப் பாடலை ஆராயுங்கால் திருத்தொண்டர் வரலாற்றிற் பெரும்பான்மை மாறுபட்ட மற்றொரு வரலாறு காணப்படுகின்றது. திருத்தொண்டர் வரலாற்றின்படி எல்லா நிகழ்ச்சிகளும் காலநீட்டிப் பின்றி நடந்ததாகத் தெரிகின்றது. இச்செய்யுளின்படி பார்த்தால் பசுங்கன்று தேர்க்காலில் அகப்பட்டு இறந்த செய்

நிலையை அமைச்சர் முதலிய சான்றோர்கள் அரசன் அறியாமலே மறைத்து விட்டனர். பலதிங்கள் சென்றதன் பின் இந்நிகழ்ச்சி அரசனுக்கு எங்ஙனமோ தெரியவர உடனே அப்பசுங்கன்றை ஊர்ந்த தனது மகனைத் தானும் தேரையூர்ந்து கொன்றான், என்று அறியக் கிடக்கின்றது. இதனால் கன்றையிழந்த பசு தானே அரண்மனையை அடைந்து வாயிலிற் கட்டியிருந்த ஆராய்ச்சி மணியைக் கொம்பினால் அசைத்ததென்றும், அரசன் தன் மைந்தனைக் கொல்ல முதலில் அமைச்சன் ஒருவனை ஏவினான் என்றும், அவ்வமைச்சன் தற்கொலை செய்துகொண்டு இறந்தானென்றும், அரசன் மகன் மீது தேரூர்ந்து கொன்றவுடன் சிவபிரான் தோன்றினாரென்றும், மீண்டும் பசுக்கன்றும், அமைச்சனும், இளவரசனும் பிழைத்து எழுந்தார்களென்றும் கூறும் தொண்டர் வரலாற்றுரை உண்மைதானோ என்று ஐயுறுதற்கு இடந்தருகின்றதன்றோ? இது நிற்க. இது காறும் கூறியவாற்றால் பெறப்படும் தொண்டர்வரலாற்றிற்கு மாறுபட்ட வரலாற்றைச் சுருக்கிக் கூறி முடிக்கிறேன்.

## இவ்வாராய்ச்சியாற் பெறப்படும் வரலாறு

பண்டைக் காலத்தில் சோழர்களுக்குத் தலைநகராகிய புகார் நகரில் சோழ மன்னன் ஒருவன் அறநெறி பிறழாமல் அரசு செய்துவந்தான். அவன் நாட்டில் எல்லா மக்களும் இன்பமுற்றிருந்தனர். விலங்கு புள் முதலியனவும் நலம் பெற்று வாழ்ந்திருந்தன. இம்மன்னனுக்கு மைந்தன் ஒருவன் இருந்தான். இம்மைந்தன் ஒருநாள் தேரேறிச் செல்லும் பொழுது ஒரு பசுங்கன்று தேர்க்காலில் அகப்பட்டிறந்தது. இச்செயலை அரசன் அறிந்தால் மைந்தனையே கொன்று விடுவான் என்றெண்ணி அமைச்சர் முதலிய சான்றோர்கள் அவன் அறியாதபடி மறைத்தனர். இவ்வாறு பல திங்களோ? பல ஆண்டோ? சென்றன. மன்னன் எங்ஙனமோ இச்செயலை அறிந்து கொண்டான். உடனே பல நாட்கள் ஆய்விட்டனவே என்று எண்ணாதவனாயும், அறத்தையே நிலை நிறுத்தவேண்டும் என்று எண்ணியவனாயும், தன் மகன் மீது தேரைச்செலுத்தி அவனைக் கொன்று அறத்தை

நிலை நிறுத்தினான். தனது உண்மைப் புகழையும் உலகில் நிலைக்கவைத்தான். மனுநீதிகண்ட சோழனைப்பற்றிய ஆராய்ச்சி இத்துடன் முடிந்தது. கரந்தை, சா. சிதம்பரன்.

---

# குட்டிக் குறள்

## சிறுமறை

(௨-ம் சிலம்பு: ௫௨௭-ம் பக்கத் தொடர்ச்சி.)

### ௨௰. பயனில் சொல்

நயனுளா ரெள்ளப் பயனில சொல்லேல்:
ஆய்வுரை யலாத நேயரினு மாகா.
பயனிலாச் சொல்லே நயனிலா னென்னும்.
பயனிலா வாக்கே நயனெலா நீக்கும்.
க௯ரு. நீரல மொழியிற் சீர்நல மழியும்.
தக்க சொல்லாதான் மக்களுட் பதடி.
நயனில சொலினும் பயனில வேண்டா,
தகையுடை நீரார் மிகைபடக் கூறார்.
மருடீர்ந்த பெரியார் பொருடீர்ந்த குறியார்.
௨௱. பயனில தொழியப் பயனுள் பயில்க.

### ௨௰க. தீவினை

தீவினை யவரே தீவினைக் கயரார்.
தீயசெய் தீய தீயினுந் தீய.
ஒன்னார்க்குந் தீமை எண்ணாமை யுயர்வு.
தீயவர்க்குந் தீய செய்யினறந் தேயும்.
௨௱ரு. வறியனெனத் தீய புரிபவனே வறியன்.
நோயடல் வேண்டான் தீவினை தீண்டான்.
எனைப்பகையுந் தீரும் வினைப்பகைமை சேரும்.
தீவினை நிழல்போற் சேர்ந்தடு மென்ப.
தன்விழைவான் யாதுந் துன்பிழையா னாகும்.
௨௱௰. மருங்கோடிப் பிழையா னருங்கேட னாமே.

### உஉ. ஒப்புரவு

இலகுமழைக் கென்று முலகுபுரி வதுவே.
முயற்சிதருஞ் செல்வ முதவி செயற்கென்ப.
ஒப்புரவி னன்று உலகெதினு மின்று.
ஒத்தறிவான் வாழ்வான் செத்தவனும் பிறனே.
பேரறிஞன் செல்வ மூருணிநீர் போலும்.
ஊர்நடுவண் தருவா முலகறிவான் திருவே.
பெருந்தகையான் செல்வம் மருந்துமர நிகரும்.
உதவுநிறை யறிஞர் வறுமையினு மொல்கார்.
நயனுடையா ரிலரா குதலுதவா தலினே.
உதவியாற் கேடே லுயிரையுந் தருக.

### உ௩. ஈகை

இலார்க்கீத லீகை எதிர்நீர பிறவே.
எதுகொள லுந் தீதே அதுவரினு மீக.
இலனென்று தீகை குலனுடையான் செய்கை.
இன்முகங்கா ணளவு மிரத்தலினின் றதே.
தவமாற்ற லதினும் பசிமாற்றல் வலிது.
அழிபசி தீர்ப்பான் பொருணனி சேர்ப்பான்.
பாத்துணு மவனைத் தீப்பிணி யணுகா.
சேர்த்திழக்குங் கண்ணா ரீத்துவக்க நண்ணார்.
தமியருணல் யாவு மவியவுண லாமே.
ஈதலிலான் சாத லினிதத னூஉங்கில்லை.

### உ௪. புகழ்

ஈதல் புகழ்மருவி வாழ்த லுயிர்க்குறுதி.
இசைப்பவர்தம் மிசைக ளீவான்றன் மேல.
நிலையா வுலகி னிலைப்பது புகழே.
வானவரைப் போற்றா வான்புகழாற் றிடினே.
நிலையல வுளவா நிறுவுவர் புலவர்.
ஆன்ற புகழின்றித் தோன்றாமை நன்று.
புகழ்பெறார் பிறரை யிகழ்தலென் மன்னே !

இசையிலர் வையம் வசையுளா ரென்ப.
இசையுயிர் பொருத நிலம்நல முறுது.
௨௪௰. வசையொழிய வாழ்வா ரிசையொழிய வாழார்.

௨௫. அருள்.

செல்வத்துட் செல்வ மருட்செல்வ மென்ப.
பலதேரி னுந் துணையாவ தருளே.
அருள்சேர்ந்தீர்க் கில்லை யிருள்சேர்ந்த வுலகே.
மன்னுயிர்க் கருள்வார் தன்னுயிர்க் கஞரார்.
௨௪௫. அருளாள்வார்க் கியாண்டும் அல்லலிலை யென்ப.
அருணீங்கி னேனைப் பொருணீங்கு மடுமே.
இவ்வுலகிற் பொருள்போ லவ்வுலகுக் கருளே.
பொருளற்றாற் பொலிவ ரருளற்றா ரழிவர்.
தெருளாதான் பொருள்போன்ம் அருளாதா னறமே.
௨௫௰. வலியார் முன்றன்போ லெளியாரைக் கருத.

(தொடரும்)

சுகவனம்-சிவப்பிரகாசன்,
காவேரிப்பட்டணம்.

---

## வெறுஞ் சிறுமொழி

சென்னை நீதிமன்றத்திற் கெதிராயுள்ள கடற்கரையில், செஞ்சுடர்ச் செல்வன் மேற்றிசையிலிருந்து பொன்னொளி வீசும் வேளையில், கோல்போல் நீண்டு, கொக்குப்போல் வளைந்து கூரிய மூக்கும் குழிந்த கன்னங்களுமுடைய ஒருவனும், தேகத்திற்கும் தலைக்கும் இடையில் கழுத்தே இல்லை என்று பார்த்தோர் சொல்லத்தக்கதாகப் பருத்து, சதைவளர்ந்த கன்னங்களும், சரிந்த தொந்தியும், சிறிய கண்களுமுடைய மற்றொருவனும், ஒரு துணியை மணலில் விரித்து அதன்மேல் அமர்ந்திருந்தனர். அப்பொழுது பகலெல்லாம் படித்துக் களைப்புற்ற கணபதி என்னுங் கல்லூரி மாணவன், தன் நண்பன் கண்ணனுடன் பேசிக்கொண்டு அவ்வழியே சென்றான் மனிதர்களுடைய உருவச்

சிறப்புக்களையுங் குணங்களையுங் கூர்ந்து பார்ப்பதில் மிகுந்த விருப்பமுடைய கணபதி, நாம் மேற்கூறிய இருவரையுந் தூரத்திற் கண்டவுடனே தனது நண்பன் கண்ணனை நோக்கி,

"கண்ணா 'கேள்வி முயல்' என்று ஔவை சொன்னபடி"— அவன் தொடங்கியதை முடிப்பதற்குள் வேடிக்கையில் விருப்பங் கொண்ட கண்ணன்,

"'கேள்வி முயல்' அஃது என்ன முயல்? அதற்குக் கொம்பிருக்குமோ?" என்றான்.

"சீ, முட்டாள், நான் சொல்வதைக் கேள். நமக்கு முன் அதோ இருக்கும் இரண்டு பேரையும் பார். அவர்கள் ஏதோ பேசிக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் பேசுவதை அவர்கள் அறியாதபடி நாம் கேட்கவேண்டும். அதற்காகத்தான் 'கேள்வி முயல்' என்று சொன்னேன்" என்று கணபதி சிரித்துக்கொண்டு பேசினான். கண்ணனோ அவன் சொன்னதை ஏற்றுக்கொள்ளாமல் "அதோபார் கணபதி, நாலைந்து சிறு பிள்ளைகள் கடலோரத்தில் குழிதோண்டி விளையாடுகிறார்கள். அவர்களிடம் 'கேள்வி முயல்' என்றால் சிரிப்பார்கள்; குழிமுயல் என்றால் உடனே அறிந்து கொள்வார்கள் என்று குறும்பு நிறைந்த கண்பார்வையுடன் கூறினான்.

"அடே, நீ உன விளையாட்டை விடமாட்டாய். நான் போகிறேன்" என்று கணபதி இரங்கிச் சொன்னான்.

"இல்லை, இல்லை, கணபதி, இதோ இங்கே இருக்கும் இவர்களைத்தானே கவனிக்கச் சொல்லுகிறாய், அப்படியே கவனிப்போம். அஃது என்ன, ஒட்டகமும் யானையும் ஒன்றாய்க் கூடியது போல் உட்கார்ந்திருக்கும் இவர்கள் யார்?" என்று கண்ணன் கேட்க,

"நீ உரக்கப் பேசினால் அவர்கள் நம்மைப் பார்த்து விட்டு ஒன்றும் பேசாமலிருப்பார்கள்: நாம் ஏதோ பேசுவது போல் நடித்துக்கொண்டு அவர்களைக் கவனிப்போம்" என்றான் கணபதி.

இதற்குள் மணலில், அமர்ந்திருந்த இருவரில் ஒட்டகம் போன்றவன், காய்ந்து கறுத்து விறகுச்சுள்ளி போலிருந்த சுருட்டு ஒன்றை எடுத்து உதடுகளிற் பிடித்துக் கொண்டு நெருப்பேற்றினான்.

(தொடரும்)

க. ப. சந்தோஷம், B.A.,L.T.

---

# நெல்லைத் திருநெறித் தொண்டர் குழாம்

(திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கத்தின் சார்பாயது)

சிவபெருமான் திருவருளை முன்னிட்டு இத்திருக்குழாத்தாரப்பினரில் பன்னிருவர் நிகழும் தைத்திங்கள் ௪-ஆம் நாள் (18–1–25) ஞாயிற்றுக்கிழமை மாலை 3–30-மணிக்கு அம்பாசமுத்திரந் தாலுகா கோபாலசமுத்திரத்திற்கு

"கொல்லா விரதங் குவலயமெல் லாமோங்க
எல்லார்க்குஞ் சொல்லுவதென் னிச்சை பராபரமே" என்ற

தாயுமானவர் பொன்மொழிக்கு இணங்க கொல்லாவிரதத்தைக் குவலயத்திற் பரப்புதற்குச் சென்றனர். அவர்கள் அங்குள்ள சந்தண விநாயகா கழகத்தாரால் தமிழ்மறையுடன் 'வரவேற்கப் பெற்றனர். மேற்படி அவையின் சிறப்புக் கூட்டம் நடைபெறும் இடமாகிய எலிமெண்டரி பாடசாலை முற்றத்தில் தொண்டர் குழாத்தின் தலைவரும் திருநெல்வேலி இந்துகலாசாலைத் தமிழாசிரியருமான திருவாளர். வி. சிதம்பாராமலிங்கம் பிள்ளை யவர்களின் தலைமையின்கீழ் சொற்பொழிவுகள் நிகழ்ந்தனர்.

திருநெல்வேலி முனிசிபல் பிரதம பள்ளிக்கூட ஆசிரியர் திரு. சு. நெல்லையப்ப பிள்ளையவர்கள் 'சீவகாருணியம்' என்னும் பொருள் பற்றி தாவரப் பொருட்டன்மை, மக்கட்கு மற்றுயிராலுண்டாம் நன்மை அவைகட்கு மறந்துந் தீங்கிழைக்காச் செம்மை முதலிய விளங்கப் பேசினார்கள்.

நரசிங்கநல்லூர் திரு. சுந்தரத்தேவரவர்கள் 'கொல்லாமை' யென், னும் பொருள் பற்றிக் கோறலின் கொடுமையையும், சிறுதேவதைகட்கு

உயிர்ப்பலி யிடுதலின்கண் கொலையாளரது வன்கண்மையையும் விரித்துக் கூறினார்கள்.

திருவள்ளுவத் தொண்டர் திரு. மாணிக்கவாசகம் பிள்ளை யவர்கள் **'புலான் மறுத்தல்'** என்னும் பொருள் பற்றித் **தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனாரது** திருக்குறட் பொருளையும், பரிமேலழகரது உரைவிளக்கத்தையும் ஆதாரமாகக் கொண்டு கேட்பார்க்கு ஊக்கம் பிறக்கு முறையில் பேசினார்கள்.

சர்ச்சுமிஷன் கல்லூரி (C. M. S, College) தலைமைத் தமிழாசிரியர் **திரு. பு. சிதம்பர புன்னைவனநாத முதலியாரவர்கள் 'அருளுடைமை'** என்னும் பொருள் பற்றி எளிய நடையில் தனித்தண்டமிழில் நிரல்படக் கோத்து, கேட்போர்க்கு மிக இனியவாக விளங்கும்படிச் சொன்னார்கள்.

தலைவரவர்கள் ஒவ்வொரு சொற்பொழிவி னிறுதியிலும் சொல்லிய பொருளில் உள்ளத்தமைக்கற்பாலவற்றை வற்புறுத்தியும், சொல்லாது எஞ்சியவற்றுள் இன்றியமையாதவைகளைச் **சங்கநூல், பெரியபுராணம்** முதலிய நூல்களிலுள்ள கதைகளினால் இனிது விளக்கியும், அருளினது பெருமையையும் கொலையினது கொடுமையையும், புலாலுண்ணலின் புன்மையையும், சிறுதேவதை வழிபாட்டின் இழிவையும் யாவரும் ஒப்புக்கொள்ளும் வண்ணம் காரணங்களானும் உதாரணங்களானும் சொல்லி, அருளல்ல செய்தாரை அச்செயற்கு இரங்கி இனி அன்ன செய்யலாகாதென்று உறுதி செய்யும் வகை உணர உரைத்தார்கள்.

இக்குழாத்தினருக்கு அக்கிராமத்தார்கள் செய்த நன்றி பெரிதும் போற்றற் பாலதுமன்றி என்றும் உள்ளற் பாலதுமாம். அத்தகைய நன்றி யென்னையெனின் சொற்பொழிவு கேட்டோரிற் பதினெழுவர் தாங்கள் இனி ஊனுண்பதில்லை என உறுதிமொழி கூறி அக்கூறியவாறே செய்வரென்பதற்கு உறுதி கைச்சாத்து மிட்டனர். இன்னும் பலர் கொல்லா நன்னெறி கொண்டொழுக இசைந்துள்ளார்.

காரைச்சிவனடியார் திருக்கூட்டத்தின் துண்டுப் பிரசுரங்களிற் சில வாசித்து வழங்கியும், தமிழ்மறை பண்ணுடன் ஓதியும், சமயவாழ்த்துக் கூறியும், கொல்லா நலனும் புலாலுண்ணா அறனும் எங்கும் நிலைநிற்க இறைவனை வாழ்த்தியும் தொண்டர்கள் தங்கள் தொண்டினை நிறைவேற்றினார்கள்.

---

**Printed by Sivakami Vilasam Press, Published by Subbiah for The S. I. S. S. W. P. Society, Madras.**

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள்தோறும் வெளிவருவது


| சிலம்பு ௩ | மெய்கண்டான் ஆண்டு-எ௱௨ மாசித் திங்கள் 1925௵ பிப்ரவரி௴—மார்ச்சு௴ | பரல் ௨ |
|---|---|---|


திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## தமிழ்ஞான சம்பந்தர்

(௨-ம் சிலம்பு ௪௯௰-ம் பக்கத் தொடர்ச்சி)

முன்னைப் பெருந்தவத்தால் இருவினையொப்பு அடைந்த உயிர்களுக்குக் குருவாய் வந்து திருவடி காட்டி உய்யக் கொள்ளும் சிவப்போசிரியரைத் துதிக்கும் பெரியோர் அவரைத் தலைவனாகவும் தம்மைத் தலைவியாகவும் கருதி அருட்பா இயற்றும் மரபு தமிழ்ப் பெரியோர்க்கே உரியது. ஆசாரியரை ஞானத்தந்தையர் என்றும், தந்தையின் மிக்க பெரியார்

என்றும் கூறுதல் வடநூற்கும், தென்னூற்கும் பொதுவாய முறை. அவ்வாறன்றி தமிழ்க்கே சிறக்கும் அகப்பொருள் முறையைத்தழுவி அவரைத் தலைவனாகவும், மணாளனாகவும் கூறு தல் சிறப்பு முறையாகும். நமது ஞானசம்பந்தப் பெருமான் மூன்று வயதுள்ள பால்மணமறியாப் பச்சிளங் குழந்தைப் பருவத் தும் தம்மையாட்கொண்ட சிவபெருமானை ஞானத்தந்தை என் றுதல் ஆசிரிய ரென்றுதல் கூறாது தமது 'உள்ளங் கவர்கள்வ' னென்று தமது முதற் றிருப்பாட்டிலேயே விளித்தமை அவரது திருவுள்ளமானது முன்னைப் பிறவிகளிலேயே செந்தமிழ்த் தெள் ளமுதத்தேனிலே ஊறியுள்ள தென்பதை விளக்குமன்றோ! திரு மூலப்பாலளித்த 'கடவுளை அம்மையப்பர் என்று கூறாது' தலைவன்' என்று கூறியது எத்துணைத் தமிழ் நயம் வாய்ந்தது என்பதை உற்று நோக்குக. சிவபெருமான் மானுடச் சட்டை சாத்தி ஞான ஆசிரியராய் வந்து ஆட்கொண்ட மணிவாசகப் பெருமான் தமது திருவாசகத்துள் முதற்றிருப்பாட்டிலே கடவுளைத் தலைவனாகக் கூறுவிடினும் அவரை 'ஒளிக்குஞ்சோர'னென்றுங் கூறியுள்ளார்.

இனி 'இறைகலந்தவின வெள்வளை சோர வென்னுள்ளங் கவர்கள்வன்' என்றமையால் தம்மைத் தலைவியாகக் கூறியதும் வெளிப்படை. அவ்வாறே சொல்லின் மன்னரும் 'அங்கோலவளை கவர்ந்தான்', 'வஞ்சித்தென்வளை கவர்ந்தான்' என்று அருளிப் போந்தமை காண்க.

இறைவன் தமது 'எழில் கவர்ந்ததாக' இலம்பையங் கோட் டூர்ப் பதிகத்திலே ஒவ்வொரு பாட்டினுள்ளும் நமது ஆசிரியர் கூறி யது காண்க. இலம்பையங்கோட்டூர் குறிஞ்சி நிலத்திலுள்ளது. அப்பதிகப் பண்ணும் குறிஞ்சியே. குறிஞ்சி நிலமே புணர்ச்சியை உரிப்பொருளாக உடையதாகலின் அவ்வாறு எழில்கொண்ட சிறப்பை விந்தோதினர். பின்வரும் பாட்டிலே, வேட்டைக் குச் சென்ற தலைமகன் தன்னை எதிர்ப்பட்டு எழில் கொண்டார் என்ற குறிப்பும், அச்சம் உண்டாவதற்குரிய அக்காட்டில் மான்கள் உலாவும் காரணத்தால் அச்சமின்மை தோன்று மிடத்தே தலைவி சென்றிருத்தல் இயல்பென்ற குறிப்பும் குரங்கு

கள் பெண்ணும் ஆணுமாகக் கூடித்திரிகின்ற சாரலாதலின், தலைவன் தலைவி என்போராது விழைவுறு காட்சிக்குரிய குறிப்பும், மந்திமுதலிய விலங்குகளைக் கண்டு அஞ்சுதற்குரிய மான் என்ற குறிப்பால் விலங்குகளின் அச்சந்தீர்த்தற்குரிய அண்ணல்பால் தலைவி சார்தற்குரிய இயைபு உண்டென்ற குறிப்பும் விளங்குதல் காண்க.

'தேனுமாயமுதுமாய்த்தெய்வமுந்தானாய்த்
தீயொடுநீருடன்வாயுவாந்தெரியில்
வானுமாமெனதுரைதனதுரையாக
வரியராவரைக்கசைததுழிதருமைந்தன்
கானமான்வெருவுறக்கருவிரலூகங்
கடுவனோடுகளுழூர்கற்கடுஞ்சாரல்
ஏனமானுழிதருமிலம்பையங் கோட்டூ
ரிருக்கையாப்பேணியென்னெழில்கொள்வதியல்பே'

இங்ஙனம் எழில் கவர்ந்ததாகக் கூறுஞ்செய்தி திருப்பருதிநிய மத் தேவாரத்துள்ளும் காண்க:

'அரவொலிவில்லொலியம்பினொலியடங்கார்புரமூன்றும்
நிரவவல்லார்நிமிர்புன்சடைமேனிசம்பாமதிசூடி
இரவில்புகுந்தெனெழில்கவர்ந்த விறைவர்க்கிடம்போலும்
பரவவல்லார்வினைபாழ்படுக்கும்பருதிநியமமே'

இனி இரங்குதலை உரிப்பொருளாகவுடைய நெய்தனிலத்தே தலைவி பரிவுற்றுத் தலைவர்பால் தூது விடுகின்ற மரபும் நெய்தற் சார்புடைய திருத்தோணிபுரத்துத் தேவாரத்துள் காணப்படும். வண்டு, இளங்குருகு, வாரணம், நாரை, கபோதங்கள், அன்னம், அன்றில், குயில், கூவை முதலியவற்றைத் தூதுவிடுதல் இப்பதி கத்துள் காண்க:

'வண்டரங்கப்புனற்கமலமதுமாந்திப்பெடையினொடும்
ஒண்டரங்கவிசைபாடுமளியரசேயொளிமதியத்
துண்டரங்கப்பூண்மார்பர்திருத்தோணிபுரத்துறையும்
பண்டரங்கர்க்கென்னிலைமைபரிந்தொருகாற்பகராயே.'

பிரிந்த தலைவனது நாமத்தைப் பிறர் கூற ஒருகாற் கேட்டாலும் தலைவி ஓர் சிறிது ஆறுதலடைந்திருத்தல் கூடுமாதலால் இப்பதிகத்துள் மக்கட்பேறை இனிது கூறும் கிளியினைத் தலைவன் பேரைக் கூறும்படி பராவுதல் பின்வருஞ் செய்யுளில் காணப்படும்.

'சிறையாருமடக்கிளியேயிங்கேவாதேனொடுபால்
முறையாலேயுணத்தருவன்மொய்பவளத்தொடுதரளந்
துறையாருங்கடற்றோணிபுரத்தீசன்றுளங்குமிளம்
பிறையாளன்றிருநாமமெனக்கொருகாற்பேசாயே.'

இவ்வாறே, குயில் குருகு நாரை பூவை என்பனவற்றை விளித்துத் தங்குறையிரக்கும் செய்தி திருநாவுக்கரசு சுவாமிகளது திருப்பழனத் தேவாரத்துள்ளும் காணப்படும். பொழிலகத்தே காட்சி நயத்தால் உள்ளங்கவர்தல் தலைவற்கு இயல்பாதலின் திருத்தோணிபுரத்து மற்றொரு தேவாரப் பதிகத்துள் பின்வருமாறு கூறியமை காண்க:

" பெரும்பகலேவந்தென்பெண்மைகொண்டுபேர்ந்தவர்சேர்ந்தவிடம்
சுரும்பமர்சோலைகள் சூழ்ந்த செம்மைத் தோணிபுரந்தானே"
" சங்கியல்வெள்வளைசோரவந்தென்சாயல்கொண்டார்தமதூர் "
"ஒத்தபடிவந்தென் னுள்ளங்கொண்டவொருவர்க்கிடம்போலும்"
"மெள்ளவிரல்வைத்தெ னுள்ளங்கொண்டார்மேவுமிடம்போலும்"
" செல்வறநீண்டெஞ்சிந்தைகொண்டசெல்வரிடம்போலும் "
" இண்டைபுனைந்தெருதேறிவந்தெனெழில்கவர்ந்தாரிடமாம்."

இத்தகைய அகத்துறைக் கருத்தடங்கிய செய்யுட் பகுதிகள் நமதாசிரியர் தேவாரத்துள் மலிந்துகிடக்கின்றன. அவையெல்லாம் விரிப்பிற் பெருகும். ஐந்திணை வளங்களை நமதாசிரியர் விரித்துரைத்த செம்மை இயற்கைப் பொருள்வளம் என்னும் எமது வியாசத்துட் காணற்பாலது. நமதாசிரியர் தேவாரத்துள் பிரமம், அத்துவிதம், பிராமணன் என்ற வடசொற்கள் இடையா. வன்பயில் வேள்விகளும் கூறப்பட்டில. தென்னுடைய சிவபெருமானது ஒப்பில் சீரும் பிறதெய்வங்களின் தாழ்வும் தண்டமிழ்வளமும் மணமும் தமிழ் மக்களின் சைவ

வழிபாட்டின் சிறப்புமுறையுமே பொங்கித் ததும்பிக் கொண்டிருப்பன. ஆதலால் நமதாசிரியர் பெருமானை ஆரியப் பிணக்குடையா ரென்று கூறுங்கூற்று அறியாமையால் வந்த குறையுரையேயாகும். ஆரியத்துட் போந்த புரைகள் யாவுமில்லாத தனிநலத்தைத் தழுவிக்கொண்ட செந்தமிழ்ப் பெரும்பயன் வடிவே நமது பெருமானது திருவருட்பாடற் செறிவாகு மென்பதை உய்த்துணர்க.

கா. சுப்பிரமணியபிள்ளை. எம். ஏ. எம். எல்.,

---

# அன்பு, அருள் என்னுஞ்சொற்களின் பொருள் ஆராய்ச்சி

1. தொன்மைச் செந்தமிழ் மொழியில் அன்பு, அருள் என்ற இரண்டு சிறியசொற்களும் மிக்க பொருட்செறிவுடையவை. அவைகள் ஒன்றோடொன்று மிக்க தொடர்புடையவை. அவைதெய்வப்புலமைத் திருவள்ளுவர் திருக்குறளிலும், தேவாரம், திருவாசகம், திருமந்திரம், பெரியபுராண முதலிய தமிழ்மறைகளிலும், சிவஞானபோதம், சிவஞான சித்தியார் முதலிய சைவசித்தாந்த நூல்களிலும் மிக்கு வழங்கப்பட்டு வருகின்றன. ஆகலின், அவைகள் இன்ன பொருளுடையனவென்றும், ஒன்றோடொன்று இன்ன தொடர்புடையனவென்றும் தெரிதல் தமிழ்நூலோதுகிறவர்களுக்கு இன்றியமையாததாகும். அதுபற்றி இவ்விரண்டு சொற்களின் கருத்துக்களைச் சிறிது ஆராய்வான் முயல்கின்றேன்.

2. முதலாவது திருவள்ளுவர் தம்முடைய திருக்குறளில் இந்த இரண்டுசொற்களையும் எப்படி எடுத்தாண்டிருக்கிறார் என்பதைப் பார்ப்போம். இல்லறத்துக்கு இன்றியமையாது வேண்டப்படுவது அன்பு என்று அதனை எட்டாம் அதிகாரமாகவும், துறவறத்துக்கு இன்றியமையாது வேண்டப்படுவது அருள் என்று அதனை 25-ம் அதிகாரம் ஆகவும் வைத்து அவர் அவைகள் ஒவ்வொன்றையும் பற்றிச் சிறப்பித்துச் சொல்லியருளினார்.

இந்த வைப்புமுறை பற்றியும், 8, 25 அதிகாரங்களிற் சொல்லப் பட்டுள்ள குறள்களின் கருத்துக்கள் பற்றியும் உரையாசிரியர் பரிமேலழகர் "அஃதாவது (அன்புடைமையாவது) வாழ்க்கைத் துணையும் புதல்வருமுதலிய தொடர்புடையார்கட் காதலுடைய னாதல்" என்று அன்புடைமைக்கும், "அஃதாவது (அருளா வது) தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா உயிர்கண்மேலும் செல்லுங்கருணை" என்று அருளுக்கும் உரை கூறினார். அன்றி யும் அவர் இல்லறம் இனிது நடத்தலும், பிறவுயிர்கண்மேல் அருள்பிறத்தலும் அன்பின்பயன் என்றுசொலி அன்பின்வழி அருள்பிறக்கும் என்பது திருவள்ளுவர் கருத்தென்பதற்கு "அரு ளென்னு மன்பீன் குழவி" என்னும் 757-வது குறளை மேற் கோளாகவும் எடுத்துக்காட்டினார்.

3. பரிமேலழகர் செய்த சுருக்கவுரை நன்கு விளங்குமாறு சிறிது விரிப்பாம்:—

அன்பு என்பது மனைவி மக்கள் ஏனைய சுற்றத் தாராகிய உடற்றொடர்புடையார் மாட்டு ஒருவனுக்குத் தோன்றும் உள்ள நெகிழ்ச்சியாம். இந்த அன்பு ஒருவனுக்குத்தன்னால் விரும்பப் பட்டவரிடத்து நிகழும். தன்னாலே விரும்பப் படுபவர் முதலி லொருவனுக்குத் தன்மனைவி மக்களும், அவர்களுக்குப்பின் தன் வழிச் சுற்றமும், தன்மனைவிவழிச் சுற்றமுமாவர். ஒருவன் இல் வாழ்க்கையில் இவ்விதமான அன்புசெய்வதைப் பழகிப்பழகி அதனால் அவ்வன்புபெருகி முதிர்ந்து பின் ஏனையோரிடத்தும் செல்லும்படி பழகல்வேண்டும். முன்விரும்பப் பட்டவரிடத்து மாத்திரம் சென்றவன்பு பின் விரும்பப்படாத வரிடத்துஞ் செல் லல் வேண்டும். முன் ஒவ்வொருசமயம் நேர்ந்தபொழுது நிகழ்ந்த அன்பு பின் எக்காலத்தும் இடையீடின்றி நிகழல்வேண்டும். சுற்றத்தாரிடத்தும், சுற்றத்தாரில்லாதாரிடத்தும், நட்புடையா ரிடத்தும், பகைவரிடத்தும், நொதுமல ரிடத்தும் எக்காலத்தும் இடையீடின்றி ஒருவர் உள்ளத்து நிலைத்து நிகழுந் தன்மை யுடையவாகிய முதிர்ந்த அன்பு அருளாகும். முன்னைய அன்பு இல்வாழ்வானுக்கும் பின்னையஅருள் துறவிக்கும் இன்றியமை

யாது வேண்டப்படுங் குணங்களாகும். இந்தக் கருத்துக்களையே. நாம் பரிமேலழகர் உரையால் அறிவது.

4. மேற்கூறிய பரிமேலழகர் உரைக்கருத்துப்படி அன்பு என்பது அருளில் அடங்குங் குணமாகிறது. ஒருவனை அருளுடையவ னென்று நாம்கூறினால் அவனை அன்புடையவனென் றும் கூறுதல் மிகையாகும். அவர் கூறுங்கட்டுரை திருக்குறளுக்கு முற்றிலும் பொருந்துமாவென்று பார்ப்போம். எகூ-வது பொருள் செயல்வகை யென்னும் அதிகாரத்தில்

"அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்"

என்னும் குறளில் அருள், அன்பு என்னும் இரண்டு சொற்களும் வழங்கப்பட்டுள்ளன. இரண்டு சொற்களில் ஒன்றின் கருத்து மற்றொன்றில் அடங்குமானால் பொருளாக்கத்துக்கு இரண்டும் கூறுதல் மிகையாகுமென்று நினைக்க வேண்டியதிருக்கிறது. 'இக்குறளுக்குத்' தாம் குடிகண் மாட்டுச் செய்யும் அருளோடும், அவர் தம்மாட்டுச் செய்யும் அன்போடும் வாராத பொருளீட்டத்தை அரசர் கழிய விடுக'' வென்று பரிமேல்ழகர் உரை கூறினார். இந்தக்குறள் உரையினால் அன்பு என்பது சிறியோர் பெரியோரிடத்துக் கொள்ளுங் காதல் என்றும், அருள் என்பது பெரியோர் சிறியோரிடத்துச் செய்யுங் காதல் என்றும் பரிமேலழகர் பொருள் செய்திருப்பதாக நாம் அறிகிறோம். ஆனால் இக்கருத்து அவர் எட்டாம் அதிகாரம் தலையிலும், இருபத்தைந்தாம் அதிகாரம் தலையிலும் கூறவில்லை. இக்கருத்து அடுத்த குறளிற் (எகூ) கூறப்படுகின்ற "ஒன்னார்த் தெறுபொருள்" என்கிற அரசனுடைய பொருளீட்டத்துக்குப் பொருந்தாததாகின்றது.

5. "அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப், பொச்சாப்புப் பார்ப்பார்க ணில்'' என்று உகூ-ம் அதிகாரம் இ-வது குறளிலும் இரண்டு சொற்களும் வழங்கப் பட்டுள்ளன. இங்கே "அருள்கருதி யன்புடைய ராதல்'' என்பதற்கு அருளினது உயர்ச்சியறிந்து அதன்மேல் அன்புடையராய் யொழுகுதல் என்று பரிமேலழகர் உரை செய்திருக்கின்றனர். இக்குறளுக்

கும் அவர் முன்செய்த கட்டுரை பொருந்துவதாகத் தோன்ற வில்லை. அன்புடைமையைப் பொருள் வெளவப்படுவாரிடத்துச் சாரச்செய்யாது அருள்மேல் சாரச்செய்தது எத்துணைபொருந்து மாற்றிற்குத் தகுதியென்று அறியக்கூடவில்லை.

6. இனி இச்சொற்களிரண்டும் தேவாரமுதலிய தமிழ் மறைகளிலும், சிவஞானபோதமுதலிய சமயநூல்களிலும் எவ்வாறு வழக்கப்பட்டுள்ளன என்பதைக் கருதுவாம்.

சிவஞானபோதம்

அருளுண்டா மீசற் கதுசத்தி யன்றே
யருளு மவனன்றி யில்லை—யருளின்
றவனன்றி யில்லை யருட்கண்ணார் கண்ணுக்
கிரவிபோ னிற்குமா னேய்ந்து.

மன்னு மிருளை மதிதுரந்த வாறன்பின்
மன்னு மரனே மலந்துரந்து—தன்னின்
வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்
சலிப்பில் விகாரியலன் றான்.

காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா வன்பி னரனகழல் செலுமே.

திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

மருளவா மனத்தனாகி மயங்கினேன் மதியிலாதேன்
இருளவா வறுக்குமெந்தை யிணையடி நீழலென்றும்
அருளவாப் பெறுதலின்றி யஞ்சினா னலமந்தேற்குப்
பொருளவாத் தந்தவாறே போதுபோய்ப் புலர்ந்ததன்றே.

"அத்தாவுன்னடியேனையன்பாலார்த்தா யருளேக்கிற்
றீர்த்தநீராட்டிக்கொண்டாய்".

திருவாசகம்

"பெற்றது கொண்டு பிழையே பெருக்கிச் சுருக்கு மன்பின்
வெற்றடி யேனை விடுதி கண்டாய்."

பெரியபுராணம்

அருட்பெருகு தனிக்கடலு முலகுக்கெல்லா
மன்புசெறி கடலுமென வோங்கும்
பொருட்சமய முதற்சைவ நெறிதான்பெற்ற
புண்ணியக்கண் ணிரண்டெனவும் புவனமுய்ய
இருட்கடுவுண் டவருளு முலகமெலா
மீன்றுடன் திருவருளு மெனவுங்கூடித்
தெருட்கலைஞா னக்கன்று மரசுஞ்சென்று
செஞ்சடைவா னவர்கோயில் சேர்ந்தாரன்றே.

அருளானது அக்கினியிற்சூடுபோல இறைவனின்றும் பிரிக்க வொண்ணாத சத்தியாகும். அருட்சத்தியோடுகூடிய விறைவன் பொருளினால் வேறாயிருந்தாலும கலப்பினால் உயிர்களுடன் வேறற (அத்துவிதமாய்)க்கலந்து செலுத்துந் தன்மையில் அவர்க ளுடனாயுநிற்பன். அப்படியிறைவன் உயிர்களோடு எக்காலத்தும் பிரிப்பின்றிக் கலந்திருத்தலால் உயிர்களிடத்தும் இறைவன் அருள் உளது. ஆனால் உயிர்கள் தங்களை அநாதியே பிணித்துள்ள மலத்தினால் அந்த அருள் மறைப்புண்டு விளங்காமலிருக்கிறது. இந்த மறைப்பினால் அவர்கள் தங்களிடத்துள்ள இறைவனருளை அறியவுமுணரவுங் கூடாம லிருக்கிறார்கள். இறைவன் உயிர்கண் மேல் வைத்த பேரன்பினால் அறியாமையைச்செய்கின்ற உயிர் களின் கண்ணதாகிய மலசத்தியை இருவினைப் பலனுகர்ச்சி மூல மாய்ப் படிமுறையின் சிறிது சிறிதாகக் குறைத்து அதனைப் பற்றறத்துறந்த பூருவம் வந்தகாலத்தில் அவர்களிடத்தில் தனது அருட்சத்தியை முற்றிலும் பதித்து அவர்களைத் தன்மயமாக்கிக் கொள்வன். உயிர்களு மிறைவனருள் தங்களிடத்தில் முற்றிலும் விளங்கப் பெற்றவர்களாகி அவன்மேல் வைத்த அயரா வன்பி னால் அவனிணை நிழலடைகிறார்கள். இவ்வாறு மறைப்புண்ட இறைவனருள் சிறிது சிறிதாக மறைப்பிலிருந்து நீங்கி உயிர்க ளிடத்தில் முற்றிலும் விளங்கப் பெறுவதே உயிர் வளர்ச்சி முறையாம்.

7. இனி இறைவன் அருட்சத்தியொன்றே ஐந்தொழி லியற்றுதற்கண் அசுத்தமாயா தத்துவங்களாலாகிய இவ்வுலகிற்

செயற்படும் பொழுது இச்சாசத்தி (அன்பு), ஞானசத்தி (அறிவு), கிரியாசத்தி (செயல்) எனமூன்று பிரிவினையுடையதாகிறது. இறைவனுடைய சத்திகள் மூன்றும் வியாபகமுடையன. மேலே சொன்ன முறைப்படி உயிர்களிடத்து விளங்கும் இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி மூன்றும் ஏகதேசத்தன்மை (ஒருபுடைவிளக்கம்) உடையன. இறைவனுடைய இச்சாசத்தி (பேரன்பு), ஞானசத்தி (பேரறிவு), கிரியாசத்தி (பேராற்றல்) மூன்றும் இயங்கினாலன்றி உயிர்களுடைய இச்சாசத்தி (சிறு அன்பு), ஞானசத்தி (சிற்றறிவு), கிரியாசத்தி (சிறுசெயல்) மூன்றும் செயற்படா. உயிர்களுடைய ஏகதேச இச்சாசத்தி, ஏகதேச ஞானசத்தி; ஏகதேச கிரியாசத்தி ஆகிய இவைகளின் ஊடாட்டத்தினாலே (Interaction) உலகில் செய்திகளெல்லாம் நிகழ்கின்றன. இச்செய்திகள் இறைவன் அருளுக்கு இணக்கமுள்ளதாயிருந்தால் அறச்செயல்களென்றும், இறைவன் அருளுக்கு இணக்கமில்லாததாயிருந்தால் பாவச் செயல்களென்றும் சொல்லப்படும். இறைவனருளுக்கு இணங்கிய அறச்செயல்களெல்லாம் உயிர்வளர்ச்சியை (Soul Evolution) உண்டுபண்ணுவனவாகும். இறைவன் அருளுக்கு இணக்கமில்லாத பாவச்செயல்களெல்லாம் உயிர்வளர்ச்சியைத் தடைசெய்வனவாகும்.

8. மேற்சொல்லியவாற்றால் அருள், அன்பு என்னுஞ் சொற்களின் கருத்து வேறுபாடு ஒருவாறு நாம் அறியலாம். அருள் என்பது இறைவனுடைய நிறைவானகுணம், இந்த அருள் உயிர்களிடத்து மலத்தினாற் கட்டுண்டு விளங்காமலிருக்கிறது. உலகவாழ்விலுள்ள அநுபவவுணர்ச்சியால் உயிர்களிடத்து மலமறைப்புச் சிறிது சிறிதாக நீங்குகிறது; நீங்க நீங்க வுயிர்களிடத்து நீங்கின அளவுக்குத்தக்கபடி அருள் விளங்குகிறது. இப்படிக் கொஞ்சங்கொஞ்சமாய் உயிர்களிடத்து விளங்கும் அருளே அன்பாகும் அருளில்லாவிடின் உயிர்களிடத்து அன்பு விளங்காது. இபபடி அன்புவிளங்குந்தன்மை சற்காரிய வாதத்துள் ளடங்கும். சுருங்கிய அன்பு உயிர்களின் போகநுகர்ச்சியால் விரிந்து விரிந்து பெருகி இறைவனுடைய அருளை விளக்கும் நிலையில் அருளுக்கு அன்பு தாய் என்று ("அருளென்னு மன்பீன்

குழவி”) திருவள்ளுவநாயனார் கூறியருளினார். அதாவது வளர்ச்சி முறையில் (விருத்திக்கிரமத்தில்) அருளுக்கு அன்பு தாய் என்று கூறலாமேயன்றி தோற்று முறையில் (சிருட்டிக்கிரமத்தில்) அப்படிக் கூறலாகாது. தோற்றுமுறையில் அன்புக்கு அருள் தாயென்று சொல்லவேண்டும். உண்மையில் அருளை யாதார மாகக்கொண்டு அன்பு உண்டாகியது.

9. அருளில் அறிவு, அன்பு, செயல் (செய்யுந்திறன்) ஆகிய மூன்றும் பரிபூரணமாய் அடங்கியுள்ளன. உலகவாழ்வில் மக்களுக்குள் செயற்படும் அறிவு, அன்பு, செயல் ஆகிய மூன்றும் குறைவுபட்டு வழங்கப் படுவனவாகும். இம்மூன்று குணங்களில் ஒவ்வொன்றும் தனியே மற்றக்குணங்களுடன் தொடர்பில்லா மல் செயற்படாது. அன்பு என்று நாம் சொல்லும் பொழுது அன்புமேலிட்ட குணம் என்றும், மற்ற இரண்டு குணங்களும் அதற்கு உட்பட்டுக் குறைந்து விளங்குந் தன்மையுடையவை என்றுங் கொள்ளல் வேண்டும். மற்ற இரண்டு குணங்களாகிய அறிவு செயல்களுக்கும் நாம் இவ்வாறே கொள்ளல் வேண்டும்.

“ அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை”

என்று திருவள்ளுவநாயனார் கூறியதும், “அன்பினானினைந்தார் அறிந்தார்களே” என்று திருநாவுக்கரசு சுவாமிகள் கூறியதும், “அயரா அன்பு” என்று சிவஞானபோதத்திற்கூறியதும் இவ் வுண்மையை விளக்குகின்றன. அறிவின்றுணைகொண்டு அன்பு வழங்குதலே வழங்கப்படுபவர்க்கு நற்பயனுறுவிக்கும் என்றும், அன்பின்றூண்டுதலின்றி அறிவு செயலாக நிகழாது என்றும் நாம் உலக வநுபவத்திலு மறிகிறோம்.

10. அருள் மாயையாலாகிய உலகில் சிற்றறிவுடைய உயிர்க ளிடத்து வழங்கப்படும் பொழுது அதன் நிறைவு அல்லது வியாபகங் குறைவுபடுகிறது. அப்படி அது குறைவு பட்ட பொழுது அன்பு என்று சொல்லப்படும். இறைவன் உயிர்களுக்கு வீட்டை யருளுகின்றான் என்றும், அவர்களுக்குப் பந்தத்தைக் கொடுத்துப் போகத்தில் அமிழ்த்தும் பொழுது அவன் உயிர்க

ளிடத்து அன்புசெய்கின்றான் என்றும், நூல்களிற் கூறப்படு கின்றன. பந்தத்தைக் *கொடுக்கிற இறைவனுடைய அருட் சத்தி திரோதானசத்தி என்று சொல்லப்படுகிறது. இறைவ னெல்லா உயிர்களையுமொப்ப அருளால்நோக்கினாலும் அருளை வழங்கும் பொழுது அவர்களின் தகுதிக் கேற்ப அன்பு செய் கின்றான். இறைவன் அருள்செய்கின்றானென்று புலவர்கள் சொல்லுவது முண்டு. "அத்தாவுன்னடியேனை அன்பாலார்த் தாய்" என்று திருநாவுக்கரசு சுவாமிகள் சொன்னது தாம் சமண சமயத்திலிருந்த பொழுது சூலைநோ யேவப்பெற்று இறை வனால் ஆட்கொள்ளப் பட்டதைக் குறிப்பித்தது.

11. உயிர்கள் இறைவனுடைய அருளைக் குறிக்கோளாகக் கருதி அதனைப்பெறமுயன்று உலகவாழ்விலொழுகி அவனி டத்து அன்புசெய்யல் வேண்டும். உயிர்கள் இறைவனிடத்துச் செய்யும் பற்றுதல் அன்பு என்று சொல்லப்படுமே யன்றி அருள் என்று எக்காலத்தும் சொல்லப்படாது. உயிர்கள் இறை வனருளை நாடித்தேடல் வேண்டும். இப்படித்தேடல் 'அருட் டாகம்' என்று சொல்லப்படும். அருட்டாகத்துடன் உயிர்கள் இறைவன் அருளாகிய வெள்ளத்தில் பருகமுகப்பது அன்பாகும். "நின்னருட் பெருங்கடலிற் றிளைத்துந் தேக்கியும் பருகியு முருகேன்" என்றும், "நான்றனக்கன் பின்மை" என்றும் மாணிக்கவாசக சுவாமிகளும், "இனியேதெமக்குனருள்வருமோ வெனக்கருதியேங்குதேநெஞ்சமையோ" என்றும், "நின்கருணைப் பிரவாக வருளைத்தாகமாய் நாடினரை வாதிக்க வல்லவேதோ" என்றும், "அன்பின்வழியறியாத வென்னை" என்றும் தாயுமான சுவாமிகளும் கூறியருளியவை காண்க.

12. உயிர்கள் இறைவன் அருளைக் குறிக்கோளாகக் கருதி ஒருவருக்கொருவர் அன்புடையராய் ஒழுகல் வேண்டும். இப்படி யொழுகுமொழுக்கஞ் சகோதரதருமம் என்று சொல்லப் படும். இந்தச் சகோதர தருமத்துக்கு அடிப்படையாயுள்ளது இறைவனெல்லா வுயிர்கண்மேலும் வைத்திருக்கும் அருளாகும். ஆகலின், ஒருவன் உயிர்களிடத்து அன்பு செய்யாமல் இறைவ னருளைப்பெற முடியாது. இக்கருத்துப் பற்றியே திருவள்ளுவ

நாயனார் "அருள்கருதி யன்புடைய ராதல்" என்று முன்னே குறித்த குறளிற் கூறியருளினார். "அருள் கருதி" என்பது ஒருவன் தான் பொருள் வெளவ எண்ணப்படுவானிடத்து இறைவனுடைய அருளுடைமையை நினைந்து என்றும்; அன்புடையராதல் என்பது அக்காரணத்தினால் தான் அவனிடத்தில் அன்புடையனாயிருத்தல் என்றும் பொருள்படும். இதனை இன்னும் விரித்தாற் பெருகும். "அருளொடு மன்பொடும்" என்னுங் குறளுக்கு மிப்படியே பொருள் கூறலாம். "ஈசனுக்கன்பில்லா ரடியவர்க்கன் பில்லார், எவ்வுயிர்க்குமன்பில்லார் தமக்கு மன்பில்லார்" என்று சிவஞானசித்தியாரிற் கூறியதுங் காண்க.

13. உண்மையில் இறைவனொருவனே அருளை யுடையவனென்று சொல்லப்படுவன். உயிர்களும் இறைவனருள் தங்களிடத்தில் பதியப்பெறுந்தன்மையில் அருளுடையவர்களென்று உபசாரமுறையிற் சொல்லப்பெறுவார்கள். உயிர்களின் பெருமையெல்லாம் இறைவனருள் அவர்களிடத்து எத்துணை பதிந்து விளங்கியுள்ளது என்பதையே பற்றியது. அவர்களின் சிறுமை இறைவன் அருள் அவர்களிடத்தில் விளங்குதலின்மையைப் பற்றியது. "அருட்கண்ணி லாதா ரல்லாதாரே" என்றார் திருநாவுக்கரசு சுவாமிகள். ஆதலின் பெரியோர் சிறியோரிடத்துச் செய்யுங்காதல் அருள் என்றும்; சிறியோர் பெரியோரிடத்துச் செய்யுங்காதல் அன்பு என்றும் நூல்களிற் கூறுவதுண்டு. உயிர்களிறைவனிடத்தும், சிறியோர் பெரியோரிடத்தும் அன்புடையவர்களென்றே சொல்லல் வேண்டும்; அருளுடையவர்களென்று சொல்லலாகாது. ஆனால் முன்னே கூறியகாரணத்தினால் இறைவனுயிர்களிடத்து அருள்செய்கின்றானென்றாவது அன்பு செய்கின்றானென்றாவது சொல்லலாம்.

14. பெரியபுராணம் திருநாவுக்கரசு சுவாமிகள் புராணத்தில் "அருட்பெருகு தனிக்கடலு மன்புசெறி கடலும்" என்று அருண்மொழித்தேவர் முறையே திருஞானசம்பந்த சுவாமிகளையும் திருநாவுக்கரசு சுவாமிகளையும் குறித்துக்கூறினது தவிர திருஞானசம்பந்த சுவாமிகளை "புவனமுய்ய வருட்கடவுடைவரருள்" என்றும், திருநாவுக்கரசு சுவாமிகளை "உலகமெல்லா மீன்ற

டன்றிருவருள்'' என்றும் சொல்லியருளினார். இதனால் உமாதேவியாருடைய நிறைந்த அன்பு (அன்பு செறிகடல்) கூட சிவபெருமான் அருளைநோக்கச் சுத்தமாயையிற் காரியப்படுதற்குத் தூலமாய் விருத்தியடைந்த குணமாகிறது. ஆகலின் உயிர்களினுள்ளத்தினிடத்து விளங்கும் அன்பு பிரகிருதிமாயையில் வழங்கப்படுதற்குத் தகுதியாய்த் தூலதம் விருத்தியடைந்தகுணம் என்பது சொல்லாமலே விளங்கும். அருண்மொழித்தேவர் இவ்வாறு இரண்டு பெரியார்களையும் உவமித்தது திருஞானசம்பந்த சுவாமிகள் தமக்கு முன்வினை எட்டுணையாவது இருந்து அதனை ஒழித்து சிவத்துவத்தை யடைவதற்காக அல்லாமல் தன்தாதையாருள்ளக் கருத்துப்படி வேதநெறிதழைத் தோங்கியும் சைவத்துறை விளங்கியும் உலகுய்யும் பொருட்டே திருவவதாரஞ் செய்து மூன்றுவயதில் உமாதேவியாரால் ஞானப்பால் கொடுக்கப்பெற்று சிவத்தொண்டு செய்ததையும், திருநாவுக்கரசு சுவாமிகள் தமக்கு முன்னைவினை கொஞ்சமிருந்து அது தீர்தற்பொருட்டுத் திருவவதாரஞ்செய்து நம்பரருளாமையினாற் சமண்சமயங்குறுகி சூலைநோய் ஏவப்பெற்று சைவசமயம்புகுந்து அருள்பெற்று தேவாரம் பாடுதலாகிய ஞானத்தொண்டுடன் உழவாரப்பணிவிடையாகிய கிரியாத்தொண்டைச் செய்ததையுங் குறிப்பித்தது என்க.

15. அருள் நிறைவுடைய குணம் என்பதும், அன்பு குறைவுடைய குணம் என்பதும் தமிழ்ப்புலவர்கள் சொல்வழக்கினுங் காணலாம். அன்புதான் தலையன்பு, இடையன்பு, கடையன்பு, பொய்யன்பு, மெய்யன்பு, கரவன்பு, கரவிலன்பு எனப்பாகுபடுத்தி அவர்களாற் கூறப்படுவதல்லது அருள் அவ்வாறு கூறப்படுவதில்லை.

16. அருளுக்குமன்புக்கும் இதுகாறுங் கூறியகருத்துவேறுபாடுகளைத் தொகுத்துச் சொல்வாம்:—

அருள் இறைவனுடைய நிறைகுணம்;
அன்பு உயிர்களிடத்து விளங்குங் குறைகுணம்.
அருள் இறைவனுடைய இயற்கைக்குணம்;
அன்பு உயிர்களுடைய செயற்கைக்குணம்.

அருளினால் இறைவன் ஐந்தொழில் செய்கிறான்;
அன்பினால் உயிர்கள் இறைவனருளைக் குறித்தாகிறார்கள்.
அருள் இறைவன் உயிர் நிலை;
அன்பு உயிர்களின் உயிர் நிலை.
அருள் இறைவனை உயிர்களிடத்தில் தொடர்பு படுத்துகிறது;
அன்பு உயிர்களை இறைவனிடத்தில் தொடர்பு படுத்துகிறது;
அன்பு உயிர்களை ஒருவருக்கொருவரிடத்திலும் தொடர்பு படுத்து [கிறது.
அருள் இல்லாமல் இறைவனுடைய ஐந்தொழில் நடவாது;
அன்பு இல்லாமல் உயிர்களுடைய உலகியல் நடவாது.
அருள் இறைவனால் உயிர்களிடத்து நோக்கப்படுங் குணம்;
அன்பு உயிர்களால் இறைவனிடத்து நோக்கப்படுங்குணம்.
அருள் இறைவன் மாயையாலாகிய உலகில் வழங்குதற்கு முன் [னுள்ள குணம்;
அன்பு இறைவன் மாயையாலாகிய உலகில்வழங்குதற்குத் தகுதி [யாயுள்ளகுணம்.
அருள் இறைவனால் உயிர்கள்மேல் நோக்கப்படுங் குணம்;
அன்பு இறைவனால் உயிர்களிடத்து வழங்கப்படுங் குணம்.
அருள் உயிர்களால் பெரியோர் சிறியோரிடத்து வழங்குங்குணம்;
அன்பு உயிர்களால் சிறியோர் பெரியோரிடத்து வழங்குங்குணம்.
அருள் உயிர்களினுடைய துறவறவாழ்க்கைக்கு இன்றியமையா [து வேண்டப்படுங் குணம்;
அன்பு உயிர்களினுடைய இல்லறவாழ்க்கைக்கு இன்றியமையாது [வேண்டப்படுங் குணம்.
அருள் உயிர்களுக்குப் பேரின்பப் பயனைத்தரும்;
அன்பு உயிர்களுக்குச் சிற்றின்பப் பயனைத்தரும்.
அருள் உயிர்களால் குறிக்கோளாகக் கருதப்படுங்குணம்;
அன்பு உயிர்களால் வழியாய் ஒழுகிப் பழகப்படுங்குணம்.
அருள் தோற்றமுறைமையில் அன்புக்குத் தாயாகிறது;
அன்பு வளர்ச்சி முறைமையில் அருளுக்குத் தாயாகிறது.
அருள் குறைந்து வெளிப்படும் நிலையில் அன்பு ஆகிறது;
அன்பு வளர்ந்து வளர்ந்து முதிர்ந்து அருள் ஆகிறது.
அருள் அன்பில் வியாபக முடையது.
அன்பு அருளில் வியாப்பிய முடையது.

அருளில் அன்பு அடங்குகிறது;
அன்பில் அருள் விளங்குகிறது.
அருளின்றி அன்பு உண்டாகாது;
அன்பின்றி அருள் விளங்காது.
அருளுக்கு அன்பு வழி;
அன்புக்கு அருள் குறி.
அருளை அன்பு போற்றுகிறது;
அன்பை அருள் தேற்றுகிறது.
அருள் எல்லாவுயிர்களையும் ஒப்பக்கருதும்: விருப்பும் வெறுப்பும் அதற்கில்லை;
அன்பு எல்லாவுயிர்களையும் ஒப்பக்கருதாது: விருப்பும் வெறுப்பும் அதற்குண்டு.
அருள் உறுபயனை நோக்கவே செய்யாது;
அன்பு உறுபயனை நோக்கவுஞ் செய்யும்.
அருள் எப்பொழுதும் தூய்மையுடையது;
அன்பு தூய்மையுடையதாயு மிருக்கும்: தூய்மை யில்லாமலு மிருக்கும்; அது அருளாலே தூய்மையடையும்.
அருள் கரையடங்கா வெள்ளம்போலும்;
அன்பு அவ்வெள்ளத்தில் யாதாமொருபாத்திரங்கொண்டு முகந்து கொள்ளப்படும்நீர்போலும்.
அருள் மேகம் போலும்; அன்பு அம்மேகத்திலிருந்து இறங்கி உலகில்விழுகிற மழைநீர் போலும்; உயிர்கள் செய்கிற தூய்மை யில்லாத அன்பு அம்மழைநீர் பலவித நிலத்துடன் கலந்து அதன்றன்மையைப் பொருந்தியது போலும்.
அருள் விதைபோலும்; அன்பு அவ்விதையிலிருந்து உண்டாகிய செடிபோலும்; இன்பம் அச்செடியில் விளைபலன்போலும்; பேரின்பம் அச்செடியில் விளைந்தது முதிர்ந்த கனியாகிய அருளினு லுண்டாவது.

17. என் சிற்றறிவுக்கு எட்டியவாறு மேலேசொல்லிய கட்டுரையில் மிகையாவது குறையாவது காணின் அவற்றை அறிஞர்கள் எனக்கு முறைப்படி தெரிவிப்பாராயின் நான் அவர்களுக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

மா. வே. நெல்லையப்பபிள்ளை, B.A.

# முன்னுரைச் சுருக்கம்

(கசுு-ம் பக்கத் தொடர்ச்சி.)

வினை சடமானது. அதைச் செய்பவனோ சில்வாழ் நாளும் சிற்றறிவும் சிறிய ஆற்றலும் உடையவன். ஆகவே, வினையின் பயனாவது செய்தானிடத்துத் தானே சென்று சேராது. அதை அறிந்து தன்னிடம் சேர்த்துக்கொள்ள இவனாலும் இயலாது. எனவே, இன்னவனுக்கு இன்னதற்கு இன்னபலன் என்று அறிந்து கொடுப்பானாகிய முற்றறிவும் வரம்பிலாற்றலும் என்று மழியாமையுமுடைய ஒருவன் இருக்கின்றான் என்பது இவர்கள் துணிபாம். இவ்வாறு நான்காவது பொருள் கண்டவர்கள் முன்னே சொல்லிய மூவர்களைவிட மேற்பட்டவர்கள் என்பதில் என்னதடை. இதுவேதான், சமயங்களிலுள்ள ஒற்றுமை வேற்றுமைகளாம். மேலே காட்டிய நான்காவது கொள்கையிலே உள்ளவனுக்கு புதற்கொள்கை உடன்பாடேயாகும். ஆனால் அதனைத் தன்னில் ஒரு அங்கமாகக்கொள்வன். ஏந்த எந்தச் சமயங்களையும் கொள்கைகளையும் எடுத்துக்கொண்டபோதிலும் அவைகள் எல்லாம் ஆராய்ந்து பார்த்தால் இந்த நான்கு பகுப்பில் ஒன்றில் அடங்குவனவே யாம்.

> செய்வினையுஞ் செய்வானும் அதன்பயனுஞ் சேர்ப்பானும்
> மெய்வகையா னன்காகும் விதித்தபொரு ளெனக்கொண்டே
> இவ்வியல்பு சைவநெறி யல்லவற்றுக் கில்லையென
> உய்வகையாற் பொருள் சிவனென் றருளாலே யுணர்ந்திருந்தார்.
>
> பெரியபுரா: சாக்கிய நாயனார் புரா: ரு.

ஆயின் இக்கொள்கை யாவை என்றும் அவை இக்காலத்து மேல் நாட்டார் கண்ட சாத்திர முடிபுகளோடு ஒப்பிட நிற்கின்றனவா என்றும் பார்ப்போம். ஏன்? எல்லாம் புது நாகரீக மயமாகிப் பழையவற்றைப் புதியதைக்கொண்டு அளக்கும் காலமாக அன்றோ இக்காலம் விளங்குகிறது. சிறுவர்களுக்கும் நமது பெரியார்களிடம் நம்பிக்கை குறைந்து வருவதை நாம் பார்க்கிறோம். கள்ளியானது முளைத்துப் பரந்து விளைநிலத்தைக் கவர்ந்து,

பலன்தரும் பயிர்க்கு இடமில்லாதபடி செய்வதுபோல நமது நாடு இப்போது புதுக்கொள்கை புதிய சட நாகரீகம் என்ற மயக்கமேறிப் பழைய பலன்களை விழுங்கிவிட்டன. கள்ளிகளைக் களைந்து சுட்டெறித்து நிலத்தைப் பண்படுத்திப் பயிர் செய்ய வேண்டும். மேலிலே தங்கள் கருத்தை நாட்டார்களாகி விளங்கும் மேல்நாட்டார்களின் சடக்கொள்கைகளை மிகுந்து பயின்று வருவதால் கீழிலே கருத்தை நாட்டாத கீழ்நாட்டார்களாகிய நாமும் அது கண்டு மயங்கி அவற்றையே நமக்கு வழிகாட்டிகளாகக் கொள்வோமாயினோம். ஆதலின் அதுகொண்டும் சிறிது பார்ப்போம்.

எல்லாச் சமயக்கொள்கைகளும் "கண்டது கொண்டு காணாததைக் காண்பது" என்னும் பிரமாணத்தை ஒட்டியே காண்பதாகிய இவ்வுலகத்தைக் கொண்டே தத்தம் கொள்கைகளை நிறுவுகின்றன. அதுபோல, மேல் நாட்டுச் சாத்திரியாகிய ஸ்பென்சர் (Spencer) முதலியவர்கள் தங்கள் சடக் கொள்கைப்படி உலகத்தைப் பகிர்ந்து பகிர்ந்து எது உள்ளது, எது மூலம் என்றாய்ந்தார்கள். பகிரப் பகிரப் பெரிதுகள் சிறிதுகளாயின. மண், நீர் முதலிய திரட்சிகள் எல்லாம் அணுக்களாயின. அணுக்கள் பரமாணுக்களாயின. அவற்றிலிருந்து உலகம் காலக்கிரமத்தில் உண்டாகிப் பலவேறு தோற்றமுடையதாய் நிற்கின்றன என்று கண்டார்கள். இவ்வாறு தாங்கள் முடிவாகக் கண்ட அணுக்களின் தன்மையை ஆராயும்போது அவை கேவலம் சட அணுக்களாயின் பேரசைவோடுகூடிய இவ்வுலகத்திற்கு மூல காரணமாகமாட்டா என்றும் கண்டு அவ்வணுக்களிலே ஒருவித அசைவும் கண்டார்கள். அதற்கு மேலும் உலகத்தைப் பிரித்துக் காணமுடியாது என்று நின்றார்கள். மிக மிகச் சிறியபிராணிகளிலிருந்து சிறியவும் அவற்றிலிருந்து முறையே பெரியவுமாகக் கடைசியில் வானரமாகி நரமாகிப் பரிணமிக்கின்றன என்றும் ஒரு சாத்திரி கண்டார். ஆகவே, இவர்கள் தத்தம் சட ஆராய்ச்சியிலே முடிவாகக்கண்டவை சிறிய அணுவும் அதனுள் அடங்கிய அசைவும் அல்லது உயிருமாகும். ஆனால் இதனோடு இவர்கள் நிற்கவில்லை. பின்னும் ஆலோசித்தார்கள். அணுக்

களும் அசைவுகளும் தாமாகவே உலகப் பலவேறு தோற்றங்களாக மாறுகின்றனவோ? இல்லை. இவை இவ்வாறு பலவேறு வகை உலகமாகப் பரிணமித்தற்கு ஆதாரமான உறுதியான விதிகள் அல்லது ஏற்பாடு ஒன்று உள்ளதாகக் கண்டார்கள். அஃது எது என்றால் தெரியமுடியாதது (The unknowable) என்று பேர் வைத்தார்கள்.

'ஆராலும் காண்டற்கரியான்' திருவாசகம்.

இவ்வாராய்ச்சியே நமது பெரியார்கள், மேலேகண்டபடி கூறிட்டுப்பார்க்கும் சட வகையிலேயன்றி உள்ளபடியே ஆய்ந்து அறியும் அறிவுவகையிலே வைத்து நிகழ்த்தினார்கள் அவர்களும் உலகத்தைக்கொண்டே ஆராயப்புகுந்து கண்டவுண்மையாவன இவை: இவற்றைத்தான் நாம் முடிந்த முடிபுகள் என்றுகொள்வது இவற்றிற்குமேல் எவரும் முடிபுகள் கண்டதில்லை. அன்றி அவரவர் கண்டவை இம்முடிபுகளிலே ஒவ்வோர் தரத்திலே அமைந்து நிற்பனவேயாகும். அவையாவன:—

உலகம் எல்லாம் சொல்லுலகம், பொருளுலகம் என்று இரண்டு பகுப்பிலே அடங்கும். இவ்வாறு காணப்பட்ட உலகமானது அவன் என்றும் அவள் என்றும். அது என்றும் சுட்டியறியப்பட்ட மூன்று வகைகளில் ஒன்றிலே அடங்கிவிடும். இம்மூன்றினும் படாத உலகப்பொருள் இல்லை. இம்மூன்று பொருள்களினிடத்திலேயும் தோன்றுதல், நிற்றல், அழிதல் (பிறத்தல். இருத்தல், இறத்தல்) என்ற மூன்றுதொழில்களும் நிகழ்வதை நாம் காண்கின்றோம். அவயவங்களாகிய இவை இவ்விதமாக மூன்று தொழிற்படவே இவற்றின் தொகுதியாகி அவயவியாகிய உலகமும் இவ்வாறே தோன்றி நின்று அழியுந்தன்மையுடையது என்பது நியாயமுறை. இதற்கு அதீதமாய் இதன் தோற்றமுறை, நிற்குமுறை, அழிவுமுறைகளைச் செய்து முறைப்படுத்துவான் ஒருவன் உண்டு. அவனாற்றொழிற்படுத்தப் பெற்ற இவ்வுலகத்திலே சடமும் சித்துமாக அதாவது அறிவில்பொருள் அறிவுப்பொருள் ஆக இரண்டு வகை உண்டு. அறிவில்லாப் பொருளாகிய

சடத்திலே அறிவுப்பொருளாகிய ஆன்மா என்பது கட்டுப்பட்டுக் கிடக்கின்றது. எனவே, சடப்பொருளுக்குக் கட்டுப்படுத்தும் தன்மையும் சித்துப்பொருளாகிய ஆன்மாவுக்கு அதனிற் கட்டுப்பட்டு நிற்கின்ற நிலையும் காண்கின்றோம். அறிவுப்பொருளை அறிவில்லாதது கட்டுப்படுத்தி நிற்கிறது என்பது சிறிது சந்தேகத்திற்கு இடமாகும். ஆன்மாவோடு சம்பந்தமற்றதாய் அநித்தமாய் உள்ள உலகத்திலே மயங்கி அதில் வைத்த பற்றினாலே உலகர் திரிந்து வருகின்றார்கள் என்பது எல்லா ஞானிகளாலும் எடுத்துச்சொல்லப்பட்ட உண்மை. இதுவே "கட்டு" எனப்படுவது. இதுவே பிறப்பு இறப்புக்குக்காரணமாம். பிறப்பும் இறப்பும் துன்பமாம். பிறப்புக்கும் இறப்புக்கும் இடை வாழ்க்கையோ இன்பம் போலத் தோற்றித் துன்பத்துக்கே யேதுவாம்.

> "இந்திரிய வயமயங்கி யிறப்பதற்கே காரணமாய்
> அந்தரமே திரிந்து போய நரகில் வீழ்வேற்கு"

என்றார் ஸ்ரீ மணிவாசகப் பெருந்தகையார்.

சடவுலகத்திலேயும் சடலமாகிய உடம்பிலேயும் உள்ள உயிர் கட்டுப்பட்ட நிலையிலேதான் உள்ளதென்பதும் அதினின்றும் விடுபட்டால் அது பேரறிவும் பேராற்றலும் ஆதி பெருங்குணங்களோடு விளங்கு மென்பதும் இப்போது மனோவசீகர சாத்திரிகள் செய்து காட்டும் சில உதாரணங்களால் விளங்கும். (Hypnotism Experiments)மனோவசீகரசாத்திரியால் வசீகரிக்கப்பெற்ற ஒருவனுடைய ஆன்மாவானது அந்நிலையிலே தன் உடம்பின் கட்டுக்குள்ளிருந்து விலகிப் பரந்தநிலையை யடைகிறது. முன் இருந்ததை விட விசாலமான பார்வையும் அறிவும் சக்தியும் அப்போது அதற்கு வந்துவிடுகிறது. இருந்த இடத்திலேயே இருந்து கொண்டு அடுத்தவீட்டில் உள்ள கடியாரத்தில் என்னமணி? அங்கே யார் இருக்கிறார்கள்? என்ன பேசுகிறார்கள்? என்றெல்லாம் கேட்டால் அந்த ஆன்மா தான் அடைந்த சூட்சும வியாபக நிலையினாலே இடையிலே உள்ள சுவர் முதலிய சடமாகிய தடைகளைக்கடந்து அதை அறிந்து உள்ளபடி தெரிவிக்

கிறது. இதனாலே உடம்பானது உயிரைக்கட்டுப்படுத்துகிற தென்றும் அதினின்றும் விடுபடும்போது உயிர் பெரிய சக்தியை யும் வியாபகத்தையும் அடைகிறதென்றும் விளங்கவில்லையா? எனவே, உலகமுதல்வன் ஒருவனும், உலகமும், உலகிலே கட்டுப் பாடுற்ற உயிரும் ஆக மூன்று பொருள்களும் உண்டு என்று இங்கே நாம் கண்டோம். முதல்வன் உலகிற்குக் கருத்தா என் றும், உலகம் உயிர்களை மயக்கத்தாலும் பிறவாற்றாலும் கட்டுப் படுத்தி நிற்கிறதென்றும் உயிர் அதிலே கட்டுப்படுகிறான் என் றும், அதிலிருந்து விடுபட்டால் உயர்ந்த இறைவனைப்போல வியாபகநிலையை அடைகிறான் என்றும் இவ்வாறு இம்மூன்று பொருள்களின் இலக்கணத்தையும் கண்டோம். கட்டிலிருந்து விடுபட்டால் உயிர் உயர்ந்த நிலையையடைகிறதாக நாம் கண்ட அந்த உண்மையிலிருந்து அப்படி உயர்வையடைய ஒவ்வொருவ ரும் முயற்சி செய்யவேண்டுமென்பது தானே விளங்கும். அதற்கு வழிகள் யாவை என்பதே அடுத்தபடியாக அறிவாளி கள் ஆராயவேண்டுவது. அவைகளாவன: சத்தாகிய முதல் வனையும் அசத்தாகிய உலகத்தையும் அறிந்துகொள்ளுதல் வேண் டும். இவ்வாறு அறிந்து நிற்கும்போது முற்செய் தவத்தின் வலியாலே குருவின் உபகாரம் கிடைக்கும். அதனாலே பல உண்மைகள் இவனுக்குச் சித்திக்கும். ஒரு அரசகுமாரனை இளம்பருவத்திலேயே அவனுக்குப் பகைவர்களாகிய வேடர்கள் கவர்ந்து கொண்டுபோய்த் தங்களிடையே வளர்க்கின்றார்கள். அக்குமாரன் அஃதறியாது வேடர்களிடையே வளர்ந்தானாய் வேடர் தொழில்செய்து புலங்கவர்தல், ஆறலைத்தல், கொலை புலை செய்தல் ஆதி இழிதொழில் செய்து நிற்கின்றான். இக்காலத் திலே அவனுடைய நலவினையினாலே இவ்விரண்டும் அறிந்தா ராய்க் கருணையுடைய ஒருவர் வந்து இவனை இன்னான் என்று அறிவித்து "நீ அரசகுமாரன். அரசாங்கத்திலே அமர்ந்து நற் றொழில்செய்து விளங்கவேண்டிய நீ இந்தப் புலவேடர் சேரியிற் சேர்ந்து அவர் கூட்டுறவாலே இழிதொழில் செய்து பழிப்பட் டாய். இதைவிட்டு முன்னிலையும் உன்னிலையுமாகிய நன்னிலை யடை" என்று அறிவித்தால் எவ்வாறு அவன் பழித்தொடக்கை

விட்டு உயர்வையடைவாரோ அதுபோலவே குருவின் உபதேசத்தாலே ஆன்மா ஐம்புலவேடர் தொடக்கிலே நின்றும் நீங்கி எல்லாவற்றிற்கும் இறைவனாகிய பரமேசுவரனது தன்மையை அடைய முற்படுவான். அந்த முயற்சியிலே அறிவு மேலிட்டு இறைவனை எப்போதும் தியானித்தவனாய் நிற்பான். அதனாலே அவனைவிட்டுப் பாசக்கூட்டங்கள் நீங்கிவிடும். அவை நீங்கவே பிறவியின் சுடுவெயில் போய் பரமேசுவர•சந்நிதியாகிய குளிர்ந்த நிழல் பரந்து அதிலே தங்குவான். அக்காலம் எக்காலமும் விதிப்படி ஸ்ரீ பஞ்சாக்கரத்தை எண்ணி அவ்வுருவாய் இருப்பன். இவ்வாறு மேலே சொல்லிய சாதனங்களாலே கிடைக்கும் பயன் யாது என்றால் இவன்வேறு இறைவன்வேறு என்றிரண்டுபடாது நின்று இறைபணியிலேயே நிற்பதனாலே இவனைக் கட்டிநின்ற உலகத்துன்பம் முழுதும் நீங்கப்பெறுவான். உலகக் கட்டு நீங்கவே இறைவன் இவனிலே முற்றும் கலந்து உள்ளே நின்று தன்னையே காட்டி நிற்பானாகையினாலே எப்போதும் ஒரு சிறிதும் கெடுதல் இல்லாத மாறாத அன்பின் உறைப்பைப் பெற்று இறைவனது சீபாதத்தையணைந்து நித்தியானந்தத்தை அனுபவிப்பன். அவ்வாறு அணைந்தனுபவிக்கின்ற காலத்தே அவ்வாறே அணைந்து அனுபவிக்கின்ற சீவன் முத்தர்களாகிய அன்பர் கூட்டப் பேறு கிடைக்கும். சிவாலயங்களையும் சிவவேடத்தையும் சிவன் எனவே கண்டு வழிபட்டு நிற்பான் என இவைகளே முடிந்த முடிபுகள் என்று நாம் கைக்கொண்டு ஒழுகுபவைகளாம்.

(தொடரும்)

---

# திருநெறித் தொண்டர் குழாங்கள்

திருநெறி, ஒருநெறி, பெருநெறி, முதற்சைவநெறி யெனப் பெரியோர்களால் பெரிதும் பாராட்டப்பெற்ற நமது சைவநன்னெறியானது இந்நாளில் யாண்டும் நன்கு பரவிச் செழித்தோங்கா திருக்கின்றது. நமது சைவநன்மக்களிற் பலர், சைவசித்தாந்

தத் திறன் அறியாதவர்களாகப் பல மாறுபட்ட கொள்கைகளை மேற்கொண்டோராய்ப் பயனில் வாழ்வு வாழ்கின்றார்கள். பொது மக்கள் பலருக்குச் சிவசின்னங்களின் பெருமையும், சிவா லய வழிபாட்டின் சீர்மையும், சிவனடியார்களின் சிறப்பும், சைவ நூல்களின் அருமையும், சீவகாருணியத்தின் உயர்வும், சைவஉண வின் இனிமையும் தெரியவில்லை. பலர் சன்மார்க்க முணராதவர் களாக வீண்வாழ்வே வாழ்கின்றார்கள். மேற்கூறிப் போந்த உயரியநலன்களையெலாம் செவ்வனே தெரிந்து, சிவநெறி வழி இச் செல்பவர் ஒரு சிலரேயாவர். எனவே, இதுகாலை நமது சைவசமயமானது மிகச் சுருக்கமான மக்கள் தொகுதியினரா லேயே அநுட்டிக்கப்படுகின்றது. ஆகவே, நமது பெருநெறி இது போழ்து பெரிதும் பலம் குன்றித் தளர்வுற்றிருக்கின்றது. இந்நிலையில சைவசமயப்பற்று மிக்க தக்கோராய அறிஞர்கள் ஆற்றவேண்டிய வேலையாது? "நாம் என் செயவல்லேம்; எல் லாம் இறைவன் செயல்" என ஆற்றலிலாத பேச்சுப் பேசிக் கொண்டு வாளா உறங்கிக் கொண்டிருந்தாற் போதுமா? தொழில் புரிவார்க்கன்றே இறைவன் துணைபுரிவான்? சோம்பேறிப் பேச்சை இறைவன் செவிமடுப்பானோ? நமது ஒப்பு உயர்வற்ற அப்பரெம்பெருமானார் என்ன நவின்றருளுகின்றார்கள்?

"நன்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்கடன்னடி யேனையுந் தாங்குதல்
என்கடன்பணி செய்து கிடப்பதே"

எனுந் திருப்பாட்டால், "நம்மைக் காக்கவேண்டுவது இறைவ னுடைய கடன்; பணிசெய்து கிடக்கவேண்டுவதே நம்முடைய கடன்" எனவன்றோ தொண்டின் சிறப்பினைத் தெளிவித்தருளு கின்றார்கள். எதற்கும் இறைவன் துணையாக முன்னின்று முடிப்பானே யொழிய, எல்லாத்தொழில்களையும் தானே புரிந்து முற்றுவித்து நம்மை மகிழ்விக்கமாட்டான். இறை சிவன் திரு வருளை முன்னிட்டு நாம் பணிசெய்துகிடப்போமானால், அவன் பெருந் துணைபுரிந்து அப்பணியினைப் பயன்படுத்துவான்.

சைவ சமய வளர்ச்சி கருதி நாம் எவ்வாறு பணிசெய்தல் வேண்டும்? சைவசித்தாந்த சங்கங்களை யமைத்து, ஆண்டு நிறைவு விழாக்களை மட்டும் மிக ஆடம்பரமாகக் கொண்டாடினாற் போதுமா? அஃதொன்றான் மட்டும் நாடு முழுவதும் சிவமணமும், செந்தமிழ்மணமும் சீவகாருணியமணமும் செழித்து ஓங்கி விடுதல் கூடுமா? அவ்வாறாயின் பல ஆண்டுகளாக எத்தனையோ சைவசித்தாந்த சங்கங்கள் ஆண்டு நிறைவு விழாக்கள் எடுத்து இன்ப வெள்ளத்தில் திளைத்து வருகின்றனவே! ஏன் சிவநெறி யுணர்ச்சி யாண்டும் நன்கு பரவி உரம் பெற்று ஒளிர வில்லை? விழா வெடுக்குங் கழகங்கள் செய்யும் வேலை இரண்டொருநாள் வேலையேயாகும். விழாவும் ஒரு குறிப்பிட்ட ஊரில் ஒரு சில மக்களுக்குமட்டும் உணர்ச்சியை எழுப்புமளவில் முடிவுபெற்று விடுகின்றது. அக்கழகங்களும் அவ்வளவோடு அமைந்து விடுகின்றன. ஆகவே, அத்தகைய சைவசித்தாந்த சங்கங்களால் நாம் எதிர்பார்க்கும் அவ்வளவு பெரியபலன் கிடைக்கவில்லை! பின்னர், வேறு எவ்வகையால் இப்பெரும் பலனை நாம் பெறுதல் கூடும்? இச்சங்கங்களின் சார்பிலும், சங்கங்களில்லாத இடங்களில் தனித்தும், எல்லா இடங்களிலும் எப்பொழுதும் தொடர்ந்து ஊர்கடோறுஞ் சென்று பிரசாரவேலை—உண்மைத்தொண்டு—செய்யக்கூடிய திருநெறித் தொண்டர் குழாங்களை ஏற்படுத்துதல் வேண்டும். ஒவ்வொரு குழாத்தினும் ஒருபத்துத் தொண்டர்கள் இருந்தாற் போதும். இக்குழாங்களில் சிவநெறியுணர்ச்சியுடையவர்கள் அனைவரும் பேரறிஞராயினும், சிற்றறிஞராயினும், இளையவராயினும், பெரியோராயினும், உத்தியோக ஓய்வு பெற்றோராயினும், யாவரும் தாராளமாகச் சேர்ந்து தொண்டு புரியலாம். இவ்வாறு தொண்டு புரிதலில் சைவநன்மக்கள் பலருக்கும் பேராவல் இருத்தல்வேண்டும். அனைவரும் சிவத்தொண்டுபுரிதலே எனது பிறப்புரிமையென எண்ணுதல் வேண்டும். தொண்டு செய்தல்தான் பெரும்பயன் அளிப்பதாகும். வீண்பேச்சுமட்டும் பயனை நல்காது. பெரும்பயன் வேண்டுமானால் பேசவும் வேண்டும்; எழுதவும் வேண்டும்; செய்கை

யினும் கொள்கைகளைப் பரப்பவும் வேண்டும். அஞ்ஞான்றே நமது திருநெறி ஒளி நெறியாக உலகமுழுவதும் பிறங்கும்.

இவ்வாறு நாம் நமது செந்தமிழ்ச் சைவத்திரு நாட்டிலே ஓராயிரம் (1,000) தொண்டர்களடங்கிய நூறு (100), திருநெறித் தொண்டர் குழாங்களையாவது தோற்றுவித்து ஒரு சில ஆண்டுகள் தொண்டுபுரிந்து வருவோமாளுல் சிவமணமும், செந்தமிழ் மணமும், சீவகாருணிய மணமும் பண்டை நாளிலே பரவியிருந்ததைப்போல் நன்கு பரவுதல் கூடும். எவ் வேலையும் பாடுபட்டால்தான் முடியும். சும்மா இருந்தால் சுகம் கிட்டாது. உழுது பயிரிட்டால் தான் பலன் கிடைக்கும். நாம் எவ்வளவு தூரம் வேலை செய்கின்றோமோ அவ்வளவே பயனும் கிடைக்கும். எனவே, சைவப் பெருமக்களுடைய கண்ணும் கருத்தும் இனிமேல் வேலை செய்தலில்—நாட்டு நன்மக்களனைவருக்கும் உணர்ச்சியை ஊட்டிக் கொள்கையைச் செய்கையிற் பரவச் செய்தலில்—செல்லுதல் வேண்டும். அதற்கு ஒவ்வொரு முக்கியமான ஊரிலும் அவசியம் ஒவ்வோர் திருநெறித் தொண்டர்குழாம் ஏற்படுத்தல் வேண்டும். சைவசபை அமைச்சர்களும், சைவப்பெருஞ் சொற்பொழிவாளர்களும், செல்வாக்குடைய சைவச்சான்றோர்களும் ஆங்காங்கு இவைகளை ஏற்படுத்த முயற்சித்தல் வேண்டும். சைவசமயத்திற் பிறக்கும் பேறுபெற்ற இளைஞர்கள் அனைவரும் எல்லையில்லா இன்பத்தோடு இவ்வேலையில் ஈடுபடுதல் வேண்டும். இவ்வேண்டுகோளை முதன் முதலாக எளியேன் அன்புடன் செய்து கொண்டகாலத்து, உண்மையுடன் வேலை செய்யும் சங்கத்தினராகிய நமது திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தார், தங்கள் நற்சங்கத்தின் சார்பில், ஓர் திருநெறித்தொண்டர் குழாத்தினை ஏற்படுத்திச் சில திங்கள்களாகத் தொண்டு புரியச்செய்து வருவது கண்டு களிப்புற்று, அவர்களுக்கு எனது மனமொழிமெய்களாலாகிய பெருவணக்கத்தினைச் செலுத்துகின்றேன். அத் திருநெறித்தொண்டர் குழாத்தினருக்கும் எனது பெருநன்றியறிதலும், பேரன்பும் உரியனவாகுக. மேலும், தூத்துக்குடி, திருவனந்தபுரம், திரிசிரபுரம், தஞ்சை, மதுரை, கோயமுத்தூர்,

சென்னை முதலிய இடங்களில் உள்ள சைவசித்தாந்த சங்கத்தார்களும் இத்தகைய குழாங்களை ஏற்படுத்துதல் வேண்டுமெனப் பணிவுடன் பெரிதும் பிரார்த்தித்துக்கொள்ளுகிறேன். வேறு பல ஊர்களில் உள்ள அன்பர்குழாத்தினரும் இவ்வேலையில் ஈடுபடுவார்களாக!

நமது திருநெறித் தொண்டர் குழாங்கள் யாண்டும் தோன்றிக் கிளர்ச்சி செய்ய ஆரம்பித்து விட்டால், நமது தமிழ் நாடு சிவலோகம் போல் என்றும் குறைவிலாத சிவ மணத்தோடு பொலியும் என்பதில் எட்டுணையும் ஐயமின்று. இப்பெருஞ் சிவமணத்தைப் பெறவிரும்புவோர் அனைவரும் இப்பொழுது தொண்டர்களாக முன்னின்று பணிசெய்ய, 'நான் வருகின்றேன்; நான்வருகின்றேன்; என்னை விட்டு விடாதீர்கள்'' என்று போட்டி போட்டுக்கொண்டு ஓடிவருதல் வேண்டும். எல்லோரும் கங்கணங் கட்டிக் கொண்டு பெருமுழக்கஞ் செய்தல் வேண்டும். அப்பொழுதுதான் யாண்டும் அரகரவெனு மொலி அலைகடலைப் போற் கேட்கும்; எல்லாவுயிரும் இன்புற்றிருக்கும்; தீந்தமிழ் மணங்கமழும்; சைவநன்னெறி உண்மையில் வளரும் திருநெறித்தொண்டர் குழாங்கள் வாழ்க!

அரு. சோமசுந்தரன்,
காரைக்குடி.

---

# திருப்பாசுரம்

திருப்பாசுரமென்பது திருவெனும் அடைமொழியடுத்த பாடல் எனப்படும். இத்தொடர்மொழியின் பின்னின்ற பாசுரம் என்பது கற்றுணர்ந்த புலவர்பெருமக்கள் செம்பொருளமைய இனிய சொற்களை அழகுறப்புனைந்து செய்ததெனப் பொருள்படும். இக்கருத்துப்பற்றியே இலக்கண நூலுடையாரும் ''பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல, சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின், வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்'' என்றியம்பினர். பாசுரம், பா, பாடல், தூக்கு, செய்யுள் என்பன ஒரே பொருளைக் குறிப்பனவாம்.

ஆகலின், பாசுரம்' என்பது கற்றறிந்த பெருமக்கள் இலக்கண முறையானியற்றிய எல்லாச் செய்யுட்களையுங் குறிக்குமேனும், சொல் எனப்பொருள்படும் வாசகம் எனும் மொழி திருவெனும் அடையடுத்துத் திருவாசகம் எனநின்று, ஏனைய சொற்களையும் அவற்றான் வந்தபிறநூல்களையும் உணர்த்தாது திருவாதவூரடிகள் அருளிச்செய்த திருநெறித்தமிழ்நூலையே சிறப்புவகையான் உணர்த்துதல் போன்று. இத்திருப்பாசுரம் என்பதும் ஆலவாய் அவிர்சடைப்பரமன் அன்பராகிய பாணபத்திரர் பொருட்டுச் சேரநாட்டரசராகிய சேரமான் பெருமாள் நாயனாருக்கு விடுத்தருளிய

"மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவு பானிற வரிச்சிற
கன்னம் பயில்பொழி லால வாயில்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பா லியாழ்பயில் பாண பத்திரன்
தன்போ லென்பா லன்பன் றன்பாற்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே"

என்னும் அகவற் பாவையும், காழித்திருஞான சம்பந்தர், பாண்டியன் நெடுமாறற்கு உபதேசிக்கும் வாயிலான் உலகினர் உய்ய வேண்டு மென்றெழுந்த கைம்மாறற்ற பெருங் கருணையோடு வைகைநதிக்கெதிரேற விட்ட

"வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே"

என்பதை முதலாகக் கொண்ட பன்னிரு பாசுரங்களையுமே குறிக்கும் என்ப. இவ்விருதிறப் பாசுரங்களில், முழுமுதற் கடவுள் எழுதிவிடுத்த பாசுரம் திருமுகப் பாசுரம் என்னும் பெயரோடு வழங்குகின்றது. இதுபற்றிய வரலாறு திருவிளையாடற் புராணத்து விரித்துக் கூறப்படுகின்றது. மேல் திருஞான சம்பந்தப் பிள்ளையார் அருளிச்செய்த திருப்பாசுரமே ஈண்டு எடுத்துக்கொண்டது. இதுவே பெரிய புராணத்து விரித்துக் கூறப்படுகின்றது. பிள்ளையார் பதிகத் திறுதிக்கண், "பாசுரஞ் சொன்ன பத்தும்" எனப் பெயரருளியதும் இதற்குப் போதிய சான்றாகும். இத்திருப்பாசுர வரலாறு என்னையெனின்:

"நிறைக் கொண்ட சிந்தையான் நெல்வேலி வென்ற நின்ற சீர்நெடுமாறன்," என்று நாவலூர்ப் பெருமான் புகழ்ந்தருளிய கூன்பாண்டியன், முன் செய்த தீவினைப் பயத்தினாலே புறச்சமயமாகிய ஆருகத சமயம்புக்கு, அமணர்கள் இழைத்த கொடுஞ் செயற்குத் தான் காரணமாயினமையின் பிள்ளையார் ஏவியவாறே வெப்புநோயுற்று, மீண்டு பிள்ளையாரைத் தரிசித்து, அவரது திருக்கரத்தால் நீறு தரிக்கப் பெற்று, அவ்வெப்பு நோயுடன் தனது பழவினையும் நீங்கிப் புனிதனாகிப், பாவிகளாகிய அமணர் வேண்டுகோட் கிணங்கி, இரங்கி, பிள்ளைப் பெருமானடிகளைத் தாழ்ந்து, பெரும் பாவிகளாம் இவ்வமணர்கள் தேவரீருடன் நீரினும், நெருப்பினும் வாதுபுரிய விழைகின்றனரென, பெருமானும் அதைத்திருவுளங்கொண்டு, முதலாவதாக நெருப்பினில் வென்று பின்நீரினும் வெல்லக்கருதி, அரசர் அமைச்சர் முதலானவர்களோடும் அமணர்களோடும் அரத்துறையடிகள் அருளிய அருஞ்சிவிகையிவர்ந்து, வைகை நதிக்கரை சார்ந்து, கூன்பாண்டியன் தமது திருக்கரத்தால் நீறுதரிக்கப் பெற்று, முன்னைவினை நீங்கி இருவினையொப்புமலபரிபாகம் எய்தி முதல்வனையறியுந் தன்மை துன்னப்பெற்ற பக்குவமுடைய நிலைமை கண்டு அவற்கும், பக்குவமுடைய ஆன்மகோடிகள் பிறக்கும் வேதநெறி தழைத்தோங்கமிகுசைவத்துறைவிளங்கப் பூதபரம்பரைபொலிய மலர்ந்தழுத தமது திருவாயினால் உபதேசிக்கத் திருவுளங் கொண்டு பாடி, பரசமயங்களெல்லாம் அழியும்படியாகவும், எண்

பெருங்குன்றத் தெண்ணாயிரஞ் சமணருங் கழுவேறும்படியாகவும் அந்நதியில் எதிரேற எழுதிவிட்ட, வேதாகமங்களின் உண்மைப் பொருளைத்தெளிவாகவும் சுருக்கமாகவும் புகட்டுகின்ற சித்தாந்த மகாவாக்கியமே இப்பன்னிருபாசுரங்களும் என்க.'

எல்லாம் வல்ல முழுமுதற் கடவுள் "ஆன்மகோடிகள் கைக்கொண்டொழுகும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களின் பக்குவநிலைமைக்கு ஏற்றவாறு, அவர்களில் ஒருமலமுடைய விஞ்ஞானகலர்க்கு உயிர்க்குயிராய் உண்ணின்றுணர்த்தியும், இருமலமுடைய பிரளயாகலர்க்கு மான், மழு, சதுர்ப்புயம், கொன்றை வேணி முதலிய அடையாளங்களுடன் முன்னின்றருளியும், மும்மலமுடைய சகலர்க்கு அவர் போல் மானிடவருக்கொண்டு எழுந்தருளிவந்தும் அருள்செய்கின்றா ரென்பது "மெய்ஞ்ஞானந் தானே விளையும் விஞ்ஞானகலர்க், கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய்-மெய்ஞ்ஞானம், பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு, முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்" என்ற மெய்கண்டவாக்கியத்தாற் பெறப்படுதலின். சண்டுப்பிள்ளைப் பெருமான் திருவாய்மலர்ந்த இப்பாசுரமும் கூன்பாண்டியனது பரிபக்குவமுணர்ந்து சிவபெருமானே ஞானாசிரியராக எழுந்தருளிவந்து உபதேசித்தாரெனக் கோடலே ஆன்றோர்துணிபு. இனி இப்பாசுரங்களின் பொருளைச் சிறிது நோக்குவோம். (தொடரும்)

இராஜாப்பிள்ளை,
தமிழ்ப்பண்டிதர், வேலூர்.

---

# சிலப்பதிகாரகாலம்

[சென்னையில் நடந்த அகில இந்திய கீழ்த்திசை மகாநாட்டில் ஆங்கிலத்திற் படித்த கட்டுரையின் மொழிபெயர்ப்பு.]

சேரன் செங்குட்டுவனுக்கு உடன்பிறந்தவராகிய இளங்கோவடிகளாலே இயற்றப்பெற்ற பழந்தமிழிலக்கியம் சிலப்பதிகாரம். ஆசிரியர், இந்நூலை மூன்று காண்டங்களாகப் பிரித்

இருக்கிறார். அவை சோழர்தலைநகராம் புகாரை யொட்டி நடந்த செய்திகளைக்கூறும் புகார்காண்டமும், பாண்டியர் தலைநகராம் மதுரையை யொட்டி நடந்த செய்திகளைக்கூறும் மதுரைக் காண்டமும், சேரர்தலை தலைநகராம் வஞ்சியை யொட்டி நடந்த செய்திகளைக் கூறும் வஞ்சிக்காண்டமுமாம். இந்நூலிலுள்ள வரலாறு முழுதும் இயற்கைக்குக் கொஞ்சமும் மாறாமல் உள்ளது உள்ளவாறு அமைந்துள்ளது. ஏனென்றால் இதன் ஆசிரியர் ஓர் உண்மைத்துறவி. வஞ்சிக்காண்ட நிகழ்ச்சி முழுதும் அவர் நேரிலறிந்ததே. ஏனைய காண்டங்களிலுள்ள நிகழ்ச்சிகளையும் நேரிலறிந்தோராகிய மாபெரும்புலவர் சாத்தனார், மாடலமறையோன் முதலிய பெரியோர் வாய்க்கேட்டறிந்தே அவர் எழுதியிருக்கிறார். நூலிற் கூறப்பட்டுள்ள செய்திகள் முழுவதும் மிகவும் தெளிவாகவுமிருக்கின்றன. ஆதலின் அவைகள் நடந்த காலத்தை நிலைநாட்டுவதும் சுலபமாகின்றது.

காவிரிப்பூம்பட்டினத்திலே சித்திரைமாதம் சித்திரை நாளிலே இந்திரவிழாவிற்குக் கொடியேறிற்று.

[“சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென” சிலப்-V. 64.]

அவ்விழா இருபத்தெட்டுநாள் நடந்தது. (“நாலேழ் நாளினும்” மணிமேகலை-I. 8. சிலப்பதிகாரம் அடியார்க்கு நல்லார் உரையும் பார்க்க). இருபத்தொன்பதாவது நாள் கொடியிறங்கி முப்பதாவது நாள் கடல்விளையாட்டு நிகழ்ந்தது. இவ்வரலாற்றுத் தலைவனும் கோவலன் நாடகக் கணிகை மாதவியோடும் கடற்கரை சென்றனன். அன்றுமாலை அவன் மாதவியோடு மாறுபட்டு அவளை விட்டுப்பிரிந்து அன்றிரவிலே தன்வீடு புகுந்தான். அங்கே அவன் மனைவியாம் இவ்வரலாற்றுத்தலைவி கண்ணகி அவனை மனமகிழ்வோடும் நல்வரவேற்றாள். கோவலன் தன் கூடாவொழுக்கத்தையும், மாதவியால் தன் பெரும்பொருள் முழுதும் இழந்தமையால் தன்னை வந்தடைந்த வறுமையையும் நினைந்து நினைந்து வருந்தினான். அவன் அன்றிரவே தன்னுடைய மனைவியையும் உடனழைத்துக்கொண்டு அன்று நிறைமதிப்

பக்கம் பதினான்காம் நாளாதலால் விடியச் சற்றுமுன் திங்கள் மறைந்ததாக உலகைச் சூழ்ந்த இருட்டிலே தம்மை ஒருவரு மறியாமல் அந்நகரின் நீங்கினான்.

("வான்கண் விழியா வைகறை யாமத்து, மீன்றிகழ் விசும்பின் வெண்மதி நீங்கக், காரிரு ணின்ற கடைநாட் கங்குல்" சிலப்-X. 1-3.)

கோவலன் மதுரையடைந்து நகரின் வெளிப்புறத்திருந்த இடையர் சேரியிலே மாதரி என்பாள் வீட்டிலே தன்மனைவியை விட்டு அவளுடைய காற்சிலம்பொன்றை விற்பதற்காகக் காலை யில் ஊரினுட் சென்றான். அந்நாட்டிறைவன் பாண்டியன் நெடுஞ் செழியன். அவனுடைய மனையாள் சிலம்பொன்றை ஓர் பொற் கொல்லன் திருடிக்கொண்டு அக்குற்றம் வெளிப்படா முன்னம் என்செய்வதென வருந்தியிருந்தவன் கோவலனைக் கண்டு ஓர் தந்திரமுன்னி மகிழ்ந்து அரசனை யடைந்து அக்கோவலனை சிலம்பு திருடிய கள்வனெனப் பொய் புகன்றனன். அரசனும் ஊழ்வினை வசத்தால் மயங்கிக் குற்றமற்ற கோவலனைக் கொல்வித் தனன்.

கணவன் மடிந்த வெவ்வுரை கேட்ட கண்ணகியாள் மற்றைச் சிலம்பைக் கையிலேந்தி விரைந்து சென்று மாலையிலே அவனைக் கண்டனள்.

("வண்டா ரிருங்குஞ்சி மாலைதன் வார்குழன்மேற், கொண்டா டழீஇக் கொழுநன்பாற் காலைவாய்ப், புண்டாழ் குருதி புறஞ் சோர மாலைவாய்க், கண்டா ளவன்றன்னைக் காணாக் கடுந்துயரம்" சிலப். XIX 35-38.)

அப்போது ஞாயிறு மேற்கடற் பாய்ந்தது. இருள் சூழத் தொடங்கிற்று.

['மல்லன்மா ஞால மிருளூட்டி மாமலைமேற்,செவ்வென் கதிர் சுருக்கிச் செங்கதிரோன் சென்றொளிப்ப' சிலப். XIX. 31-32.]

('யாருமின் மருண்மாலை யிடருறு தமியேன்முன்' சிலப்-XIX. 43.)

உடனே அவள் மிக விரைவாக அரண்மனையடைந்து அரசனைக்கண்டு அவனுக்கு அவன் செய்த பெருங்குற்றத்தை விளக்கிக் காட்டினாள். தான் கோவலனைக் கொன்றது பெருந்தவறென உணர்ந்த பாண்டியன் நெடுஞ்செழியன் "நானே கள்ளன்கெடுக என்வாழ்நாள்" என்று கீழ்வீழ்ந்து அப்பொழுதே உயிர்துறந்தான். பின் கண்ணகியாள் அந்நகரை மும்முறை வலம்வந்து அதனை எரியூட்டினாள். அப்போது இரவு ஐந்து நாழிகையிருக்கும். அன்று ஆடித்திங்கள் வெள்ளிக்கிழமை, இருட்பக்கத்து அட்டமி, பரணிக்குமேல் வந்த கார்த்திகை.

["ஆடித் திங்கட் பேரிருட் பக்கத், தழல்சேர் குட்டத் தட்டமி ஞான்று, வெள்ளி வாரத் தொள்ளெரி யுண்ண, வுரைசான் மதுரையோ டரசுகே டுறும்" சிலப். XXIII. 133-136]

மதுரை எரியுண்ட காலத்தைத்தீர்மானிப்பதற்கு இது மிகவும் உதவியாம். இதில் கார்த்திகை என்பது அழல்சேர்குட்டம் என்பதால் விளங்கும். இவ்விடத்துப் பழைய உரையாசிரியர் கார்த்திகைபரணி என்று பொருள் குறித்திருக்கிறார். இதனால் அன்று கார்த்திகை பரணிக்குமேல் வந்ததா மெனவும் அதுவும் மதுரையிற்றீப்பற்றிய அப்பொழுதே யாயிருக்கலா மெனவும் தீர்மானிக்கலாம். கி. மு. 100 முதல் கி. பி. 400 வரை கணக்கிட்டுப் பார்த்ததில் கி. பி. 144 ல் மட்டுமே இவ்விதமான கணிதக்குறிப்பு காணப்படுகின்றது. வேறு ஆண்டுகளொன்றும் பொருந்த வில்லை. இதிலிருந்து மற்றைச்செய்திகளும் நடந்த நாள் இன்னதெனத் தீர்மானிக்கலாம்.

கி. பி. 144 சித்திரைத் திங்கள் இருபத்தோராம் நாள் வெள்ளிக்கிழமை சித்திரைநாள் ஒளிப்பக்கப்பதினான்காம் திதியன்று இந்திர விழாவிற்குக் கொடியேறிற்று. வைகாசிப் பதினேழாம் நாள் வியாழனன்றுவரை விழா நடந்தது. பதினெட்டாம் நாள் வெள்ளியன்று கொடியிறங்கிற்று. பத்தொன்பதாம் நாள் சனியன்று கடலாட்டு. அன்றுமாலையிலேயே கோவலன் மாதவியைப் பிரிந்து தன் வீடடைந்தான். அன்றிரவிலேயே அவன் தன் மனைவியுடன் மதுரைக்குப் புறப்பட்டான். அன்று ஒளிப்பக்கம்

பதினன்காம் நாள். அவ்வாண்டில் ஆடித் திங்கள் இருபத் தைந்தாம் நாள் வெள்ளிக்கிழமை இருட்பக்க அட்டமி; அன்று பரணியும் கார்த்திகையும் இரவு ஐந்து நாழிகைக்குச் சந்தித் தன. அப்பொழுதே கண்ணகி மதுரையில் எரியூட்டினள். மதுரை யெரிந்த பதினன்காம் நாள் அதாவது ஆவணித் திங் கள் நான்காம் நாள் வியாழனன்று ("எழுநா ளிரட்டி யெல்லை சென்றபின்" சிலப். XXIII. 193.) கண்ணகி நெடுவேள் குன்றத் தடிவைத்தேறி தன் கணவனுடன் பூத்தேரூர்ந்து இந்திரனுலக மெய்தினள். இவ்விந்தையனைத்தும் நேரிற்கண்டிருந்த வேட் டுவர் சொல்லக் கேட்ட சேரன் செங்குட்டுவன் தன் தலைநக ராம் வஞ்சியிலே கோவிலெடுத்து அதில் இமயமலையிலிருந்து கொண்டு வந்த கல்லிலே கண்ணகியாளுருவத்தை யமைத்து நிலைபெறுத்தி வணங்கினன். சேரன் செங்குட்டுவன் இமயமலை சென்று திரும்பிய செய்திகள் மிகவும் முக்கியமானவையாத லால் இங்கே நன்கு ஆராய்வோம்.

கண்ணகியாளைத் தெய்வமாக எண்ணிய சேரன் செங் குட்டுவன ஓர் பெருஞ்சேனையோடு புறப்பட்டு கங்கையின் வட கரையடைந்து ஆரிய மன்னர் கனகவிசயரைவென்று தன் சேனைத் தலைவனைக் கல்கொண்டு வர இமயமலைக்கனுப்பி கங் கையைக்கடந்து அதன் தென்கரையிலே யிருந்தான். கல்வந்த வுடன் அதற்கு நீர்ப்படை செய்யப்பட்டது. அன்றுமாலை மன் னவன் மூன்றாம்பிறைச் சந்திரனைப் பார்த்தனனாக, கணி அர சனைவாழ்த்தி இன்றுநாம் வஞ்சி நீங்கி முப்பத்திரண்டு திங்கள் கழிந்தன என்றான். ("எண்ணான்கு மதியம் வஞ்சி நீங்கியதும்" சிலப். XXVII. 149.) இதனால் அவன் வளர்பிறை மூன்றாம் நாளி லேயே வஞ்சியைவிட்டுப் புறப்பட்டவனாதல் வேண்டும். இங்கே இந்த முப்பத்திரண்டு திங்களும் எவ்வாறு கழிந்தன என்பதை நன்கு ஆராயவேண்டுவது இன்றியமையாத தாகின்றது:

சேரன் சிறிதும் தாமதிக்காது வஞ்சியைவிட்டுப் புறப் பட்டானெனத் தெரிவதால் அவன் கண்ணகி விமானமூர்ந்து சென்றதிலிருந்து இருபத்தாறாம் நாள் திங்களன்று வளர்பிறைத்

திருதியையில் புறப்பட்டவனவன். அதாவது கி. பி. 144 ஆவணித்திங்கள் இருபத்தொன்பதாம் நாள். அவன் நீலகிரி யடைந்து அங்கே அரசர்களனுப்பிய திறை வாங்கி யிருந்தான்.

கொங்கணரும் கருநாடரும் வேனிற்காலத்தே வந்தனர். குடகர் மாரியில் வந்தனர். (சிலப். கால்கோட்காதை 85-175.) மாரிக்காலத் தொடக்கத்தில் அதாவது ஆவணியில் மன்னவன் நீலகிரியின் நீங்கினன். அப்போது அவன் வஞ்சி நீங்கி ஓராண்டு கழிந்தது.

செங்குட்டுவன் நட்பரசராய நூற்றுவர் கன்னருதவியால் கங்கையைக்கடந்து கனகவிசயரைப் பதினெட்டு நாழிகையில் வென்றான். ஆனால் அவன் பகைவர்களுடைய வரவை எதிர் பார்த்துப் பாசறையிலிருந்தான் எனத் தெரியவருகிறது "பகைப்புலம் புக்குப் பாசறை யிருந்த" (சிலப். XXVI.180.) இதனால் இவன் பகைப்புலம் புக்கிருந்தது ஓர்மாத மிருக்கலாம். பின் அவனுடைய சேனைத்தலைவன் இமயஞ்சென்று கற்கொண்டு கங்கைவர இரண்டு திங்களாயிருக்கும். இதிலிருந்து அவன் நீலகிரியிலிருந்து கங்கைக்கரை வரச் சென்றது பதினேழு மாதங்களாம். (32—12 + 1 + 2) வஞ்சியிலிருந்து நீலகிரிவரை யுள்ளவழி நீலகிரியிலிருந்து கங்கைக்கரை வரையுள்ள வழியில் ஐந்திலொன்று. ஆகையால் வஞ்சியிலிருந்து கங்கைக்கரை சேரச் சென்றன இருபதரை மாதங்கள் ($17+3\frac{1}{2}$) என அறியலாம். ஆதலால் கங்கையிலிருந்து வஞ்சி மீளவும் இருபதரை மாதங்களே யாயிருக்கும். சேரன் நீலகிரியிலிருந்து எட்டரை மாதங்கள் ($12+3\frac{1}{2}$) தங்கியவனவன்.

சேரன் செங்குட்டுவன் ஐம்பத்து மூன்றுவது திங்களில் வஞ்சி மீண்டனன் ($30+20\frac{1}{2}$). விரைவில் கண்ணகி கோவிலில் நிலைபெறுத்தப்பட்டாள்; அதற்கு இரண்டொருமாதங்களே சென்றனவாம். அதாவது மதுரையெரிந்து நான்காண்டுகள் கழிந்து எட்டாவது மாதத்திலே கண்ணகி பிரதிட்டை நிகழ்ந்தது. அது கி. பி. 149 பங்குனியிலாம்.

அப்போது இலங்கை வேந்தன் கயவாகு என்பான் வஞ்சியிற் கண்ணகியை வணங்கினன். ("கடல்சூ ழிலங்கைக் கயவாகு வேந்தனும்" சிலப். XXX. 160.)

இலங்கைச் சரிதங்களிற் பழமையானதாகிய தீபவம்சத்தில் கயவாகு மன்னன் புத்த நிர்வாணத்திலிருந்து 642—வது ஆண்டு முதல் 664-வது ஆண்டுவரை ஆண்டனனெனத் தெரிகிறது. புத்தநிர்வாணம் கி. மு. 493-லாம்*. இதனால் கயவாகு கி. பி. 148 முதல் கி.பி. 170 வரை [(641—663)—493] இருபத்திரண்டு ஆண்டுகள் ஆண்டவனென அறியலாம். அவன் கி. பி. 148-ல் பட்டத்திற்கு வந்து கி. பி. 149-ல் வஞ்சி வந்தவனாவன்.

இதுகாறும் ஆராய்ந்தவற்றால் மதுரை யெரியுண்டது கி. பி. 144-ல் என்பதும் கண்ணகிக்குக் கோவிலெடுத்தது கி. பி. 149-ல் என்பதும் நிலைபெறுகின்றன.

பண்டிதர், இ. மு. சுப்பிரமணியபிள்ளை.

---

# எவ்வுயிர்க்கும் அன்பாயிரு. க.

## பாளையங்கோட்டையும் எருமைக்கடா பலி விலக்கும்

இந்நகரில் ஆயிரத்தம்மன் கோயில் என்னும் ஓர் கோயில் உண்டு. சுமார் 50 வருடங்கட்கு முன் இருந்தவர்கள் சைவ மக்கட்கு உரித்தாகாத உயிர்ப்பலி இடுதலை மேற்கொண்டவர்களாய் எருமைக்கடா ஒன்று, சூல் ஆடு ஒன்று, சூல் பன்றி ஒன்று ஆகிய மூன்றையும் 12 ஆண்டுகட்கு ஓர் முறை பலியிட்டு திருப்தி யடைவாராயினர். இம்முறையில் நாளது பங்குனிமீ

---

* 'புத்த நிர்வாணகாலம்' என்ற ஆராய்ச்சியுரையும் சென்னை செனெட்டில் கூடிய அகில இந்திய கீழ்த்திசை மகாநாட்டில் ஆங்கிலத்தில் படிக்கப்பட்டது. அதன்மொழி பெயர்ப்பு விரைவில் நம் செல்வியில் வெளிவரும்.

18-ம் தேதி நான்காவது கொடை நடைபெறப் போகிறது. கால வளர்ச்சிக்கு ஏற்ப உயிர்க்கொலை கொடிது, குற்றமுடையது என்னும் உணர்ச்சி உலகில் நிலவி, அறியாமையால் உயிர்க்கொலை புரிந்தவரும், ஊன் பெருக்குதற்காக உயிர்க்கொலை புரிந்தவரும் அவற்றை நிறுத்தி நல்லொழுக்கத்தில் முற்பட்டு வருவதைக் காண்கின்றோம். கொல்லாமை முதலிய சிறந்த அற நுட்பங்களைத் தமிழுலகிற்குத் தந்தருளிய அறிஞர்களிற் சிறந்த தென்பாண்டிநாட்டில் உள்ள சீரிய சைவத் தமிழ்மக்கள் கொலை, குற்றத்திற்கு உட்பட்டு, கொலை விடுத்த குற்றமற்றவரும் தூற்றும்படியான குறைமொழிக்கு ஆளாகி நிற்பது கொடுமை கொடுமையே!

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தைச் சார்ந்த நெல்லைத் திருநெறித் தொண்டர் குழாம் கடந்த இரண்டு மூன்று மாதங்களாகக் கோபாலசமுத்திரம், நரசிங்கநல்லூர் முதலிய சுற்றுக் கிராமங்கட்குச் சென்று புலாலுண்ணும் மக்களையும் அவற்றைவிட்டு நல்லுணவு கொள்ளவும், சிறு தெய்வங்கட்குக் கொடை கொடுக்குங் காலங்களில் உயிர்ப்பலியல்லாத கொடையைக் கொடுக்கும்படியாகவும் ஆற்றுப்படுத்தி வந்திருப்பதை யறிந்த பாளையங்கோட்டை சைவசபையார் சைவ நல்லுணர்ச்சி சகமுழுதும் பரவி வருகின்ற தற்காலத்தில், சைவ மக்கள் பெருகியிருக்கும் தங்கள் நகரில் அநியாயமாகக் கொலை செய்யப்படும் எருமைக்கடா முதலியவற்றின் உயிரைக் காப்பாற்றிக் கொடை கொடுக்க முற்பட்டுள்ள சைவ மக்கட்கு அதே காலத்துத் தக்க பரிகார முறைமையையும் கற்பிக்கத்தக்க முறைகளைச் செய்து தருமாறு கேட்டுக்கொண்டதற்கு இணங்க புலாலுணவும் பலிக்கொடையும் மிக்கு விளங்கிய செட்டி நாட்டில் அவ்விரண்டும் இல்லையென்று சொல்லும்படியாகத் திருத்தொண்டு புரிந்துவரும் காரைச் சிவனடியார் திருக்கூட்டத்துச் சிவகாருணியத் திருத்தொண்டரான சைவத் திருவாளர்-அரு. சோமசுந்தரஞ் செட்டியாரவர்கள் இந்நகர்க்குச் சென்ற வாரம் வரவழைக்கப் பெற்றிருந்தார்கள். இவர்கள் ஆண்டில் இளையராயினும் அறிவிலும் சிவகாருணிய ஒழுக்கத்திலும் அறி

வுறுத்தி மக்களை ஆற்றுப்படுத்து நெறியிலும் இளையா ஆற்றல் படைத்தவர்கள்.

நாளது மார்ச்சுமீ 6, 7, 8-ம் தேதிகளில் மாலைப்பொழுதில் கோபாலசுவாமி கோயில் முன்மண்டபத்தில் கூடிய பொது ஜனப் பெருங்கூட்டத்தில் ஷ்டி செட்டியாரவர்கள் 'உயிர்ப்பலி கொடுத்தலின் கேடு', 'உண்மைத் தெய்வ வழிபாடு', 'சைவர்களின்படி நல்லொழுக்கம்' முதலியவற்றைப் பற்றிக் கேட்போர் உள்ளத்தில் நல்லுணர்ச்சியும் கிளர்ச்சியும் ஒருங்கே கிளைத்தெழும் வண்ணம் உருக்கத்துடனும் ஊக்கத்துடனும் பேசி, கொடை கொடுக்கும் வகைக்கு முற்பட்டு நின்ற சிலரையும் அதில் பின்வாங்கும்படி நல்லறிவு கொளுத்தியுள்ளார்கள். இவர்கள் பேச்சின் உண்மையை யுணர்ந்த பலர் எருமைக்கடாவைப் பலி கொடுப்பது அநியாயத்திலும் அநியாயம்; மாமூல் என்ற பைத்தியம் பிடித்திருந்தால் மனச் சாந்திக்காக வேண்டி மாவாலோ மற்ற நற்பொருளாலோ எருமைக்கடாவைப்போல் ஒன்று செய்து அம்மன் சந்நிதியில் வெட்டி, வந்திருந்த அனைவருக்கும் வழங்கி மகிழ்தல் மேலானது, பாவமற்றது, புண்ணியமுடையது என்று நாப்பறை சாற்றி நகரெங்கும் திரிந்து நரபலியொத்த இம்மிருக பலியைக் கொடாதிருக்குமாறு அக் கொடைக்கு ஆயிரம் ஆயிரமாகப் பணம் வசூலித்து வரும் அன்பர்கட்கு அறிவுறுத்தியும் வரக்கூடியவரா யுள்ளார். இவ்வொருவர் பிரசங்கம் மட்டுமா? உயிர்களிடத்து உண்மை யன்பும் அருளுமுடைய சைவ நல்லறிஞர் பலர் பிரசங்கமும் நாளும் நடைபெற ஏற்பாடாய் வருகின்றது.

'கொல்லா விரதம் குவலய மெல்லாம் ஓங்க
எல்லார்க்குஞ் சொல்லுவது என் இச்சை பராபரமே'

என்ற தாயுமானவர் திருவாக்கை யுணர்ந்து உயிர்ப்பலி நீக்கி நன்முறையில் கடவுளை வழிபட்டு இன்பமடையும்படி அருள் வடிவாகிய அவ் அம்மன் அருள் புரிவாராக.

சீவகாருணியத் தொண்டன்.

## ஸ்ரீகாழிக் கல்விக் கழகம்

மாட்சிமை பொருந்திய சென்னைமாகாண அரசியல் வளர்ச்சிப்பிரிவு
மந்திரத்தலைவர், கனம், திவான்பகதுர், திருவாளர்,
தி. நெ. சிவஞானம் பிள்ளை அவர்கள்

## நல்வரவேற்பு

திருநின்ற செம்மையாளராகிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவவதாரஞ் செய்தருளிய திருக்கழுமல வளநகர்க்குச் சென்னை அரசியல் வளர்ப்புப்பிரிவு மந்திரத்தலைவர், கனம், திருவாளர் தி. நெ. சிவஞானம் பிள்ளையவர்கள் இம்மதி உ0உ. எழுந்தருளிய காலத்து, இப்பெரியாரது தமிழகவுரிமை தமிழ் நேயம் சமயவாராய்ச்சி முதலிய பலவேதுக்களானும், இவர்களது நாட்டு முதற்பதிக்கும் இக்காழிப்பதிக்கும் தொன்று தொட்டமைந்த இயைபானும், ஆளுடையபிள்ளையார், மங்கையர்க்கரசியா ருள்ளிட்ட சைவசிகாமணிகளுறவானும் இம்மந்திரத் தலைவர் இந்நகரின்கண் தமது இளமைப் பருவத்து அரசிறைத் தலைமை வகித்து நடத்தினமையானும், சாழிக் கல்விக் கழகத்தார் இவர்களது அரசுரிமைக்கேற்ற ஆசிரியப்பாவான் இவர்களது மரபிற்கும் (அகத்-ங0-ஙங) செவ்விய உரிமைக்கும் ஏற்ற வாகைத்திணை அரசவாகை அரசமுல்லை ஆகிய துறைகளிரண்டினும் பின்னையது வெண்பா வாயினும் அப்பாவிற்கும் உரிமையுடைமைபற்றி இரண்டுபாக்கள் எழுதி வாசித்து இவர்களை நன்கு வரவேற்றனர். அவை வருவன:—

அரசவாகை (தொல்-புறத்திணை. 0கூ)

குடியோம்புதல் (இளம்)

திருமன்னு கங்கை பொருநை யாயிடைச்
செவ்விய கோலினுங் கவ்விய வானினும்
பகட்டினு மிகூஉப் பகட்டோர் வாழ்க்கை
தொன்றுமுதிர் குலத்து நன்றொடு தோன்றி
இ நெல்லையிற் சென்னையிற் கல்வியிற் கெழீஇ

யிறைத்தரை யாட்சி முறைப்பட வுஞற்றிச்
சட்டமன் றகத்துப் பெற்றி மேவிச்
சாலித் தேளத்துத் தலைமை மலிந்து
வேந்தற் குற்றுழி யாம்பொரு ளுதவி
வரிசையின் வாய்ந்து மந்திர வரிசையிற்
றோற்றம் யாவின் றோன்றற் குரியன
வாக்கம் யாவி னாமைதற் குரியன
வாங்கலைப் பாங்குற அறவழி யமையூ
வரங்க மாளிகை யதன்கண் வீற்றெங்
கழுமல வளநகர் கவின்றர வெழீஇய
சிவஞான வள்ளால் தவநெறிச் செம்மால்
ஐவகை மரபி னரசர்தம் பக்கம்
மெய்வகை யுழவினு முய்தொழி லதனினு
மாவினுங் கோவினு மாகுந வன்றியுஞ்
செந்தமிழ் வழக்கினுஞ் சிவனுவ நந்தம
ராலய விழைவினு மாகுந புகழ்சால்
சான்றவ வவையகத் தகைய மீக்கொள்
பொருளொடு புணர்ந்த புகரில் காட்கிய
நாடும் பொருளும் நன்னர்த் திகழ்ந்து
கூடுஞ் சூழ்ச்சி குறித்து
நீடுக பெரும நின்சீ ரியலே.

---

அரசமுல்லை (புறப்பொருள்-வாகை ௭.)

அளியின் மதியொத் ததுவல்ல தொவ்வா
தொளியின் விளங்க வுயர்கோல்—தெளிய
வவஞானம் நீத்திங் கவனியோர் வாழ்வார்
சிவஞானம் பிள்ளை திறத்து.

கழக அமைச்சர்.

இச்செய்யுள்கள் இன்னாரது இரும்பெருங் குணங்களையும் பேராற்றலையும் பலபடப் புகழ்ந்து கூறி, இவர்களது நல்வாழ்வினையும் நல்லற வொழுக்கத்தினையும் அரசியனீதியையும்

[illegible]த்தி, இவ்வூராலயக் கல்வெட்டுக்கள் தொடங்குமாறு 'திரு மன்னுக' எனத்தொடங்கித் 'திரு' என்னும் மங்கலமொழியாற் பொருத்தத் தானத்தில் திரு கங்கை பொருநை என்னும் மூன்று பெருந்தேவியார் நாமங்கள் வர அதனால் இவர்களது அரசியலில் நமக்குக்குக் கல்வி செல்வம் ஞானம் உண்டாகுக என விரும்புவன.

தொல்—புறத். கரு-ம் சூத்திரம் வாகையது இலக்கணங் கூறிய தற்கு உரையாசிரியர்கள் கண்டவை 'எல்லா நிலத்திலும் எல்லாக் குலத்திலும் நிகழும், தன்னோடு ஒத்தாரின் மிக்குப் புகழப் படுவது' என்பவாதலின் அந்நெறியே கூறப்புக்கு ஐவகைமரபின் அரசர் பக்கத்துச் சிறந்த குடியோம்புதல் மூன்றே மிகுத்துச் சொல்லி, உழவு வாணிகம் நிரையோம்பல அவற்றோடு கைத் தொழில் பகடுபுறந்தருதல் இவற்றைச் சேர்த்து, தொன்றுமுதிர் குலதது வேண்மான்களுக்குள்ள அரசு, இருவகை வேண்மை இவற்றின் விருத்தியைக் கருதின இச்செய்யுள்கள். ஆகலின் இம்மந்திரத் தலைவரது அரசியல் இந்நெறியே நம்மைப புரந்தருளும் எனப் பிரார்த்தித்தவாறு.

அகவல்: 1-4. இம்மந்திரத் தலைவரவர்களது பிறப்புரிமையும் நலமும் தோன்றுதற் காரணமும் தோற்றமுங் கூறியது. இவர்களது தொல்குலம் உலகுக் குயிராய், வெந்திறல் தண்ணளியெம் வேந்தாய், விடுசுடர் வேள்வியகத்து விளக்கந் தருவதாய், ஆதிவணிகர்க் கரசாய் விளங்குவது (புறப்—வெண். மாலை). இவர்கள் அந்நற்குலத்து 1861 ஆம் தோன்றியது, அராஜக காலங்களினும், மைசூர் கர்நாடக யுத்தங்களினும் நம்நாடடைந்த குறைவு இனி நமது ஆங்கில அரசாட்சியில் நீங்கி, பண்டை நலங்கள் தோன்றுதற்கே இவர்கள் தோன்றி என்றவாறு; 5. நெல்லையினும் சென்னையினும் செந்தமிழ் ஆங்கிலம் முதலிய மொழிகளைப் பலதுறைகளினும் வல்லுநராய்ப் பின்னர் ஆளுந்திறனுக் கேற்பக் கற்று; 6. 1885 முதல் 1919 ஆம் வரை அரசிறை இலாகாவில் காரியதரிசிகளாகவும் நிர்வாக அதிகாரிகளாகவும் அப்பதவிகளைச் செவ்வன நடத்தி; 7. இப்பதவிகளிற் பெற்ற

அநுபோகாநுபவங்களாற் சட்ட நிரூபண சபையில் 1919-1920 ௵ இருமுறை அங்கத்தினர்களாகி ஏற்ற முறைகளை நிர்மா ணித்து; 8. ஸ்தலசுய அரசாட்சியைத் தாங்களே நன்று நடாத்திக் காட்டத் திருநெல்வேலி ஜில்லாபோர்டில் தலைமை 1919-23 வரை வகித்து; 9. நம்மையாளும் ராஜசக்கரவர்த்திக்குப் பெரும் போரிற் பணவுதவியும் வைத்தியமரக்கல உதவியும் புரிந்து; 10. அம்மன்னர் பெருமானால் கனம் திவான்பகதூர் என்னும் சிறப்புப் பெயர் வாய்ந்து, 1923 ௵ நவம்பர்மீ௳ மந்திரத்தலைவராகி; 11-13. வளர்ப்புப்பிரிவில் வேளாண்மையை அதன்பல துறைகளி லும் நிரை பகடு ஓம்புதலிலும் நன்செய் புன்செய் தோட்டப் பயிர்ச் செய்கைகளிலும் கலாவித்துவான்களை நியமிப்பதிலும் வியவசாய ஐக்கிய நாணய சங்கங்களை ஸ்தாபித்தலிலும் வியவசாய வித்தையைக் கற்பித்தலிலும் ஜில்லா வேலைகளையும் பரிசோதனை களையும் நடத்துவிப்பதிலும் கிருஷிகர்களுக்குப் போதிப்பதிலும் விட்டில் முதலிய உற்பாதங்களை நிவிர்த்திப்பதிலும் கிருஷி சங்கியை எடுப்பிப்பதிலும் கிருஷிக சம்பந்தமான 11 வகை தேர்ச்சிகளையும் உண்டாக்குவதிலும் ஐக்கியநாணய ஏற்பாட்டை அதன் மூலம் அறிந்து பரவச் செய்து மூலதனங்களை ஆக்கிக் கொடுத்து இன்னும் விருத்தி செய்வதிலும், ஆவணக்களரியை முன்னிற்பார்க்கச் செம்மைப் படுத்துவதிலும், கைத்தொழிலை உபாயங்கள் அறிந்து, துரைத்தன வுதவிபுரிந்து, சபைசேர்த்து, கைத்தொழி லறிவைப் புகட்டி, ரசாயன சாஸ்திரிகளை நிய மித்து, நெசவு முதலிய தொழில்கள் யாவற்றையும் தொழின் முறையினும் வித்தியாசாலைகளினும் மல்குவித்தலிலும் கைத் தொழிற் சிற்பவேலைகளை அமைத்துப் போதிவித்தலிலும் ஊக்க முடையவர்களாய்க் கண்ணுங் கருத்தும் வைத்துப் பொருளாக்க வழிகளைப்பெருக்கி; 14-16. திருஞானசம்பந்தர் மதுரைக்கு எழுந்தது போல, அப்பெரியார் நெடுமாறருக்கு முன்னர்க்கூறிய இக்கழமலத்திற்குத் தாமும் எழுந்தருளி, தவமுதல்வர் சம்பந் தர் தாமுணர்ந்தார் அந்நிலையில் சிவனடியே சிந்திக்குந்திருப் பெருகு சிவஞானம் என்றற்கேற்ற சிவஞானம் பிள்ளை யென் னும் பிள்ளைத்திருநாம முடையராய்ச் சிவஞான சம்பந்தராகிய

பெரியோரே, நீராடல் முதல் சிவபூசையீறாகிய சைவவொழுக்க மமைந்த சீலரே அன்றியும் கரியமால் போலாது விஷ்ணுவின் அமிசம் பெற்றுச் செவ்விய மால் போன்றவரே; 17-21. குடிகளது பொருளாக்கம் இவ் ஐவகைப் பக்கத்துப் பேணுதற்குரிய உழவினும் தொழிலினும் நிரையினும் ஆவன, மேலும் அரசரது குடியோம்புதலினும் ஆவன, அன்றியும் செந்தமிழ் நாட்டு இருவகை வழக்கினையும் ஓர்தலும் ஆவன, இனியும் நம்மவர்கள் தேவாலய மடாலய சத்திரங்களைப் பரிபாலிக்கும் உள்ளக் கிளர்ச்சியினும் ஆவன, ஆதலின் இவையாவும் நடந்தேறும் வண்ணம் தேவரீர் திருவுளங்கொண்டு, (அருளுவீராக); 21-26. புகழ்சால்...இயலே—பகட்டினும் ஆவினும் துகள்தபு சிறப்பின் சான்றோரே, குடிப்பிறப்பு முதல் எட்டுவகைநுதலிய அவையகத்தகையீரே, 'தள்ளா விளையுளும்' என்ற திருக்குறளிற் கண்ட அரசர் பொருளும் குடிகளுடைய பொருளும் ஆக்குவதில் பொருளாகிய நாமும் பொருளும் புரந்தருளுவது தேவரீரது முதன்மையாதலின் 'வன்கண்' என்ற திருக்குறளிற் கண்ட 'கற்றறிதல்' எங்கட்குச் செய்வன செய்தலும் தவிர்வன ஒழித்தலும் அமைச்சியலில் தாங்கள் எங்கள் பொருளாக்கத்திற் கேற்பன செய்து பொருளொடு புணர்ந்த புகரில் காட்சியராகி, ஆலோசனை சபையில் சூழ்ச்சியோடு புகன்று தேவரீரது மகாஜனங்களைக் காத்து அருளும் இயல் நீடுக. அரசமுல்லை. இனி மன்னர்க்கு ஆக்கங் கருதுவதும் குடிகட்கு ஆக்கங் கருதுவதும் இருவர்க்கு மாறுபாடு உண்டாகா வண்ணம் காத்தலும், அமைச்சியலைப் பொறுத்த அரசியலாகலின், தேவரீரது இயல்புமிகுதி யாவது அளியினும் நன்கு மதிப்பாகிய ஒளியினும் சிறந்து நச்சினார்க்கினியர் உரைத்தவாறு 'திறத்து' இங்கு தேவரீரது அரசியல் திறத்து நமது மன்னர் ஆக்கமும் குடிகளது ஆக்கமும் சைவாபிமானமும் பெருகி ஓங்குக எனப் பிரார்த்தித்தவாறு.

ப. அ. முத்துத்தாண்டவராயன்.

---

# குட்டிக் குறள்

## சிறுமறை

(௯௬-ம் பக்கத் தொடர்ச்சி.)

### ௨௬. புலால்.

பிறிதூ னுண்பா னருளா ளானே.
போற்றார் பொருள்போ லாற்றார்க் கருளே.
புலைமன மென்றும் நலம்நினை யாது.
அருளல்ல கோறல் பொருளல்ல புலையே.
புலவுணி னுயிரே? உமிழ்கல தளறே.
கொள்வோ ரிலையேற் கொல்வோ ரிலையே.
புண்ணு வுணர்வா ருண்ணு ரூனே.
செயிர்தீ ரறிவா ருயிரூன் கருதார்.
ஓருயி ரவியா ஞுயிர மவியான்.
கொலைபுலை யொழிவோ னுலகெலாந் தொழுவோன்.

### ௨௭. தவம்.

தவத்துரு நோய்ப்பொறை தண்ணரு ளுடைமை
தவந்தவ முடையார்க் கவமஃ திலர்க்கே.
துறந்தவர்க் குதவத் தவமறப் பதுகொல்?
ஆக்கலுந் தெறலு நோக்கிற் றவந்தரும்.
வேண்டுவ பெறலா னீண்டுறுந் தவமே.
தவஞ்செயி னுயர்வா ரவஞ்செயி னயர்வார்.
துன்பற நோற்போர் பொன்பெறு மொளியர்.
தன்னுயிர் பெறினே மன்னுயிர் போற்றும்.
நோற்றிடு மாற்றல் கூற்றையே மாற்றும்.
இலர்பலர் நோற்போர் சிலர்பலர் நோலார்.

### ௨௮. இழுக்கம்.

வஞ்சக வொழுக்கை நெஞ்சக நகுமே.
அறிவறு மொழுக்கிற் பெருநிலை யெதற்கு.
புலியதட் பசுமேய் விழிகுணன் பெருமை.

தவமறை யிழுக்குப் புதன்மறை சழக்கு.
உஎ௫. அற்றூரி விழுக்க மெற்றெற்றென் றடுமே.
உட்டுறவா வஞ்சர் கெட்டவர்ஓ! கொடியர்.
வெளிசேர்ந்துட் கருத்து நலிவாரு முடைத்து.
அகத்தூய்மை யின்றிப் புறத்தூய்மை நன்றே.
அம்புநேர் யாழ்கோ டாய்வினை யறிய.
உஅ௰. மழித்தலு நீட்டலும் பழிப்பொழிக் காவே.

## உகூ. களவு.

எள்ளாமை வேண்டிற் கள்ளாதி நெஞ்சு.
கள்ளவிற் பிறிதொன் றுள்ளலே தீது.
களவினுங் காத றருந்தவா நோதல்.
ஆவபோற் களவான் மேவிய கெடுமே.
உஅ௫. அறனருள் கருதார் பிறர்பொருள் கவர்வர்.
பொருள்கவர் கள்வர் நெறியொழு கல்லார்.
களவிரு ளாண்மை உளநலத் தார்க்கில்.
அறிஞருக் கறம்போற் கரவவர்க் குறுமே.
கள்ளமே யறிவா ரல்லலா லழிவர்.
உகூ௰. கள்ளரையூன் றள்ளுந் நல்லரைவான் றள்ளா.

## ௩௰. வாய்மை.

யாதினுந் தீமை தீருரை வாய்மை.
மெய்ந்நலந் தருமேற் பொய்யும்வாய் மையே.
நெஞ்சறி பொய்மை வஞ்சரிற் கோறும்.
உளந்தவறு துலகோ ருளந்தவறு துளனே.
உகூ௫. மனவாய்மை கூறிற் றவந்தான மீறும்.
எய்துபல வறமு மிசைவாய்மை தருமே.
பொய்யாமை யாற்றிற் செய்யாமை யறனே.
புறம்நீராற் றூய தகம்வாய்மை யானே.
சான்றவர் விளக்க மான்றவாய் மையே.
௩௱. வாய்மையிற் றூய யாமெய்யாக் காணேம்.

### ௩௧. வெகுளி.

சினங்காப்பிற் றினமு மினங்காக்க வேண்டா.
அல்லிடத்துந் தீதேற் செல்லிடத்துச் சினமே?
மறத்தல் சினந்தீய பிறத்தலத னானே.
நகையுவகை தீர்க்கும் பகைசினமே யார்க்கும்.
௩௱௫. தனைக்காத்தல் வேண்டிற் சினங்காத்த னன்று.
சேர்ந்தாரைக் கொல்லிசினம் இனமுஞ் சுடுமே.
சினமுவந்த வெய்யன் நிலமறைந்த கையன்.
எரிதோய்வின் னலினுஞ் சினவாமை நன்று.
நினைந்தனபே றியாவுஞ் சினந்தறியான் மேவும்
இறந்தாரே முனிநர் துறந்தாரே முனிவர்.

(தொடரும்)

சுகவனம்-சிவப்பிரகாசன்.

---

## நன்றி கூறல்

நன்றி கூறல் இயற்கையானது. நாம் ஒருவரிடமிருந்து நன்மையை அல்லது உதவியைப் பெறுகின்றபொழுது அதன் நிமித்தம் அவரிடத்தில் நன்றியறிதல் உள்ளவர்களாய் இருக்க வேண்டுமென்று மற்றொருவர் அறிவுறுத்த வேண்டியதில்லை. நன்றியறியாமை எல்லாச் சமதாயத்தாராலும் இகழப்படுகிறது. மக்களிடம் நன்றியறித லுள்ளவர்களா யிருப்பது இயல்பாயினும் கடவுளிடத்தில் நன்றியறிதலுள்ளவர்களாய் இருக்க வேண்டும் என்னு முணர்ச்சி மிகுந்த முயற்சியின்பேரில் ஊட்டப்படுவதாம். ஆன்மாக்களுக்குக் கடவுளைப்போல் பெரு நன்றி செய்யக்கூடியவர் யார்? கடவுள் ஒவ்வொரு கணமும் தமது எல்லையற்ற நலத்தை வெளிப்படுத்தி அளவிறந்த அருளை இம்மையிலும் மறுமையிலும் ஆன்மாவுக்கு அளிப்பவராகிறார். அவர் நமக்கு உயிர்தந்துள்ளார். உணர்வளித்துள்ளார். நாடோறும் உயிரையும் உணர்வையும் புதுப்பித்தவண்ணமா யுள்ளார். அவர் உடலைவளர்த்து உள்ளத்தை வளப்படுத்துகிறார். அகில

அண்டங்களின் பேராசிரியர் அவரே. காலையில் நம்மைப் புதுப் பித்து உயிருடன் விளங்கச் செய்பவர் யாவர்? நம்மில் நம்பிக்கை தளரும் காலத்தில் அதனை நிலைப்படுத்துகின்றவர் யாவர்? இருட்டில் வழிகாட்டியாகி நம்முள் நம்பிக்கை விளக்கைச் சேர்த்து விளக்குபவர் யாவர்? கடவுளே நமக்கு ஆறும் (வழியும்) அடை பொருளும் ஆவர். இத்தகைய முடிவற்ற பெரும் நன்றிக்கு நாம் எத்துணை நன்யறிதற் கடப்பாடுடையவர்களா யிருத்தல் வேண்டும். இதனை மறந்திருப்பவரிடத்தில் ஏதாவது ஓர் கெடுதியிருக்க வேண்டும். அல்லது அவர் இருதயம் நிதானமான நிலையில் இல்லையென்றே சொல்லவேண்டும். இப்படிப்பட்ட மறதி நோய்க்கு ஏற்ற பரிகாரங்க ளென்னவென்று சிந்திப்போம்.

நன்றிகூறல் அவசியமில்லை யென்பார் சிலர். இத்தகையோர், கடவுள் அருட்கடல்: தமது அருளுக்கு ஆளாகின்றவர்கள் தங்கள் பேற்றுக்கீடாக நன்றி கூறுதல் வேண்டுமென்று கருதுபவரல்லர் என்று வாதிக்கிறார். இது போலி வாதமே. வேண்டாமென்பவர், கடவுள் நம்மை நன்றி கூர்ந்திருக்கும்படி கேட்பதில்லை. அவர்காட்டிய கருணைத்திறத்தைப் பாராட்டி 'நாமே அங்ஙனம் செய்கின்றவர் ஆகின்றோம்' என்பதைத் தாம் மறந்துவிடுகின்றார். கடவுள் மாறுதலில்லாதவர். அவர் அன்பு ஊறும் பேரூற்று. இவ்வூற்று பாவியாலும் பரிசுத்தனாலும் வேற்றுமையின்றி ஒருங்கே அடையப் பெறுவது. பாவி எவனாவது ஆற்றை அடைந்ததும் அவ்வாற்றின் நீர் வற்றிச்சுருங்கியா போகின்றது? அன்பாகின்ற தெய்வ மாநதி எக்காலமும் இடையறாது பெருகிப் பாய்ந்துகொண்டே யிருக்கின்றது. இந்த ஆற்றின் இனிமையை நுகரவிரும்புவோர் இதனை மிகச் சமீபமாக நெருங்க வேண்டும். நன்றிகெட்ட உள்ளம் அன்பினாற்றலை எங்ஙனம் உணரும்? மனித அன்பு அல்லது பற்றைச் சிறிது பாகுபடுத்திப் பார்ப்பின் பெரும்பாகம் நன்றி யறிவாகவே காணப்படும். நன்றிகெட்ட உள்ளம் அன்பின் சுவையை உணர்ந்து அநுபவிக்குமென்பது சந்தேகமே. தெய்வபக்தி விஷயமும் இப்படியே. கடவுள் பக்தியின் இனிமை, உணர்ச்சி, அழகு யாவும் நன்றியறிவுள்ள ஞானியாலேயே நன்கு மதிக்கப் பெறுபவை.

நாம் நம் இருதய வேதபுத்தகத்தைக் கற்பதே இதற்கு முக்கிய பரிகாரம். கடவுள், அடையாளங்கள் ஒன்றுமுறுதபடி நம்மிடம் பழகுபவரல்லர். சிறிது கூர்ந்துபார்க்கின் கடவுளின் அற்புத எழுத்தை நமது கண்கள் பிரமிப்புடன் பார்த்துணரும். பக்திக் கண்ணுக்கு அவ்வெழுத்து சூரிய நட்சத்திர சாயா ரூபங்கள்போலத் தெளிவாகவும் விளக்கமாகவும் தோன்றும். நம்பிக்கையற்ற மக்கள் தெளிந்துகொள்ளும்படி அவ்வித எழுத்துக்கள் அமைக்கப்பட்டிருப்பது கடவுளின் நல்லெண்ணத்தைக் காட்டுவதன்றோ? மனிதர் உள்ளக் கமலத்தில் அவற்றைக் கடவுள் பொறியாதிருப்பின் அவற்றை நம்புவார் யார்? கடவுள் நம் இருதய புத்தகத்தில் அவற்றை யமைத்திருக்கின்றார் என்ற உண்மை நாம் நன்னெறியில் இருப்போமாகில் நம்மைப் பேரானந்தமடையச் செய்வதாம். சிரத்தையுள்ள பக்திமானின் கடமை யாதெனின் தனது உள நூலை இடையறாது ஓதி உணர்வதே. அவன் அங்குமிங்குமாக ஏனோதானோ என்று வாசியாமல் தத்துவ சாஸ்திரத்தைப் படிக்கிறவனைப்போல் படிக்கவேண்டும். தன் இருதய வளர்ச்சியின் வரலாற்றை வாசித்தறியவேண்டும். அவன் வாழ்க்கையில் கடவுள் அவனுக்குக் குறிப்பிட்டுள்ள வடிவத்தை இடையறாது தியானிப்பவனாகவே இருப்பின் கடவுளுடைய கருணையை மறத்தலாகிய தீமை யொருபொழுதும் ஏற்பட மாட்டாது.

"குறுமுடியான்."

---

## மதிப்புரை

**தோத்திரத்திரட்டு.** இப்பெயர் புனைந்த நூலொன்று இரங்கூன் நகரத்தவர்களால் வெளியிடப் பட்டிருக்கிறது. இந்நூலில் தேவாரம் முதலிய பன்னிரு திருமுறைகளிலிருந்து சில பதிகங்களும், திருப்புகழ், கந்தரநுபூதி, திருவருணைக் கலம்பகம், சிதம்பரக் கோவை முதலிய நூல்களிலிருந்து சில பாடல்களும், நால்வர்மேல் பாடிய புகழ்ப்பாக்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இவ்வித நூல்களை மணிபோன்ற எழுத்தில் உயர்ந்ததாளில் பதித்து, கண்கவர் கட்டடமுஞ்செய்து, குறைந்த விலைக்குக் கொடுப்பார்களாகில் தமிழுலகம் அவர்கட்கு மிகவுங் கடமைப் பட்ட

ற்றாகவிருக்கும். இதன் விலை ரூ. 1. தனைவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கம், நெ. 86, 29-ம் வீதி, இரங்கூன் என்ற விலாசத்துக்கு எழுதினால் இந்நூல் கிடைக்கும்.

**சோதிடப் போகாதி.** இவ்வகராதி சோதிட சாஸ்திரி எஸ். கூடலிங்கம் பிள்ளையவர்களால் வெளியிடப் பட்டது, இக்காலத்தில் சோதிடத்தை அறியாததினாலேயே பெரும் பாலார்க்கு சோதிடத்தில் நம்பிக்கையில்லாமற் போய்விட்டது. இந்நூலை வெளியிட்டவர்கள் சோதிடத்தில் வல்லவர்களென்றும், சோதிடத்திற்காக மிகப்பாடுபடுகின்றவர்களென்றுங் கூறுவது மிகையாகாது. இவ்வுண்மை தமிழ் நாடு அறிந்ததேயாம். சோதிடத்தில் வரும் பழக்கமில்லாச் சொற்களையும் மறைபொருளாக வழங்கிவரும் சொற்களையும் யாவரும் தாமே எளிதில் அறிந்துகொள்ளுமாறு இந்நூல் வெளியிடப்பட்டது. இந்நூலைத் தமிழ் நாடு ஏற்றுக்கொண்டு, இந்நூலாசிரியரை இன்னும் பலவகையான சோதிடநூல்களை வெளிப்படுத்துமாறு ஊக்கங் கொடுக்குமென்று நம்புகிறோம். இதன் விலை ரூ 2-4-0. வேண்டுவோர் சோதிட சாஸ்திரி எஸ். கூடலிங்கம் பிள்ளை, புத்தகசாலை, மதுரை, என்றெழுதினாற் பெற்றுக் கொள்ளலாம்.

**குறள் நானூறு:** இது திரு. அ. மாதவையா அவர்களால் பதிப்பிக்கப் பட்டது. நானூறு குறள்கள் திருக்குறளிலிருந்து பல பெரியோர்களால் பொறுக்கப்பட்டு ஒன்று சேர்க்கப்பட்டவை. யாவரும் எளிதில் உணருமாறு இவைகட்கு எளியநடையில் கருத்துரையும், அருஞ்சொற்களுக்கு உரையும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. தற்கால நாகரீக முறைக்கு ஏற்றபடி சிறிது தமிழும், பெரிது ஆங்கிலமும் பயின்றவரும் திருக்குறளின் கருத்துக்களை யுணர்ந்து கொள்ளுமாறு ஆங்கிலத்தில் அவ்வச் செய்யுட்களின் கருத்துக்கள் சேர்க்கப் பட்டிருக்கின்றன.

**சைவத்தின் சமரசம்:** இது நவசத்திப்பத்திராசிரியராய திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் எழுதியது. இவர்களுடைய சமய அறிவினையும், தமிழறிவினையும், இவர்கள் எழுதும் எளிய இனிய தமிழ் நடையினையும் தமிழுலகில் அறியாதாரிலர். ஆகலான் இவர்கள் எழுதும் ஒவ்வொரு புத்தகமும் தமிழ்மக்களுக்கு இன்றியமையாது வேண்டற் பாலதாம். விலை அணா 8.

கிடைக்குமிடம்:— முருகவேள் புத்தக சாலை,
இராயபேட்டை, சென்னை.

---

Printed by Sivakami Vilasam Press, Published by V. Subbiah
for The S. I. S. S. W. P. Society, Ld., Madras.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள்தோறும் வெளிவருவது


| | | |
|---|---|---|
| சிலம்பு ௧ | மெய்கண்டான் ஆண்டு-௭௱௨ பங்குனித் திங்கள் 1925ஸு மார்ச்சுமீ—ஏப்ரல்மீ | பரல் ௧ |


வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## இறையனார் அகப்பொருள்

[கா. சுப்பிரமணிய பிள்ளை, M A., M.L.]

இந்நூல் திருவாலவாயில் வீற்றிராநின்ற சிவபெருமான் அருளிய அகப்பொருள் நூல் என்று கூறப்படும். இறையனார் என்னுஞ் சொல், எங்கும் நிறைந்த பரம்பொருள் என்னுங் கருத்திலே சிவபெருமானைக் குறிப்பதாயிற்று. அது தங்குதல் என்னும் பொருளுடைய இறு என்னும் பகுதியடியாய்ப் பிறந்ததென்று சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார் மொழிந்துள்ளார். கடைச் சங்கத்துப் புலவர் இறையோன், இறைவன் என்ற சொற்களைச் சிவபிரானையே சுட்டுவதற்கு வழங்கி வந்தனர்.

அகப்பொருளாவது மாந்தரது உள்ளத்தே நிகழ்வது. பண்டைத் தமிழறிஞர் மக்களுடைய உள்ளமு முயிரும் சார்ந்துள்ளவற்றை அகப்பொருளென்றும், உடலும் உலகமும் பற்றி நிகழ்வனவற்றைப் புறப்பொருள் என்றும் வகுத்துணர்ந்தனர். உள்ளத்தில் நிகழ்வனவற்றை அறிவின் பகுதி யெனவும், (Intel-lectual) உணர்வின் பகுதியெனவும் (Emtional) ஆயப்படும். அவற்றுள் முன்னையது உயிர்க்கு உணவினைக் காட்டும் விளக்குப் போல்வது; பின்னையது அவ்வுணவின் சுவைபோல்வது. உணர்ச்சியானது அறிவினும நுட்பமானதால் அதனை அறிவினுஞ் சிறந்த அகப்பொருள் என்ப.

அவ்வுணர்ச்சிதானும் பலவகைப்படும். அப்பலவகை உணர்ச்சிகளுள்ளும் சிறந்தனவாய்ப் புறத்தே தோன்றும் செயல்களால் எளிதிற் பிறர் அறியக் கூடியனவாய் உள்ளன சில. அவையாவன:—

௧. நகை (=சிரிப்பு), ௨. அழுகை, ௩. இழிவரல் (=தாழுதல், தாழ்மை யுணர்தல்), ௪. மருட்கை (=மயங்குதல், வியப்பு), ௫. அச்சம், ௬. பெருமிதம் (=உயர்தல், தன் உயர்வுணர்த்தல்), ௭. வெகுளி (=சினம், வெறுப்பு), ௮. உவகை (=விரும்புதல்).

என்னும் எண்வகைச் செயற் குறிப்பிற்கும் ஊற்றாய் நின்ற உணர்ச்சிகளே. கூறியபொருள் அமைப்பும், அழகிய சொல் நயமும் அமைந்துள்ள தமது இனிய பாட்டுக்கள் வாயிலாக நல்லிசைப்புலவர்கள் நமது உள்ளத்தே இந்த எட்டுவகை உணர்ச்சிகளையும் அவற்றின் சார்பாய உணர்ச்சிகளையும் எழுப்பிய காலை, அவை எண்வகைச் சுவையெனப் பெயர்பெறும். அவ்வெண்சுவைகளுள் ஒன்றனையாவது எழுப்பாத பாட்டினை நல்லோர் பாநய மற்றதென ஒதுக்குவர்.

இந்த எண்வகை உணர்வினுள்ளும் மிகச் சிறந்தது யாதெனில், உவகைச்செயலுக்கு முதலாகிய அன்பு என்பதே. அஃதே எல்லா உயிர்களையும் ஒன்றோடொன்று இசைவிப்பதிலும் அவ்வுயிர்கள் யாவற்றையும் முதல்வனோடு இணக்கஞ்செய்வ

திலும் இணையற்ற பெருமை வாய்ந்த தாகலின், அதனையே அகப்பொருள்களுட் சிறந்த அகப்பொருள் என்ப.

அந்த அன்புதானும் கடவுட்கும் உயிர்க்கும் உளதாய தொடர்பெனவும், உயிர்கள் இறைவன்பாற் செலுத்தும் உள்ள நிகழ்ச்சி யெனவும், மனிதருள் ஒருவர் பிறிதொருவர்பால் பெறும் நண்பெனவும், ஒருவனோடு ஒருத்தியிடை நிகழுங்காதல் எனவும் பலவகைப்பட்டு நிற்கும். இவற்றுள் காதல்வடிவான அன்பானது இந்த உலகத்திலே மக்களாய்ப் பிறந்தோர் உடலும் உள்ளமும் ஒருங்கே நிரம்பிய இன்பம் எய்துவதற்கு அடிப்படையாய்ப் பலபிறப்புக்களிலே வளர்ந்தும், மறைந்தும், வெளிப்பட்டும் நிலவும்.

உருவிலும் திருவிலும் குலத்திலும் நலத்திலும் அறிவிலும் அவாவிலும செறிவு மிக்க தலைவனும் தலைவியும் தனியிடத்திலே வேட்கை வயத்தராய் எதிர்ப்பட்டுக் கூடுதலாகிய இன்ப வாழ்க்கையிலே நிகழும் அன்பானது புறத்தார்க்கு எளிதாக வெளிப்படாது நிற்றலால், அதனையே யாவற்றுள்ளும் சிறந்த அகப்பொருள் என்ப.

இதுவரை கூறியதனாற் பெற்ற பொருள் யாதெனில், அறிவினும் உணர்ச்சி சிறந்த அகப்பொருள்; உணர்ச்சிகள் பலவற்றுள்ளும் சிறந்த எட்டுவகை யுணர்வு, உணர்ச்சியுட் சிறந்த அகப்பொருள், அந்த எண்வகையுள்ளும் சிறந்த அகப்பொருள் அன்பு; அந்த அன்பின் பலவகையுள்ளும் சிறந்த அகப்பொருள் காதலாகிய அன்பு என்பதே. இந்த அன்பால் விளைவது நிரம்பிய சிற்றின்பமே.

இனி இந்த அன்பு தலைவனுக்கும் தலைவிக்கும் நிகழ்வதொப்ப, கடவுளிற்கும் உயிர்க்கும் நிகழ்வதனால் எழுகின்ற இன்பம் எக்காலத்தும் நிலை பெற்றதாய் அறிவுவடிவாய உயிர்க்குப்பெரிதும் இயைபுடையதாய் இருத்தலின், அதனைப் பேரின்பமென்பர். அத்தன்மைத் தாய பேரின்பத்திற்குக காரணமாகிய அன்பே மெய்ம்மையான அகப்பொருளெனப்படும்.

தலைவனுக்கும் தலைவிக்கும் உள்ள அன்பு காரணமாக நிகழும் ஒழுக்கமானது, மணத்திற்கு முன் நிகழுங்காலைக் களவு எனவும் அதற்குப்பின் நிகழுங்காலைக் கற்பெனவும் பெயர் பெறும். அந்த இருதிற வாழ்க்கையினையும் நானூற்றிற்கு மேற்பட்ட பல துறைகளாகப் பகுத்து எண்சுவையும் பத்தழகும் பொருந்தும் வண்ணம் தொகுத்தும் விரித்தும் அணிபெறக் கூறும் பாட்டு அகப்பொருட் பாட்டாகும். அது கோவை முதலிய தொடர்நிலையுட் சிறப்பாகவரும். அகப்பொருட்பாட்டின் அமைப்பும் பொருளும் இன்னவகையாக இருத்தல் வேண்டுமென்று கூறும்நூல் அகப்பொருள் இலக்கணம் என்று பெயர் பெறும். இறையனார் அகப்பொருள் என்பது அவ் அகப்பொருள் இயல்நூலுள் சிறந்த ஒன்று. இது மிகவும் சுருங்கிய தொகைநூலாக விளங்குகின்றது.

மேற்கூறிய அகப்பொருட் பாட்டின் துறைகளை உண்மை நூற்கருத்துக்களை அழகு மிகவும் மறைவாகவும் உருவகவாயிலாக உணர்த்துவான் பயன்படுத்துவதை பேரறிவாளராய மணிவாசகப் பெருமான் இயற்றியருளிய திருச்சிற்றம்பலக் கோவையாரிலே விரிவாகக் காணலாம். அது நானூறு பாக்கள் கொண்டது. அதனை வேதாந்த ஞானமுடையார் வேதாந்தமுடிவு கூறும் நூலென்றும், சிவயோக சிவஞானமுடையார் ஆகமங்களின் மூலமென்றும், காமுகர் காம நன்னூலென்றும், வழக்கு நூல்வல்லார் சிறந்த தருக்க நலமிக்கதென்றும், செய்யுள்வல்ல புலவர்கள் சிறந்த பாநலமிக்க பனுவலென்றுங் கூறுவரென ஒருவர் சிறப்புப்பாயிரங் கூறியுள்ளார். அது வருமாறு:—

“ஆரணங்காணென்பரந்தணர்யோகியராகமத்தின்
காரணங்காணென்பர்காமுகர்காமநன்னூலதென்பர்
ஏரணங்காணென்பரெண்ணரெழுத்தென்பரின்புலவோர்
சீரணங்காயசிற்றம்பலக்கோவையைச்செப்பிடினே.”

நமது திருஞான சம்பந்தப்பெருமான் திருவாய் மலர்ந்தருளிய முதற்றிருப்பதிகத்திலே சிவபெருமானை ‘உள்ளங்கவர்

கள்வன்' என்றனர். தம்மைத் தலைவியாகக் கூறியது 'இறை கலந்த இனவெள்வளை சோர என்உள்ளங் கவர்கள்வன்' என்ற அடியிற் காண்க. (கைவரிகள் சேர்ந்த வெள்ளிய வளையல் நழுவும் வண்ணம் எனது உள்ளத்தைக் கவர்ந்த கள்வன்.)

இன்னும் இவர் அருளிச்செய்த கிளிப்பாட்டு, வண்டுவிடு தூது இவைகள் அடங்கிய தேவாரப் பதிகம் மிகவும் நயமாக இருக்கும். உதாரணம் :

" சிறையாரு மடக்கிளியே யிங்கேவா தேனொடுபால்
முறையாலே உணத்தருவன் மொய்பவளத் தொடுதரளம்
துறையாருங் கடற்றோணி புரத்தீசன் றுளங்குமிளம்
பிறையாளன் திருநாம மெனக்கொருகாற் பேசாயே.

வண்டரங்கப் புனற்கமல மதுமாந்திப் பெடையினோடும்
ஒண்டரங்க இசைபாடும் அளியரசே யொளிர்மதியத்
துண்டரங்கப் பூண்மார்பர் திருத்தோணி புரத்துறையும்
பண்டரங்கர்க் கென்னிலைமை பரிந்தொருகாற் பகராயே."

இவ்வாறே திருநாவுக்கரச சுவாமிகளும் (அப்பர் சுவாமிகள்) குயிலினங்களை விளித்துள்ளார்:

" சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே
பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்
முன்மாலை நகுதிங்கள் முகிழ்விளங்கு முடிச்சென்னிப்
பொன்மாலை மார்பனென் புதுநலமுண் டிகழ்வானோ."

இங்ஙனமே, ஆழ்வார்களுட் சிறந்த நம்மாழ்வாரும் ஆண்டாளும் அகப்பொருட் துறைகளை மிகுதியும் எடுத்தாண்டுள்ளார். இங்ஙனம் தத்துவக்கருத்துக்க ளமைவுறக் கூறிய அகப்பொருட் செய்யுள்கள் தமிழிலே எண்ணிறந்தன. அவை விரிப்பிற் பெருகும்.

இனி, அகப்பொருளுக்குச் சார்பாகிய நிலம், பொழுது, கருப்பொருள் முதலிய புறப்பொருளின் றன்மையைச் சுருங்கக் கூறிப் பின் எடுத்துக் கொண்ட நூலி னியல்பினை யாராய்வாம்.

(தொடரும்)

# தொகைநூல் வரலாறு*

[மயிலை. சீனி. கோவிந்தராசனார்]

க. தமிழகத்திலே நமது தந்தையாராகிய தமிழர், ஆரியர் கலப்பு அவ்வளவு இல்லாமல் தழைத்து வாழ்ந்திருந்த காலம் ஒன்றுண்டு. அக்காலம் இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டு களுக்குமுன்னே என்பர் சிலர்; அதற்கு மேலும் என்பார் சிலர். அஃது எப்படியாயினும் ஆகட்டும். அந்த வழக்கு நமக்கு வேண் டாம். அந்த அடி நாளிலே இத்தமிழகமானது வடக்கே வேங் கடவரையும், தெற்கே குமரியாறும், கிழக்கிலும் மேற்கிலும் கடலுமாகிய எல்லைக்குட்பட்டு, கடலரண் கல்லரண் காட்டரண் முதலிய எல்லாக் காப்பையும் பெற்றிருந்தது. குறிஞ்சி நெய் தல் பாலை முல்லை மருதம் என ஐவகை நிலமாகவும், ஒளி முத லிய பல நாடுகளாகவும் பிரிக்கப்பட்டிருந்தது.

உ. மலையும் அதுசார்ந்த இடமும் குறிஞ்சி; கடலும் அது சார்ந்த இடமும் நெய்தல்; மணலும் அதுசார்ந்த இடமும் பாலை; காடும் அதுசார்ந்த இடமும் முல்லை; வயலும் அதுசார்ந்த இட மும் மருதம். குறிஞ்சி முதலான பெயர்கள் அந்தந்த நிலத்திலே மிகுதியாகக் காணப்பட்ட பூபற்றியே இடப்பட்டன. நிலந் தோறும் மாவும் மரனும் பூவும் புள்ளும் உணவும் உடையும் யாவும் வெவ்வேறு; மக்களும் வேறு. அவர் தொழிலும் வேறு.

குறிஞ்சியிலே தினைவிளைத்தும், தேன் அழித்தும் குறவரும்; நெய்தலிலே மீன் பிடித்தும், உணங்கலும் உப்பும் விற்றும் பரத ரும்; பாலையிலே மாடு கவர்ந்தும், கொள்ளையடித்தும் மறவரும்; முல்லையிலே வரகு விளைத்தும், ஆடுமாடுமேய்த்தும் ஆயரும்; மருதத்திலே நெல் விதைத்து அரிந்தும், கடாவிட்டும் உழவரும் வாழ்ந்திருந்தார்கள். குறவர் பரதர் மறவர் ஆயர் உழவர் என் னும் பெயர்கள் அவரவர் வாழ்ந்த இடவகையாலும், செய்த தொழில் வகையாலும் அவருக்கு வந்தன; இக்காலத்திலுள்ள

* இது கலாசிந்தாமணியினின்றும் எடுக்கப்பட்டது.

நூற்றுக்கணக்கான சாதிபேதம் அவரிடம் இருந்ததில்லை. எல்லா நிலத்துமக்களும் உடன்பிறந்தார் போல ஒற்றுமை மிகுந்து, நீரும் நிழலும்போல் இனியராய் அளவளாவி வாழ்ந்தனர்.

௩. அவர் குன்றுவளமும் பொன்றுநாளும் வாய்ந்திருந்தார். துன்பம் துயரம் துக்கம் இன்மை இரவு ஏழ்மை என்பவற்றை அவர் அறியார். காதலும் களிப்புமே அவர்களுக்குப் போதுபோக்காயின. சிறுவர் சிறுதேர் உருட்டியும் சிறுபறை அறைந்தும் ஆடுவர். சிறுமியர் சிற்றில் இழைத்தும் அம்புலி அழைத்தும் ஆடுவர். இளைஞர் மாவேட்டையாடியும் மற்போர் புரிந்தும் சேவற்சிவல்வென்றியில் செருக்கியும் களிப்பர். இளையர் சோலைமேவியும் சுனைநீராடியும் குன்றெதிர் கூவியும் குயிலெதிர்கூவியும் மலர்பறித்தும் மாலைதொடுத்தும் ஊசலாடியும் உடல்வருந்துவர். ஆடவரும் மகளிரும் தந்தம் மனத்திற்கினியாரையும் அன்பிற்குரியாரையும் மருவிமணந்து கொள்வார். ஒருவர் அடிப்பவும் கொடுப்பவும் இருந்து மணக்கின்ற வழக்கம் அந்நாளில் அரிதாயிருந்தது. பெற்றோர்க்கு விருப்பமான பெண்ணைத் தம் பிள்ளைக்குக் கட்டிவைப்பது பிற்காலத்திலே வழக்கம்!

௪. இவ்வாறு மனம்பொருந்தி புணர்ந்துகொண்ட காதலர், தமது ஒழுக்கத்தை அயலார் அறியாமலே சிலகாலம் செலுத்துவர். அப்பொழுது அவர் எதிர்பாராத இடையீடு ஏதேனும் உண்டாகி, ஒருவரை ஒருவர் எதிர்ப்படாத நாளும் வருமன்றே! அந்நாளிலே அவ்விருவரும் தந்தம் இடத்திலே தனியே இருந்து, மனம்வருந்தி முகம் வாடுவரன்றே? அவ்வருத்தமும் வாட்டமும்தீர, அவர் ஒரு முறை வாய்விட்டு அரற்றுவர். ஏனென்றால் இன்பமோ துன்பமோ ஒருவருக்கு எல்லைகடந்து வளர்ந்த பொழுது, வாய்விட்டு அழைப்பது உலகத்து வழக்கம்! அவ்வாறு அரற்றியதை அவருக்குப் பாங்காயினர்—உயிர்த்தோழனும் உயிர்தோழியும்—கேட்பார். அல்லது, அத்தோழனும் தோழியும் அக்காதலர் முகவாட்டத்தைத் தாமே அறிந்து காரணம் வினவுவர். அல்லது, 'நமது மன வருத்

தத்தை மாற்றவல்லவர் இவரே' என்று துணிந்து அக்காதலர் தாமே, தம் தோழருக்குத் தெரிவித்துத், தாமுற்ற இடையூறு தவிர்த்துக் கொள்வார்.

ரு. இவ்வாறு அக்காதலர் ஒழுக்கம் அவர் தோழர் மட்டுமே தெரியும்படி சிலகாலம் செல்லும். செல்லும்போது, செம்மனமுடைய காதலரிருவரும் இரவும் பகலும் எதிர்ப்பட்டு அளவளாவிக் கொள்வார். இப்படி இவர்செய்தல் ஏனென்றால், ஒருவருடைய குணத்தையும் குற்றத்தையும் காதலையும் கருத்தையும் மற்றொருவர் நன்றாக அறிந்தறிந்து அளந்து கொள்ளும் பொருட்டேயன்றி வேறல்ல.

சு. இவ்வாறு நாள் ஏற ஏற, அவர் காதலும் வழிமுறையே வளர்ந்து, சிறிதுநேரமும் ஒருவரை ஒருவர் பிரியமாட்டாத பேரன்பினர் ஆவர். ஆகியும், இவர் மறைந்த ஒழுக்கமுடைய மக்களாதலால், காணும்பொழுதைக் காட்டினும் காணாப் பொழுதே இவருக்கு மிகுதியாக இருக்கும். இருக்கவே, அப்பிரிவு ஆற்றாத காதலி ஊண் உறக்கம் ஒழிந்து, ஆடல் பாடல் அகன்று புலம்பியிருப்பாள். அதுகண்ட அயலவர் 'இவள் காமத்தில் விழுந்து கலங்குகின்றாள்' என அலர் (பழிச்சொல்) எடுத்துத் தூற்றுவர். அஃது அறிந்த காதலன், அந்த அலர் அடங்கும்படி சிலகாலம் தன் காதலியைப்பிரிந்து தனியனாய்த் தன் ஊரிலே தங்கி உறைவான். உறைகின்றபொழுது அவனையும் காமம் சுடும். பிரிவு தரியான், அந்தோ! என்ன செய்வான் ?

எ. இவன் செய்யக்கடவது இரண்டு காரியம் உண்டு. ஒன்று உடன்போக்கு. மற்றொன்று மணந்துகொள்ளல். தன் காதலிவாழும் ஊரிலேசென்று, அவ்விடத்திலே ஒருவரும் அறியாமல் அவளைத் தன் ஊரிற்கு உடன்கொண்டுபோய், அங்கே தன் பெற்றோரும் உற்றோரும் சூழ, மணம் புணர்ந்துகொண்டு மனையறம் நடத்துவான். இது உடன்போக்கு. இச்செய்கை அக்காலத்திலே பழிப்புடையதன்று !

அ. இனி, இவ்வாறும் செய்வான். தனக்கு ஆக்கமான அறிவோரை அழைத்து 'இன்னனை எனக்கு மணம்பேசி வாரும்

கொள்' என விடுப்பான். அவரும், அவன்சொற்படியே சென்று, அவன் காதலியின் பெற்றோரைக்கண்டு பெண்கேட்பார். கேட்க, அப்பெற்றோர் 'என்மகள் மதிப்பில்லாத மாணிக்கம் அல்லவோ! பொன்னுலகும் விலைபோதாத பொன்னம்பாவை அல்லவோ! நுங்கள் குலமும் குடியும் நலமும் நோக்கியே இவளைக் கொடுக்க ஒருவாறு இசைகின்றோம். ஆயினும், இன்ன இன்னபரியம் எமக்கு வேண்டும்' என்பார்.

௯. அந்தப் பரியம் நிலத்திற்கேற்ப பலவகையா இருக்கும். குறிஞ்சியானால், 'நம் குறிச்சியிலே வந்துபுகுந்து திரிகின்றது ஒரு வரிப்புலி; அதன் பல்கொண்டுவா!' என்பார். நெய்தலானால்; 'அம்பி ஏறி ஆணிமுத்துக் குளித்துவா' என்பார். முல்லையானால், 'கட்டுக்கு அடங்காத எங்கள் காளையைக்கட்டி, வா' என்பார். மருதமானால், 'பொன்வேண்டும்; மணிவேண்டும்' என்பார். பாலையானால், 'உச்சிக்கிளையிலே தொங்குகின்ற ஒற்றைக் கனியைக்காட்டி, 'அந்த நெல்லிப்பழத்தை நிலஞ்சேராமல் வில்லேற்றி வீழ்த்திவா' என்பார்.

௰. இவ்வாறு, பெண்ணைப் பெற்றோர் எண்ணிக் கேட்கும் பரியம் எதுவானாலும், காதலன் கடுமுயற்சிசெய்து, கொண்டு வந்து கொடுத்து, முதியோரும் மதியோரும் வாழ்த்த, தன் காதலியை மணந்துகொண்டு தன்னூரைச் சேர்ந்து இல்லறம் நடத்தி இன்பம் நுகர்வான். அக்காலத்தவர்களுக்கு (இக்காலத்திலே நமக்குள்ள) சடங்குகள் இல்லை. நமது சடங்குகளெல்லாம் பிற்காலத்தே இருடிகள் கட்டிவைத்தவை. இது இவ்வாறென்பது

"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப" (பொருள். கற்பு. ௪)

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுமாற்றானும் துணியப்படும்.

௧௧. இது நிற்க, தன்காதலி மெய்யன்புடையளாயிருக்கவும், அவள் பெற்றோர் அவளைத் தனக்கு மணஞ்செய்ய மறுப்பாரானால், காதலன், 'நும்மகள்பொருட்டுத் தீயிடைப் பாய்தல்,

மலையேறிவீழ்தல், மடன்மா ஏறுதல் முதலான இழிவான காரியங்களையும் செய்வேன்" என அவருக்குச் சொல்லியனுப்புவான். —மடன்மா ஏறுதல் என்பது பனங்கருக்கினாலே குதிரைசெய்து அதன்மேல் ஏறி எருக்கமாலைசூடி, தன்னையும் தன்காதலியையும் படமெழுதிக் கையில்பிடித்து, ஊரின் நாற்சந்தியிலே நிற்பது.—மடன்மா ஏறுதல் முதலிய தொழில்களை ஓர் ஆடவன் ஒரு பெண்ணின்பொருட்டுச் செய்வானாயின், அஃது அப்பெண்ணைப் பெற்றோருக்கு மிகவும் மானக்கேடாக மதிக்கப்படும். ஆதலால் அவன் அச்செய்கை ஒன்றைச் செய்யு முன்னே 'இவன் இவளிடம் மெய்யன் புடையவனும்!' என்று தட்டாமல் தம்மகளை அவனுக்கு மணஞ்செய்து கொடுப்பார். அப்படிக் கொடாராயின், காதலன் தான் சொல்லியவாறே செய்து உயிர் விடுவான்.

௧௨. இனிக் காதலியும், தன்னைப்பாராமுகம் செய்து காதலன் புறக்கணித்தாலும், தன் பெற்றோர் அவனுக்கு மண மறுத்தாலும், தன்னை உடன்கொண்டுபோக அவன் உடன்படா விட்டாலும் தீமூழ்கியாவது வரை புரண்டாவது அவள் வாழ்க்கை ஒழிந்து விடுவாள்.

௧௩. காதலர் மணம்புணர்ந்த பின்னே மனம்பொருந்தி மனையறம் நடத்தும்பொழுது காதலன் கல்விகற்றல், தூணை போதல், பொருள்தேடல் முதலிய தொழிலைமுன்னிட்டு, தன்காதலியை இல்லத்தேவிட்டு, காடும்நாடும் கடந்து பிரிந்துபோவான்; இன்பத்தின் பொருட்டும் இல்லினின்று நீங்கிச் சிலகாலம் வெளியே உறைவான். அக்காலங்களிலே அவனுடைய பிரிவாற்றாமையால் காதலி தன்னந்தனியே இருந்து, அழகழிந்து, உடல் மெலிந்து அழுது வருந்துவாள். பின்னும், அறம் பொருள் இன்பம் கருதி அகன்றிருந்த காதலன் அவற்றை அடையப்பெற்று, திரும்பி நாடுவந்து சேர்ந்து, தன்காதலியைக் கூடிக்களித்து வாழ்வான். அப்பொழுது அவவிருவரும் இணங்கியும் பிணங்கியும் இன்பம் உண்டும், மக்களைவளர்த்தும், விருந்துபுரந்தும், இல்லறம் தவறாமல் இயற்றுவர்.

கச. இதுவரையும் சொல்லிய வாற்றால், கூடல் பிரிதல் உடன்போதல் இரங்கல் இல்லிருத்தல் என்னும் ஐந்துசெய்கையும் காதலரிடத்தே காணப்படுகின்றதென்றும், அச்செய்கை காதல் காரணமாகத் தோன்றுகின்றதென்றும் தெரிவித்ததாம்.

கரு. கூட்டம் இன்பத்தையும், அவ்வின்பம் உவகையையும் தரும். பிரிவு துன்பத்தையும், அத்துன்பம் அழுகையையும் தரும். உவகையும் அழுகையும் ஒருவருக்கு வாய் வெருவிப் பேச்சுப் பிறப்பிக்கும். இவை உலகத்துத் தன்மை. இன்னும், ஒருவர் தனது மனமகிழ்ச்சியைப் பிறரிடம் பேசினாலும் வாய்விட்டுப் பேசினாலும் அம்மகிழ்ச்சி முன்னைய அளவிலே மிக்குவளர்தல் இயல்பாதலால், காதலர் உடனிருந்த பொழுதும் தனியிருந்த பொழுதும் வாய்விட்டுப் பேசுவர். அப்பேச்செல்லாம் பழுத்த இனிமையும் முதிர்த்தசுவையும் நிரம்பிய பண்ணமைந்த பாட்டாகவே இருக்கும். ஏனென்றால், பாட்டென்பது கிளர்ச்சி குன்றாத மனத்திலிருந்து ஊற்றெடுத்து ஊறிவழியும் அமுத வெள்ளமே அன்றோ? மெய்க்காதலர் மனமானது மகிழ்ச்சியினால் மலர்ந்து, கரைபுரண்ட அன்பும் அருளும்ததும்பி, தெய்வத்தன்மை மணந்து, தேனூறிக்கிடப்பது. ஆகையால், அவர் வாயிலிருந்து வருகின்ற பேச்சு, 'விழுமிய புலவர் செய்யுளைப் போல ஒழுகிய ஓசைமலிந்து வனப்பெலாம் குழுமியதேயாம். இன்னும், ஒருவர் தனது மனவருத்தத்தைப் பிறரிடம் பேசினாலும் வாய் விட்டுப்பேசினாலும் அவ்வருத்தம முன்னைய அளவில் சுருங்கிக்குறைதல் இயல்பாதலால், காதலர் உடனிருந்தபொழுதும் தனியிருந்த பொழுதும் வாய் விட்டுப்பேசுவர். அப்பேச்சும், கனியாத கருங்கல் மனத்தையும் கனிவித்து, இளக்கியுருக்கும் இனியபாட்டாகவே இருக்கும்.

கசு. இவ்வாறு இன்பமும் துன்பமும் தோன்ற இவர் பாடிய பாட்டெல்லாம் 'அகப்பொருள்' எனப்படும். அகப்பொருள் அன்பினால்வந்த இன்பம். இன்பவொழுக்கம் அன்படியாகப் பிறப்பதாதலானும், அன்பானது உள்ளத்திலே உணர்ந்தறியும் கருத்துப் பொருளாதலானும், அன்பினால் வந்த இன்

பம் காதலிருவர் அகத்திலே நிகழ்வதன்றி, புறத்தார்க்குப் பேசப் படாதது ஆதலானும், அகப்பொருளெனப்பட்டது.

௧எ. இஃது இவ்வாறாக, அக்காலத்து ஆடவர் புகழ்பட வாழவே விருப்பமுடையவர். ஆகையால், அப்புகழைப் பெறுதற்குக் காரணமாகிய அன்பு, ஈகை, கல்வி, வீரம் முதலிய அருஞ் செயல்களையே அவர் செய்துவந்தனர். பகைவருடைய பசுமந்தை கவரப்போவார். பகைவர் கவர்ந்துபோன தம் பசுமந்தையை மீட்டுவருவார். பகைவர் நாட்டைப் பற்றிக்கொள்ள நினைந்து அவர்மீது படையெடுத்துப்போவார். போர்செய்யும்படி தம் மேல் படையெடுத்து வந்த பகைவரை எதிர் சென்று ஏற்பார். பகைவர் கைக்கொள்ளாமல் தம்மதிலைக் காப்பார். பகைவருடைய மதிலைக் கைக்கொள்ளும் பொருட்டு வளைந்து கொள்வார். போர் செய்வார். வெற்றி பெறுவார். இவ்வகைச் செயல்களையே அவர் என்றும் செய்து தம்வீரத்தை வெளியிடுவார். போரிலே தமக்கு அடைக்கலப்பட்ட ஆட்களை அன்புடன் காப்பார். தம் வெற்றியைப் புகழ்ந்து பாடிவரும் பாணருக்கும் புலவருக்கும் பொருநருக்கும், தாம் போரிலே பெற்று வந்த பொருளை யெல்லாம் வரையாது வழங்குவார்

௧அ. அன்றியும், அவர் யானை குதிரை யாடு சேவல் முதலியவற்றைப் பழக்கிப் போருக்கு விட்டும், தாம் கற்றுப்பழகிய ஆடல் பாடல் கல்வித்திறங்களை அரங்கேறிக்காட்டியும் வெற்றியும் தோல்வியுமடைவர். அவ்வெற்றியுந் தோல்வியும கண்டிருந்த பாணரும் புலவரும் நண்பரும், அவரைப் புகழ்ந்தும் இகழ்ந்தும் பாடிப்பாடிப் பரிசில் பெற்றுக்கொள்வார். அன்றியும் ஒருவன் செல்வத்தில் செருக்கியும், போகத்தில் மூழ்கியும் அறம் மறந்து அல்லன செய்யக்கண்டால், கற்றறிந்த முதியோர் உடல் உடைமை இளமை என்னும் இவற்றின் நிலையாமையை எடுத்துக்கூறி, 'அறம் செய்க' என்று அவனுக்கு அறிவுறுத்துப் பாடுவார்.

௧௯. இவ்வாறு வாழ்த்தியும் வைதும் கழறியும் பாடிய பாட்டெல்லாம் 'புறப்பொருள்' எனப்படும். புறப்பொருள்—

அறமும் பொருளும். இவ்வொழுக்கம் அறம்பொருளடியாகப் பிறப்பதாதலாலும், அறம் பொருள்பற்றிச் செய்யும் செய்கைகள் கண்ணால் கண்டறியுங்காட்சிப்பொருளாதலாலும், இதைக் கண்டவர் பின்னும் எடுத்துப்பிறருக்குப் பேசக்கூடியது ஆதலாலும் புறப்பொருளெனப்பட்டது.

௨0. மேலே காட்டிப் போந்தவாறு பல வேறு காதலரும், கண்டோரும், பல்வேறு காலத்திலே பலவேறிடத்திலே பலவேறு சமயத்திலே பலவேறு மனநிலையோடிருந்து பாடிய அகப்பாட்டு புறப்பாட்டுக்கள் அளவில்லாதன. அவற்றின் அருமையும் அழகும் அறிந்த நம்மூதாதையர், தம் மக்களாகிய நமக்கு ஏய்ப்பில் வைப்பாக ஈட்டி வைத்துப்போயினர். அவற்றுள் பல நீரின் வயிற்றிலோ நெருப்பின் நாவிலோ செல்லின் வாயிலோ புல்லியர் கையிலோ பட்டு அந்தோ! நம் பாவத்தின்பயனாக மறைந்தொழிந்தன. போனவைபோக, எஞ்சிய பகுதியும் நாம் இழந்து போகாதபடி முற்காலத்திருந்த தமிழ்வேந்தர் மூவரில் சிலர் பல புலவரைக் கண்டு தொகை நூலாகத் தொகுத்துவைத்தனர். அவையே இக்காலத்து 'எட்டுத்தொகை' என்று வழங்குவன. இவ்வெட்டுத்தொகையுள், குறுந்தொகை, நற்றிணை, நெடுந்தொகை, (அகநானூறு) இம்மூன்றும் அளவுபற்றியும்; ஐங்குறுநூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து இம்மூன்றும்பொருள் பற்றியும், கலித்தொகையும் பரிபாடலும் பாவகைபற்றியும் வகுத்துத் தொகைசெய்யப்பட்டன.

௨௧. இனி, இவ்விலக்கியங்களுக்குத் திணையே துறையே முதலிய இலக்கணங்களை மிக விரிவாகவும் விளக்கமாகவும் எடுத்துக்கூறும் நூல்கள் மூன்று. அவை தொல்காப்பியப் பொருளதிகாரம், இறையனார் அகப்பொருள், வெண்பாமாலை என்பன.

௨௨. மேற்சொல்லப்பட்ட தொகைநூல்கள், மக்களிடத்தே நிகழும் அறம் பொருள் இன்பவொழுக்கங்களை நயங்கெடாமல் எடுத்து விரிப்பன. அவற்றில் அங்கங்கே வரும் உவமைகள் அதிக அருமையானவை! எவ்வளவு அருமை? நெடுங்கால

முன்னே நிகழ்ந்த அச்செயல்களை இக்காலத்தே படிக்கின்ற நமக்கு, கண்முன்னே காண்பதுபோலத் தெளிவாகக்காட்டி, உவகை அழுகைமுதலிய மெய்ப்பாடுகளையும் நமக்கு உண்டாக்குகின்றன என்றால், அவை இன்னபடி என்று எடுத்துரைக்கலாகுமோ?

௨௩. இப்பாட்டுக்கள் பலசமயங்களிலே பலராலே பாடப்பட்டன என்று முன்னமே சொன்னேம். ஆகையால், 'இது நிகழ்ந்த பின்னே இது நிகழவேண்டும்' என்ற துறை முறை இத்தொகை நூல்களிலே சாலத்தவறிக்கிடக்கின்றன. இவற்றைத் தொகுத்தோரும் ஏதோ சிறந்த காரணம்பற்றி, தொகை செய்த காலத்திலே, துறைமுறை வகுத்தாரில்லை. எனவே, 'இந்நூல்களுக்கு இது ஒரு குறை' என்பதன்று எம் கருத்து: மற்று, இவற்றின் தன்மை உரைத்ததாமெனக.

௨௪. பண்டைக்காலத்திலே நமது தென்மொழியில் பயின்று வந்த பாக்கள் இரண்டே. அவை வெண்பா, அகவற்பா என்பன. ஆதலால், இத்தொகைநூல்களின் பாட்டுக்களெல்லாம் அகவற்பாவினால் ஆயின. அகவற்பா, நீரின் ஒழுக்குப்போல நில்லாது மொழுமொழுவெனத் தவழுவதாகையால், ஒருவர் உள்ளக் கருத்தைத் தெள்ளத்தெளியவும் எளிதாகவும் சொல்லுவதற்கும், கேட்டோர் செவ்வனே தெரிந்துகொள்வதற்கும் மிகவும் தகுதியுள்ளது. பலபல பாவும் பாவினமும் படிக்கும் இக்காலத்திலே அப்பாட்டுக்களுக்குத் தூக்கும் வண்ணமும் தூக்கி நிறுத்துவார் உண்டோ?

௨௫. இதுவரையும் சொல்லிப் போந்தவற்றால், அறம் பொருள் இன்பவொழுக்கங்களே அகப்பொருள் புறப்பொருள்கள் எனவும்; அவ்வொழுக்கம் இன்னபடி நிகழ்கின்றன எனவும்; அகப்பாட்டு காதலராலும், புறப்பாட்டு கண்டோராலும் முற்காலத்தே பாடப்பட்டன எனவும்; அவற்றுள் அழிந்தனபோக நின்றவற்றை அக்காலத்து வேந்தர், பலபுலவரைக்கொண்டு பல தொகைநூல்களாகத் தொகுத்தனர் எனவும்; அவையே 'எட்டுத்தொகை' எனவும்; அவை, அளவு பொருள் பாவகைபற்றித்

தொகுக்கப்பட்டன எனவும்; அவை உவமை நயத்தில் உயர்ந்து அகவற்பாவால் அமைந்தன எனவும் தொகைநூல் வரலாறு ஒருவாறு தெளிவித்ததாமென்க.

---

# பாமணித்திரள்

[சாமி காந்தன்]

## புத்திரர் கடமை

### வணக்கம்

பூதல மீதெஞ் ஞான்றும் பொருந்திடச் செல்வ ராய
மாதலத் திருத்து தீஞ்சொன் மைந்தரைப் பெற்றோ ·நாளும்
ஓதலோ டாதி யாய வுறுபுரு வத்துக் கேற்பக்
காதலாற் புரிமெய்த் தேவ கடவுள ரடிகள் போற்றி.

### இராமன்

பண்ட யோத்தியிற் பார்த்திப னையவன்
பெண்டிர் மூவருட் பேர்பெறு கேகயி
மண்டு போரினில் வல்லபங் காட்டலாற்
கொண்ட லீந்தனன் குன்றா வரங்களே ௧

அவ்வ ரங்களை யவ்வயிற் கேட்கிலள்
செவ்வி நோக்கித் திருத்த நினைத்தனள்
ஒவ்வு காலம்வந் துற்றத றிந்துமே
லெவ்வ மென்ன நினையா திசைக்கின்றாள். ௨

மன்ன! வேண்டும்வ ரங்களின் முன்னது
துன்னு கானகம் ராமனைத் தோய்த்தல்பின்
நன்னர் சூட்டுதல் நம்பி பரதனுக்
கின்ன தாரணி யென்றன ளேந்திழை. ௩

அந்த மாது அவலம் விளம்பவே
நொந்து வீழ்ந்தனன் மன்னவன் நொய்தினில்

சிந்தை தேற்றித் திருத்தகு ராமனுக்
குந்தை சாற்றிய 'தொன்றெனச் செப்பினுள். ச

கோல ராமன் குவலய நீங்கிக்கா
சால வேகுதல் தம்பி பரதற்கே
தால மாகுத லென்றுரை சார்முனம்
நீல மேனியன் நெஞ்ச மகிழ்ந்தனன். ரு

தந்தை சாற்றலுந் தாயுரை யேற்றலும்
மைந்தர் மாக்கட னுதலின் மாட்சியீர்!
மூந்தை யன்னது முற்றுவிப் பேனெனுச்
சிந்தை யிர்ப்பச் செயுரிப்பொடு செல்கின்றுன்? சு

ஊரு ளோரல ருற்றவ ரேயலர்
பாரு ளோர்பலர் பற்பல கூறியும்
நேர்கி லான்வன நேடிய சென்றனன்
ஏருலா மொழி யேற்றோ ரிகழ்பவோ. எ

தந்தை சாற்றிய தாயவர் சாற்றிய
அந்த கால வளவுமி ருந்துபின்
வந்த காலவன் வண்புக ழின்றைக்குஞ்
சிந்தை யாரவி ளங்கித்தி கழ்வதே. அ

ஆதலா னம்ம ரும்பெறற் றந்தைமார்
மாதயா வுடைத் தாயரின் வார்த்தையைப்
பூதலத் திடைப் புத்திர ராய நாம்
மீத லத்தும் விளக்கிடல் வேண்டுமால். கூ

வேறு

இதுதா னென்றோ பூரென்பான்
முதுதா தையினோர் மொழிகொண்டே
விதமாச் செயலால் விறெய்தும்
புதுமைச் சரிதம் புகல்கிற்பாம். க0

(தொடரும்)

# மனைவி

[M. S. பூர்ணலிங்கம்பிள்ளை, B.A., L.T.]

மனைவியே இல்லாளெனப்படுவாள். வாழ்க்கைத் துணையுமவளேயாம். கொண்டானைப் பேணி, அவன் வருவாய்க்குத் தக்கவாறு செலவு செய்து கற்பென்னுந் திண்மையுடையளாய், அவன் புகழை நிலைநிறுத்தி, 'கையது வீழினுங் கணவன் அல்லது, தெய்வம் அறியா'ப் புண்ணியவதியாய் நன்மக்களைப் பெற்று மனையைச சிறக்கச் செய்பவளே மனைவியாம். இத்தகைய மாட்சி பெறாதவள் வாழ்க்கைத் துணையாக நேரிடின் கொண்டானுக்கு எவ்வகை மாட்சியிருப்பினும் அவன் மாட்சி யிலாதவனே, ஏறுபோற் பீடு நடையிலாதவனே, ஒன்று மிலாதவனேயாகின்றான்; அன்றியும் ஒன்றுங் கூறாமற் சந்நியாசம் கொள்ளுதற்கு அருகனாகின்றான். ஆதலால் வாழ்க்கைத் துணையைக் கண்ணுங் கருத்துமாயிருந்து நாடிப் பெறவேண்டும். புண்ணியஞ் செய்தவருக்கே தக்க வாழ்க்கைத் துணை யமையுமென்பர். தன்னைக் காத்துக் கொள்ளாமல், நிறையொழித்து இல்லிறப்பான் கையிலையத்து மகளிர் நிலைமை பரிதபிக்கத் தக்கதே. இல்லிறப்பானை எஞ்ஞான்றும் பகை பாவம் அச்சம் பழியென நான்கிற்கு முறைவிட மாகின்றான். பல் வகை மாண்பும் பொருந்திய மனைவியை மிதமிஞ்சி விழைபவனும், அவளைக் கண்டு அஞ்சுபவனும், அவளிடு மேவல்களை அவள் விருப்பப்படி செய்தொழுதுபவனும், அவளுக்குத் தாழ்ந்தடங்கி நடப்பவனும் பேதையென்றே கூறுவர் பெரியோர். நிறை நெஞ்சமிலாது பொருள்பற்றிப் பண்புரை செய்து, தந்நலம் பாரித்து, இருமனங் கொண்டு, பொதுநலத்தராகி, மாயஞ் செய்யு மகளிர் பரத்தையர், வேசிகளெனப்படுவர். அன்னாரை நாயனார் 'புரையிலாப் பூரியர்களாழும் அளறு' என்று வரைந்துள்ளார். இவ்வாறு இல்லிறப்பானையும, வரைவிலா வேசிகளை விரும்பி இருட்டறையில் பிணந்தழுவு மாக்களையுங் கண்டித்த பொய்யா மொழியார் இல்லிறப்பானைப்பற்றி யொன்று முரையாது விட்டது

யாது காரணம் பற்றியோ ? இல்லிறந்தவள் உலகுக்கே இறந்தவளாகின்றாள் ; அவளை மீட்டும் இல்லிற்சேர்த்தல் கிடையாது. இழந்த உலகமதிப்பை எவ்வாற்றானும் அவள் திரும்ப எய்தாள். இல்லிறப்பாளுக்குத் தண்டனை அவமதிப்பும், தன்னைப்போன்ற மகளிர் தன்னைக்கண்டு ஒல்கி விலகுதலுமேயாம்.

இஃது இவ்வாறாயினும், பெருங்காவியங்களில் இல்லிறந்தவளுக்குத் தண்டனையும், சாந்தியுங் கூறியிருக்கின்றனர். ஏனெனில் தவறுதல் பேதை மக்களியல்பு, தவறுதல் நேரிடும் நிறையுடையார்க்கும். இத்தகையினார்க்கு மீட்சி யிலதெனில் அது நீதியிழுக்காம்.

“ மாரியுந் திருவு மகளிர் மனமுந்
தக்குழி நில்லாது பட்டுழிப் படுமெனுங்
கட்டுரை ” (உஞ்சை. 35, 156–8.)

“ செம்மல், செங்கோன், நுநதை அவையத்து
என் இகந்து ஒரீஇயினன் இளமையிற் கணவன்
தன் இகந்து ஒரீஇயான் தகேளன் ஆகக்
கொண்டோன் பிழைத்த தண்டந் தூக்கி
அடிக்கண் இட்டிகைப் பொடித்துகள் அட்டிக்
குற்றம் கொல்லும் எங்கோப் பிழைப்பிலன்என
முற்றம் தோறும் மூதா ரறிய
நெய்தல் புலையன் நெறியில் சாற்றிப்
பைதல் பம்பை இடங்கண் நெருக்கி
மணல்குடம் பூட்டி மாநீர் யமுனை
இடைக் கயத்து அழுந்த விடீஇய செல்வுழிப்
புனற்கரைப் படீஇயர் புதல்வரோடு ஆர்க்கும்
தோணி அரவம் சேணொய்க்கு இசைப்ப.......
அவ்வயின் எழுந்த கவ்வை என்னென
முந்தை உணர்ந்தோர் வந்து நினக்கு உரைப்ப
யாமும் காண்கும் கூடமின், சென்றெனக்
கோல்கொள் மள்ளர் காவின் ஓடி

நம்பி வேளண்ம் அம்பி வருகென
ஆணையில் திரீஇயர் அஞ்சன்மின், நீரெனத்
தோணி இழிப்புழித் துடுப்பு நனிதீண்டி
நெற்றியுற்ற குற்றம் இதுவென,
இது முதலாக இன்னே இம்மகள்
அழிதவப் படுதல் ஆற்றும் என்று உரைத்த
குறி கொள் ஆளன்......
கொண்டோன் காப்பவும் கொள்கையில் இகப்போள்
தன்குறிப்பு ஆயுழித் தவம்இவட்கு எளிதென
வம்ப மாக்கள் வாயெடுத்து உரைத்த
வெம் சொற்கிளவி நின் அங்கையில் அவித்து
வேண்டியது உரைமின், ஈண்டியான் தருகெனப்,
புலைமகன் அறையப் பூசலில் போந்தேன்,
நிலைமை வேண்டியான் நின்நகர் வாழ்வேன்......
கெங்கா தீரத்துத் தேசம் கெழீஇ
யாங்காங்கு ஒல்வன் என்று ஆ (யா) த்திரை முன்னி...
வயிரச் சாத்தொடு வடதிசைப் போகி......
யத்தவப் பட்டாங்கு அறுவகைச் சமயமும்
கட்டுரை நுனித்த காட்சியேன் ஆகி
இமயப் பொருப்பகத்து ஈராண்டு உறைந்தபின்
குமரித் தீர்த்தம் மரீஇய வேட்கையில்,
அருந்தவன் நுனித்த அற ஆசிரியன்
தரும யாத்திரையெனத் தக்கணம் போந்துழி......

(உஞ்சை. 36).

இவ்வாறு சாங்கியத்தாய் தம்வரலாறு கூறுவதை உற்று நோக்குக. கணவன் தன்னைவிட்டு விலகிய காலத்தில் தான் இல்லிறந்தமைக்கு அறங் கூறும் அவையத்தார் தனக்கு விதித்த தண்டனையாவது, " மணல் குடத்தோடு கட்டி யமுனையாற்றின் இடையே வீழ்த்துக " என்பதாம். உடனே ஒரு புலையன் அவ் வாறு சாங்கியத்தாயைக் கட்டி செங்கற் பொடியை அவள் மீது தூவிப் பம்பைப் பறையறைந்து கூறிய விளம்பரஞ் செய்து

தோணியில் அவளையேற்றி யமுனையிடையே சென்ற பொழுது மன்னன் மகள் வாசவதத்தை பார்த்து அவளைக் கொண்டு வரச்செய்து தோணியினின்று இறக்கிய வேளையில் துடுப்பு அவள் தலையிலிடிக்க வடுவுண்டாயது. தண்டமிகுதி பற்றித் தவவிரதங் காக்குமாறு கட்டளைபெற்றாள். கங்கையாடி இமயத்தில் ஈராண்டுதவஞ் செய்து குமரியாடப் புறப்பட்ட வந்தணி வழியில் மன்னனொருவன் மகளிர்க்கு முதல் அறப் போதகியாய் அமர்ந்தனள். இது நிற்க

கற்பினல்லாளாகிய சீதை இராவணீசுரனாற் சிறை செய்யப் பட்டு பின் இராமபிரானால் மீட்கப் பெற்று அயோத்தியில் இருவரும் இல்லறம் பூண்டொழுகு நாளில் வண்ணானொருவனும் அவன் மனைவியும் பேசியமாற்றத்தைச் செவியிற் பருகிய செங் கோல் மன்னன் கவலுற்று சீதாதேவியின் புனிதத்தை விளக்கக் கருதினன் என்பது பழங்கதை. பிராட்டி அற்றமெய்திய வரலாற்றைப் பின்வரும் பாவடிகளாலறிக :

“ சிறுமையின் உணர்ந்த பெருமகன் இரங்க
மண்கெழு மடந்தாய், மறைவிடம் தாவென
ஒன்றுபுரி கற்போடு உலகுவிளங் குறீஇப்
பொன்றல் ஆற்றிய புகழாள்” (உஞ்சை. 36, 338-40.)

இதுகாறுங் கூறியவற்றால் இல்லிறத்தல் மூன்று வகையாகும். காமமிகுந்து ‘ உருவிலாள் ஒறுக்குந் துன்ப’த்தால் நிறையழிந்து போதல் ஒன்று. அதற்குத் தண்டம் கொடிதாம். கணவன் வெகுகாலம் பிரிந்திருந்து இனி வாரானென்ற மனவுறுதி கொண்டு பொறையிழந்து வேறு மகனைக் கைப்பற்றல் மற்றொன்று. இது பாவச் செயலிற் குறைந்தபடியாம். இனி, கற்பெனுந் திண்மையுடைய நாயகியை மாற்றான் வலிந்திழுத்துச் செல்வானாயின் துணைவியின்பாற் குற்றமிலது. அவளுக்குத் தண்டமேது ? குற்றந் துணைவனதேயாகும். ஊரிலுள்ளார் கூறுஞ் சிறுமொழி பொறுக்காமல் உயிர்துறப்பவரு முளர் என்பது விளங்கும்.

மணமான இல்லிறந்தவர்களுக்குக் காவியங்களில் பாவப்போக்கிற்கு யாது கூறப்பட்டிருக்கின்றது? மணிமேகலையில் ஆபுத்திரன் வரலாற்றைப் படிக்க. குமரியாற்றிற் குளித்து முழுகிப் பாவங் கழுவுதலே வழக்கமென்று புலப்படும்.

> " வடமொழியாட்டி மறைமுறை எய்திக்
> குமரிபாதங் கொள்கை வணங்கித்
> தமரில் தீர்ந்த சாலி யென்போள் "

> " வாரணாசியோர் மாமறை முதல்வன்
> ஆரண உவாத்தி அரும் பெறல் மனைவி யான்,
> பார்ப்பார்க்கு ஒவ்வாப் பண்பின் ஒழுகிக்
> காப்புக் கடைகழிந்து கணவனை இழந்தேன்,
> நெறிடயம் உடைமையின் இரியல் மாக்கள்
> தெற்கண் குமரி ஆடிய வருவேன்"　　(மணிமேகலை-13)

என்று சாலி யென்னும் அந்தணி கூறினள். ஆதலால் ஆடூஉ மகடூஉ இல்லிறத்தல் பெரும்பாவமும் பழியுமாம். அமயமறிந்து தண்டம் விதித்தல் நீதியாம். இல்லிறப்பான் இல்லிறப்பாளை எவ்வகையானும் வருத்து முரிமை எவ்வாறு எய்துவன். இருவரும் ஒரு மனத்தராய் தம்மை அறநெறியிற் காத்து இல்வாழ்க்கையாகிய வான்சகட்டை ஈர்ப்பினல்லால், அது செல்லாது. தெற்றி நின்று விடும். இதுவுண்மை.

> " மண்திணி ஞாலத்து மழை வளந் தரூஉம்
> பெண்டி ராயில் பிறர்நெஞ்சு புகார்."

> " பத்தினி யில்லோர் பலவறஞ் செய்யினும்
> புத்தேள் உலகம் புகார்"　　(மணிமேகலை 22-ம் காதை)

# தென்மொழி வடமொழி மயக்கம்

[க ப சந்தோஷம் பி. ஏ., எல். டி.]

(௬௪-ம் பக்கத் தொடர்ச்சி)

கல்வி என்ற மொழி தமிழ்ச்சொல் என்பதிலெவருக்கேனும் எவ்வகை ஐயமும் இருக்கும் என்று எண்ண இடமில்லை. இது 'வி' ஈறு பெற்றதொரு பெயராகும். கேள்வி, வேள்வி, மனைவி, துணைவி, செல்வி, குழவி, தலைவி என்றிவை போல்வனவற்றை உற்றுநோக்க, அது நன்கு புலப்படும். அன்றியும், 'கல்' எனும் முன்னிலையிலிருந்து கற்கை, கற்பு என வரும் பெயர்களில் லகர விறுதி தமிழ்ப் புணரியலுக் கேற்ப, றகரமாய்த் திரிவதை நோக்கும் எவர்தான் அம்முன்னிலை வடமொழியோடு கலப்புடைய தென்று கூறக்கூடும்? கற்பென்பது பெண்களுக்கு இளமை முதல் தாய்தந்தையரால் புகட்டப்படும் ஓர் ஒழுக்கமாகும். மணம் நிகழுங்காலத்தில் நெருப்பு அறிகரியாக மனைவிக்கு ஓதப்படும் அஃதே கற்பெனமொழிவர் நச்சினார்க்கினியர். இஃது எங்ஙனமாயினும் ஆகுக. 'கல்' எனும் அடியினின்றுந் தோன்றும் 'கலை' என்ற பெயர்ச் சொல்லை வடமொழியாளர் தமது சொல்லாக அறிந்தோ அறியாமலோ வழங்குவது பெருவியப்பாக விருக்கிறது. வடமொழியிற் கலா (कला) வென்றொரு சொல் லிருக்கிறது. இதன் பொருள் 'கல்' எனும் முன்னிலையி னடியாகப் பிறந்திருக்க வேண்டுமென்று எண்ணப் போதுமான இடமுண்டு. 'கலாசாலை' என்னும் சொற்றொடரில் 'கலை' என்ற தமிழ்ச் சொல் ஆகார இறுதிபெற்று 'கலா' என நின்றதோ? அல்லது 'கலா' என்ற வடமொழி தமிழில 'கலை' ஆயிற்றோ என்ற கேள்வியை எழுப்பி, 'ஆவீறையும்' என்று கட்டளை செய்த நன்னூலார் போக்கைப் பின்பற்றிப் பலர் மயங்கினர். இக்கட்டளையைத் தலைமேற் சுமந்து திரிந்து பெரிதும் போற்றுபவர், அம்மா, அம்மை எனும் சொற்களை எடுத்துக் கொண்டு 'அம்மா' என்பது வடசொல், அது தமிழில் 'அம்மை' என ஆயிற்று என்று கூறவும் கூசார். ஒருவேளை வடமொழி

அம்பா (अम्बा) என்பது 'அம்மா' என ஐ இறுதி பெறுமலே. வந்தது என்று பிதற்றினும் பிதற்றுவர். அம்மா என்பது கன்று, பசு, எருமை முதலியவற்றின் இரைதலினின்றும் வருதல்காண்க. இதுபோலவே, 'காக்கா' என்ற ஆரிய மொழி காக்கை எனத் திரிந்து தமிழில் நின்றது என்று சொல்லவும் நாணுர் 'காக்கா' எனும் பெயர் அப்பெயர் கொண்ட பறவையி னோசையினின்றும் பிறப்பது யாவரும் எளிதிற் காணக்கூடியது. வடமொழியில் இதற்கு வாயசம் (वायस) என்ற பெயருடன் காக (काक) என்று மற்றொருசொல் இருப்பதை உற்று நோக்கவும். இத்தகைய மொழிகளை நாம் எடுத்துக் காட்டுங்கால், வடசொல் வல்லார், 'இவை இயற்கை ஓசைகளினின்றும், காட்சிகளினின்றும் எல்லா மொழிகளிலும் பிறக்கக்கூடியவை; ஆதலின், இவை தமிழி னின்றும் வடமொழிக்குச் சென்றனவென்று சொல்ல வியலாது' என்கின்றனர். இவர்களின் உளம்போனவாறு என்னே! வட மொழியிலிருந்து மாத்திரம் சொற்கள் தமிழில் வந்து தோன்ற லாம். அவற்றை நாம் வடமொழியாகக் கொள்ளவேண்டும்; ஆனால், தமிழிலிருந்து மொழிகள் ஆரியத்திற்குச் செல்லலாகாது. தமிழ்க் கிளவிகளை யொத்தவை வடமொழியில் தோன்றினால், அவை தமிழொடு தொடர்புடையவையல்ல என்று இவர்கள் வழக்காடுகிறார்கள். இதிலெவ்வளவு செம்மையுளதென்பதை அறிஞர் பார்ப்பாராக.

நிற்க, வடமொழியில் கலா (कला) என்பதற்குப் பிரிவு, பகுதி என்ற பொருளுண்டேயன்றி, அறிவு, நூல் எனப் பொருள் வருமாறு இல்லை. ஆயினும், 'கலா' என்றொரு சொல்லை வைத்துக்கொண்டு அதற்கு அறிவு என்று பொருள் புகட்டுகின் றனர். 'மீன்' என்ற தமிழ்ச் சொல்லிற்கு இரு பொருள் உண்டு ஆயினும், இருபொருளும் ஒரு குறிப்பைக்கொண்டே தோன் றும். 'மீன்' என்பது மின்னுவது; இது நீரிலுள்ளது, விண்ணி லுள்ளது என இருவகைப்படும். முதலில் நீரில் மின்னும் கெண்டையைச் சுட்டி, பின் வேறுவகைகளுக்கும் அது பெயராகி யிருக்கவேண்டும். ஏனெனில், கெண்டை என்பது நூலோரால் அதன் வடிவத்தினாலும் பளிச்சென்று தண்ணீரில் தோன்றி

மென்றனத்தனுலும்; பெண்களுடைய கண்களோடு ஒன்றனைத்துப் பேசப்படும்: மீன்போன்ற கண்களையுடையவள் என்ற சொற்றொடரில் 'மீன்' என்பது கெண்டை மீனைச் சுட்டுவது அறியத்தக்கது. இதைக்கொண்டே விசும்பி லுள்ளவை விண்மீன் எனப்பெயர் பெறுகின்றன. இதையும் வடமொழி என்று நம்மிடமிருந்து பிடுங்கிக்கொள்ள முயலுங் கொடுமையை என்னவென்று சொல்வது! மீனம் என்பது வடமொழியாயின் அதன் தோற்றமென்னை? வரலாறென்னை? நீர் என்ற தமிழ் மொழியிலிருந்து பிறக்கும் 'நீரம்' என்ற வடமொழியையும் இவ்வாறே ஆராய்ந்து பார்க்க. வில்=விலை; தொல்=தொலை; நில்=நிலை, கொல்=கொலை; முள்=முளை; முன்=முனை எனப் பிறவற்றைப்போலவே கல்=கலை என வந்திருக்க, வடமொழி வந்து குறுக்கே நிற்பானேன்?

(தொடரும்)

---

## திருப்பாசுரம்

[வேலூர், C. S. இராஜாப்பிள்ளை தமிழாசிரியர்]

(௮௯-ம் பக்கத் தொடர்ச்சி)

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

(பொழிப்புரை) அந்தணர்களும் தேவர்களும் ஆனினங்களும் வாழ்க. தண்ணிய மழை உலகிற் பொழிக. மன்னனும் ஓங்குக (உயர்வடைக). தீமை தருவனவாய புறச் சமயங்களைத்தும் தாழ்க. சிவபெருமானது திருநாமமாகிய ஐந்தெழுத்தும் உலகிற் பரவுக. உலகமெல்லாம் துன்ப மொழிக. (எ-ம்)

வேதங்களின் உண்மைப் பொருளுணர்ந்து, எல்லா வுயிர்களிடத்தும் செந்தண்மை பூண்டொழுகும் அந்தணர்கள், அவ்வேதவிதிப்படி நித்தியாக்கினி, யாகாக்கினி முதலானவற்றை ஆனிடத்தே உதித்த ஐந்து பொருள்களையும், அவைபோல் இன்றியமையாது வேண்டப்படும் பிறபொருள்களையுங் கொண்டு, மனம், வாக்கு, காயம் என்னும் திரிகரண சுத்தியுடன் வளர்த்துச் செயயும் வேள்விகள் மழைவளந் தந்து, உலகஞ் செழிப்புறச் செய்தலினாலும், இவ்வேள்வியின் அக்கினி வாயிலாகத் தேவர்கள் அவியுண்டு மகிழ்ந்து, உலக முவப்ப மழையை உதவுகின்றா ராகலானும், அவ்வேள்விக்கு, ஆனினம் இன்றியமையாதன வாகலானும், இப்பாசுரத்தில் "வாழ்க அந்தணர் வானவ ரானினம்" என்றதைத் தொண்டை நன்னாட்டு வேளாளர் பெருமான் (சேக்கிழார்) "அந்தணர் தேவ ரானினங்கள் வாழ்கவென், றிந்த மெய்ம் மொழிப்பயன் உலகமின்புற ஆம்" என விளக்கி யருளினார்.

இன்னும் "அந்தணர் வாழ்க" என்பது, சிவாகமங்களின் செம்பொருளுணர்ந்த சிவ தீக்ஷாவான்கள், ஆகமவிதியிற் சிறிதும் வழுவாது, தீக்ஷாக்கினியை வளர்த்து, உபதேசம் பெற வந்த மாணாக்கர்களது பக்குவத்திற் கேற்பச் சமயம், விசேடம், நிர்வாணம், ஆசாரியாபிடேகம் என்னும் நான்கு தீக்ஷைகளையும் குண்டம், மண்டலங்களால் தீக்ஷா கருமங்களைப் புறத்தே கிரியையானும், அகத்தே ஞானத்தானும் புரிந்து, அவர்கள் பரகதியாகிய பேரின்பமுறச் செய்து, தாங்களும் ஆகமம் விதித்தவழி நின்று சிவவழிபாடாற்ற, அதனானும் மழை வளங்கூர்ந்து உலகஞ் செழிக்கு மாகலின், சிவ தீக்ஷாவான்களும் வாழ்க எனவும் பொருள்படு மென்பதைப் புகட்டவே "உலகமின்புற" என்றதனோ டமையாது "சந்த வேள்விகள்முதற் சங்கரார்க்கு முன், வந்த அர்ச்சனைவழி பாடுமன்ன ஆம்" என மீண்டுங் கூறி யருளினார் என்க.

இனி இவ்வைதிக அந்தணர்களது வேதநெறி யொழுக்கமும், சிவ தீக்ஷாவான்களது சைவமெய்ந்நெறி யொழுக்கமும்

முறையே உலக மின்புறவும், சிவார்ச்சனை மன்னுதற்குங் காரணமாகி, இவற்றின் பயனாக மழைமிகுந்து மக்கள் ஆக்கமுறுதலே அரசனது வளப்பத்திற்குக் காரணமாய் நிற்றலின், திருக்கோயிற் பூசை முதலியவற்றை முட்டின்றி முடித்தல் மன்னவன் கடமையாகலானும்,

"முன்னவனார் கோயிற் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்
கன்னங் களவு மிகுத்திடுங் காசினிக்
கென்னரு ணந்தி யெடுத்துரைத் தானே"

என்ற திருமந்திரத்தின்படி, மன்னவன் திருக்கோயில் முதலியவைகளைக் கவனியா தொழியின் அதனாற் பெருங்கேடெய்தி அழிவன் ஆகலானும், தமது திருக்கரத்தால் திருநீறு கடவப் பெற்ற நெடுமாறர்க்கு இத்தகைய இன்னல் என்றும் நேரா தொழிகவென அம்மன்னரை வாழ்த்தத் திருவுளங் கொண்டு, ஆளுடைய பிள்ளையார் அருளிய "வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக" என்பதைத் தொண்டர் புராணத்து,

"வேள்வி நற்பயன் வீழ்புன லாவது
நாளு மர்ச்சனை நல்லுறுப் பாதலால்
ஆளு மன்னனை வாழ்த்திய தர்ச்சனை
மூளு மற்றிவை காக்கு முறைமையால்"

என விளக்கப்பெற்றது.

மேல், அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய், வேறுங் குறியதுவுடைத்தாய் வேதாகமங்களின் குறியிறந்து, அறிவினி லருளான் மன்னி அம்மையோ டப்பனாகிச் செறிவொழியாது நின்ற சிவபெருமானே முழுமுதற் கடவுளென்றும், செய்வினையும் செய்வானும் அதன் பயனும் சேர்ப்பானும் என, மெய்வகையால் நான்காகும் விதித்த பொருள், என்றும் உணர்த்தும் வைதிக சைவசமயத்தைப் பரவவொட்டாமல், நெற்பயிரின் ஆக்கத்தைக் கெடுக்குங் களைகள்போல் எங்கும் பரவிய

சமணம் முதலிய புறச்சமயங்களை அழித்தல் களை கட்டுப் பயிர் வளர்ப்பது போலுமாகலின், "இஃது இவ்வாறாருக" என்றெண்ணுதலாகிய சங்கற்ப மாத்திரையாற் புரியும் இறைவனே போலத் தாமும் இயற்ற வல்லுநராதலின், அக்குறிப்புத் தோன்ற அப்புறச் சமயங்கள் அழிகவென்னுங் கருத்தான் "ஆழ்க தீய தெல்லாம்" என்ற கழுமல வேந்தர் திருமொழியைக் குன்றை நகர்க்கோமான் "ஆழ்க தீயதென் றோதிற் றயனெறி, வீழ்கவென் றதுவே றெல்லாம்" என விளக்கினார். அயல் நெறி எல்லாம் வேறுவீழ்க என முடிக்க. யாவரானும் மறுக்கற் பாலதன்றாய் எல்லாவகையானும் முடிந்த முடிபாய் நிற்கும் சைவசித்தாந்த மெய்ந்நெறியைக் கைக்கொண்டோரும், பண்டைப் பழவினையாற் புறச்சமயம் புக்கோரும், உண்மை யுணராது இதுவோ அது வோ என மயங்கும் மயக்கவுணர்ச்சி யுடையாரும் ஆகிய அனை வரும், "இருவினைப்பாசமு மலக்கலார்த்தலின், வருபவக் கடலில் வாழ் மாக்களேறிட, அருளுமெய்யஞ் செழுத்" தின் இயல் புணர்ந்து, அதுவே இம்மை, அம்மை, வீடு என்னும் மும்மையுந் தரவல்லதெனக்கொண்டு, ஆக்க முறுகவென ஆசிகூறத் திருவுளம் பற்றிக் காழிப்பிரான் "அரனுமமே சூழ்க" வென்றருளியதைத் தெய்வப்புலமைச் சேக்கிழார் சுவாமிகள் "அரன் நாமமே சூழ்க வென்றது தொல்லுயிர் யாவையும், வாழி அஞ்செழுத்தோதி வளர்கவே" என விளக்கினார்.

இனி, இதற்கு இவ்வாறன்றிப் பல்லூழிகாலம் பயின்றரனை அர்ச்சித்துப் பெற்ற நல்லறிவுடையார் தமது நல்வினைப் பயத்தா னும், அறிவின் முதிர்ச்சியானும் வேதவேதாந்தங்களைத் தெளிவுபெற வுணர்ந்து, வேதத்தில் விதித்தபடி, இருதய கமலத் தில் இறைவனை உபாசித்தலாகிய ஞானயோகமும், ஆகமவழி யொழுகி,

"நாட்டு மிதயந்தானும் நாபியினி லடியாய்
ஞாலமுதற் றத்துவங்க ளெண்விர னுளத்தாய்
மூட்டுமோ கினிசுத்த வித்தைமல ரெட்டாய்
முழுவிதழெட் டக்கரங்கள் முறைமையினி லுடைத்தாய்

காட்டுகம லாசனமேல் ஈசர்சதா சிவமும்
கலாமூர்த்த மாமிவற்றின் கண்ணாகுஞ் சத்தி
வீட்டையருள் சிவன்மூர்த்தி மாகிச் சத்தி
மேலாகி நிற்பனிந்த வினைவறிந்து போற்றே"

என்றபடி சிவபெருமானை அஞ்செழுத்தால் இருதய கமலத்தில் அர்ச்சித்து, அஞ்செழுத்தாற் குண்டலியின் ஓமஞ்செய்து, புருவமத்தியில் தியானித்தலாகிய சிவயோகமும் உலகிற்பரவுக என்பதூஉம் 'அரனுமமே சூழ்க' என்பதற்குப் பொருளாம் எனவுங் கூறுப.

மேல், ஆன்மாக்கள் அவரவர் வினைக்கேற்றவாறு பிறந்து, அவ்வினைப்பயனாகிய இன்பத் துன்பங்களை நுகரும் வாயிலாகப் பின்வரும் பிறவிக் கேதுவாய வினைகளைத் தாமே ஈட்டி, மேனுலகஞ்சென்று போகத்தையும், கீழுலகஞ்சென்று நரகத்தையும் அநுபவிக்கின்றனராகலானும், பொன்னுலக இன்பமும் கீழுலகத்துன்பமும் உயிர்கள் வீடுபேறெய்தற்கண் தடை செய்து நிற்றலிற் பொன்விலங்கும் இருப்பு விலங்கும்போலத் தம்முட் சமமுடையன என்பதே சைவத்துணிபாகலானும், உயிர்கள் மூவுலகத்தும் எவ்வகைத் துன்பமு மெய்தாது இவையனைத்திற்கு மேற்பட்ட முத்தியின்பத்தை எய்துகவென அவ்வுயிர்களை வாழ்த்தியருளிய '"வையகமுந்துயர் தீர்கவே" எனுந் திருநெறித் தமிழைச் சேக்கிழார் சுவாமிகள்

'சொன்ன வையக முந்துயர் தீர்கவே
யென்னு நீர்மை யிகபரத் திற்றுயர்
மன்னி வாழுல கத்தவர் மாற்றிட
முன்னர் ஞானசம் பந்தர் மொழிந்தனர்"

என விளக்கினர்.

(தொடரும்)

# புறநானூறும் தமிழர்மாண்பும்

[திரிசிரபுரம், ம. பெரியசாமிப் பிள்ளை]

## முகவுரை

அமிழ்தினும் இனிய நம் தமிழ்மொழியில் உள்ள 'புறநானூறு' என்னும் நூலின் வாயிலாக நாம் அறியக்கிடக்கும் பண்டைத்தமிழ் மக்களது மாண்பு என்பது இத்தலைப்பின் பொருளாகும்.

பண்டைத் தமிழர் மாண்பினை அறிதல் அவர் வழிவந்தோராகிய நமக்கு நம்முன்னோரைப் பற்றிய அறிவையும் நினைவையும், நாம் தொடங்கும் எவ்வகை நற்செயலுக்கும் வேண்டிய உணர்ச்சியையும் ஊக்கத்தையுந் தருமென்பது குறித்தே இக்கட்டுரை வரையப் பெறுகின்றது. இதற்குமுன்னுரையாகப் 'புறநானூறு,' 'தமிழகம்,' 'தமிழர்' என்னும் மூன்றினையும் பற்றி இங்கு வேண்டிய அளவு தொகுத்துக் கூறுதல் இன்றியமையாததாகும்.

புறநானூறு : நம் செந்தமிழ் மொழியின்கண் உள்ள பண்டைய நூல்களை நம்முதறிஞர் அவை நுதலும் பொருள் முதலியன பற்றி நால்வகைப் படுத்தினர். அவை, ஐம்பெருங்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு என்பன. இவற்றுள் எட்டுத்தொகையில் அடங்கியவை நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பனவாம். இதனை

"நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தா ரேத்துங் கலியே அகம்புறமென்
றித்திறத்த எட்டுத் தொகை"

என்னும் வெண்பா இனிதுணர்த்தும். இவற்றுள், புறப்பொருள் பற்றி எழுந்த நானூறு பாக்களால் ஆகிய தொகை

நூல் 'புறநானூறு' எனப் பெயர் பெற்றது. இது 'புறம்' என்றும் 'புறப்பாட்டு' என்றும் வழங்கப்பெறும். இனிப் புறப்பொருள் என்பது தமிழ்மொழியில் உள்ள எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணத்தில் பொருள் பற்றியதாகும். இப் பொருளிலக்கணம் வேறெந்த மொழிக்கும் இல்லாது தமிழ்மொழிக்கே உள்ள சிறப்பிலக்கணம். நமது ஆன்றோர் மக்கள் எய்தற் பாலனவாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப்பொருள் நான்கினையும் இலக்கணவரம்பில் அடக்கிப் பொருளிலக்கணம் எனக்கூறியுள்ளார். ஆகலின் தமிழின பெருமையைக் குறிப்பன வற்றுள் இது சிறந்ததாகும். இனி இப்பொருள் அகம, புறம் என இருவகைப்படும். அகமாவது ஒத்த அன்புடையராய தலைவனும் தலைவியும் தம்முட் கூடுகின்றகாலத்துப் பிறந்து அக் கூட்டத்தின்பின் இவ்வாறு இருந்ததெனப் பிறர்க்குக் கூறப் படாததாய் எப்பொழுதும் உள்ளத்துணர்வாலேயே நுகரப் படும் இன்பம். இன்பம்பற்றி அகத்தே நிகழும் ஒழுக்கம் அகம் எனப்பட்டது. புறமாவது மேற்கூறிய ஒத்த அன்புடைய ராலேயே அன்றி எல்லாரானும் நுகரப்பட்டு இவ்வாறு இருந்ததெனப் பிறர்க்குக்கூறப்படும் பொருள் ; அது அறமும் பொருளும் ஆம். அறனும் பொருளும்பற்றிப் புறத்தே நிகழும் ஒழுக்கம் புறமெனப்பட்டது. இப்புறப்பொருளும் அகப் பொருளும் சிறப்பாக அறம் பொரு ளின்பங்களைப் பற்றிக் கூறு மேனும் குறிப்பாக வீடுபேறு பற்றியும் கூறுநிற்கும் : என்னை ? 'தலைவனும் தலைவியும் இன்பம் நுகர்ந்து இல்லறம் நடாத்திப் பின்னர் அதன் பயனாகத் துறவறம் நிகழ்த்தி வீடு பெறுப' என் பதனை ஒல்காப் பெருமைத் தொல்காப்பியம் "காமஞ் சான்ற கடைக்கோட் காலை, ஏமஞ்சான்ற மக்களொடு துவன்றி, அறம் புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும், சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே" எனக் கற்பியலில் கூறுகின்றதாகலின். திருக்குறளில் இல்லறவியலின் பின்னர்த் துறவறவியலை வைத்த ஒத்துமுறை வைப்பும் இதனை வலியுறுத்தும். இனிக் காஞ்சித் திணை பல்வகை நிலையாமையைக் குறிப்பது என்பதை "பாங்

கருஞ் சிறப்பின் பல்லாற்றானும், நில்லா உலகம் புல்லிய நெறித்தே" எனத் தொல்காப்பியம் புறத்திணை இயலில் கூறுதலானும், யாக்கை செல்வம் முதலியவற்றின் 'நிலையாமை' உணர்ந்த பின்னரே 'துறவு,' 'மெய்யுணர்தல்,' 'அவாவறுத்தல்' என்பன கைகூடும் என்பதை அதிகாரவைப்பு முறையினும் அவ்வவா வறுத்தலே வீடுபேறு என்பதனை "ஆராவியற்கை அவா நீப்பின் அந்நிலையே, பேரா இயற்கை தரும்" என்னும் அருமைத் திருக்குறளினும் உள்ளங் கவரும் வள்ளுவர் வாய்மொழி விளக்குதலானும் புறப்பொருள் வீடுபேற்றையும் குறிப்பதாகக் கொள்ளல் வேண்டும். இதுபற்றிப் பின்னர் விளக்கிக் கூறுவன்.

தமிழகம் : இனித் தமிழகம் என்பது இது காலை நாம் காண்பதுபோல் சுருங்கிய எல்லையில் அல்லாது முற்காலத்தில் மிக விரிந்ததொரு நாடாக இருந்தது. இக்கொள்கை, இது போது நாம் காணும் இந்து சமுத்திரத்தின் பெரும்பகுதி முன்னர் நிலப்பரப்பாகவும் அந்நிலப்பரப்பின் பெரும்பகுதி தமிழ் நாடாகவும் இருந்ததென மேல்நாட்டாராய்ச்சியாளரும்* கீழ் நாட்டறிஞரும்† ஆய்ந்துரைத்தலானும், அத்தகைய நிலப்பகுதி கடலால் கொள்ளப்பட்ட செய்தி "பஃறுளியாற்றுடன் பன்மலையடுக்கத்துக், குமரிக்கோடும் கொடுங் கடல்கொள்க" எனச் சிலப்பதிகாரத்தினும் அதன் உரையினும் கேட்கப்படுகின்றதனாலும் வலியுறுத்தப்பெறும். இத் தமிழகத்தில் பாண்டிய மன்னர் பலர் இருந்து அரசு புரிந்து தமிழ்ச் சங்கங்கள் நிறீஇ தமிழ் மொழியை வளம்படுத்தி வந்ததன் பயனாக எழுந்த பன்னூறு தமிழ் நூல்களுள் கடல்கோள் முதலியவற்றால் அழிந்தனபோக எஞ்சியவே இது போது நமக்குக் கிடைத்திருப்பவையாகும். ஈண்டுக் கூறிய தமிழகமும் தமிழ்ச் சங்கமும் பற்றிய செய்திகள் தமிழ்ப் பேராசிரியர் திருவாளர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் எழுதியுள்ள கபிலர் என்னும் நூலினும், அணித்தாக வெளிவந்துள்ள கார் நாற்பது என்னும் நூலின் முகவுரையினும்

---

* Scott Eliot & others.　　† பா. வே. மாணிக்க நாயக்கர்.

ஆராய்ச்சி முறையால் விளங்கக் கூறப்பெற்றுள்ளன. ஆகலின் இவற்றின் விரிவை ஆண்டுக் கண்டுகொள்க. இனி, மேற்கூறிய கடல் கோள்கட்கு அஞ்சித் தப்பிப் பிழைத்த பாண்டிய மன்னர் தமிழ்ச் சங்கம் நிறுவப்பெற்றுள்ள தங்கள் தலைநகரங்களை அவ்வப்போது மாற்றியுள்ளார் என்பதும் தொல்காப்பியத்திற்கு முன்னரே பாடப்பெற்ற சில செய்யுள்கள் புறநானூற்றில் உள என்பதும் ஆராய்ச்சி யுரைகளில் கேட்கப்படுகின்றன. நமது கட்டுரைக்குக் கருவியாக எடுத்துக் கொண்ட புறநானூற்றில் காணப்படும் செய்திகள் பண்டைத் தமிழகத்தில் இருந்த தமிழரின் பண்புகளையும் குறிக்கும் என்பது உய்த்துணரற் பாற்று.

தமிழர்: தமிழ்மக்களுள் அறிவர் அல்லது அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் நான்கு பகுதியினர் மிகப் பழைய நாளிலேயே இருந்து வந்தனர் என்பது பண்டைத் தமிழ் நூல்களால் அறியக் கிடக்கின்றது. [தமிழரில் பதினெண்குடி யுண்டென்பது உலகவழக்கு.] இந்நால்வகைப் பெயரும் அவரவர் தொழில் அல்லது நிலைமை பற்றியே பிறந்திருத்தல் வேண்டும். நமது பொய்யாமொழிப் புலவரும் "அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும், செந்தண்மை பூண்டொழுகலான்" என அந்தணர் எனும் பெயர்க்குக் காரணம் கூறுப. இனிப் புறநானூற்றில் பாடினோருள்ளும் பாடப்பட்டோருள்ளும் இந்நான்கு பகுதியினரும் உளர் ஆகலின் அது கருவியாக அறியப்பெறும் மக்களின் மாண்பினை ஒரு பகுதியினரைப் பற்றியதாகக் கொள்ளாது தண்டமிழ் நாட்டில் இருந்த தமிழ்மக்களின் மாண்பு என்றே கொள்ளல் வேண்டும்.

## பொருளுரை

தமிழர் மாண்பு என்னுஞ் சொற்றொடரில் மாண்பு என்னுஞ் சொல்லுக்கு நற்குண நற்செய்கைகள் என்பது பொருளாகும். ஆகவே கல்வி, அறிவு, செல்வத்தாற் பயனெய்தல், அன்பு, ஒழுக்கம், ஆண்மை, ஒப்புரவு, தாளாண்மை, நட்பு,

[illegible], கற்பு, வீரம், உயரிய குறிக்கோள் முதலிய எல்லாம் மாண்பு என்பதனுள் அடங்கும். இவையிற்றை ஒவ்வொன்றாக வகுத்துரைப்பன்.

கல்வி: கல்வி என்பது கல் என்னும் பகுதியடியாகப் பிறந்த தொழிற்பெயர். 'கல்' என்னும் வினைக்கு, குவிந்து இறுகியுள்ள மண்போன்றதொரு பொருளை 'மலருமாறு தளரச் செய்' என்பது பொருளாகும். ஆகவே அறியாமையால் குவிந்து இறுகியுள்ள உள்ளத்தை மலர்த்தி அறிவை வளர்த்தலே கல்வி என்பது. இதற்குக் கருவி சிறந்த நூல்களே ஆகலின் அந்நூல்களைக் கற்றலே கல்வி யென்பதன் முடிந்த பொருளாகும். இனி "இருவகைப் பொருள்கள் கல்வி ஏற்ற செல்வங்களாமே" (நிகண்டு) எனச் சிறப்பித்துக் கூறப் பெறும் கல்விப்பொருள் செல்வப் பொருள் என்பவற்றுள் கல்வி முதன்மையானது. எனனை? இக்'கல்வி' உறுதிப்பொருள்கள் நான்கினையும் பயக்கும் என்பதை "அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்" என்று குமரகுருபர சுவாமிகளும், அழியாத உயர்ந்த செல்வம் கல்வி, மற்றவை அத்தகைய செல்வமல்ல என்பதை "கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு, மாடல்ல மற்றை யவை" என்று செந்நாப் போதாரும் கூறுதலான் என்க.

இத்தகைய கல்வி பண்டைத் தமிழரால் மிகவும் மதிக்கப் பெற்று வந்தது. இதற்குத் தமிழ்ச் சங்கங்களைப் பற்றிக் கேட்கப் படும் செய்தியே சான்றாம். மற்றும், உலகத்தைப்பற்றிக் கூறவந்த ஒரு அறிஞர் 'கல்வி விளக்கமுடையார் இருப்பது உலகத்திற்குச் சிறப்பு' எனக் கொண்டு "ஒளியோர் பிறந்த இம்மலர்தலை உலகத்து" (புறம்-௧௮) என்று கூறுகின்றார். கல்வி பண்டைய அரசர்களாலும் மிகவும் நன்கு மதிக்கப்பாடு எய்தியதுடன் துறைபோகப் பயிலப்பெற்றும் வந்தது. பாண்டியன் ஆரியப்படைதந்த நெடுஞ் செழியன் என்னும் அரசன் 'உடன் பிறந்தார் பலருள்ளும் கல்விச்சிறப்பால் தாயும் மனம் வேறுபடுவள், ஒருகுடியிற் பிறந்த பலருள்ளும் ஆண்டிளை மூத்தவனை மதியாது கல்வி அறிவுடையான் கூறியாங்கே அரச

னும் நடப்பான், கீழ்க்குலத்தான் கற்றவனாயின் அதன் பொருட்டு மேற்குலத்தானும் அவனை வழிபடுவான், ஆகலின் ஆசிரியர்க்கு உற்றுழி உதவியும் மிகுந்தபொருள் கொடுத்தும் வழிபாடு செய்தும் கற்றல் நன்று' என்பதை

"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே
பிறப்போரன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயும் மனந்திரியும்
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னா தவருள்
அறிவுடை யோனா றரசும் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப் பாலொருவன் கற்பின்
மேற்பா லொருவனும் அவன்கட் படுமே" (புறம்-௧௮௩)

எனக் கூறுகின்றனர். அரசனெவ்வழி குடிகளவ்வழி ஆகலின் இனி இக்கல்வியைப் பற்றி விதந்து கூறவேண்டா.

(தொடரும்)

---

# சிறுதெய்வ வழிபாடு

[காரைக்குடி. அரு. சோமசுந்தரன்.]

சைவ நன்மக்களாகிய நமக்குச் சிவபெருமானே முழுமுதற் கடவுளாவார். அவர் ஒருவரையே நாம் என்றும் வணங்கி இன்புறக் கடமைப்பட்டிருக்கின்றோம். அவ் அண்ணலாரை யன்றி வேறொரு தெய்வத்தைக் கனவினும் வணங்க நமக்கு விதியில்லை. கற்புடைய நங்கைக்குக் கணவன் ஒருவனே யாதல்போல், ஒரு சமயஞ் சார்ந்தார்க்கு ஒரு தெய்வமே கோடற்கு உரியதாகும். இஃதே நமது சைவ நன்னூல்களின் முடிந்த கருத்தாகும்.

ஆனால் இந்நாளில் நமது சைவப் பெருமக்களின் நிலை எவ்வா றிருக்கின்றது? பெரும் பகுதியினர்க்கு, "சிவபெருமான் ஒருவரே நமது முழுமுதற் கடவுள்" எனும் உண்மையே தெரியாது. உணர்ச்சியின்றிப் பல தெய்வவழிபாடு புரிவோரே பெரிதும் மல்கியிருக்கின்றார்கள். உணர்ச்சி யுடையவர்களிற்கூடப் பலர் பயந்து எல்லாச் சிறு தெய்வங்களையும் வணங்கிக் காணிக்கை செலுத்துகிறார்கள்.

நமது சைவத் திருநாட்டிலே இதுகாலை, கோடிக் கணக்கான சிறு தெய்வ வெங்கோயில்கள் மிகுந்த புகழுடையனவாக விளங் குகின்றன. நம்மக்கள் பலருக்குச் சிறுதெய்வ வழிபாட்டிலேயே மிக அழுத்தமான பற்று இருக்கின்றது. சிறு தெய்வ வழி பாடே சீக்கிரம் பயன் தருவதெனப் பல ஏழைமக்கள் எண்ணு கிறார்கள். சுடலை, மாடன், காட்டேறி, ராக்காயி, பேய்ச்சி, இசக்கி, வழிமறிச்சான் முதலிய பேய்களே பலருக்குப் பெருங் குலதெய்வங்களாகப் பொலிகின்றன. இதன் சீர்மையினைச் செம்மையாய் உணராமையினாலேயே, பல அறிவிலாத மக்கள் சிறு தெய்வங்களைக் குலதெய்வங்கள் என எண்ணி, அவைகளுக் குக் கொடையாக எளிய உயிர்ப்பிராணிகளைப் பலியிட்டுப் பாழும் நரகிற்கு ஆளாகின்றார்கள். மணியடிக்கும் இடங்களில் எல்லாம், சாம்பிராணி போடப்பெறும் இடங்களிலெல்லாம் நமது சைவர் கள் வணங்குவது நமது சமயத்திற்கே ஓர் பேரிழவாக விருக் கின்றது. இதனை யாதாரமாகக் கொண்டு புறச்சமயத்தவர்களிற் பலர் நம்மைப் பல ஆயிரக்கணக்கான தெய்வங்களை வழிபடு வோர் என இகழுகின்றார்கள். இத்தனை கோடி தெய்வங்கள் பெயர்பெற்று விளங்குவது உருவ வழிபாட்டினையே பெரிய தோர் விளையாட்டாகக் கொணர்ந்து விடும்போலிருக்கின்றது. எனவே, இது போழ்து சைவப் பெருமக்கள் கண்விழித்துக் கொண்டு நன்னெறியிற் செல்லுதல் வேண்டும்.

சிறுதெய்வ வழிபாடு மறக்கப்படுதல் வேண்டும். சிறு தெய்வ வணக்கம் நிலை பெற்றிருக்கும் வரையில் சைவ நன்னெறி ஒருநாளும் நன்கு வளர இயலாது. இஃதோர் பெருங் களையாக

வளர்ந்து சைவநன்னெறியின் பெருமையைக் குறைத்து வருகின்றது. ஒவ்வொருநாளும் ஒவ்வோர் சிறுதெய்வம் தோன்றிக் கொண்டிருக்கின்றது. ஒவ்வொரு ஊரிலும் ஏராளமான சிறுதெய்வங்களிருக்கின்றன. சில இடங்களில் பேய்கள் பெருந்தெய்வங்களாக விளங்குகின்றன. அறிவிலாத மக்களிற் சிலர் விதி முடிவதற்கு முன்னரேயே தம் உடலை வலிய நீத்துக் கொண்டு விடுகின்றார்கள். அவர்களுடைய ஆவிகள் அவ்விதி முடியும் வரையில் இவ்வுலகில் பேய்வடிவமாகத் திரிகின்றன. அறிவிலாத மக்கள் அவைகளுக்கு வீணாகப் பயந்து அவைகளைத் தெய்வமாகப் போற்றி மகிழ்கின்றார்கள். இத்தகைய பேய்களுக்குச் சில இடங்களில் கோயில்கள் கட்டப்பட்டு வெகு ஆர்ப்பாட்டமாக விழாக்களும் நடத்தப்படுகின்றன. அவ்விழாக்களில் எல்லையில்லாத உயிர்ப்பிராணிகளும் பலியிடப் பெறுகின்றன. காரணம் பயமேயாகும். பூவும் நீரும் சோறுங்கொண்டு சிவவழிபாடு செய்யும் செந்தண்மை பூண்ட மக்களாகிய நாம இப்பேய்களுக்கு ஒரு நாளும் பயப்பட வேண்டியதில்லை. புளிகொம்பைப் பிடித்திருப்பவன், ஒரு வேளை கீழே விழுந்து விடுவோமோ என எண்ணி வீண்பயங்கொண்டு ஏனோ துன்புறுதல் வேண்டும்?

இப்பேய்க் கணங்களையும் எல்லா வுலகங்களையும் படைத்துக் காத்து அழிக்கும் நடங்கருணைப் பெருங்கடலாகிய நமது பரமசிவனுக்கு நம்மைக் காப்பாற்றும் ஆற்றல் இல்லையா? திருநீறுங் கண்டிகையும் பூண்டு திருவைந்தெழுத் தோதும் அரனடியவர்களுக்கு முன்னர் இப்பேய்கள் யாதுசெய்ய முடியும்? கைகட்டி வாய்பொத்தி வணங்கி நிற்பதைத்தவிர வேறொன்றும் செய்ய இயலாது. சிவஞானத் தெளிவு இன்மையினாலேயே நம் மக்களிற் பலர் பேய் வழிபாடு புரிகின்றார்கள். சில இடங்களில் போரில் புறங்கொடாது போர்புரிந்து வென்றி மாலை புனைந்த வீரர்களெல்லாம் பெருங் கடவுளர்களாக விளங்குகிறார்கள். பண்டை நாளில் நமது தமிழ்மக்கள் வீர உணர்ச்சி பெறும் பொருட்டு, அமரில் இறந்த வீரர்களுக்கு நடுகற்கள் நட்டு, மதில்கள் எழுப்பி, விழாவெடுத்து மகிழ்ந்து வந்திருக்கி

றார்கள். இவ்வாறு மகிழ்வுற்ற மக்கள் போர்த்தொழில் புரியும் சாதியினரேயாவர். இவர்களும் இவ்வீரர்களைத் தெய்வங்கள் என்ற முறையில் வணங்கிவரவில்லை. வீரர்கள் என்ற முறையிலேயே வணங்கிவந்திருக்கிறார்கள். இதன் விரிவைச் சிலப்பதிகாரம் புறநானூறு முதலிய பழந்தமிழ் நூல்களிற் பரக்கக் காணலாம். ஆனால் இந்நாளில் இவ்வீரர்களைப் பெருந்தெய்வங்களாக வைத்து, உயிர்ப்பலியிட்டு வெறியாட்டயர்ந்து எல்லாச் சாதியினரும் வணங்குகின்றார்கள்.

மதுரைவீரன் என்பவனுடைய வரலாற்றை அனைவரும் கேட்டிருப்பார்கள். அவன் மதுரைமாநகரத்தில் திருமலைநாயக்கர் காலத்தில் ஓர் பெரிய வீரனாக மிளிர்ந்து போர்க்களத்தில் பல வெற்றிமாலைகள் புனைந்தவன். அவன் உருவச்சிலை மதுரையில் நாட்டப்பெற்றிருக்கின்றது. இது போழ்து அவ்வுருவச்சிலையை அறிவிலாத மக்களிற் பலர் தெய்வமாகவேயெண்ணி வணங்கிவருகிறார்கள். திருநெல்வேலி ஜில்லாவில் மாடன் வழிமறிச்சான் என்றவர்களுக்குக் கிராமங்கடோறும் நடுகற்கள் நாட்டப் பெற்றிருக்கின்றன. அக்கற்களெல்லாம் இப்பொழுது மக்களால் பெருந்தெய்வங்களாக மதிக்கப்பட்டு வருகின்றன. அவைகளின் பெயரைச்சொல்லி ஆயிரக்கணக்கான ஏழைப்பிராணிகள் பலியிடப் பெறுகின்றன. அந்தோ! கொடுமை! கொடுமை!!

சிவநெறிபற்றி வாழவேண்டிய மக்கள் பேய்களையும் வீரர்களையும் கூர்த்த மதியின்மையால் கடவுளர்கள் என நினைத்துக் கொலைத்தொழில் புரிந்து தீய வழிபாடு செய்து வருதலை உன்னும் பொழுது எளியேன் மனம் பெரிதும் பதைக்கின்றது! இன்னும் சில சிறுதெய்வ வெங்கோயில்களிலே ராக்காயி சின்னி முதலிய பல்வகைப்பட்ட பெண்பேய்களும், செங்கடாக்கறுப்பன், உளிவீரன், பன்றி வீரன், மாப்பிள்ளை வீரன் முதலிய வீரர்களும் எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளர்களாக வைத்து வணங்கப்படுகிறார்கள். இத்தகைய பேய்களின் பெயர்களும் வீரர்களின் பெயர்களும் நமது நாட்டிலே எல்லையில்லாது விளங்

குகின்றன இவ்வாறு பேய்களையும் வீரர்களையும் பெருந் தெய்வங்களாக வைத்து வழிபடுவதால், வழிப்டுவோரும் வழிபடப் பெற்றவர்களும் பெரிதும் 'இறைசிவனுடைய தண்டனைக்கு ஆளாவார்கள்.

இத்தகைய பேய்களையும் வீரர்களையும் தவிர வேறுபல சிறு தெய்வங்களும் உண்டு. கல்வியறிவின்மையால் கடவுள் இலக்கணத்தை யுணர இயலாக் கீழ்மக்கள், மந்திர தந்திரமின்றி யாதானு மோர் உருவத்தை ஓர் மரத்தடி தாபித்து, தமக்கு விருப்பப்பட்ட பெயரை அதற்கு இட்டு, தாம் விரும்பியுண்ணும் ஊனையும் கள்ளையும் அதற்குப் படைத்து வெறியாட்டயர்ந்து வழிபாடு செய்கிறார்கள். மருளாடி (பேயாடி) என்பவன் அத் தெய்வத்தின் பிரதிநிதியாக வேடம் பூண்டுகொண்டு ஆடிக் குதித்து அலறி அன்பர்களுக்கு வரங்கள் கொடுக்கின்றான். இவன் மாயவலையில் அகப்பட்டு உயர்ந்த மக்களும சிறு தெய்வங்களுக்கு உயிர்ப்பலியிட்டு வணங்குகின்றார்கள். எனவே, ஊர் முழுவதும் இத்தெய்வங்களுக்குச் செல்வாக்கு அதிகமாக உண்டாகி விடுகின்றது. ஆகவே, இவைகளைச் சிறுதெய்வங்கள் என்று அழைத்தாலே நம்மைப் பல ஏழைமக்கள் கோபங் கொண்டு அடிக்கவந்து விடுகிறார்கள். இத்தெய்வங்களுக்கு உயிர்ப்பலியிடுதலைத் தடுக்கச் சென்றாலும் அவர்கள் கோபாவேசங்கொண்டு எதிர்ப்பிரசாரஞ் செய்கிறார்கள். விளையாட்டு வினையாய் முடிந்தது போல், கீழ் மக்கள் செய்து வந்த அறிவிலாத செயல்களெல்லாம் உயர்ந்த மக்களும் நற்செயல்கள் என எண்ணி இடர்ப்படும் வண்ணம் உரம் பெற்று ஒளிர்கின்றன. இக்கொடிய களையைக் களையாது வளர விட்டுவிட்டு வாளா சைவசித்தாந்த தத்துவங்களின் சிறப்பைப் பற்றிப் பேசிக்கொண்டு மகிழ்வுற்றிருப்பதால் எட்டுணையும் பயனின்று. பெயரளவில் நம்மக்கள் சைவர்களாக விளங்குகிறார்களே யொழியச் செய்கையில் சைவர்களாக விளங்கவில்லை. சைவர்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பெயர் சிறு தெய்வ வழிபாடுஞ் செய்வோரேயாவர். நூலறிவுடைய் நுண்ணறிவாளர்களிற்கூடப் பலர் தம்வீட்டுப் பெண்மக்கள் பேச்சைக் கேட்டுச்

சிறு தெய்வ வழிபாடு புரிகின்றார்கள். எனவே, நாம் இனிமேல் உறங்குதல் கூடாது. எழுந்து வேலை செய்தல் வேண்டும்.

முதலாவது யாண்டும் சீவகாருணியப் பிரசாரஞ் செய்து, மக்களுக்கு அறிவையூட்டி உயிர்ப்பலியிடுங் கொடுமையைத் தடுத்தல் வேண்டும். சமயப் பிரசாரஞ் செய்து சிவஞான அமுதத்தை அனைவருக்கும் ஊட்டுதல் வேண்டும். சிவவழிபாட்டின் நலன்களை நன்கு எடுத்து உரைத்து, எல்லோருடைய உள்ளத்தையும் உறுதிப்படுத்துதல் வேண்டும். நமது சைவ நன்மக்களுக்குப் பெருஞ் செல்வாக்கு உள்ள இடங்களில் இருக்கும் சிறுதெய்வ வெங்கோயில்களை யெல்லாம் விநாயகர் கோயில்களாகவும், முருகன் கோயில்களாகவும் மாற்றுதல் வேண்டும். யாண்டும் சிவமணமும் சீவகாருணியமணமும் செழித்து ஓங்குமாறு செய்தல் வேண்டும். முதற்கண் அறிவுடையவர்கள் அனைவரும் சிறுதெய்வ வழிபாட்டை அடியோடு நிறுத்திவிடுதல் வேண்டும்; சிவ வழிபாட்டினையே பற்றுக் கோடாகக் கைக்கொள்ளுதல் வேண்டும் அறிவுடையவர்கள் அறிவிலாதவர்களுக்கு எடுத்துக் காட்டாக முன்னின்று அறிவுச்சுடர் கொளுத்துதல் வேண்டும். சைவப்பெருமக்கள், பலதிறப்பட்ட தீய சிறு தெய்வங்களையும், பேய்களையும், வீரர்களையும் பெருந் தெய்வங்கள் என எண்ணி வழிபடுவோர் எனும் இழிவுரை நீங்குதல் வேண்டும். எங்கணும் சிவமுழக்கம் நிறைதல் வேண்டும். அன்பு நெறி தழைத்து ஓங்குதல் வேண்டும்.

---

# முருகன் முறையீடு

[யாழ்ப்பாணம் க. சோமசுந்தரம் பிள்ளை]

திங்கள் புனைந்த சிவனார் திருமகனே
சங்கத தமிழ்ப்புலவா சத்தி வடிவேலா
கொங்கைக் கலசக் குறத்தி மணவாளா
தூங்கும் விழியுடையா யென்னிடும்பை பாராயோ.

பொன்னிரண்டு மேவும் பொலந்தருவே போரசுரன்
முன்னிரண்டு கூறாய் முடிய முனிந்தோனே
என்னிரண்டு கண்ணே யிறைவாவென் னின்னுயிரே
பன்னிரண்டு கண்ணுடையா யென்னிடும்பை பாராயோ. ௨

பிச்சைப் பெருமா னருளும் பெரியோனே
அச்சத்தை நீக்கு மயில்வேற் கரத்தோனே
பச்சைத் தெரியல் திகழுந்திருமார்பா
பச்சைமயில் வாகனனே யென்னிடும்பை பாராயோ. ௩

தங்கச் சிலைபிடித்த தையலிடப் பாகருக்குந்
துங்கக் குடமுனிக்குஞ் சொன்ன குருநாதா
கங்கைக் கொருமகனே கார்த்திகைநாள் மைந்தாவோ
எங்குஞ் செவியுடையா யென்னிடும்பை கேளாயோ. ௪

தேவர்சிறை மீட்டருளுந் தேவாதி தேவனே
காவற் கடவுள் மருகாவென் கண்மணியே
மூவா முதல்வா முருகா முருகாவோ
சேவற் கொடியுடையா யென்னிடும்பை தீராயோ. ௫

முன்னான்கு தோளுடையாய் முற்றுமுணர் முன்னோனே
பொன்னாட் டிறைவன் புதல்வி மணவாளா
கொன்னா ரயில்வேற் குமரா குருபரனே
என்னாவி நாயகனே யென்னிடும்பை தீராயோ. ௬

வட்டக் கமலத் தயனை மறைவினவிக்
குட்டிச் சிறையிருத்துங் கோனே குமரேசா
கட்டிக் கரும்பே கனியே கடலமுதே
வெட்டிப் பழையவினை வேதனைகள் தீராயோ. ௭

விண்டுவும் நான்முகனும் விண்ணோர் விறல்வேந்தும்
பண்டுகை கட்டிப் பணிந்து குறையிரப்ப
மண்டுமட லசுரன் மாயவடி வேலெறிந்த
அண்டர் பிரானே யடியேற் கருளாயோ. ௮

இல்லா விடும்பைக் கிளைப்பே னிரும்பிணியீ
பொல்லா விடும்பை பொறுக்க முடியாதேன்
அல்லார் மலவிடும்பை யையா பொறுப்பேனோ
எல்லா விடும்பைகளு மேகவரு ளீயாயோ. ௯

பெம்மான் மகனே பெரியோர் செழுநிதியே
அம்மான் மருகா வடைந்தோர்க் கருந்துணையே
கைமாமுகத்துக் கடவுட் கிளையோனே
இம்மாய வாழ்க்கை யிடும்பை களையாயோ. ௰

ஆறு முகனே யமரர் பெருவாழ்வே
கூறுபட வெஞ்சூரைக் கொன்ற வடிவேலா
ஏறுமயில் வாகனனே யெந்தை பெருமானே
வேறுபடு வினைகள் வீட்டியரு டாராயோ. ௧௧

நாராயண னன்று நான்முகனுந் தானன்று
சீரார் மதிமிலைந்த செல்வனுமன் றிக்கலியில்
ஆராயின் நீயே யருட்கடவு ளாகுமென்பர்
வாராய் தமியே னிடர்கெடுக்க வாராயோ. ௧௨

சொல்லுக் ககத்துக் கடங்காச் சுடரொளியே
அல்லுக் கணிகூந்த லம்பிகைதன் பாலகனே
மல்லுக் கணிந்துவரும் மாமலத்தை வீட்டியுன்றாள்
இன்றுக் குணித்த விருத்தனிங்கு வாராயோ. ௧௩

குன்று பிளந்த குமரா குருமணியே
வென்றி மயில்வீரா விசாகப் பெருமானே
நன்று புரியுமுயிர் நாயகனே யென்னிடும்பை
இன்று கெடுக்க விரங்கியிங்கு வாராயோ. ௧௪

நெஞ்சம் நெகிழ்ந்துருக நீர்வார மெய்சிலிர்ப்பக்
கஞ்சங் கரங்கூம்பக் காற்பெயர்ந்து கூத்தாட
அஞ்சொற் றமிழ்மாலை பாடுமடியார்க் கருள்வாய்
வஞ்ச னெனக்கு மருளமனங் கொள்ளுதியோ. ௧௫

வானோர்க் கருள்சுரந்த வள்ளலே வான்கரும்பின்
தேனார் சுவையே தெவிட்டாத தெள்ளமுதே
மானா பரணா மயிலேறும் மாமணியே
கோனே யெளியேன் குறைதிரப்ப வாராயோ. ௧௬

சிந்தை தனையுருக்கித் தித்தித்து வட்டாது
வந்து நிறையும் மகிழ்ச்சிப் பெருக்காறே
சந்துங் கடம்பு மணியுந் தடந்தோளா
எந்தை பெருமா னிடர்தணிக்க வாராயோ ௧௭

இக்கு மொழியுமையா ளீன்ற விளங்களிறே
அக்கு மணியணியு மையா வருமருந்தே
கொக்குத் தறித்த குமரா குருமணியே
சிக்கு வலையறுக்கச் சேவகநீ வாராயோ. ௧௮

மாமத் தளைபுக்க வாறுமனஞ் சுழன்று
காமக் கனலிற் கலங்கு மடியேனை
வாம மணிக்கரத்தால் வாரியெடுத் திருதாட்
சேம வருட்கரையிற் சேர்க்கவினி வாராயோ. ௧௯

மாங்கனிக்காக வுலகுவலமாக வந்த
தீங்கனியே ஞானத்திறளே யெஞ்செல்வமே
வாங்குசிலை நுதலாள்வள்ளி மணவாளா
தாங்குகிலே னிடும்பை சண்முகநீ வாராயோ. ௨௰

வற்றாப் பெருங்கருணை வாரியே வார்குழலார்
முற்றாத் தனங்கள் முயங்கும் மணிமார்பா
பற்றா யினைவிடுத்தோர் பற்றும் பழம்பொருளே
கற்றார்க் கருளுங் கலைமுருகா வாராயோ. ௨௧

வீரவே லாயுதனே வெற்றிமயில் வாகனனே
சூரசங் கார சுவாமி குருநாதா
கூருங் கருணைக் கடலே குணமலையே
பாரத் துயரம் பறிக்கவிங்கு வாராயோ. ௨௨

ஏனற் புனத்தினிதண்மே லினிதிருந்த
மானைப் பிடிக்க வனவேட னாகிவந்த
கோனே குறிஞ்சிநிலக் கொற்றவனே சற்றெனினும்
ஏழை வடியேற் கிரங்கா திருப்பதுவே. ௨௩

மன்னு மிருளழிக்க வைவேற் படையிலையோ
முன்னை வினைகெடுக்க முன்னான்கு தோளிலையோ
அன்ன மயிலிலையோ மாறா வருளிலையோ
இன்னும் வராத விதமேதோ வறிகிலனே. ௨௪

அல்லற் பிறவி யடைந்து வருந்துகின்ற
செல்ல லமையு மமையுஞ் சிவகுமரா
தொல்லை யருளுருவங் காட்டித் துயர்நீக்கி
வல்லை யெனையாள வருவாய் வருவாயே. ௨௫

சேந்தா முருகா தினைப்பூம் புனக்குறிஞ்சி
வேந்தா விசாகா செவ்வேளே விளங்கிழையார்
காந்தா கடம்பா கடையேன் வினைகெடுத்துன்
பூந்தா மரைத்தாள் புகுத்த வருளாயோ. ௨௬

கந்தா முருகா கடம்பா கதிர்வேலா
நந்தா வருட்கடலே ஞானச் செழுஞ்சுடரே
எந்தா யிறைவா யினியா யுலகேழுந்
தந்தா யிடும்பைகெடத் தாமரைத்தா டாராயோ. ௨௭

ஐயா வரசே யமுதே யருள்சுரக்குங்
கையா றிரண்டுடைய கற்பகமே யிக்கலியில்
மெய்யான தேவே செவ்வேலா வுமைபாலா
செய்யா யிடும்பைகெடச் சீரருளச் செய்யாயோ. ௨௮

வேலா குமரா விமலாமெய் யன்பரனு
கூலா முருகா குழகா குலவுதண்டைக்
காலா கருணா கரனே கடப்பமலர்
மாலா பரணா வருவாய் வருவாயே. ௨௯

வாளா பொழுது கழித்தேன் மலவினைகட்
காளாய்ப் பிறந்து மிறந்து மலமந்தேன்
தோளா றிரண்டுடைய சோதியே தூயமலர்த்
தாளா விதுதருணந் தண்ணளிசெய் தாளாயோ. ௩௰

ஆணவச் சூர்கீறி யறிவைச் சிறைநீக்கி
மாணலஞ்சே ரின்பவள வாணுடு நாணேறிப்
பேணி யரசாளும் பெரியவரந் தந்தருள்வாய்
தாணுவே யுன்றன் சரணஞ் சரணெனக்கே. ௩௧

முருகன் முறையீடு முற்றிற்று

நெஞ்சுருகப் பாடுதெருள் நீடுகச்சி யப்பனலேன்
அஞ்சொற் புகழ்கூ றருணகிரி நாதனலேன்
செஞ்சொன் முருகாற்றுச் செப்புதமிழ்க் கீரனலேன்
வஞ்ச னெனதுரையுங் கேட்க வருகுதியோ.

---

# ஓவியம்

[T. S. நெல்லையா]

"ஓவியம்" என்னும் சொல் சித்திரம், பிரதிமையெனப் பொருள்படும். சித்திரம் எனப்படுவது சித்திரிக்கப்பட்டவொன்றாகும். இச் "சித்திரம்" என்பதற்கான அநேகம் பொருள்களுள் சிறப்பு, பேரழகு, நூதனம் என்பனவும் மெய்போற் பொய் கூறலும் சிறந்தவைகளாகும். இனி, ஒன்றைப்போல் நம்மாலமைக்கப்பட்ட இன்னொன்று "பிரதிமை" யெனப்படும். ஆகவே இயற்கைப் பொருள்களின் அமைப்புக்களை வியந்து கண்ட பழக்கத்தினாலும், தன் சுகநலத்திலேயே நோக்கமுடைய மனிதன் தன்னுடைய மன உழைப்பினாலும் ஒரு கற்பனை செய்கிறான். இவ்வித மனோகற்பனை உண்டானதும் கற்பித்த பொருளை முடித்தற்கான கருவிகள் இன்னின்னபடி இருக்க வேண்டுமெனத் தீர்மானித்து அவ்விதம் முயற்சி செய்து உண்டு

பண்ணிக்கொள்ளுகிறான். இவற்றிற் கெல்லாம் மனிதனுக்குள்ள இயற்கையறிவின் நிகழ்ச்சியே காரணமாகும். கண்டதைக் கண்டபடியாயும் கற்பனையாயும் உருப்படுத்தி நாம் காணும் தோற்றமே ஓவியமாகும். இவ்விதம் காணும்படியான சக்தி ஒவ்வொருவருக்கும் இயற்கையில் அமைந்து கிடக்கின்றது. ஆனால், அதை ஒன்றிலமைத்துப் பிறருக்குக் காட்டும் வுன்மை சிலருக்கே உண்டு. அத்தகைய திறனுடையார்தாம் ஓவியரெனப் படுவர்.

இவ்வோவியர் தம்மனோ கற்பனையா லாக்கப்பட்ட ஒன்றை உள்பொருளைப் போல ஒன்றிலமைத்துக் காட்டுவதாலேயே மெய்போற் பொய்கூறலும் "சித்திரம்" எனலாயிற்று.

கண்டதைக் கண்டபடியே சித்திரித்துக்காட்டும் ஆற்றலே இயற்கையில் நாம் காணும் அழகிய காட்சிகளிற் காணப்படும் உருவங்களையும் அவற்றிலுள்ள நிறபேதங்களையும் அவை பார்ப்போனுடைய கண்களுக்கு அவனிருக்குமிடத்திலிருந்து நோக்குங்கால் எப்படித்தோன்றுமோ அப்படியே அவற்றைச் சித்திரித்துக் காட்டும் ஆற்றலே, பெரும்பாலும் மேனாட்டாரால் விருத்தி செய்யப்பட்டிருக்கிறது. அதாவது சிறுபிள்ளைகள் அச்சுக் காப்பிப் புத்தகங்களின் பக்கங்களில் தலைப்பில் அச்சிட்டிருக்கிற எழுத்துக்களைக் கவனித்துப்பார்த்துத் தாங்களும் அவ்வாறே எழுதுவது போல்; இயற்கையிற் காணும் அழகிய தோற்றங்களை அப்படியே சித்திரிக்கு முறையே மேனாட்டார் முறையாகும். ஆனால் இத்தகைய முறை அத்தனை சிலாக்கியமானதெனச் சொல்ல இடமில்லை. ஏனெனில், எத்தனை காலம் மனிதன் பழகினாலும் கணந்தோறும் புதிதுபுதிதான வர்ணங்களோடும் அமைப்புக்களோடும் மாறிக் கொண்டிருக்கிற இயற்கையின் எல்லையற்ற காட்சிகள் அவனுக்குப் புதிதுபுதிதாய்த் தோன்றி அவனைப் பிரமிக்கச் செய்கின்றன. அளவில்லாத ஆற்றலுடைய சர்வேசுரனாலாக்கப்பட்டுக் காலம் என்னும் கருவியாற் புதுப்பிக்கப்படும் இவ்வுலகின் முடிவற்ற பலவகைப்பட்ட காட்சிகளை யாவரே உள்ளபடி சித்திரிக்க வல்லார்

ஆகவே, கண்டதைக் கண்டபடியே சித்திரிப்பது ஓவியத் தொழிலின் முடிந்த நிலையன்று. இஃது அத்தொழிலின் முதற் படியேயாகும். இது யுத்தப்பயிற்சி செய்வோன் சிலம்பம் பழகுவது போலும், சங்கீதம் கற்பவன் சுரசாதகம் செய்வது போலுமேயன்றி வேறல்ல. உண்மையில் யுத்தம் புரிதலும் சங்கீதம் பாடுவதும் இவற்றிற்கு மேலாயும் வேறாயும் எப்படி இருக்கின்றனவோ, அப்படியே உண்மையான ஓவியத்தொழில், இயற்கையைச் சித்திரித்துப் பழகுவதின் பயனாய், அதற்கு மேலாய் உள்ளதாகும்.

இந்த மேலான முறையை மேனாட்டார் நம் இந்திய நாட்டில் காலெடுத்து வைப்பதற்குமுன் கனவிலுங்கூட எண்ணியவரல்லரென்பது சற்று ஆராய்வாருக்குத் தெளிவாகும். சுமார் அரை நூற்றாண்டுகளுக்கு முன் உள்ள ஐரோப்பிய நாட்டின் சிற்பவேலைகளைக் கவனித்தால் இவ்வுண்மை நன்கு விளங்கும். பின், காலஞ் செல்லச் செல்ல, அவர்கள் பல இடங்களிலும் சென்று, முக்கியமாய்ப் பழைய காலத்திலேயே நாகரிகமடைந்திருந்த நமது இந்தியா, எகிப்து முதலிய தேசங்களிலுள்ள பிரமாண்டமான கட்டிடங்களையும் அவையமைக்கப்பட்டிருக்கும் அபூர்வமான முறையையும் அவற்றில் சித்திரிக்கப்பட்ட அழகிய உயர்தர வேலைப்பாடுகளையும் கண்டு மேம்பட்டிருக்கிறார்களெனச் சொல்லுவதற்குத் தக்க ஆதாரங்கள் இன்றைக்கும் நாம் காணலாம். ஐரோப்பிய நாடுகளின் தலை நகரங்களிலுள்ள பிரமாண்டமான கட்டிடங்கள், விசித்திர வேலைப்பாடுகளுள்ள அவர்களுடைய தேவாலயங்கள், யாவும் பெரும்பாலும் ஒருமுகமாய் அபிவிருத்தி செய்யப்படாத, கலப்புவாய்ந்த, பல வகைப்பட்ட வேலைப்பாடுகளுள்ளனவாய்க் காணப்படுகின்றன. நமது இந்திய நாட்டிலும் அப்படித் தானேயிருக்கின்றனவென்று சட்டென்று சிலர் எண்ணிவிடக்கூடும். என்றாலும், நூதனமான சமயத்தாரும், ஜாதியாரும் நமது நாட்டிற்குட் புகுந்து, நமது பூர்விக நாகரிகத்துடன் கலந்து வாழ்ந்த கால எல்லையைத் தாண்டி அப்பாலே செல்லுவாருக்கு உண்மை விளங்காமற்போகாதென்பது திண்ணம்.

நமது தேசத்திற் படையெடுத்து வந்து அதன் உயர்வைச் சீரழித்துப் பாழாக்கிய ஜாதியார் அநேகர் பல தடவைகளாய்ப் படையெடுத்து ஆகாயத்தையளாவிய ஆலயங்களை யெல்லாம் தரைமட்டமாக்கி ஆங்குள்ள அளவற்ற திரவியங்களை யெல்லாம் கொள்ளையடித்து "விக்கிரகாக்கிரஹன்" எனப் பெயர் படைத்து முடிவில் தான் கொள்ளையடித்த பொருள்களை யெல்லாம் மரணத்தறுவாயில் தன்முன் குவிக்கச் செய்து, குன்றென விளங்கிய அப் பொற்குவியலைக் கண்டு ஏங்கி இவற்றையெல்லாம் விட்டுப் போகின்றோமே யென்று பெருமூச்சுடன் உயிரை விட்ட அரசனை நமது தேச சரித்திரங் கற்றறி லறியாதார் யார்?

---

# குறிப்பு

## இந்துமத அறநிலையப் பாதுகாப்புக் கூட்டம்

மேற்குறித்த கூட்டத்தில் தமிழ்ச் சைவ அறநிலைகளுக்காக திருவாளர் இலஞ்சி, வக்கீல் E. S. சிதம்பரப்பிள்ளையவர்களும், திருவாளர் வக்கீல் P. V. நடராஜமுதலியாரவர்களும் நியமிக்கப்பட்டார்களெனக் கேள்வியுற்றுக் கழிபேருவகை யடைகின்றோம். இவ்விருவருக்கும் தமிழினிடத்தும், சைவத்தினிடத்தும் மிகுந்த பற்றுண்டு. இவ்விருவரும் தமிழுக்கும் சைவத்துக்கும் மிகவும் பாடுபட்டு, மடங்களைத் திருத்தி வேண்டிய நன்மைகளைச் செய்யுமாறு இவர்களுக்கு எல்லாம்வல்ல முழுமுதற் செம்பொருளாய பரமசிவன் நீடிய ஆயுளினையும்; நோயற்ற வாழ்வினையு மருளுமாறு அப்பெருமானைப் பன்முறை வழுத்துகின்றோம்.

## தமிழ்ப்பண்டிதர் பெருங்கூட்டம், திருச்சிராப்பள்ளி

நிகழும் இரக்தாக்ஷி ஆண்டு பங்குனித் திங்கள் ௨௯, ௩௰ (11, 12-4-25) சனி, ஞாயிறு ஆகும் இருநாட்களிலும் மாலை 4-மணி முதல் மேற்குறித்த கூட்டம், சென்னை மாகாண வளர்நெறி அமைச்சர் திவான் பகதூர் திருவாளர் T. N. சிவஞானம்பிள்ளையவர்கள் தலைமையின்கீழ் நடைபெறும்.

அக்காலை முதல்நாள் திரு. அ. சிவப்பிரகாசம் பிள்ளையவர்கள், தலைமைத் தமிழாசிரியர், சூசையப்பர் கல்லூரி, திருச்சிராப்பள்ளி, 'பழந்தமிழ்' என்ற பொருள்பற்றியும், திரு. ஆ. கார்மேகக் கோனாரவர்கள், தலைமைத் தமிழாசிரியர், அமெரிக்கன் கல்லூரி, மதுரை, 'தமிழ்ப் பாடப்புத்தகம்' என்ற பொருள்பற்றியும், திரு. பா. வே. மாணிக்கநாயக்

கர் அவர்கள், B.E·M.C.I, சூப்பரின்டெண்டிங் இஞ்சினீயர், 'தொல்காப்பிய ஆராய்ச்சி' என்ற பொருள்பற்றியும் உரைநிகழ்த்துவார்கள். இரண்டாம்நாள் திருச்சிராப்பள்ளி, பிஷப்ஈபர் கல்லூரி, தலைமைத் தமிழாசிரியர் திரு. மு. வேங்கடசாமி நாட்டாரவர்களும், தஞ்சை, செயின்ட் பீட்டர்ஸ் ஹைஸ்கூல், தலைமைத் தமிழாசிரியர், திரு. ஆர். வேங்கடாசலம்பிள்ளையவர்களும், சூப்பரின்டெண்டிங் இஞ்சினீயர் திரு. பா. வே. மாணிக்க நாயக்கரவர்களும் முறையே, 'பாட்டும் உரையும்' 'தமிழ்ப்புலவர் கடமை' 'தமிழ் வளர்ச்சிக்குரியன' என்ற பொருள்களைப்பற்றி விரிவுரை நிகழ்த்துவார்கள்.

## மதிப்புரை

'எங்கள் ஊர்' (Scenes of Village Life):—இப் பெயர்புனைந்த நூலொன்று நமதுபார்வைக்கு வந்தது. இந்நூல் விருத்தாசலத்தில் பள்ளிக்கூட டெப்டி இன்ஸ்பெக்டராக இருக்கும் திரு. W. V. கோவிந்தராஜு B.A., L.T. என்பவரால் இயற்றப்பட்டது. இந்நூல் படிக்கப்படிக்க விநோதமாக இருக்கும். இந்நூலைப் படிப்பவர்கள் தமிழ்நாட்டிலுள்ள பாமர மக்கள் எவ்வாறு ஒழுகுகிறார்களென்பதைத் தெரிந்துகொள்ளலாம். மக்கள் பழக்கமாகப் பேசுங் கொச்சைத் தமிழையே பேச்சுமுறை வருமிடங்களில் எழுதப்பட்டிருக்கிறது. இம்மாதிரி நூல் தமிழ் நாட்டிக்குப் புதிதாக இருக்கிறது. இந்நூலுக்கு முகவுரை ஆங்கிலத்தில் திவான் பகதூர் L. D. சுவாமிக்கண்ணுப்பிள்ளை யவர்களால் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதன் விலை ரூ. 1. வேண்டுவோர் விருத்தாசலம் டாஸ் பிரஸ்ஸுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

காந்தி பிள்ளைத்தமிழ்:—இப்பெயர் கொண்ட அருமையான நூல் நமது பார்வைக்கு வந்தது. இந்நூலை இயற்றியவர் காரைக்குடி, ராய சொக்கலிங்கம் என்பவர். பாடல்களைப் படிக்குந்தோறும் மிகவும் இனிமையாக இருக்கிறது. இந்நூலினுலேயே மகாத்மாகாந்தி யவர்களின் செயற்கரிய செய்கைகள் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் வெளிப்படுகின்றன. இப்பாடல்களுக்கு உருக்குந் தன்மை வாய்ந்திருப்பது இந்நூலை இயற்றியவர் மகாத்மா காந்தியிடம் வைத்துள்ள தலையன்பைக் காட்டுகிறது. தமிழ் நாட்டார்செய்த நற்றவப்பயனால் காந்தியடிகளை வாயாரப்பாடி மனதாரத் துதித்து நல்வாழ்வு அடையும்படி இந்நூல் பாடப்பட்டிருக்கிறது. இந்நூல் காரைக்குடி வள்ளுவர் நிலையத்தின் முதல் வெளியீடாகும். இதன் விலை அ. 10. வேண்டுவோர் மேஷ் நிலையத்திற்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

Printed by Sivakami Vilasam Press, Published by V. Subbiah for The S. I. S. S. W. P. Society, Ltd., Madras.

ஓம்.

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள்தோறும் வெளிவருவது

சிலம்பு ௩ | மெய்கண்டான் ஆண்டு-௭௱௨ சித்திரைத் திங்கள் 1925ஹ ஏப்ரல்௴—மே௴ | பரல் ௪

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## இறையனார் அகப்பொருள்

[கா. சுப்பிரமணிய பிள்ளை, M.A., M.L.]

(௱௧-ம் பக்கத் தொடர்ச்சி)

பண்டைத்தமிழர், இந்நிலவுலகத்திலே சிறந்த இன்ப வாழ்க்கையாவது அன்புகாரணமாக நிகழும் ஐந்திணை யொழுக்கம் என்று கருதினர். ஐம்புலனும் நுகர்தற் சிறப்புடைத்தாகிய அகவொழுக்கம் நிலத்திற்கேற்பவும் பொழுதிற்கேற்பவும் வேறுபடும் வகையினையுடையது. தலைவனும் தலைவியும் இன்பம் நுகர்தற்குத்தக்க இடம் பொழிலேயாகும். பொழிலின் இயற்கை வள

மும் வனப்பும் குறிஞ்சி நிலத்திலேதான் காணப்படும். பொழில் நயம் செயற்கையாக அமைந்த இடத்தையும் குறிஞ்சியின் சார் பாகக் கருதுவதுண்டு. குறிஞ்சி யொழிந்த பிற நிலங்களில் வதி யும் மக்கள் தமது செல்வத்திற்கேற்பச் செய்குன்று முதலியவை அமைத்து வளம் பொருந்திய பூஞ்சோலைகளைப் பண்படுத்தி வந்ததாகத் தெரிகின்றது. வளம் மிக்க இடத்தேயுள்ள சிற் றுயிர்களும் ஆணும் பெண்ணுமாய்க் கூடி இன்பநுகருங்காலை, அவற்றைக் கண்ணுறும் தலைவர்க்குந் தலைவிக்கும் வேட்கை சிறத்தல் கூடுமாதலின் குறிஞ்சியினையே புணர்ச்சிக்குரிய சிறப் பிடமாக இலக்கண நூலார் கூறுவாராயினர். குறிஞ்சி நிலம் ஒழிந்த ஏனைய நிலத்தில் குறிஞ்சியின் தன்மை காணப்படு மாயின் அதனைத் திணைமயக்கத்தின்பாற் படுத்துவர் புணர்ச்சிக் குரிய பெரும் பொழுது கூதிரும் முன்பனியும் சிறுபொழுது யாமமும் ஆகும். கூதிர் காலத்தே குறிஞ்சிக்குச் சிறப்பாகக் கூறியது ஆண்டு நிகழும் ஒழுக்கத்திற்கு அஃது இயைந்த பரு வம் ஆதல்பற்றிப் போலும். கம்பநாடர் புணர்ச்சி வேட்கை மிக்க காலம் கூதிர் என்பதைப் பின்வருமாறு குறித்துள்ளார்:

“அளவில் காரிழி கூதிரின் பருவம் வந்தணைந்தால்
தளர்வ ரென்பது தவம்புரி வோருக்குந் தகுமால
கிளவி தேனினும் அமிழ்தினும் கிளைத்தவள் வளைத்தோள்
வளவி யுண்டவன் வருந்து மென்றலது வருநதோ.”

இச்செய்யுளுள் கூதிர் காலத்தில் காதல் மிகுதியால் அருந்தவத் தரும் தளர்வெய்துவார்களென்றும் சீதையின் பிரிவாற்றாமை யால் வருந்துவது இராமபிரானுக்கு இயற்கையாக அப்பரு வத்தே நிகழக்கூடிய தென்றும் குறிக்கப்பட்டமை காணக. சிறுபொழுதில் யாமம் சிறந்ததென்பது தெளிவு.

ஏனைநிலங்கள் முல்லை, மருதம், நெய்தல் ஆகும். பாலைக்கு இவற்றின் வேறாகிய நிலமில்லை. ஏனை நிலங்கள் பாழ்பட்டுப் பகலவன் கதிர்கள் முழுதும் தோய்வதற்கு இடமாய காலத்தே அவை பாலையாகும். குறிஞ்சி நிலம் புணர்ச்சிக்கு ஏற்ற தகுதி யுடையது போல பாலைநிலம் பிரிவின் கொடுமையைப் புலப்

படுத்துவதாகும். பிரிந்துசென்ற தலைவரைப்பற்றி நினைக்குந் தலைவிக்கு அவரது பாலைச் செலவு மிக்க துயர் விளைத்தற்குரியது. அதுவும் வேனிற் காலத்தில் நண்பகற் பொழுதில் அமையுமாயின், பிரிவாற்றாமை தாங்குதற்கு அரிய கவலையை விளைத்தற்குரியது. பிரிவின் கடுமையை மிகுத்துக்காட்டும் பொழுது வேனிலும் நண்பகலுமாதல் தமிழ் நாட்டினர்க்கு அல்லது இந்திய நாட்டினர்க்கே மிகப் பொருத்தமாகக் கொள்ளப்படும். குளிர் மிகுந்த நாடுகளில் பனிப்பருவம் அல்லது மழைப்பருவமே பிரிவின் துயரத்தைப் பிரிந்து சென்றார்க்கு மிகுதிப்படுத்துந் தன்மையது. பின்பனிப் பருவத்தையும் பாலைக்குரிய பொழுதாக ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியுள்ளார்.

‘பின்பனி தானும் உரித்தென மொழிப’

என்பது காண்க. இஃது ஏனை நாட்டினர்க்கும் ஒருவாறு பொருத்தமுடையது.

பிரிந்தாரை எதிர்நோக்கி இருத்தற்குரிய இடம் முல்லையாகும். பெரும்பாலும் குறிஞ்சி அல்லது மருதநிலத்தையடுத்து முல்லை நிலமிருத்தலால் சென்றாரை எதிர் கொள்பவர் முற்பட்டுச் சென்று காத்திருத்தற்குரிய இடம் முல்லையாகும். நெய்தல் நிலம் இரங்குதற்குரிய இடமாதலால் அஃது எதிர் நோக்கியிருத்தற்குரிய சிறப்பிடமாகக் கருதப்படாது. பெரும்பான்மையும் பிரிந்தவர் செல்லுமிடம் நாடாகவே யிருத்தற்குரியது. சிறுபான்மையே கலத்திற் செல்லுதல் பண்டை வழக்கு. இன்னும் அவ்வழக்கமே நமது நாட்டினர்க்கு இயைந்ததாகக் காணப்படுகின்றது. சிறுபான்மை நெய்தல் நிலத்தும் முல்லைத் திணை யொழுக்கம் காணப்படுதல் கூடும். அது திணை மயக்கம் பற்றி நிகழக்கூடியதே. பிரிந்து சென்றவர் போர்த் தொழிலோ அல்லது பிற தொழிலோ முடித்துக்கொண்டு மீள்வதற்குரிய காலம் கார்காலமேயாகும். ஆதலால் முல்லைக்குரிய பெரும் பொழுது கார் எனப்பட்டது. சிறிது வருத்தம் மாறி வரவு நோக்கி யிருத்தற்கு உரிய சிறுபொழுது மாலையாகும். நள்ளிரவு புணர்ச்சிக்குரிய காலமாதலின் அதனை நினைவிற்கொண்ட தலை-

முகன் ஆவலோடு எதிர் பார்த்திருக்கும் பொழுது அம்மாலையே யாகும்.

திருஞானசம்பந்தர் தேவாரம்

திருப்பாசூர் - பண் - காந்தாரம்.

"சிந்தையிடையார் தலையின் மிசையார் செஞ்சொல்லார்
வந்துமாலை வைகும்போழ் தென் மனத்துள்ளார்
மைந்தா மணாளா வென்ன மகிழ்வாரூர் போலும்
பைந்தண் மாதவி சோலைசூழ்ந்த பாசூரே."

மாலைப் பொழுதில் தலைவரை எதிர்பார்த்திருத்தலும் அவரை எதிர் கொண்டழைக்கும் அருமைச் சொற்களை நினைவுகூர்தலும் முல்லை நிலத்துச் சோலையகத்தே நிகழ்வதாக ஈண்டு குறிக்கப்பட்டமை காண்க.

'காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும் இந்நோய்'

என்ற குறளடியுங் காண்க. இதுபற்றியன்றோ காரும் மாலையும் முல்லை யென்றார் ஆசிரியர் தொல்காப்பியனார்.

இனி, நெய்தல் நிலமானது தலைவி பரிவு கூர்வதற்கு உரிய இடமாகும். பிரிவாற்றாமையால் இரவு, கழியும் வரை மிக்க துயருற்ற தலைவி ஆறுதலடைவதற்கு முன், இரங்கு மனத்தளாய் இருத்தற்குரிய பொழுது கதிரவன் எழுந்து கதிர் வீசிய பின் உளதாம் சிறு பொழுதாகிய எற்பாடு ஆகும். கடலின் அலையானது பொங்கி யெழுந்து கரையில் மோதி ஓய்ந்து மீள்வதுபோலப் பிரிவால் வந்த தலைவியின் கவலை மிகுந்து குறைந்து ஒருவாறு ஓயுநிலை எய்துதற்கு உதவும் கருப்பொருள் அமைந்த இடம் நெய்தல் ஆகும். நெய்தற்கும் மருதத்திற்கும் பெரும் பொழுது கூறப்படவில்லை.

பிரிவு கல்வியின்பிரிவு, போர்வயிற்பிரிவு, பொருள்வயிற் பிரிவு எனப் பலதிறபபடும். மருத நிலத்திற்பிரிவு பரத்தையர் பொருட்டும் நிகழ்தற்பாலது. அது காரணமாகத் தலைவர்

மீளுங்கால் ஊடல் நிகழும். ஆடல் பாடல் வல்ல பரத்தையர்கள் வதியும் இடம் மருதம் ஆதலின் ஊடல் அந்நிலத்தின் உரிப் பொருளாகும். ஊடலுக்குரிய காலம் பரத்தையிற் பிரிந்து வருந்தாலமாகிய வைகுறு விடியலாகும். பரத்தையிற் பிரிவு எக்காலத்தும் நிகழ்தற்பாலது. ஆதலாலும் ஊடற்குப்பின் நிகழும் பரிவு கூர்தலும் அவ்வாறே நிகழக்கூடியது ஆதலா லும் மருதத்திற்கும் நெய்தலுக்கும் பெரும்பொழுது குறிக்கப் படவில்லை.

நிலமும் பொழுதும் முதற்பொருளாகும். புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்பன ஐந்திணைக்கும் உரிப்பொரு ளாகும். இனி, கருப்பொருள் என்பன யாவையெனில் ஐந்திணை நிலத்திலுள் ஒவ்வொன்றிலும் வாழும் மக்களுக்கு உரிய தெய் வம், உணவு, விலங்கு, மரம், பறவை, யாழ், பறை, தொழில் என்பனவையே. ஒவ்வொரு திணையின் ஒழுக்கத்தையும் பற்றிச் செய்யுள் செய்கின்ற புலவர் அவ்வத்திணைக்குரிய கருப்பொருள் கள் இன்னவென்று உணர்ந்தாலன்றி இயற்றும் செய்யுள் நிலத் திற்குப் பொருத்தமில்லாததாக முடியும். ஆதலால் பண்டைத் தமிழர் ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய பலவகைக் கருப்பொரு ளையும் நன்றாக ஆய்ந்து கூறியுள்ளார். கருப்பொருளாராய்ச்சி யால் தமிழ்நாட்டிலே ஐந்து நிலத்திலும் வதிந்த பழங்குடி மக் களது வாழ்க்கை யியல்பு தெள்ளிதில் விளங்கும். அவ்வியல்பு இன்னும் பல இடத்தும் காணப்படுகின்றது. குறிஞ்சி நிலத் திலே குறவர், வில்லர், குன்றவர் முதலாயினோர் வேட்டையாடுவ துடன் தேன் எடுத்தலையும், கிழங்கினைப் பயிர் செய்து கொள் வதையும் தொழிலாகக் கொண்டிருந்தனர். தினைப்புனங்காத் தலைப் பெண்டிர் தொழிலாகக் கொண்டனர். அவ்வாறே நெய்தல் நிலத்தில் பரதர், நுழையர் முதலாயினோ தமது பெண்டிரொடு மீன் பிடித்தலும் உப்புவிளைவித்தலும் அவற்றை விற்றலுஞ் செய்து வந்தனர். பாலை நிலத்திலே மிருதியும் களவு தொழில் நடந்ததாகத் தெரிகின்றது. முல்லை நிலத்திலே ஆயர் நிரை மேய்த்தலும், கடாவிடுத்தலும், வரகுகளைக் கட்டலும், வைக்கோ லறுத்தலும் முதலிய தொழிலைக் கைக்கொண்டனர். மருத

நிலமே நெற்பயிர் விளைத்தற்கும் உழவு சிறப்பாக நடத்தற்கும் இடமாக இருந்தது.

புலி, பன்றி, யானை முதலியன மலைக்குரிய விலங்குகள். நெய்தல் நிலத்தினில் சுறாவும் முதலையுமே சிறப்பாகக் கருதப்பட்டன. பாலை நிலத்தில் மலையினின்றிழிந்து வலியிழந்த யானை, புலி, செந்நாய் முதலியன காணப்பட்டன. முல்லை நிலத்தே முயலும் சிறுமானும் மிகுந்து உலாவின. மருத நிலத்திற்கு உரிய விலங்கு எருமையும் நீர்நாயும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஏனைய விலங்குகள் எல்லாநிலத்திற்கும் பொதுவாகக் கொள்ளப்படும் போலும். இவ்வாறே பறவைகளுள் கிளியும், மயிலும் குறிஞ்சிக்குச் சிறப்பாகவும், அன்னம், அன்றில், அகன்றில் முதலியன நெய்தற்குரியன வென்றும், கழுகும், பருந்தும், புறாவும் பாலைக்கு உரியன வென்றும், கானக்கோழியும், மயிலும், சேவலும் முல்லை நிலத்திற்குச் சிறந்தன என்றும், நீர்க்கோழியும், தாராவும் மருதநிலப் புட்கள் என்றும் கூறப்பட்டுள்ளன. மரங்களுள் அகிலும் தேக்கும் வேங்கையும் சந்தனமும் முதல் நிலத்திற்கும், புன்னையும் தாழையும் நெய்தல் நிலத்திற்கும், இலுப்பையும் ஓமையும் பாலை நிலத்திற்கும், கொன்றையும் குருந்தும் முல்லைக்கும், மருதும் காஞ்சியும் வஞ்சியும் மருதநிலத்திற்கும் உரியனவாகும். மலர்களுள் குறிஞ்சி காந்தள் வேங்கை சுனைக்குவளை முதலியன மலைக்குச் சிறந்த பூக்களாகும் வெளளிதட் கைதையும் நெய்தலும் நெய்த நிலத்திற்கும், குரவு பாதிரி முதலியன பாலை நிலத்திற்கும், முல்லையுந் தோன்றியும் முல்லை நிலத்திற்கும், தாமரைப்பூவும் செங்கழுநீர்ப்பூவும் மருதநிலத்திற்கும் சிறந்த பூக்களாகும். ஒவ்வொரு நிலத்திலுள்ள ஊர்கட்கும் வெவ்வேறு பெயர்கள் உள்ளன. பண்டைத்தமிழர் இசையில் மிக்க சுவையுடையராகத் திகழ்ந்தனர் என்பது ஒவ்வொரு நிலத்திற்கும் தனித்தனி உள்ள யாழினும் பறையினும் இனிது விளங்கும். குறிஞ்சியாழ், விளரியாழ், பாலையாழ், மருதயாழ் முதலியன அவ்வந் நிலத்திற்குச் சிறப்பாய் வழங்கின. முல்லைக்குச் சிறந்த பண் முல்லையென்ற பெயராலே வழங்கிற்று. ஒவ்வொரு நிலத்திற்

கும் உரிய தலைமகன் தலைமகள் என்பாரது பெயர்களும் வெவ்வேறாக உள்ளன. நீரானது வாழ்க்கைக்கு இன்றியமையாத தாகலின் ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய நீர் நிலை இன்னதென்பதும் குறிக்கப்பட்டுள்ளன. அவையெல்லாம் விரிப்பிற் பெருகும்.

ஒவ்வொரு நிலத்திலும் பண்டை மக்கள் வழிபட்ட தெய்வத்திற்குத் தனிப்பெயரிருந்தது. குறிஞ்சிக்குத் தெய்வம் 'முருகவேள்.' நெய்தநிலக் கடவுளுக்கு 'வருணன்' என்ற ஆரியப் பெயர் கேட்கப்படுகின்றது. முதலில் அவர்க்குப் பெயர் வேறாக இருந்திருக்கலாம். அவ்வாறே மருத நிலத்திற்கும் கொள்ளப்படும். மருதநிலத்திற்குத் தெய்வமாகக் கூறப்படும் இந்திரனுக்கும் வடமொழி வேதத்திற் கூறப்பட்ட இந்திரனுக்கும் வேறுபாடு பெரிதாதல் காண்க. மருத நிலக்கடவுளுக்கு 'வேந்தன்' என்ற தமிழ்ப்பெயர் இருந்திருத்தல் கூடும்.

'வேந்தன் மேய தீம்புனல் உலகம்' என்பது காண்க. முல்லைநிலக் கடவுள் 'திருமால்.' ஞாயிற்றினையும் காளியையும் பாலை நிலத்தார் வழிபட்டனர். தமிழ்மக்கள் யாவருமே ஞாயிற்றைக் கடவுளின் ஆண் வடிவமாகவும் திங்களைப் பெண் வடிவமாகவும் கருதி வழிபட்டனரென்ற கொள்கையு முண்டு. ஆயினும் தமிழ் நிலத்துப் பெரியோர் ஈண்டு கூறிய தெய்வங்களுக்கெல்லாம் வேறாய் எல்லாவற்றிற்கும் ஆதியாய்த் தத்துவங் கடந்த தனிப்பரம்பொருள் ஒன்றினையே 'கடவுள், கந்தழி, இறைவன், சிவன், இயவுள், ஆண்டவன், முதல்வன்' என்ற பெயர்களால் வழங்கினரெனவும், சிறு தெய்வங்கட்கே 'தெய்வம்' என்ற வடமொழிப் பெயரிட்டு வழங்கினரெனவுங் கூறுப.

(தொடரும்)

# 'ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்'

[அப்பர் தமிழக்த்தான் எழுதியது]

இம்முதுமொழி நந்தமிழ் மூதாட்டியாராகிய ஔவைப் பிராட்டியார் செய்தருளிய 'கொன்றை வேந்தன்' என்னும் நீதி நூலில் காணப்பெறுவது. தாமும் உண்ணாது பிறர்க்கும் உதவாதவராய உலோபிகள் தேடிச் சேர்த்துவைக்கிற பொருளைக் கள்வர், கொள்ளைக்காரர், கொடுங்கோன் மன்னர் முதலிய தீயவர்கள் பறித்துக்கொண்டு போவர் என்பது இதன் பொருளாம்.

இக்கருத்தையே தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார்,

'அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
வொண்பொருள் கொள்வர் பிறர்'

என இனிது விளக்கிக் காட்டியிருக்கிறார். கொடுக்க மனமில்லாமையால் தங்கள் சுற்றத்தார், நண்பர்கள் முதலானோர்பால் அன்பு செய்தலை ஒழிந்து, வேண்டுவன நுகராது, தன்னை வருத்தி, வறியார்க்கு ஈதல் முதலிய அறததை நினைப்பதும் செய்யாது, ஈட்டப்பட்ட ஒள்ளிய பொருளைக் கொண்டு போய்ப் பயன் பெறுவார் கள்வர் முதலான பிறரேயாவர்.

தேனீக்கள் அலைந்து திரிந்து மலர்களினின்று எடுத்த தேனை மலைநாடுகளில் கூடுகட்டிச் சேர்த்துவைத்து அவைகள் அனுபவியாதிருக்க, வேடர்கள் அத்தேனைக் கவர்ந்து கொண்டு போய் விடுகிறார்கள். அதனால் தேனீக்கள் ஏமாறிநிற்கின்றன. அது போல ஈயாத புல்லறிவாளர் தங்களை வருத்தித் தொகுத்து வைத்த பொருளைத் தாங்களும் அனுபவியாது அறத்திற்குங் கொடாது பிறர் கவர்ந்து கொண்டுபோக ஏமாறிநிற்கிறார்கள்.

இக்கருத்தே,

"உடாஅதும் உண்ணாதும் தம்முடம்பு செற்றுங்
கெடாஅத நல்லறமுஞ் செய்யார்—கொடாஅது
வைத்தீட்டினா ரிழப்பர் வான்றோய் மலைநாட!
உய்த்தீட்டுந் தேனீக் கரி"

என்று நாலடியாரினும்,

'ஈட்டிய தேன்பூ மணங்கண் டிரதமுங்
கூட்டிக் கொணர்ந்தொரு கொம்பிடை வைத்திடு
மோட்டித் துரத்திட் டதுவலி யார்கொளக்
காட்டிக் கொடுத்தவைக் கைவிட்ட வாறே'

என்று திருமந்திரத்திலும் விளக்கப்பட்டிருக்கிறது.

தாமுமுண்ணாது பிறர்க்கும் கொடுக்க அறியாத மூடர்கள் ஓயாமல் பணம்! பணம்!! என்று அலைந்து திரிந்து துன்பப்பட்டுத் தேடிவைக்கிற பொருள் நெருப்புக்கும், வெள்ளத்துக்கும், தேர்வேந்தருக்கும், கள்வருக்கும், வேசிக்கும், தாசிக்கும், குடிக்கும், பேய்க்கும் இரையாகி வீணாகும் என்பதனைத்.

"தீயாலோ நீராலோ தேர்வேந்தர் தம்மாலோ
மாயாத தெவ்வர் வலியாலோ—யாதாலோ
இப்பொருள்போய் மாய்கின்ற தென்றுபொருள் வைத்தார்கள்
அப்பொழுது நீங்கா ரிடர்"

என்றதனாலும்,

"வைத்துப் பொருளைத் தான்நுகரான் வழங்கான் இருந்துஞ் செத்தானே
செத்த பின்னர் என்செய்வான் தீயார் கொள்வர்"

என்றதனாலும்,

"..............................................புல்லர் பொருள்
வேசிக்கும், சந்து நடப்பார்க்கும் வேசிக்கு வேலைசெயும்
தாசிக்குமாகும், கண்டாய் சிதக்காதி தயாநிதியே"

என்றதனாலும் தெற்றென விளங்கப் பெற்றோமே.

ஈயாது லோபஞ் செய்பவன் இப்பிறவியில் உயிரோடிருந்தும் செத்தவனுக்கு ஒப்பாவதும், மறுபிறவியில் பேய்ப் பிறப்படைவதும் உண்மையாகும். அவன் உயிரோடிருந்தால் யாருக்கென்ன' இறந்தால் யாருக்கென்ன! எதுபோல வெனில், எட்டிமரம் காய்த்தாலென்ன, காயாதிருந்தாலென்ன! கடலில் எழுந்து மறையும் அலைகளைப் பார்ப்பதுபோல ஈயாத லோபியையும் பார்த்தலாகும். ஈகைக் குணம் இல்லாத ஒருவன் இறந்த காலத்து எல்லோராலும் இழிவாய்க் கூறப்படுவான் என்பதும்,

ஈகைக் குணமுள்ள புண்ணிய சீலன் ஒருவன் இறந்தகாலத்தும் புகழப்படுவான் என்பதும் யாவரும் ஒப்புக்கொள்ளத்தக்கனவே!

இதுநிற்க, நாம் மண்மீது பிறக்கும்பொழுது நம்மோடு செல்வம் பிறக்கவில்லை. இறக்கும் பொழுது நம்மோடு செல்வம் வரவில்லை. செல்வம் ஏதோ முன்செய்த நல்வினைப் பயனால் இடையில வருகிறது, இடையில் போகிறது. ஈயாத லோபி ஒருவன் இவ்வுலகத்தில மாண்பினையுடைய மானிடப் பிறவி எடுத்ததா லாய பயனென்ன? அவனுக்கு என்ன புத்தி சொல்வது? என் பதை முற்றத் துறந்த சிவஞானச் செல்வராகிய பட்டினத் தடிகள்

'பிறக்கும் பொழுது கொடுவந்ததில்லை பிறந்துமண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவதில்லை இடைநடுவில்
குறிக்கும் இச்செல்வம் சிவன்தந்ததென்று கொடுக்கவறியாது
இறக்குங் குலாமருக் கென்சொல்லுவேன் கச்சியேகம்பனே'

என்று அருளிச் செய்ததனை சிந்தியுங்கள்.

சிலர் திரள் திரளாய்ப் பொருள் தேடும் பொழுது சுற்றத் தார் என்றும், நண்பர் என்றும் சிறிதுங் கருதாது எப்பொழுதும் அப்பொருளையே நினைத்துச் சேர்த்தலும், சேர்த்துவைத்த பொருளைக் காத்தலும், அதைத் தீய வழிகளில் செலவிடுத்த லுமே தொழிலாகக்கொண்டு கண்மூடிக் காலங்கழிக்கிறார்கள். 'செல்வஞ் சதமல்ல' என்னும் பட்டினத்தடிகள் ஞானத் திரு வாக்கைச் சிறிது ஊன்றிப்பாருங்கள்! உள்ளன போல் தோன்றி விரைவில் மறையும் நிலையற்ற செல்வத்தை நிலையென்று எண்ணி இறுமாந்திருக்கும் இவ்வேழை மாந்தர்கள் பேதைமைதான் என்னே! ஆகவே, செல்வம் நிலையற்ற தென்பதைச் சிந்தித்து அது நமக்குக் கிடைத்த அப்பொழுதே நமக்கும் பிறர்க்கும் அதனைப் பயன் படுத்திக் கொள்ளல சிறப்புடையதாம்.

சிலர் இளமையில் செல்வத்தைத் தேடலும், முதுமையில் அதைத் தருமத்தில செலவிடுதலுமே தங்கள் கடமை என்று நினைக்கிறார்கள். இது மிகவும் அறியாமையாகும். இவர்கள் இவ்வாக்கை நிலையற்ற தென்பதை உணரார் போலும். ஆகவே,

"நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு"

"நீரி லெழுத்தாகும் யாக்கை"

"இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்
றெண்ணவோ திடமில்லை"

என்ற திருவாக்குக்களாலும்;

"நன்றே செய்யவும் வேண்டு நன்றும்
இன்றே செய்யவும் வேண்டு மின்றும்
இன்னே செய்யவும் வேண்டு மின்னும்
நாளை நாளை யென்பீ ராகில்
நமனுடை முறைநா ளாவது மறியீர்
நம்முடை முறைநா ளாவது மறியீர்"

என்னும் கபிலர் ஞானத் திருவாக்காலும யாக்கை நிலையற்ற தென்பதை அறிந்து எல்லாம் வல்ல இறைவன் நமக்கு மன முவந்து கொடுத்தருளிய செல்வத்தைப் பின் கொடுத்துதவுவோ மென்று அப்பொருளை வைத்திராது, நாமும் அனுபவித்து இரப் போர்க்கும் கொடுத்து இன்னும் ஏற்ற பல தருமங்களையுஞ் செய்து இன்புற்றிருத்தல் அறிவுடையோர் உள்ளக் கிடக்கை யாம்.

ஒருவனுக்குச் செல்வங் கிடைத்தபோது அதை நல்வழி களிற் செலவிட்டு அதனால் அடைய வேண்டிய பயனை அடைய வேண்டும். இல்லாவிடில், அச்செல்வத்தால் அவருக்கும் உல கத்துக்கும் யாதொரு பயனும் விளையாது. வறியோர்களுக்கு உண்ண உணவும் உடுக்கக் கூறையுங் கொடுத்து உதவுதலும், வழிப்போக்கர்களுக்குத் தங்குமிடங் கட்டி அதில் தண்ணீர்ப் பந்தர் அமைத்து அவர்களின் களைப்பையும், தாகத்தையும் ஆற்று தலும், நோயாளிகளுக்கு மருந்துச் சாலை அமைத்து நோய் நீக்குதலும், ஏழைப் பிள்ளைகளின் கல்விப்பெருக்கத்திற்குப் பாடசாலைகள் கட்டுவித்தலும், கோயில் குளம் ஏற்படுத்தலும், இவைபோன்ற இன்னும் பலபல உயர்ந்த தருமங்களைச் செய்த

னும் இம்மைமறுமை இன்பங்களை அடைவதற்குத் துணையாகும். இத்தகைய சிறப்புவாய்ந்த தருமங்களைச் செய்ய மனம் இல்லாமல் ஒருவர் புதைத்து வைத்த பொருளை அவர் கண்மூடியபின், அவர் சந்ததியார் வழக்குக்கும், குடிக்கும், வேசிக்கும், நாடக சாலைக்கும் வாரி இறைத்துப் பின் உண்ண உணவும், உடுக்கக் கூறையுமின்றித் தெருத் தெருவாய் அலைவதை உலகில் நாம் கண்கூடாய்ப் பார்க்கிறோமல்லவா? ஆகவே, லோபத்தனமாய்ச் சேர்த்து வைத்த பொருளால் அப்படிச் சேர்த்து வைத்த லோபிக்கும், அவன் சந்ததியாருக்கும் கிடைக்கும் பயனென்ன? பயன் ஒன்றுமில்லாவிட்டாலும் பழிப்புச் சொல்லாவது இல்லாமலிருக்கக் கூடாதா? அதுவுமில்லையே.

செல்வம் என்னும் சொல்லுக்குத் தமிழ்ப்புலவர் சிலர் ஒரு புதுமையான உரை கூறுவதுண்டு. செல்வமானது தன்னை உடையானைக் கண்டு எப்போதும் செல் (வோம்) வம் (யாம் உன்னை விட்டுப் போவோம்) என்று கூறுவதாகப் பொருள் படுகிறது. இந்த உரை இதற்கு உண்மையான பொருள் அன்றாயினும் ஒருவகை உண்மையை விளக்குகிறது. ஒருவரிடம் செல்வம் நிலைத்திராது. வண்டிச் சக்கரம் போலச் சுழன்று கொண்டே வரும். இதனாலேயே செல்வம்நிலையாமை என்று திருக்குறள், நாலடியார் என்னும் ஞானநூல்களில் தனித்தனி அதிகாரம் பாடியிருக்கிறார்கள். 'பாத்திரம் அறிந்து பிச்சையிடு' என்றபடி நல்லோரையறிந்தும், காலமறிந்தும் தருமஞ் செய்தல் அறிவுடையோர் கொள்கையாகும். 'பாம்புக்குப்பால் வார்த்தால் பழகினும் நன்மை தரா'தென்றபடி நாம் தீயோர்க்குச் செய்யும் தருமத்தால் நமக்குக் கெடுதி விளைவதுமன்றி உலகோர்க்கும் பெருந்தீங்கு புரிந்த பாபத்திற் காளாவோம்.

இதுநிற்க, 'அறஞ்செயவிரும்பு' 'ஈவது விலக்கேல்' என்னும் ஔவைப்பிராட்டியார் அருள் வாக்குக்களை உற்றுநோக்குங்கள். ஒவ்வொருவரும் அவரவர்வருவாய்க்குத் தக்கபடி தருமம் செய்ய வேண்டும். இல்லாவிடில் முத்தி வீடு அடைய முடியாது.

'சிலர் கடவுள் வழிபாட்டுக்கே எல்லாப் பொருளையுஞ் செலவிடுகிறார்கள். அதை உயர்ந்த அறம் என்று ஒப்புக் கோள்வதேயாயினும் அவ்வளவு சிறப்பாகச் சொல்லக்கூடாது. ஏனெனில், திருமந்திரத்தில்,

'படமாடக் கோயிற் பரமர்க்கொன் றீயில்
நடமாடக் கோயில் நமபர்க்கங் காகா
நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயில்
படமாடக் கோயில் பரமர்க்கஃ தாமே'

என்னும் பாட்டை இங்கு ஆராயவேண்டும். கடவுள் வழியில் செலவிடும் பொருள் கடவுளுக்கு மாத்திரம் பயன்படுவதே ஒழிய மனிதர்களுக்குப் பயன்படுவதில்லை. ஆனால் மனிதர்கள் மாட்டுச் செலவிடும் பொருளோ கடவுளுக்கும் உதவுமென்பது முன் சொன்னபாட்டால் இனிது பெறப்படுகிறது. ஆகையால் கோயில் வகைக்கே தங்களுடைய பொருளையெல்லாம் செலவிடுவதில் நோக்காமாயிருக்கும் அன்பர்கள், கல்வி வளர்ச்சிக்கும், ஞான வளர்ச்சிக்கும், பயன் படுத்துவார்களானால் கல்வியும் ஞானமும் எங்கும் பரவி, எல்லா வல்லமையுமுடைய இன்ப உருவினரை மக்கள் பலரும் அடைய வழியாகும் என்பதுயாவரும் அறியத்தக்கது. இப்போது நம்மவர்களில் பெரும்பாலார் ஞான வழியை முற்றிலும் மறந்து கடவுள் ஒருவர் உளரோ? இல்லையோ? என்னும் ஐயங்கொண்டு கட்குடி, புலால் உண்ணல், காமம் நுகர்தல், நாடகசாலை போதல் முதலிய சிற்றின்பங்களை நாடி அவைகளில் அடிபட்டு உழன்று வருகிறார்கள். இவர்கள் முத்தி வீடடைவது எங்ஙனம்? இத்தீய செயல்களைத் தடைப்படுத்தாது வளரவிடுவோமானால் சைவம் விரைவில் 'குடத்திலிட்ட விளக்குப்போல்' மங்கிப்போகுமென்பது திண்ணமே! ஆகையால் செல்வர்கள் ஒவ்வொருவரும் சைவத்தை நிலைநிறுத்தவும், ஞானமார்க்கங்களைப் புத்தகவாயிலாகவும், பிரசங்கவாயிலாகவும் பரப்பவும் கங்கணங் கட்டிக்கொண்டு முன்வந்திருக்கும் சிற்சில அறிவாளிகளுக்குவேண்டும் பொருளுதவி புரிவார்களானால் சைவம் 'குன்றின்மேலிட்ட விளக்குப் போல', எங்கும் பிரகாசிக்கும் என்ப

னும், சைவமணம் எங்கும் கமழும் என்பதும் எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்படும்.

சிலர் ஆடம்பரங்களைக் கவனித்துக் கலியாண முதலிய சடங்குகளில் அளவற்ற பணத்தை விரையமாக்குகின்றார்கள். அது புகழைக் கொடுக்கத் தக்கதன்று. அவர்களை யார் நினைக்கப் போகின்றார்கள்! ஆனால் அப்பொருளைக் கல்விவழியினும் ஞானவழியினும் செலவிடுவார்களென்றால் அவர்கள் என்றும் அழியாப பெயரை உலகில் நிலைநாட்டுவார்களன்றோ?

சிலர் சத்திரஞ் சாவடி கட்டிப் பார்ப்பனர்க்கு உணவு இடுவதும், திதி முதலிய சடங்குகளில் அவர்கட்கே அளவற்ற பொருள் கொடுப்பதும் உயர்ந்த தர்மம் என்று எண்ணித் திருப்தி அடைகின்றார்கள். இவ்வாறு பயனில்லா வழிகளில் பொருள் செலவிடுவதை நிறுத்துங்கள் என்று சொன்னால் அவர்கள் 'எங்கள் முன்னோர் செய்தபடி நாங்களுஞ் செய்யக் கடமைப் பட்டிருக்கின்றோம்' என்றும், 'அவர்கள் செய்து வந்ததை நாங்கள் இப்போது நிறுத்துவதென்றால் அது பாபமாகும்' என்றும் பதில் கூறுகின்றார்கள். இவர்கள் தம் அறிவு கொண்டு எண்ண மாட்டார்கள் போலும்! அந்தோ! இவர்கள் பேதைமைதான் என்னே! முற்காலத்தில் அவ்வாறு ஏற்படுத்தியது காரணம் பற்றியே. அது சரியே! அப்போது பார்ப்பனர்கள் தங்கள் பிறபொழுக்கமாகிய வேதமோதுதல், புராணம் வாசித்தல், கடவுளைத் தொழுதல் என்பவற்றில் மாத்திரம் வாழ்நாளைக் கழித்தார்கள். அவர்களுக்கு வேறு பொருள் தேட வழியில்லாததால் நம்மவர்கள் உணவு, பொருள் முதலியவை கொடுத்து உதவினார்கள். ஆனால் இப்பொழுது நம்மவர்களைப் போல அவர்கள் பிறப்பொழுக்கத்தைவிட்டுப் பல வகையாலும் பொருள் தேட முன்வந்து விட்டபடியால் நாம் அவர்களுக்குத் தர்மஞ் செய்ய வேண்டுவதில்லை திதி முதலிய சடங்குகளில் பார்ப்பனர்களுக்கு அளவற்ற பொருள் கொடுப்பதால் இறந்து போன மூதாதைகள் திருப்தி அடைவதாக நம்மவர்கள் நினைக்கின்றார்கள். அதை நிறுத்தவேண்டுமென்பது,

'பார்ப்பன மாந்தர்காள் பகர்வது கேண்மின்
இறந்தவ ராயுமை யில்லிடை யிருத்திப்
பாவனை மந்திரம் பலபட வுரைத்தே
உமக்கவர் புத்திர ரூட்டின போது
அடுபசி யாற்குலைந் தாங்கவர் மீண்டு
கையேந்தி நிற்பது கண்டதார் புகலீர்
அருந்திய வுண்டியா லார்பசி கழிந்தது'

என்னும் கபிலர் திருவாக்கால் இனிது விளங்குகிற தன்றோ? 'பழையன கழிதலும் புதியன புகுதலும்' என்றபடி காலத்துக் கேற்றபடி செய்கைகளையும் தர்மங்களையும் ஒழுங்கு செய்ய வேண்டு மென்பது பெறப்படுகிறது. ஆகவே, மேற்கூறிய தர்மங்களில் செலவிடும் பொருளைக் கல்வியில் செலவிட்டுவந்தால் நம்மவர்களில் ஒவ்வொருவரும கல்வியின்பம் பெறறு வாழ்வா ரன்றோ? ஈயாத கடினமனிதரை மறுபிறவியில் எல்லாம் வலல இறைவன் வறுமைப் பிணி கொடுத்துத் தண்டிப்பார் என்பது கீழ்வரும் உதாரணமுகத்தால் விளங்கற் பாலதாகும். ஒரூரில் குமரன், அழகன் என்னும் இரணடு சகோதரர்க ளிருந்தனர். அவர்களுக்கு எழுத வாசிக்கத் தெரிந்ததும் அவர்களின் தந்தை யாா ஔவையார் அருளிச் செய்த நீதி நூற்றிரட்டு என்னும் புததகத்தில இரண்டு சுவடிகள் வாங்கிக் கொடுத்து மூன்று திங்களில் அபபுத்தகத்தைப் படித்து முடித்து விட வேண்டு மென்று கட்டளையிட்டார். குமரன் என்பவன் அப்புத்தகத்தை நாடோறும் சிறிது சிறிதாகப் படித்து, மூன்று திங்களில் புத்தக முழுவதையும பொருளுடன் மனனம்பண்ணிக்

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதறகுத் தக"

என்ற குறளின்படி கற்றதற கேற்ப தானும் ஒழுகிப் பிறரை யும் அவ்வாறு ஒழுகும்படி போதித்தான். இது தெரிந்த தந்தை யார் இன்பக் கடலாடியவராய் நாலடியார், குறள் என்னும் அறிவு நூல்களை வாங்கிக் கொடுத்துப் படிக்கும்படி சொன்னார். ஆனால் அழகனோ தான் வாங்கிய நீதிநூற் றிரட்டை வீட்டின் ஒரு மூலையில் கறையான் அரிக்கப் போட்டுவிட்டு உண்பதும், ஊர்

திரிவதும், உறங்குவதுமே தொழிலாகக் கொண்டு காலத்தை வீணாய்க் கழித்தான். புத்தகத்தின் அருமையும், கல்வியின் பெருமையும் தெரியாத அழகனைத் தந்தையார் விரும்புவாரா? அவனுக்கு வேறு அறிவு நூல்களை வாங்கிக் கொடுக்க நினைப்பாரா? சிந்தியுங்கள்! அது போல நல்வினைப் பயனால் கிடைத்த பொருளைத் தானும் அனுபவியாது பிறர்க்கும் கொடாது இருக்கும் புல்லறிவாளரைக் கடவுள் விரும்புவாரா? இப்பிறவியிலேயே அவனுக்குச் செல்வத்தைக் கொடுத்தது போலப் பறித்துக் கொள்வதோடு மறுபிறவியிலும் வறுமை நோய் கொடுத்து அவனைத் துன்புறுத்துவாரன்றோ? ஆனால், ஈட்டுதலும் ஈட்டியதனைப் பிறர்க்குக் கொடுத்து உதவுதலுமாகிய தரும சீலருடைய செல்வத்தை இப்பிறவியிலேயே வளரச் செய்வதோடு மறுபிறவியிலும் இன்னும் மிகுதியாகச செல்வத்தைக் கொடுத்துக் காப்பாரன்றோ? அவர் முத்திவீடு அடைவார் என்பது சொல்லாமலே தெரியும்.

இப்போது நடந்து முடிந்த ஐரோப்பியப் பெரும்போர் பொருளவாவினாலேயே துவங்கியது. 'போதுமென்ற மனமே பொன் செய் மருந்து' என்னும் முதுமொழியை ஐரோப்பியர்கள் கருதியிருந்தால் இவ்வகையான போர் நடந்திருக்கவேமாட்டாது. மிக்க பொருளாசை கொண்டதனாலன்றோ அவர்கள் தங்களிடம் உள்ள பொருளை யெல்லாம் நெருப்புக்கும் கடலுக்கும் இரையாக்கி வறுமையாயினர். பொருளாசையால் எண்ணிறந்த மனிதர் இந்த யுத்தத்தில் வீணே இறந்துபோயினர்.

ஆதலால் நல்வினைப்பயனால் செல்வம் வந்துற்றபோது செருக்குற்றுப் பிழை செய்யாது, 'காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்' என்ற பழமொழிப்படி நல்வழியில் தான தருமங்களைச் செய்து நற்கதிபெற முயல்வோமாக!

# 'தெய்வ மணக்கும் செய்யுளெலாம்'

[பண்டிதர் மு. வேங்கடசாமி நாட்டார்]

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் தாம் இயற்றிய சேக்கிழார் பிள்ளைத்தமிழில் 'சேறுமணக்கு மடங்களெலாம்' என்று தொடங்குகிற விருத்தத்தில் 'தெய்வமணக்குஞ் செய்யுளெலாம்' என்றுகூறிக் குன்றத்தூரைப் புகழுகின்றனர். 'ஞாலமளந்தமேன்மைத் தெய்வத்தமிழ்' மொழியின்கண் சாலவும் தெய்வமணங் கமழப்பெற்ற சிறப்புரிமையுடையன சைவத்திருமுறை பன்னிரண்டுமாம். நூலறிவின் பயன் வாலறிவனது நற்றாள் தொழுது பிறவியறுத்தலே யாகலின் இறைவனது பேரருட்டிறங்களையும், அவனைவழிபட்டுய்யு முறைமைகளையும் எடுத்தியம்பும் செய்யுட்களை பேரின்பப்பயனளிக்கும் பெருமை சான்றனவாகும். பன்னிரு திருமுறைச் செய்யுட்களெல்லாம் தேவதேவராகிய சிவபெருமானைப் பொருளாகவுடையன. அப்பெருமானது திருவருணெறிநின்று பேரின்பவாரியிற் றிளைத்த பெருமக்களால் அருளிச் செய்யப்பட்டன. இந்நிலவுலகத்திலே எண்ணரிய தெய்விக அற்புதத்திறங்களை யாவருங் கண்டுய்யுமாறு இயற்றிக் காட்டியன. கற்றல் கேட்டலுடையாரெவரையும் பிறவிக்கடலினின்று கரையேற்றுமாற்றிற முடையன. மற்றும் இயம்புதற்கரிய எத்தனையோ வகையான பெருஞ்சிறப்புக்கள் இயையப் பெற்றன. இன்னவாகிய செந்தமிழ்த் தெய்வப் பாடல்களை குன்றைப்பதியிலே என்றும் பயிலப்பெறுவன என்பது 'தெய்வமணக்குஞ் செய்யுளெலாம்' என்னும் சீரிய தொடரின் கருத்தாகும்.

இனி, அத்திருமுறைகளுள்ளே பன்னிரண்டாவதாய்த் திகழ்வதும், உமாபதி சிவாசசாரியார் கூறுமாறு ஏனைத் திருமுறைகளையெல்லாம் அங்கங்களாகக் கொண்டு ஒளிர்வதும், மெய்யடியார்களின் வரலாறு கூறுமுகத்தால் மற்றைத் திருமுறைகளின் தோற்றம் முதலிய வரலாறுகளை இனிதெடுத் தியம்புவதுமாகிய திருத்தொண்டர் புராணம் குன்றை முனிவராய சேக்

கிழார்பெருமான் அருளியதாகலின் அப்பதியிடைப் பயிலப் பெறும் தெய்வமணங் கமழ் செய்யுட்கு அப்பெரிய புராணத் திருந்தே சில காட்டுவது இச்சிற்றுரையின் கருத்தாகும்.

பெரியபுராணத்தே அடியார்களின் வரலாறு கூறும் செய் யுட்களெல்லாம் அன்பின் பொலிவும் அருளின் விளக்கமும் கலினப்பெற்ற தெய்வப்பெற்றிமையுடையனவே யாகலின், அவற் றிற்கு அங்கங்களாகவுள்ள நாடு நகரம் முதலியவற்றின் வரு ணனைகளிலிருந்தே ஈண்டுச் சில காட்டப்பெறும்.

'வம்பு லாமலர் நீரால் வழிபட்டுச்
செம்பொன் வார்கரை யெண்ணில் சிவாலயத்
தெம்பி ரானை யிறைஞ்சலி னீர்ம்பொன்னி
உம்பர் நாயகர்க் கன்பரு மொக்குமால்.'

இது திருநாட்டுச் சிறப்பிலே காவிரியைப் புனைந்துரைக்கும் செய்யுட்களில் ஒன்று. காவிரியானது இருகரையிலு முள்ள சிவாலயங்களில் எழுந்தருளியிருக்கும் பெருமானை மலராலும் நீராலும் வழிபட்டு வணங்குகின்ற தென்பது பெரிதும் களிப் பினை விளைப்பதொன்று. சோணாட்டிற் காவிரி யிருமருங்குமே எண்ணிறந்த திருக்கோயில்கள் உள்ளனவென்பதும், காவிரியின் நீர் பெருகி அக்கோயில்களின் மேல் ஊர்ந்து செல்லுத லுண் டென்பதும் என்றும் காணலாகும உண்மையாம். 'இட்டுக் கொள்வன பூவுள நீருள' என்றபடி எம்பிரானை அருச்சித்தற்கு இன்றியமையா தனவாகிய மலரும் நீருங் கொண்டே காவிரி யும் வழிபடுகின்றது. அன்றியும் அது நெக்கு நெக்கு வழிபடு வதேயன்றிப் பொக்க மிக்குப் பூசிப்பதன்றென்பது 'ஈர்ம் பொன்னி' என்பதனாற் குறிப்பித்தவாறும். இங்ஙனமாக 'அந் தண் காவிரி' வந்து வழிபடுதலின் அஃது 'உம்பர் நாயகர்க்கு அன்ப' ரையும் ஒக்கின்றதாம். ஆசிரியர் பெருமை இருந்த வாறென்னே! இனி இப்புராணத்திற் கூறவிருப்பன 'உம்பர் நாயகர்தங்கழலல்லது நம்புமாறறியாத' அன்பர்களின் வரலாறு களென்பதும், அவரெல்லாம் சிவபெருமானை நினைந்து 'அன்

போற்றுகி அகங்குழைவார்' ஆகிச் சிவாலயந்தோறுஞ் சென்று பெருமானை மலராலும் நீராலும் வழிபடுங் கடப்பாட்டினரென் பதும் முன்னரே உணர்த்தி எம்மை யெல்லாம் ஆற்றுப்படுத்து வாழ்விப்பான் கருதிய 'வம்புலாமலர்' ஆகும். இது தான் 'தெய்வ மருவளர்' தீந்தமிழ்ச் செய்யுளாதல் வெளிப்படையன்றோ?

இனி, இங்ஙனம் ஒழுகாநின்ற பொன்னியாம் கன்னி 'நாடெல் லாம் நீர்நாடு தனையொவ்வா நலமெல்லாம்' என்ற சோணாட்டுப் பண்ணைகளிற் பல்காலினுஞ் சென்று பரந்து விளையாட் டயரா நிற்கையில் அங்குள்ள சாலிகளெல்லாம் தூயவெண்மை யுண் மைக் கருவினையுடையவாகிப் பின் பசந்து சுருள் விரித்துக் கதிர் கள் விரிந்தன என்னும் பொழுது அரனடியார் உள்ளம் சுருள் விரித்து நெகிழ்ந்து மலர்ந்தன போலும் விரிந்தன என்பார். 'சுருள் விரித்தரனுக் கன்பர் ஆலின் சிந்தைபோல அலர்ந்தன கதிர்களெல்லாம்' என்றும், அங்ஙனம் விரிந்த கதிர்கள் பால் முற்றித் தலைவளைவது சிவபெருமானுக் கன்பாகிய மெய்யடியார் கள் கூட்டத்தில் ஒருவர் ஒருவரைத்தலையால் வணங்குவது போலும் என்பார் 'பத்தியின் பாலராகிப் பரமனுக்காளாமன்பர், தத்தமிற் கூடினார்கள் தலையினால் வணங்குமாபோல்' என்றும், அக்கதிர்கள் பழுத்து விளைந்தமை அரனடியார் மாட்டுச் சிவ ஞானம் விளைதல் போலும் என்பார் 'மற்றை வித்தகர் தன்மை போல விளைந்தன சாலியெல்லாம்' என்றும் கூறியிருப்பன போல்வன 'சிவகந்தம் பரந்து நாறு'ம் தீவிய செந்தமிழ்ச் செய் யுட்களாமாறு காண்க.

இனி, இவ்வாறு காவிரிக் கரைவழியாகக் கழனிகளை யெல் லாம் பார்த்துக் கொண்டு சென்று திருவாரூர் என்னும் திருநக ரத்தை யடைந்தால், இம்மை மறுமை யின்பங்களையும், என்று மழியாத பேரின்ப வாழ்வையும் வரையாது வழங்கும் வள்ளற் றலைவராகிய நங்கள் தியாகராசர் அரசுவீற்றிருக்கும் அத்திருப் பதியின் கண்ணே கிளிகளெல்லாம் திருப்பதிகங்கள் பாடுதலையும், நாகணவாய்ப் பறவையெல்லாம் அவற்றைக் கேட்டுக்கொண் டிருத்தலையும் கண்டு கன்னெஞ்சமும் கரைந்துருகா நிற்குமாம்.

‘உள்ள மாருரு காதல ரூர்விடை
வள்ள லார்திரு வாரூர் மருங்கெலாம்
தெள்ளு மோசைத் திருப்பதி கங்கள்பைங்
கிள்ளை பாடுவ கேட்பன பூவைகள்’

என்றால் இத்திருப்பதியின் கண்ணுள்ள ‘தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம்’ இத்துணைப் பெருமை வாய்ந்ததென அறுதியிட்டுரைக்கலாவ தொன்றாமோ?

இனி, அத்திருவாரூரின் கண்ணே, ‘மின்னேர் செஞ்சடையண்ணல் மெய்யருள் பெற்றுடையவ’ ராகிய நம்பியாரூரர் ‘ஈசனாரு’ ளேயாகிய பரவையாரைக் கண்டு மால்கொண்டு, ‘ஆரூராண்டவர்’ அம்மங்கையைத் தந்து ஆவிநல்குவர்’ என்னும் துணிபுட னிருக்கும்பொழுது, ஞாயிறு மேல் கடலில் மறைய மாலைப்பொழுதிலேமதியம் உதித்தது. அம்மதியின் நிலவு பரந்த தன்மை நம் அருண்மொழித்தேவர் திருவாக்கில் இங்ஙனம் உள்ளது.

‘தோற்று மன்னுயிர் கட்கெலாந் தூய்மையே
சாற்று மின்பமுந் தண்மையுந் தந்துபோய்
ஆற்ற வண்டமெ லாம்பரந் தண்ணல்வெண்
ணீற்றின் பேரொளி போன்றது நீணிலா’

உயிர்களுக்கெல்லாம் தூய்மையும், இன்பமும், தண்மையும் தந்து, அண்டமெலாம் பரந்து விளங்கும் நிலவொளிக்கு அண்ணலது வெண்ணீற்றொளியை உவமை கூறியது எவ்வளவு பொருத்தமும் அழகும் பொருந்தியதாய் இன்பம் விளைக்கின்றது பார்மின்! ‘பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்க’ ளாகிய மெய்யடியார்களின் பெருமையைத் திருவருட் டுணைகொண்டு பரவலுறுவார் இதனையன்றி வேறெவ்வுவமை கூறும் நீர்மையராவர்? அண்டமெலாம் பரந்து விளங்கும் நிலவுக்கு அண்டமெலாம் வடிவாகிய அண்ணலின் திருநீறு உவமையாந்தன்மை சிந்தித்தற்குரியது.

சிற்றறிவுக்குப் புலனாகிய வற்றில் ஒன்றிரண்டு காட்டப் பெற்றன. பிழையுள்ளன பொறுத்தல் பெரியார் கடன்.

# அன்பும் கடமையும்

['குறுமுடியான்']

வாழ்க்கையை நலப்படுத்தும் முக்கிய கொள்கைகள் இரண்டு. அவை அன்பும் கடமையும். வாழ்க்கையை அழகும், இனிமையும் உடையதாக்குவது அன்பு. வாழ்க்கையைப் பலமும் பெருமையும் உடையதாக்குவது கடமை. அன்பு கடமையாகிய இரண்டும் ஒன்றுக்கொன்று இன்றியமையாதவை. இவ்விரண்டும் இசைவாகக் கலந்துள்ள வாழ்க்கையே சிறந்த நோக்கங் கொண்ட வாழ்க்கையாம். ஒழுக்கச் சட்டத்துக்கு இணங்க நமது நடத்தையை ஒழுங்கு படுத்திக் கொள்ளாமலும், கடமையைச் செய்யவேண்டுமென்ற இலேசான உணர்ச்சியையும் அடக்கிக்கொள்ளத் தயாராயில்லாமலும் நமது அன்புக்கு அடிமையாகும் காலமே வாழ் நாள் பலமற்றதும் தாழ்வுற்றதுமாகிறது. நமது உணர்ச்சி நம்மைச் செலுத்தும் இடமெங்கும் நாம் செல்ல வேண்டியவர்களாகின்றோம். கடுமையும் உய்ரிய அறிவுமுடைய கடமைக்குப் புறம்பான வாழ்க்கை எதுவும் வாழ்க்கையாகாது. தூய அன்பு ஒழுங்குக்கும் தன்னடக்கத்துக்கும் கட்டுப் பட்டதாகவேயிருக்கும். அன்பும், கடமையும் கலவாத வாழ்க்கை கடுமையும் கோரமுமானது. நல்லொழுக்கம் அன்பும் பிரியமுமான இயல்புடன் கூடியபொழுது தான், காருண்யத் தன்மை யுடையதாகின்றது.

சமுதாயத்தில் சில நோய்நிலைகளுள்ளன. சமுதாயத்தைப் புதுப்பித்து அமைக்கும் ஆற்றல் பெற்றமக்கள் தப்பிதத்தை முற்றிலும் வெறுத்தொதுக்குவது அவசியம். அவர்களின் மிருதுத்தன்மை வெளிப்படாமல் இருக்கவேண்டும். உலகம் விரும்புவது இத்தகைய குணம்சத்தை யல்ல. இக்குணம் ஒழுக்கப்பெருமைக்கு உற்றதாகாது. சிறந்தகுணங்கள் தத்தமக்குரிய சிறந்த குறிகள் சமபாகமாகக் கலந்திருப்பதை யடைய அவாக்கொள்ள வேண்டும்.

கடமையும் அன்பும் ஒன்றுக்கொன்று துணையாகின்றன. கடமை அன்பைத் திருத்துகிறது. அன்பு கடமையை எளிதாக்குகிறது. நன்னெறிப் பழக்கமே அன்பை அசுத்தம் லௌகிகம் இவற்றினின்றும் சுத்தப்படுத்துகிறது. செயற்கருஞ் செய்கையையும் எளிதாகவும் திருத்தமாகவும் செய்து முடிக்குந் திறன் அன்பினாலேயே அமைவது. கடமையே அன்பைப் பெரிதுந் தூய்மை செய்வது. இது கடவுள் பக்தி பூண்ட இல்வாழ்வான் தன் குடும்ப விவகாரங்களில் ஈடுபட்டிருக்கும் முறைக்கும், தன்னையமிக்க உலக விவகாரத்திலேயே பொழுதுபோக்கும் இல்வாழ்வான் தன் குடும்பகாரியங்களில் ஈடுபட்டுழைத்துவரும் முறைக்கும் உள்ள வேற்றுமையால் விளக்கமாகும். இவர்களில் வைதீக வாழ்க்கையுடையவன் தன்னுடைய பேரன்புக்கு இலக்காயிருக்கின்றவர்களைத் தன்னுடைய இன்பவாழ்வுக்குத் துணையானவர்களென்று கருதாது, கடவுளால் தன்னுடைய பாதுகாப்புக்குள் வைக்கப்பட்டவர்கள் என்றே கருதுவான். தன்னிடம் ஒப்படைக்கப்பட்டிருப்பவர்களுடைய நல்வாழ்வும் இன்பமும் கருதியுழைத்து அவர்களைக் கடவுளிடத்து அன்பு செலுத்துகின்றவர்களாகவும் கடவுளுடைய ஆணைக்குக் கீழ்ப்படிந்து நடக்கின்றவர்களாகவும் செய்ய முயல்கின்றான். இவன், தன்கையை எதிர்பார்த்திருக்கின்றவர்களைத் தன்மனம் போனபடி நடத்த இச்சை கொள்ளாமல் அவர்களுடைய கூட்டுறவால் தன்னிடம் பொருந்தியிருக்கும் அன்பையும் ஆநந்தத்தையும் பெருக்கிக்கொள்ள முயல்கின்றான். கடவுளை முன்னிட்டு அவர்கட்குச் செய்ய வேண்டிய கடமைகளையும் தவறாமற் செய்கின்றான். அவர்களிடம் கடவுளன்பின் ஒளி விளங்கக் காண்கிறான். அவர்களின் வாயிலாகக் கடவுளின் இனிமையும் அழகும் நிறைந்த அன்பு நீர் (கருணைவெள்ளம்) தன்னுள் பாய்வதாக உணர்கிறான்.

நிற்க, கடவுணெறிப்படாத மற்றவன் வாழ்க்கையைக் கவனிப்போம். இவன் தனது தொடர்புடையாரிடம் நடந்துகொள்ளும் முறை முற்றிலும் மாறுபட்டது. இவன் தன்னைச் சார்ந்தவர்களை நேசிக்கிறான். விளக்கமாகப் பேசின் மிகுந்த பற்றுடன் விளங்குகிறான். ஆனால் இவன் கொண்டுள்ள அன்பு

உயரிய ஒழுக்க நோக்கங்களைக் கொண்டிராமையின் சிறப்படைதற்கில்லை. கடவுளின் பொருட்டு அவர்களுக்குத்தான் தொண்டு புரிய வேண்டுமென்ற நல்லுணர்ச்சி அவன் உள்ளத்தில் உதிப்பதில்லை. தன்னை யடுத்திருப்பவர்களுக்கு இவ்வுலக இன்பங்களைச் செய்து வைப்பதில் கருத்துடையவனேயன்றி, அவர்களுடைய மறுமை நலங்கருதிக் கடவுளுணர்வு அன்னவர்க்கு அமையவேண்டிய துறையில் உழைப்பவனல்லன். சுருங்கச் சொல்லின் இவன் அவர்களிடங்காட்டும் அன்பில் தூய்மை மணம் பரிமளிப்பதில்லை.

கடமை அன்பை எவ்வளவு சிறப்பிக்கக் கூடியதாகிறதோ அவ்வளவு அன்பும் கடமையின் பாதையைத்திருத்தி மிருதுவாக்குகின்றது. அன்பர்கள் பொருட்டு அளவிறந்த துன்பங்கள் நுகர்வது இயற்கையே. இத்தகைய துன்பங்களையும் இடையூறுகளையும் பிறர்பொருட்டு யார்தான் பொறுத்தல்கூடும். ஆனால் தன்னால் காதலிக்கப்படுபவரிடத்திலோ அவை அளவிறந்து காணப்படினும், அவற்றை அற்பமாகக்கருதி மகிழ்வுளத்துடன் தாங்கிக்கொள்கின்றவனாகிறான். கடமைகளை அன்புடன் செய்கின்றபொழுது மிகுந்த ஊக்கம் உண்டாகின்றது. செய்ய முடியாவெனமதித்து விடப்படும் செய்கைகளும் அன்பின் ஆற்றலால் மிகவும் இலகுவாகச் செய்து முடிக்கப் படுகின்றன. புல் தடுக்கி விழும் தைரியமுடையவனும் அன்பின் வலியால் வன்பெரும் பூதங்கள் செய்து முடிக்கும் வலிய காரியங்களையும் செய்து முடிப்பவனாகின்றான். அன்பே பலம். அன்பால் நாம் பலமுடையவர்களாகின்றோம் தன்னலம் பாராட்டிகளே பலவீனர்கள்.

நம்முடைய சாதாரண அநுபவமே அன்பின் வலிமையை அளவிட்டுரைப்பதாகும். கடவுள் விருப்பத்தை நிறைவேற்ற முற்படாமல் நமது இச்சையைப் பூர்த்தி செய்யவே முற்படுகின்றோம். கடவுள் விருப்பத்துக் கிசைந்து நாமும் ஒரு காரியத்தைச் செய்ய விரும்புவது மிகப்பிரயாசையான காரியமே. என்றாலும் கடவுள் திருவுள்ளத்திற் கிசைந்தவற்றை நினைத்தலும்

செய்தலும் அவசியம். ஆனால் சிலகாரியம் நம்மால் செய்து முடிக்கக் கூடியதன்று. மக்களாகிய நாம கடவுள் விருப்பத்துக்கு இணங்கி நடக்கக்கடமைப் பட்டிருக்கின்றோம். கடவுளுக்கு முற்றிலும் கீழ்ப்படிந்து ஒழுகுவதை நாம் உணர்கின்ற வரை நமக்குச் சாந்தம் உண்டாகாது. நாம் பலமற்றவர்கள். அன்பொன்றுதான் நம்பலக்குறைவைப் பலநிறைவாக மாற்றக் கூடியது. ' கடவுளை மட்டும் நாம் நேசிக்க வேண்டிய முறையில் நேசித்து வருவோமாயின் அளவிறந்த நீக்கரிய துன்பங்களும் எளிதில் நீங்கிவிடும். கடவுள் வழியில் ஒழுகுபவர்க்கு இடையில் உறும் தடைகள் அகன்றுவிடும். கரடுமுரடான பாதையும் மெத்தெனவிளங்கும். ஒரு காரியத்தைச் செய்யவேண்டுமென்ற இச்சைக்கும் அதனைச் செய்து முடிப்பதற்கும் இடையில் ஏற்படும் கஷ்டங்களும் கணப்பொழுதில் ஒழிந்துபோம். நாம் தூய்மையுடனிருக்க முயல்கின்றோம் ஆனால் பொறிவழியுண்டாம் தவறுகள் தவறாமல் நாளும் ஏற்படுகின்றன. ஆசையை அடிப்படுத்தி அறிவொழுக்கத்தைக் கடைப்பிடித்து மேம்பட விரும்புகின்றோம். அடிக்கடி ஆசையே நம் நன்னோக்கத்தை மேற்கொள்ளுகிறது. இப்படி அடிக்கடி தவறிபோகாமல் நிலைத்த நெறியில் நிற்க வேண்டுமானால் கடவுளை நேசிக்கவேண்டும். கடவுள் சந்நிதானத்தில் நாம் இருக்கின்றோமென்னும் உணர்ச்சி நம்முள் தோன்றுகிறகாலத்தில் நம் ஆன்மா எவ்வளவு தெய்வீகமணத்தால் பரிமளிக்கின்றது. கடவுளின் பேரொளியழகின் ஒரு சிறுதுளி நம் உள்ளத்திலுள்ள அவநம்பிக்கையை அகற்றி உள்ளத்தைத் தூய்மை நீரால் சுத்தப் படுத்த வல்லதாகிறது. இங்ஙனம் மாசற்ற தூய்மனம் பின் ஒருபொழுதும் மாசுற்று மலினமுறாது. ஆத்மீக வாழ்வின் முயற்சியும் கவலையும் இறைவன் திருவடிப்பேற்றையடைந்து இன்புறுவதேயாம்.

---

# குழந்தைகளின் நல்வளர்ப்பு

## II.

[பு. முத்துசாமிப் பிள்ளை]

நம் 'செல்வியில்' இதற்குமுன் இத்தலைப்பின்கீழ் வரையப்பட்டுள்ள செய்தியில் வளர்ப்பு என்பதில் குழந்தைகளின் கருப்ப வளர்ச்சியும் அடங்குமென்றும், ஒவ்வொருவரின் குணமும் அவரவர் இயற்கையாலும் செயற்கையாலும் ஆக்கப்படுகின்றதென்றும், செயற்கை என்பதில் கரு தோன்றின நாள்தொட்டு அதனோடு சேர்க்கப்படும் வளர்ப்புக்களும் (போஷிப்புகளும்) சுற்றுப் பக்கங்களிலிருந்து இக்கருவைத் தொடர்ந்துள்ள பல குணங்களும் அடங்கியுள்ளனவென்றும், இயற்கை என்பதில் ஒருவன் தன் முன்னோரிடமிருந்து அடைந்த குணங்களும் கருத் தோன்றும் காலத்தில் பெற்றுள்ள மற்றைக்குணங்கள் பலவும் அடங்கியுள்ளன வென்றும், இயற்கையின்றிச் செயற்கையும் செயற்கையின்றி இயற்கையும் பயன்படா என்றும், ஆகலின் இரண்டும் இன்றியமையாது வேண்டப்படுவன என்றும், நல்ல உணவு, தூயகாற்று, வீட்டுக்கு வேண்டும் வெளிச்சம், வீட்டைச் சுற்றிய இடங்கள் தூய்தாயிருத்தல் முதலிய நல்ல செயற்கைகளிருந்தும் குழந்தைகள் நலமின்றி நோயால் வருந்துவது இயற்கையின் ஊனமெனவும் கூறியுள்ளோம்.

இயற்கை ஊனமின்றியிருத்தல் நல்வாழ்விற்குப் பெரிதும் இன்றியமையாதது. ஊனமான இயற்கையாலுண்டாகும் குழந்தைகளின் நலம் பேணுதற்கு நமது நேரத்தின் பெரும்பகுதி செலவாய் விடுதலால் எஞ்சி நமக்கு இருக்கும் காலம் நல்ல குழந்தைகளை எட்டிப்பார்த்தற்குங்கூட முடியாததாய் விடுகின்றது.

ஆகவே நம்நிலைமை வழிகாட்டுவதற்கு இயலாத நிலையில் நிற்பதால் நல்ல குழந்தைகளும் தங்களுக்குக் கிடைக்கவேண்டிய நல்லவளர்ப்புக் கிடையாமையால் நோயால் வருந்தும் நிலைமைக்கு வந்துவிடுகின்றனர். அந்தோ இவ்வாறு சுழன்று கொண்டே வரும் நம்வாழ்க்கையின் இயற்கை எவ்வாறாய் முடி

யும்? இனி வரவிருக்கும் நம்வழியினர் நலக்குறைபாடு உடையராயிருப்பர் என்பதற்கு ஐயமும் உண்டோ?

தங்கள் ஊதியத்தின் பொருட்டு ஆடுமாடுகளை வளர்ப்பவர்களும், ஜாதிக்குதிரைகளை வளர்த்து விற்பவர்களும், பலவகை ரோஜாமலர்களை வளர்ப்பவர்களும், பல்வேறுவகைக் கடலைகளைப் பயிரிடுபவர்களும் தங்கள் பழக்கத்தை (அநுபவத்தை) நமக்குத் தந்து அதன்வழியாய் இவ்வியற்கை நல்லதாயிருக்க வேண்டியதின் இன்றியமையாமையை நமக்குப் புகட்டவில்லையா. இவ்வாறாய பழக்கத்தால் நாம் அடைந்த அறிவை ஒப்புயர்வற்ற இம் மக்கட் கூட்டத்தினரை வளர்ப்பதில் செலுத்தி அதனாற் பயனெய்தவேண்டியது நம் கடமையன்றோ நம் கடமையை நாம் செலுத்துவதில் எவ்வகைப்பட்ட இன்னல நமக்குவரினும் தளர்வடையாது முறுவலுடன் அவற்றைப் பொறுத்து நம் கருமமே கண்ணாயிருத்தல் மிகவும் வேண்டற்பால தொன்று.

பிரான்ஸிஸ் கால்டன் (Francis Galton) என்னும் பெயர் கொண்ட மேல்நாட்டு நிபுணர் இநத நல்வளர்ப் பென்னும் செய்தியை உலகில் பரவச்செய்த நன்மககளுள் ஒருவராவர்.

இவ்வுலகில இன்புற்று வாழநினைக்கும் ஒவ்வொருவரும் தங்கள் மணக்காலத்தை மிகத் தூய்தாயும் தலைமையுள்ளதாயும் கருதல்வேண்டும். இக்காலத்தில தான் இனி வரவிருக்கும் இவர்கள் வாழ்க்கையின் இன்பமோ துன்பமோ உறுதிப்படுத்தப்படுகின்றது. ஆதலால் நன்மணங்களை மிகுதிப்படுத்தவும நன்மையல்லாத மணங்களை அகற்ற அல்லது குறைவுபடச் செய்யவும் வேண்டுவதே நல்வளர்ப்பின் நோக்கமாகும். இததகைய நன்மணம் நம் தமிழர்க்குப் புதுமையான தொன்றன்று. பண்டை நாளில் வாழ்ந்த தமிழ்முதுமக்களின் வரலாறுகளையும் அவர்களது ஒழுகலாறுகளையும் நுணுகி நோக்குவோமாயின் தமிழ்நாட்டு மணமுறையின் செம்மையும் தூய்மையும் நன்கு புலப்படும். அவர்கள் வரையறை செய்துள்ளவற்றை உற்றுப்பாருங்கள். ஒத்த கிழவனும், கிழத்தியும் இருக்கவேண்டிய ஒப்பு நிலையை விவரிக்குமிடத்து

"பிறப்பே குடிமை யாண்மை யாண்டோடு
உருவு நிறுத்த காம வாயில்
நிறையே அருளே உணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே"

என ஆன்றோர் மொழியுமாற்றால் நன்கு தெளிவுறும். அஃதாவது ஒத்த பிறப்பும், ஒத்த ஒழுக்கமும், ஒத்த ஆண்மையும், ஒத்த பருவமும், ஒத்த உருவமும், ஒத்த அன்பும், ஒத்த நிறையும், ஒத்த அருளும், ஒத்த அறிவும், ஒத்த செல்வமும் உள்ள இருவரே தம்முள் ஒருமைப்பட்டு வாழுதற்குரியர் என அப்பெரியார் அருளியிருப்பது உற்றுநோக்கற்பாலது. இப்பொழுது அம்முறை முற்றிலும் மாறுபட்டு நடைபெற்று வருதல் நம்மனோரால் பெரிதும் வெறுத் தொதுக்கற்பாலதே. சுருங்கச் சொல்லின் இப்போது நடைபெற்றுவரும் மணவினை ஒரு வியாபாரத்தினுங்கூடத் தாழ்வென்று கூறலாம்

ஒருவன் குருடனாகவாவது நொண்டியாகவாவது இருப்பின் அவ்வூனமானது அவனது குழந்தைகளைத் தொடராது. தன் குழந்தைகளும் தன்னைப்போல் குருடராகவாவது நொண்டியாகவாவது இருப்பார்களென்று நினைத்து வருந்த வேண்டுவதில்லை. ஆனால் ஒருவன் குடிகாரனாயிருப்பின் அக்குடியினால் அவனிடத்துண்டாகிய நஞ்சு அவனைமட்டுமன்றி அவன் அருமைக் குழந்தைகளையும் தொடர்கின்றது. இந்நஞ்சு பெற்றோரிடமிருந்து பிள்ளைகளுக்கு வருகிறதென்பது இப்பொழுது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குகின்றது. நம்வாழ்நாளை வீணாக்கி நம்மைத்துன்புறுத்தும் வழிவழிப் பகையே இந்நஞ்சு. இப்பகைமையை அடியோடு தொலைப்பதே இந்நல் வளர்ப்பின் வேலையின் ஒருபகுதியாகும். இவ்வுலகில் பரவிவரும் எத்தகைய கெடுதிகளையும் நாம் எண்ணியவுடனே திடீரென்று அறவே ஒழித்துவிடுதல் கூடாதெனினும் இச்செய்தியில் நம்பிக்கையுள்ள எவரும் நாளடைவில் கெடுதியை விலக்கி விடலாமென்று சொல்வதில் பின்வாங்கார்.

தம் அருமைப் புதல்வி, உடல் நலமும் அதன் பயனுமுள்ள நல்வனப்புமுள்ள ஒருவனைத் தன் காதற்கிழவனாகத் தேர்ந்தெடுக்குமிடத்து, அதற்குமாறாகத் தன் மனத்தேயுள்ள ஒரு பணக்காரனின் நோயாளியாயுள்ள மகனைத்தான் அவள்மணக்கவேண்டுமென எந்தத்தந்தையும் விரும்பான். நல்வளர்ப்பின் நோக்கத்துக்கிசையத் தன் மருமகனது உடல் நலத்தையும் பலத்தையும் கருதுவானேயன்றி ஒரு செல்வவானே தனக்கு மருமகனாகவேண்டுமென்று ஒரு சிறிதும் விரும்பான் இத்தகைய நல்வளர்ப்பின் பொதுவான சில செய்திகளை ஈண்டுக்கூறிய பின்னர் நம் உடன்பிறப்பாளராகிய (சகோதரர்களாகிய) இந்தியர் 'இச்செய்தியில் எவ்வாறு நடந்து கொள்ளுகிறார்களென்பதைப் பற்றியும் நாம் எவ்வாறு நடத்தல் நலமென்பதைப் பற்றியும் கூறுவாம்.

வழிவழிப் பகையாய் வரும் குடி ஒன்றைப்பற்றி மட்டும் ஈண்டுக்குறித்துள்ளோம். இதைத்தவிர வேறு சில பகைமையுள்ள நஞ்சுகளும் நம்மிடத்திலிருந்து நமது குழந்தைகளுக்கும் அவரது குழந்தைகளுக்கும செல்லுகின்றன. இவைகளையெல்லாம் இச்செய்தியின் பிற்பகுதியில் கவனித்தல் நலமாதலால் அவற்றை விடுத்து நல்வளர்ப்பின் விதிகளில் பெரும்பாலனவற்றைக் கவனித்து நடக்கும் ஒரு ஜாதியாரைப் பற்றி ஈண்டுக் குறிப்பிடுவோம்

இவர்கள் பெயர் யூதர். இவர்கள் மற்றையோர்களைவிடத் தங்கள் வாலிபர்களை நன்றாய்ப்பாதுகாத்து அவர்களைப் பெற்றோர்களாவதற்குத் தயாரித்துப் படிப்பிக்கின்றார்கள். இனித் தாயாக இருக்கவேண்டியவர்களை அவர்கள் நன்கு மதிக்கின்றார்கள். அவளது தூய்மையானவேலை அவள் தாயாயிருப்பதற்குத் தன்னைத் தயாரித்துக் கொள்ளவேண்டியதைத் தவிர வேறெந்த வேலையையும் அவள் செய்ய ஒருப்படுகின்றதில்லை. குழந்தை பிறந்தகாலத்து அவளை வெளியில் வேலைக்கனுப்புவதில்லை. அதனால் அக்குழந்தை நல்வளர்ப்பின்றித் துன்புறுகின்றதூஉம் இல்லை. ஆகவே இவர்கள்பால் வறுமைநோய் மிகுதியாயிருந்த

காலத்தும் குழந்தை இறப்பு மற்றெல்லோரிடமும் இருந்ததை விட மிகக் குறைவாகவே காணப்பட்டதாம். சிறுவர்களை வேலைக்கு அனுப்பும் வழக்கம் இவர்களிடம் அறவேகிடையாது. குடியின் மிகுதி இவர்கள்பால் இல்லை. குடிகார யூதத் தந்தைதாய்களைக் காண்பது அரிது. ஆண்பெண் தொடர்பு (சம்பந்தம்) உள்ள தீயவழிகளிலிருந்து இவ்வகுப்பினர் விடுபட்டவர்களாதலால் அதை ஒட்டிவரும் எவ்வகை நோயும் இவர்களை அணுகுவதில்லை.

இப்பொழுது ஒரு நல்வளர்ப்பாளன் எவ்விதம் இருக்க வேண்டும் என்றும் எல்லோரிடத்தும் எச்செய்தியைத்தான் ஊக்கப்படுத்துவான் என்பதையும் ஒருவாறு தெரிந்தோம்.

நல்வளர்ப்பாளன் என்றால் மணம் நடப்பதைத்தடுப்பவன் என்று எண்ணிவிடக்கூடாது. மணங்களை ஒழுங்குபடுத்தி நன்மணமாக்குபவன் என்று நினைத்தல் வேண்டும் நல்வளர்ப்பென்பது எல்லாமக்கட் கூட்டத்தவர்க்கும் எக்காலத்தும பொருத்தமானது. அஃது அழகுள்ள மணமக்களை உண்டாக்கி அவர்கள் எண்ணத்தை மிகுதிப் படுத்துவது. நல்வழியின் இன்றியமையாமையை மக்கட்கு எடுத்துரைப்பதும் அஃதே. குழந்தைகளின் தூய்மையை ஒப்புககொண்டு வாழ் நாளை மேன்மைப்படுத்துவதும் இந்த நல்வளர்ப்பே.

---

# முன்னுரைச் சுருக்கம்

[C. K. சுப்பிரமணிய முதலியார், B.A.]

(௭௮-ம் பக்கத் தொடர்ச்சி)

இனி, தற்காலத்திலே சமய சமரசம் என்றபெயராலே தப்பான ஒரு கொள்கை பரவிநிற்கிறது. அது மயக்க உணர்ச்சியினாலும் சமய உண்மைகளை ஆய்ந்தறிய மனமில்லாத சோம்பேறித்தனத்தாலும் உலக இன்பங்களை வரம்பின்றி அனுபவிக்க எழுகின்ற ஆபாச ஆவலாலும் உண்டாகின்றதோர் விபரீத உணர்ச்சியே யாகும். •சமரசம் என்றால் எல்லாம்

ஒன்று போலவே பார்க்கின்ற நிலை என்பது அல்ல. எதனை எதனை எவ்வெத்தன்மையில் வைத்துக் காணவேண்டுமோ அவ்வத்தன்மையில் வைத்துக் காணலே உண்மைச் சமரசமாகும். ஏனைய வெல்லாம் மயக்கச் சமரசமாம். உதாரணமாக ஒரு குடும்பத்திலே தலைவியானவள் அதில் உள்ள எல்லாரையும் சமமாகப் பாவிக்க வேண்டும். வஞ்சனை செய்யப் படாது என்பது ஒரு நியாயம். இங்கே சமமாக என்றால் என்ன? நாயகனையும் நாயகனுடைய உடன்பிறந்தாரையும் ஒன்றாகவே பார்த்தலா? அல்லது கணவனையும் மகனையும் ஒன்றாகக்காண்பதா? அப்படியாயின் இந்தப் போலிச்சமரசக் கொள்கை நம்மை எத்தனை விபரீதத்துக்குக் கொண்டு போய் விடுகிறது பாருங்கள். அவரவரை அவரவர்க்குரிய நிலையில் வைத்துப் பார்ப்பதே தலைவிக்குரியது எனக்கொள்ளுதலே உண்மைச் சமபாவனை யாகும். இரசம் என்பது ஒருவகை உணவுப்பொருள். அது பருகப் பெறுவது. அதிலே புளிப்பு உவர்ப்பு கரிப்பு முதலிய பல சுவைகளையும் சேர்த்துத தரும்படியாகப் புளி-உப்பு-மிளகாய்-பெருங்காயம் முதலிய பதார்த்தங்கள் சேர்த்துப் பெறுகின்றன என்பது யாவரும் அறிவார்கள். இந்த இரசத்திலே இப்பதார்த்தங்களை அவ்வவற்றிற்குரிய அளவுப்படிக்கு அல்லாமல் சமனுடையாகக் கூட்டிக்கரைத்தால் அது சமரசமாகுமா? உரிய சுவையைத்தருமா? இரசம் என்றபெயருக்குப் பொருத்தமாகுமா? அவ்வப்பொருள்களை அவ்வவற்றின் தரப்படி சேர்த்தாலல்லவோ அஃது இரசமாகக் கொள்ளப் பெறும். இது போலவேதான சமயங்களின் உண்மைச் சமரசமும் ஆகும். இந்த உண்மைச் சமரசமாவது சைவசித்தாந்தத்திலேதான் காணப்பெறுவது என்று பெரியோர் கூறுவர். எல்லாச் சமயக் கோட்பாடுகளையும் தன்னுள்ளே அடக்கி அவ்வவற்றை அவ்வவற்றிற்குரிய படிகளிலே அமைத்துக் காட்டிச் சமயாதீத நிலையையும் விளக்கி நிற்பது இதுவேயாகும்.

'சோபான பட்சங்காட்டி, மௌனமோலி அயர்வறச் சென்னியில் வைத்து இராசாங்கத்தமர்ந்தது வைதிக சைவமழகிதந்தோ' என்றார் ஸ்ரீ தாயுமான சுவாமிகள்.

இவ்வாறு உலகத்திலேயுள்ள எல்லாச் சமயக் கொள்கைகளையும் தன்னுள்ளே ஒவ்வோர் அங்கமாக அடக்கித் தான் ஒன்றினுள்ளும் அடங்காது ஏனையவற்றின் குறைவுபாடும் தனது நிறைவும் காட்டி நிற்பது சைவ சித்தாந்த சமரச சமயம் என்னும் முதற்சைவ நெறியே யாகும். இவ்வுண்மை நெறியினுக்குச் சமய ஆசாரியர்களும் சந்தான ஆசாரியர்களும் உண்டு. சமய ஆசாரியர்களாக விளங்குபவர்கள் நால்வர். அவர்களாவார் திருஞானசம்பந்தப் பிள்ளையார், ஸ்ரீ வாகீசத்திருவடிகள், தம்பிரான் றோழராகிய ஸ்ரீ வன்றொண்டப் பெருந்தகை, ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள். இப்பெரியார்கள் தோத்திர உருவமாகச் சைவ சித்தாந்த உண்மைகளை உலகிற்கு விளக்கி உபகரித்த உத்தமர்கள் சந்தான குரவர்களோ "ஏதுக்களாலும் எடுத்தமொழியாலும்" மிக்குச் சாத்திர உருவமாகச் சைவ சித்தாந்த உண்மைகளை நிலைநாட்டி யருளியிருக்கின்றார்கள்

சைவ சித்தாந்தத்தின் முடிந்த உண்மைகளையும் அவற்றிற் கொள்ளப்பெறும் உண்மைச் சமரச நெறியையும் சமயாசாரியர்கள் சந்தானாசாரியர்களின் பெருமைகளையும் அவர்கள் சிவபெருமான் அருள்வழியே நின்று செய்த மகோபகாரச் செய்கைகளையும் அறியாராய்ப் பலர் பலவாறு மயங்கி அவர்களிடத்தே அபசாரப்படுகின்றார்கள். ஸ்ரீ சம்பந்த மூர்த்திகளைப்பற்றி அவர் கருணையிலர் என்றும், தமிழ்க்குமிக உபகாரிகளான சமணர்களை இழித்துக் கூறினர் என்றும், இவைபோன்ற பல உண்மையற்ற கொடுஞ் சொற்களால் தனது அறியாமையை வெளிப்படுத்தி அபசாரப்பட்டவரைக்கூட நாம் காண்கின்றோம். அவற்றையெல்லாம் நான் இங்கே விரித்துக்கூற வரவில்லை. அது தனியாக விரித்து விளக்கவேண்டிய விஷயமாகும். ஆனால் ஒன்று மட்டும் சொல்ல விரும்புகிறேன்.

சைவம் உயர்ந்த நெறி. சிவபெருமான் தனது திருவருளைப் பெற்று ஆன்மாக்கள் உய்யவைத்த பெருநெறி: தவநெறி. இதனைக் காப்பாற்றி உலகிலே பரவச் செய்வது சிவதர்மமாகும். நமது ஆலயங்களும் நமது சாஸ்திரங்களும் கொள்கைகளும்

நமது நிலைபெற்ற சொத்துக்களாம். இவற்றிற்கு யாராவது கேடுசூழ்ந்தால் அதைத்தடுத்து நமது சொத்தைக் காத்து நிலை நாட்டுவது நமது கடமை. நமது வீட்டிலே 3 அங்குல இடத்தை ஒருவன் ஆக்கிரமிப்பானானால் எத்தனை கோபமும் எத்தனை தாபமும் போரும் செலவும்செய்து வீட்டைப்பாதுகாக்கிறோம். நமது சைவத்திருநெறித் தமிழ் இராசதானியாக விளங்கிய மதுரைக் கோட்டையைச் சமணர் முழுதும் கைப்பற்றிக் கொண்டார்களே. அதனை விடுவித்து நமது சோமசுந்தரக் கடவுளையும் எம்மைப் பவந்தீர்ப்பவர் சங்கமிருந்த திருவால வாயையும் நமக்குத் தேடித் தந்த உபகாரமன்றோ ஸ்ரீ ஞானசம்பந்த மூர்த்திகள் செய்து கொடுத்தார்கள்.• கல்விக்குப்பயன் கடவுளை யடைதல அல்லவா? சிவபெருமானை முழுமுதற் கடவுள் என்று தமிழ் வேதம் முழக்குகிறதே. எனவே சிவபெருமானை அடைவதன்றோ தமிழின் பயன். தமிழ்படித்து பெருமானை அடையாதார் தமிழின் பயனைப் பெறாதவர்களேயாகிய பயனிலிகள் என்று கருதியன்றோ நமது வாகீசத் திருவடியாங் கருணைவள்ளல் திரு ஆறை வடதளியிலே "வாய் இருந்தமிழே படித்து ஆளுறா ஆயிரஞ் சமணும் அழிவாக்கி" யருளினார்கள். இனியாவது மதுமாமிச முண்ணாத ஒன்றினாலேயே சைவர் என்றபேர் வைத்துக்கொண்டு உள்ள பலரும் சைவநெறியின் மேன்மையையும் தமது கடமைகளையும் உணர்ந்து சிவநெறி வளர்த்தலிலே ஈடுபடுவார்களாக.

பெரியோர்களே! நான் அதிக நேரம் பேசிவிட்டேன். இன்னும் பேச உள்ளவற்றைப் பின்னர் அங்கங்கே சமயம் வந்த போதும் முடிப்புரையிலும் பேசிக்கொள்வேன். ஒன்று சொல்லி என் முன்னுரையை முடித்துக்கொள்கிறேன். சைவ நெறியில் வகுத்தசாதனங்களை நாம் நன்றாய் உணர்ந்து கைக் கொள்ள வேண்டும். விபூதி உருத்திராக்கங்களாகியவை ஒவ்வொர் சைவனுக்கும் இன்றியமையாதன. ஒரு நாயகனுக்கு உரிமையான பெண்ணுக்கு எப்படி மஞ்சட்பூச்சும் தாலியும் அவசியமோ அது போன்றே நமது ஆன்மநாயகனாகிய சிவபெருமானுக்கு நாம் உரிமையாதலை விபூதிப்பூச்சும் உருத்திராக்கமும் விளக்கும். இவையில்லையாயின் தாலியில்லாதவள் எப்படிப் பல நாயகர்களுக்

கும் உரியவளென்று கொள்ளக் கிடக்குமோ அதுபோலவே நமக்கும் விபசாரிதை சம்பவித்து விடும். இவையே நமது உடம்பைத் தூய்மை செய்து காப்பாற்றுவன இவற்றை இதுவரை அணிந்து வந்தவர்கள் உறுதியோடு அணியுங்கள். அணியாதவர்கள் இனியாவது தாமதமின்றி அணிந்து இதுவரை அணியாத பாவத்தைக் கழுவிக் கொள்ளுங்கள்

"பூண்பதற்குக் கண்டியினைக் கூசியிடும் புல்லர்தமைக்
காண்பதற்குக் கூசுமரன் கைத்து" என்ற வாக்கிற்கு உறுதியாகத் திருவைந்தெழுத்தைக் கைக்கொள்ளுங்கள். மனத்திலே எப்போதும் சிவசிந்தனையை இடைவிடாது செய்யுங்கள்.

"சிந்தனைநின் றனக்காக்கி நாயினேன்றன் கண்ணிணைநின்
றிருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையு மம்மலர்க்கேயாக்கி வாக்குன் மணிவார்த்தைக் காக்கி"

என்றருளினார் ஸ்ரீ மணிவாசகர்.

"ஆங்கவர் மனத்தின் செய்கை யரனடிப் போதுக் காக்கி
யோங்கிய வாக்கின் செய்கை உயர்ந்தஅஞ் செழுத்துக் காக்கி"

என்றருளினார் ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள்.

(நேசநாயனார்-புரா. ௩)

விபூதியும் உருத்திராக்கமும் பூசை இடமும் ஏனைப் பூசை உபகரணங்களும் உங்கள் வீடுகள்தோறும் உரிய இடம் பெற்றிருக்கட்டும். நமது சிறுவர்கள் முதல் முதியோர் வரை

உனது கடவுள் யாவர்? சிவபெருமான்.

உனது சமயம் யாது ?

அவனுடைய சம்பந்தமுடைய சமயம்: சைவம்.

உனது ஆசாரியர்கள் யாவர்?

சமயாசாரிய மூர்த்திகளாகிய நால்வரும் சந்தானாசாரியர்களும் ஏனை உண்மை நாயன்மார்களும்.

அவர் திருவாக்குகளாகிய பிரமாண நூல்கள் யாவை?

தேவார திருவாசகமாதி சைவத்திருமுறைகள் பன்னிரண்டும் சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்குமாம்.

என்றிப்படித்தாகிய அடிப்படையான சைவ உண்மைகளையாவது உணர்ந்திருத்தல் வேண்டும். இவைகளை முன்னோர்களுடைய பாட்டுகளின் மூலமாக உணரும் சத்தி இல்லாதவர்கள் இது விஷயமாய் உலகோபகாரமாக ஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்கள் எழுதிவைத்திருக்கும் சத்தியரூபமான பால பாடம், பெரிய புராண வசனம், கந்தபுராண வசனம், திருவிளையாடற் புராண வசனம் என்பனவாதி நூல்களையேனும் ஒவ்வொருவரும் வாசித்து அறிந்து கொள்ளக்கடவர். ஒவ்வொரு சைவனுடைய வீட்டிலும் சைவத் திருமுறைகள் பன்னிரண்டும் இருத்தல் வேண்டும். சைவானுட்டானங்களைச் செய்தபின்னரே புசித்தல் வேண்டும். இப்படியெல்லாம் சைவ ஒழுக்கம் தலைநிற்கா விட்டாலோ

திருநாம மஞ்செழுத்துஞ் செப்பாராகில்
தீவண்ணர் திறமொருகாற் பேசாராகில்
ஒருகாலுந் திருக்கோயில் சூழாராகில்
உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணாராகில்
அருநோய்கள் கெடவெண்ணீ றணியாராகில்
அளியற்றார் பிறந்தவா றேதோவென்னில்
பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ்செத்தும்
பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின்றாரே

என்ற ஸ்ரீ வாகீசருடைய சத்திய வசனப்படி நாம் பிறந்திறந்து உழல்வதற்குப் பிறந்தவர்களேயாவோமன்றி உய்யுமாறு பிறந்தவர்களாக மாட்டோம். இவ்வாறு சைவநெறி நின்று சைவ சாதனங்களைக் கைக்கொள்வதால் உண்டான பயன்யாதோ எனின் பாசநீக்கம் பெற்றுப் பிறவியறப் பெற்றுச் சிவத்தை அடைந்து நித்திய சுகத்திலிருத்தலேயாகும். அதுவரையும் இவ்வுலகிலே ; சீவன்முத்தர்களாகிய பெரியாருடன் இணங்கி அடியார் வேடத்தையும் சிவாலயத்தையும் சிவனெனவே வழிபட்டு அடியார் கூட்டத்துடன் இருத்தலாகிய பெருஞ் சுகமும் நமக்குக் கிடைக்கும்.

# திருக்குறட் பாயிரக்கருத்து

[M. V. நெல்லையப்பி பிள்ளை, B. A.]

திருக்குறள் இற்றைக்குச் சுமார் 1,900 ஆண்டுகளுக்கு முன்னே தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரால் உலகின் கண்ணுள்ள மக்களெல்லாம் உய்யும் பொருட்டு இயற்றிய வோர் அரிய பெரிய தமிழ் நூல். அஃது இரண்டு அடியாலாகிய குறள் வெண்பாவால் ஆக்கப்பட்டதால் திருக்குறள் என்னும் பெயர் பூண்டது. 'ஆயிர முகத்தா னமைந்த தாயினும், பாயிர மில்லது பனுவ லன்றே' என்ற ஆன்றோர் வழக்குப்படி திருவள்ளுவ நாயனார் இந்நூலுக்குப் பாயிரமாகக் (1) கடவுள் வாழ்த்து, (2) வான் சிறப்பு, (3) நீத்தார்பெருமை, (4) அறன்வலியுறுத்தல் என்கிற முதல் நாலு அதிகாரங்களையுஞ் செய்தருளினார். இந நான்கு அதிகாரங்களும் பாயிரம் என்பது. அவர் தாம் முதலாவது சொல்லப்புகுந்த அறத்துப் பாலின் முதற் பகுதியாகிய இல்லற வியலுக்குமுன்னே அவைகளை வைத்த வைப்பு முறையே இனிது விளக்கும். இந்த நான்கு அதிகாரங்களும பாயிரம் என்பதை சிறப்புப்பாயிரம் சொன்ன சங்கப்புலவர்களில் சிறுமேதாவியார் "வீடொன்று பாயிரம் நான்கு" எனவும், எரிச்சலூர் மலாடனார் "பாயிரநான் கில்லறமிருபான் மூன்றே" எனவும், நத்தத்தனார் "ஆயிரத்தி முந்நூற்று முப்ப தருங்குறளும். பாயிரத்தினோடு" எனவும் தாங்கள் பாடிய வெண்பாக்களில் விளங்கவுரைத்தருளினார்கள். இங்கே நான் சொல்லப்போகிற கருத்துரைகளும் இந்த நான்கு அதிகாரங்களும் பாயிரம் தான் என்பதை வற்புறுத்தும்.

2. திருவள்ளுவ நாயனார் முதல் நான்கு அதிகாரங்களையும் பாயிரமாக யாது கருத்துப் பற்றிச் சொல்லியருளினார் என்பதே இங்கே நான் எடுத்துக் கொண்ட ஆராய்ச்சியாகும்.

3. பாயிரத்தைப் பற்றித் தொல்காப்பியம் நச்சினார்க்கினியர் உரையிற் கூறியதாவது:—

" பருப்பொருட் டாகிய பாயிரங் கேட்டார்க்கு
நுண்பொருட் டாகிய நூலினிது விளங்கும்"

என்றாராகலின், அப்பாயிரந்தான் தலையமைந்தயானைக்கு வினையமைந்த பாகன் போலவும், அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போலவும் நூற்கு இன்றியமையாச் சிறப்பிற்றாயிருத்தலின் அது கேளாக்காற் குன்று முட்டிய குரீஇப் போலவுங் குறிச்சிபுக்க மான்போலவும் மாணாக்கன் இடர்ப்படும் என்க.

ஆகலான் எந்நூல் உரைப்பினும் பாயிரம் உரைத்து நூல் உரைப்பதே மரபு என்று பண்டைத் தமிழ்நூற் புலவர் கிளந்தினர்.

4. மேலே சொல்லிய முறைமைப்படி திருக்குறள் நூலில் நுண்பொருளாகக் கூறப்பட்டன பருப்பொருளாக முதல் நான்கு அதிகாரங்களிலும் எவ்வாறு கூறப்பட்டுள்ளன என்பது கருதலாம்.

5. நூலிற் கூறப்படும் பொருள்கள் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் மக்களால் உலகவாழ்வில் அடையற் பாலனவாகிய நான்கு உறுதிப் பொருளகளாம். திருவள்ளுவ நாயனார் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று பொருள்களையும் நூலில் அறத்துப்பால, பொருட்பால், காமத்துப் பால் என மூன்று பால்களாகப் பகுத்து அவற்றின் இலக்கணங்களையெல்லாம் விரிவாகவும் வீட்டைப் பற்றிப் பாயிரத்தில் கடவுள் வாழ்த்து என்ற அதிகாரத்திலும், அறத்துப்பால் துறவறவியலில் நிலையாமை, துறவு, மெய்யுணர்வு, அவாவறுத்தல் என்ற நாலு அதிகாரங்களிலும் காரணவகையாற் சுருக்கமும் கூறியருளினர். ஆகவே நாயனார், கீரந்தையார் சிறப்புப்பாயிரமாகிய திருவள்ளுவமாலையில் "முப்பாலி னாற்பால் மொழிந்தவா" என்று கூறிய வண்ணம் முப்பாலிலும் நான்கு பாலையும் மொழிந்தார்.

6. மக்கள் நான்கு உறுதிப் பொருள்களையும் அடைவது உலகவாழ்வினாலேயே. இந்த உலகவாழ்வு உண்டாம் பொருட்டும் செவ்விதின் நடைபெறும் பொருட்டும் முதற்கண் வேண்டப்படுவது கடவுள். "தானலாதுலகமில்லை" என்று திருநாவுக்கரசு

சுவாமிகள் கூறியருளியபடி கடவுளின்றி உலகம் உளதாகாது, உயிரில் பொருளும் உளதாகாது, உயிர்ப்பொருளும் உளதாகாது. ஆகையினாலே நாயனார் பாயிரத்தில் முதல அதிகாரமாகக் கடவுள் வாழ்த்துக் கூறினார். கடவுள் வாழ்த்து மங்கல வாழ்த்து, வணக்கம், பொருளியல்புரைத்தல் என மூவகைப்படும். இம்மூன்றனுள் நாயனார் முதல் அதிகாரத்திற் கூறிய வாழ்த்து பொருளியல் புரைத்தலாகும். நாயனார் கடவுள் வாழ்த்தைப் பொருளியல் புரைத்தல் என்றவகையிற் கூறியது தாம் நூலில் நுவல எடுத்துக்கொண்ட நுண் பொருள்களை பருப்பொருள்களாகக் குறித்து விளக்குதற் பொருட்டென்க.

7. உயிர்களின் உலகவாழ்வு அதனை இயக்கும் ஒரு கடவுளையன்றி நிகழாது என்று சொல்வதனோடு அமையாது நாயனார் முதல எட்டுக்குறள்களிலும் கடவுள் இன்ன இன்ன குணம் உடையவர் என்று வகுத்துக்கூறி ஒன்பதாவது குறளில் அவ்வெட்டுக் குணங்களையுந் தொகுத்துக்கூறி இத்தகைய பேரறிவும் பேரன்பும் பேராற்றலுமுடைய கடவுளை மக்கள் மனத்தால் நினைத்து, நாவினால் வாழத்தி, காயத்தால் வணங்கி வழிபட்டால் அன்றி உலகவாழ்வின் பயனாகிய பிறவிப் பெருங்கடலை நீந்துதல் முடியாது என்று பத்தாவது குறளில வற்புறுத்தியருளினார் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப்பொருள்களுள் உயிர்கள் முடிவில் அடையும் பொருள் வீடு ஒன்றே என்பதையும், அறம் பொருள் இன்பம் என்ற மூன்றும் வீட்டை அடைவிக்கக் கருவிகளாயுதவும் இடையிலுள்ள பொருள்கள் என்பதையும், அறமானது பொருள், இன்பம் போலாது வீட்டினையும் உதவ வல்லது என்பதையும் நாயனார் இவ்வதிகாரத்தில் குறிப்பித்தருளினார். இன்னும் அவர் கடவுளை எல்லாக்குறள்களிலும் ஒருமையிற் சொன்னதனாலும் முதலாவது குறளில் கடவுள் தன்வயத்தனாதல் என்ற குணத்தைச் சார்ந்த முதன்மையுடையான் என்றும், 7-வது குறளில் கடவுள தனக்கு ஒப்பாரு மிக்காரும் இல்லாதவன் என்றும் கூறியதனாலும் முழுமுதற் கடவுள் ஒருவனே என்பதும் அவன் உயிர்களை எல்லாம் ஆளுந் திறத்தினை யுடையவன் என்பதும் 2 3 4 5 6 7 8 10

குறள்களில் உயிர்களைப் பன்மையிற் கூறியதனுலும், வணங்கும் உயிர்களைக் குறிக்குமிடத்து 9-வது குறளில் வணங்காத்தலை என்றும், வணங்கப்படுங் கடவுளைக் குறிக்குமிடத்து 2 3 4 7 8 9 10 குறள்களில் தாள் அடி என்றும் கூறியதனுல் உயிர்கள் பல என்பதும், அவர்கள் கடவுளால் ஆளப்படுந்தன்மையுடைய அடிமைத்திறம் வாய்ந்தவர்கள் என்பதும், உயிர்களின் தொழிற்பாட்டைக் குறிக்குமிடத்து 3 4 7 8 10 குறள்களில் சேராதார் என்று எதிர்மறையிற் கூறியதனுல் உயிர்கள் ஒன்றனைச் சாராது நிற்றலும் சார்ந்ததன் வண்ணமாதலுமாகிய இயற்கைக்குணம் உடையார்களென்பதும் அறியாமையினுல் உலகத்தைச் சாராது அதன் வண்ணமாய்க் குறைந்த இன்பத்தையும் பெருந்துன்பத்தையும் அடையும் உயிர்கள் பேரின்ப மயனுகிய கடவுளைச் சார்ந்தால் அல்லாமல் பிறவிப் பெருங்கடலைக்கடந்து வீடு அடைய முடியாது என்பதும் நாம் ஊகித்து அறியக்கிடக்கின்றன.

8. இனி முதலாவது அதிகாரத்திற கூறியவாறு உலகில் உயிர்ப்பொருளையும் உயிரில் பொருளையும் இயக்கி ஆளவல்லது கடவுளது அருட்சத்தி. அக்கினியிற்சூடுபோல கடவுளினின்றும் பிரிக்கவொண்ணுத அவனுடைய அருட்சத்தி தொழிற்படாது ஒடுங்கியிருக்குங்காலத்து உலகமுந்தொழிற்படாது. அருட்சத்தி வெளிப்பட்ட பொழுதுதான் உலகமும் வெளிப்பட்டுத் தொழிற்படும். இந்த அருட்சத்தியின் வெளிப்பாடாகக் கற்ருருங் கல்லாதாரும் அறிவுடையாரும் பேதையரும் உலகில் கண்கூடாகக் காணக்கூடியது மழை. மழையின்றி உலகியல் நடவாது என்பது யாவருக்கும் வெளிப்படை. மழை ஒருகால் உலகிற்பெய்தலும் மற்றொருகால் பெய்யாதிருத்தலும் எத்தகைய ஆற்றலும் அறிவுமுடைய மக்களின் சத்திக்கும் மேற்பட்ட ஓர் சத்தியின் ருெழிற்பாடு என்று யாவரும் அறியலாம். பருவகாலத்தில் மழை பெய்தாலன்றி உயிர்கள் பசிநோயால் வருந்துவர் என்றும் வெளிப்படையான செயலானது உயிர்கள் கடவுளின் அருள்வழி உலகில் ஒழுகினுலன்றி துன்பமடைந்து வருந்துவர் என்னும் உண்மையைக் குறிப்பாலுணர்த்துகின்றது. இந்த உண்மையை நாயனுர் "துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்தன், அளியின்மை வாழு முயிர்க்கு" என்று அரசன் சமபந்தமாய்க் கூறினுர்.

9. மேலே கூறிய காரணங்களினுல் நாயனுர் பாயிரத்தின் இரண்டாவது அதிகாரமாகக் கடவுள்வாழ்த்துக்கு அடுத்தது கடவுளின் அருள் வெளிப்பாடாகிய வான்சிறப்பை வைத்தருளினுர். வான் என்று சொல்லாது வான்சிறப்பு என்று அவர் அதிகாரத்துக்கு பெயரீடு தந்தது மழை உலகம் நடைபெறுதலுக்கு இன்றியமையாமையைக் குறித்தற் பொருட்டு. மழையானது

மாநிலத்து உயிர்களுக்குக் குடிநீரா யுதவுவதுமன்றி உண்ணுவதற்கேற்ற உணவுப்பொருள்களையு முண்டுபண்ணுகிறது என்றும், மழை பெய்யாவிடில் உழவர் உழவு-தொழிலைச் செய்து உணவுப் பொருள்களை யுண்டுபண்ணமாட்டார்கள் என்றும், இல்லறவாழ்க்கையிலுள்ள மக்கள் ஏனைய மூன்று ஆச்சிரமத்திலுள்ளவர்களுக்கும் உற்றதுணையாயிருந்து தானம் செய்யமாட்டார்கள் என்றும், துறவிகள் தாங்கள் செயற்பாலதாகிய தவம் செய்யார்கள் என்றும், தேவாலயங்களில் நடைபெறவேண்டிய நித்தியம நைமித்திகம் விழா முதலிய சிறப்புக்கள் நிகழா என்றும், உயிர்கள் பசிநோயினால் வருந்துவர் என்றும் நாயனார் பலவாறாக மழையைச் சிறப்பித்துக் கூறியருளினார். உழவு தொழில் நடவாது எனவே அதன் சார்பு பற்றிவரும் வியாபாரம், கைத்தொழில் முதலிய ஏனைய தொழில்களும் அரசியலும் நடைபெறா என்பது தானே போதரும். இவ்வாறாக மக்கள் உலகவாழ்வினிடையில் அடைதற்பாலதாகிய நெறிகொள் சிற்றின்பத்திற்கும் முடிவில் அடைதற்பாலதாகிய வீட்டினை உறுவிக்கும் அருளை வளர்த்தற்கும் வேண்டிய பொருளை முயற்சியாலீட்ட உதவுங் கருவி மழைதான் என்று நாயனார் இந்த இரண்டாவது அதிகாரத்தில் குறிப்பித்தருளினார்.

---

# இளைஞர் கடன்

[காரைக்குடி, அரு சோமசுந்தரஞ் செட்டியார]

வருங்காலத்தில் நமது நாட்டினைப் போற்றுதற் குரிய நன்மக்களாக வரவேண்டியவர்கள் இளைஞர்களே யாவார்கள். வருங்காலத்து மிளிர்ந்து நாட்டினை அழகு செய்யவேண்டிய வீரர்களும் புலவர்களும் ஞானிகளும் இவர்களிடையே இருக்கின்றார்கள். எனவே, நாட்டின் வருங்கால நிலை இவர்கள் நிலையைப் பொறுத்தே முடிவு செய்யப்பட வேண்டியதாகும். இது போழ்து இளைஞர் இயக்கம் எவ்வளவு தூரம் உரம்பெற்றிருக்கின்றதோ, அவ்வளவே எதிர்காலத்தில் நாட்டில் நன்மைகள் நிகழ்தல் கூடும். எதிர் காலத்தில் இன்பதுன்பங்களைத் துய்க்க வேண்டியவர்களும் இளைஞர்களே யாவார்கள். இதுகாலை வயது முதிர்ந்திருக்கும் சில பெரியோர்கள் சின்னாளில் தமது பூதவுடம்பை நீக்கிக்கொள்வர். பின்னாளில் பெரியோராக இவ்விளைஞர்களே வருவார்கள். பிற் காலத்தில் பல பிள்ளைகளுக்குப் பெற்றோராகப் பிறங்கவேண்டியவர்களும் தற்காலத்துச் சிறுவர் சிறுமிகளேயாவார்கள். பின்னர் எல்லாப் பொறுப்பும் இவர்கள் தலையிலேயே சுமத்தப்பெறும். ஆகவே, இதுபோழ்திருந்தே வருங்காலத்துப் பெருமக்களாகிய தம்மைச் செம்மைப் படுத்திக்கொள்ளவேண்டியது இளைஞரின் முக்கிய கடனாகும்.

இளைஞர்கள் ஒருநாளும் சோம்பேறிகளாக இருத்தல் கூடாது. எப்பொழுதும் சுறுசுறுப்புள்ளவர்களாகவே இருத்தல் வேண்டும். இளைஞர்கள் உடம்பிலே உள்ள இரத்த நாளங்களிலெல்லாம் எப்பொழுதும் சூடுள்ள இரத்தம் ஓடிக்கொண்டிருத்தல் வேண்டும். நரம்புகளெல்லாம் எஃகுக் கம்பிகள்போன்றிருத்தல் வேண்டும். நாட்டின் நலங்கருதிய எக் காரியத்திலும் இளைஞர்களுக்குப் பேராக்கிரம் இருத்தல்வேண்டும். பேருணர்ச்சியும் பேராற்றலும் படைக்கப் பெற்றுள்ள இளைஞர்களே நாட்டைப் போற்றுந்திறன் வாய்க்கப்பெற்றவர்கள் ஆவார்கள். இளைஞர்கள் குன்றுபோற் கலங்காத உறுதியுடையவர்களாய் ஒளிர்தல் வேண்டும். அப்பர்போல் அஞ்சாநெஞ்சம் படைத்தவர்களாய் இலங்குதல் வேண்டும். இளைஞர்கள்பால் உண்மையும் பொறுமையும் ஒழுக்கமும் பெரிதும் உயர்ந்து விளங்குதல் வேண்டும். 'இளைஞர்கள் தம்மை இளஞ்சிங்க வேறுகள் என நினைத்துக்கொள்ளுதல் வேண்டும். 'எந்தக் காரியத்தையும் இனிது செய்து முடிப்போம்' என்ற தைரியம் இளைஞர்களுக்கு அதிகமாக இருத்தல் வேண்டும். ஒன்றிலும் கோழைத்தனத்தைக் காட்டுதலாகாது.

'முடியாது' என்ற பதம் இளைஞர்களுடைய அகராதியில் காணப்படுதல் கூடாது. எதையும் செய்து முடிக்கும் ஆற்றலையே இளைஞர்கள் நன்கு பெருக்கிக் கொள்ளுதல் வேண்டும். இப் பேராற்றல் பெருகப்பெற்ற இளைஞர்கள்பால், அச்சம் என்பது ஒருநாளும் தலைகாட்டாது. அச்சத்தை விரட்டி அடித்து ஓட்டி, அன்பு நெறியை யாண்டும் பரப்பிய பெரியோர்களாகிய திருஞானசம்பந்தப் பெருமானார், பிரகலாதாழ்வார், விவேகானந்தா முதலியவர்களெல்லோரும் இளைஞர்களே யென்பதனை நினைத்துப் பார்ப்போமானால், இளமையின் அருமை இனிது புலப்படும். எப்பொழுதும் எதற்கும் அசையாத ஆற்றல் படைத்த பருவம் இளமைப் பருவமேயாம். புதிய சக்தியும் நிறைந்த உணர்வும் சிறந்த ஊக்கமும் உடைய பருவம் இளமைப் பருவமேயாகும். இளமைப் பருவமே வளர்ச்சியை நாடும் பருவமுமாம். இளமைப் பருவத்தின் பெருமை அளவிடற் கரியதாகும். கிழவர்களிற் பலர் தமது கழிந்த சிற்றிளமைப் பருவத்தினை நினைந்து வருந்துகிறார்களெனின், இளமையின் அழகை என்னென்று எழுதுவது? எல்லோரும் இளைஞர்களாகவே யிருக்க விரும்புகின்றார்கள். காரணம் என்னை? இளமைப் பருவமே இன்பம் நல்கும் நற்பருவமாகும். (தொடரும்)

Printed by Sivakami Vilasam Press, Published by V. Subbia for The S. I. S. S. W. P. Society, Ltd., Madras.

ஓம்.

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள்தோறும் வெளிவருவது


| | | |
|---|---|---|
| சிலம்பு ௩ | மெய்கண்டான் ஆண்டு-௭௱௨ வைகாசித் திங்கள் 1925௵ மே௴—ஜூன்௴ | பரல் ௫ |


திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## இறையனார் அகப்பொருள்

[கா. சுப்பிரமணிய பிள்ளை, M.A., M.L.]


(௱௬௪-ம் பக்கத் தொடர்ச்சி)


அகப்பொருளிலக்கண நூலுள் சுருங்கிய அளவுடையதாயும் விழுமிய பொருள் பயப்பதாயும் தொல்காப்பியத்திற்குப் பின்தோன்றி நமக்குக் கிடைத்திருக்கும் இனிய பண்டை நூலானது இறையனாரகப்பொருளென்பது. இதன் உரையில் நூல் வரலாறு கூறுமிடத்து 'இந்நூலான்து ஆலவாய் அண்ண

லது பீடத்தின்கீழ் செப்பிதழ்களிலே வரையப்பட்டுக் கிடந்ததென்று கேட்கப்படுதலின் அக்கடவுளையே அந்நூலின் ஆசிரியரென்று பெரியோர் கொண்டனர்போலும். கடவுள் ஓர் திருமேனிகொண்டு தோன்றி அந்நூலைத் தந்தருளினரென்று கூறப்படவில்லை. அதனைக் கடவுட் பீடத்தின் கீழிட்டவர் யார் என்றுந் தெரியவில்லை. பாண்டிய மன்னன் பொருளதிகார நூல் கிடைக்கவில்லை என்று கவன்றகாலை கடவுள் திருவருளினாலே இந்நூல் கிடைக்க நேர்ந்ததாதலின் இதனைக் கடவுள் நூலாகவே கருதுவது இயல்பாயிற்று. தொல்காப்பியம் இடைச்சங்கத்தாருக்கு நூலாக இருந்தமையால் இதற்கு முன் தோன்றிய நூல் அஃதென்பது ஊகிக்கப்படும். இந்நூலினைப்பற்றிய சரித்திரம் யாவும் இதின் உரையில் விளங்குவதே யன்றி இது தோன்றிய காலத்துள்ள பிற நூல்களாற் புலனாவதில்லை.

இதன் உரையும் நக்கீரனாரிடமிருந்து எழுதாக் கிளவியாகப் பத்துத்தலைமுறையாகப் பயிலப்பட்டுவந்து அதற்குப்பின் ஏட்டில் வரையப்பட்டதாகத் தெரிகிறது. எழுதப்படுவதற்கு முன் இறுதியாகப் பாடங்கேட்டவர் முசிறி ஆசிரியர் நீலகண்டனார் என்று இதன் உரைதானே குறிப்பிடுகின்றது. முதலில் இதற்கு உரை காண அரசன் ஆணையால் சங்கப் புலவர் பலரும் முயன்றனர் என்றும் ஆசிரியர் நக்கீரனார் உரையே ஏனை உரைகளினும் மேம்பட்டதாக உருத்திரசன்மரால் ஏற்றுக்கொள்ளப்பட்டதென்றும் இதன் உரையின்கண்ணே கூறப்பட்டிருக்கவும் கபிலர் பரணர் என்பாரது உரையும் அவ்வாறே ஒப்புக்கொள்ளப்பட்டதென திருவிளையாடற் புராணம் கூறுகின்றது. இஃதன்றியும் கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தாரைக் கூறுமிடத்து கபிலர், பரணர், மாங்குடிமருதனார் என்பவர்கள் விதந்தோதப்படவில்லை. கடைச்சங்கத்தாருக்கு இலக்கணநூல் அகத்தியமும் தொல்காப்பியமும் என்ற விவரம் இவ்வுரையிலேயே காணப்படுகின்றது. அங்ஙனமாயின் இறையனாரகப்பொருள் வெளிப்பட்ட காலத்து அகத்தியமும் தொல்காப்பியமும் கற்ற அறிஞர் பாண்டிய மன்னனுக்குத் தலைப்படவில்லை என்று தோன்றுகிறது. ஆனால் இந்நூற்கு உரைகண்ட ஆசிரியர் நக்கீரனார் முதலிய கடைச்சங்கப்

புலவர் பொருளதிகாரம் வல்லாராய் இருந்திருத்தல் வேண்டு மென்பது தெளிவு. ஆதலால் நக்கீரர் முதலியோர் கூடி கடைச்சங்கத்தை நிறுவுவதற்கு முன்பு கறுப்புக் காரணமாக நூலாராய்ச்சி சிறிது காலம் தடைப்பட்டு நின்றமையாற் கறுப் புக் கழிந்தவுடன் தமிழ்க்கழகம் நிறுவுவதற்கு அரசன் முயன்ற போது பொருளதிகாரம் வல்லார் புலப்பட்டிலர் என்பது ஊகிக் கப்படும். பஞ்சம் தொடங்குங்காலிருந்த அரசன் பஞ்சம் கழிந்தபின்னும் இருந்திருக்கக் காரணமில்லை. ஏனெனில் பஞ் சத்திற்கு முன் தமிழ் நன்குணர்ந்த அரசன் வேறு நூல் தேடக்காரணமில்லை. ஆதலின் இறையனாரகப்பொருள் கிடைத்த பின்னர் அகத்தியம் தொல்காப்பியம் என்ற பண்டை நூல்களும் அவை வல்லாரும் சங்கம் போந்தனர் போலும். அப்போது பாண்டிய மன்னன் அவர் வாயிலாக இந்நூலுக்கு உரைகாண முயன்றிருத்தல் கூடும். ஆகவே இறையனாரகப்பொருள் கண்ட காலமும் அதற்கு உரைகண்டகாலமும் வெவ்வேறு. இரு செய்தியும் ஒரேகாலத்தில் நிகழ்ந்தன என்று கொள்ள இட மில்லை. இவ்வுரையுள் அச்செய்திகளை ஒரு காலத்து நிகழ்ந்தன என்று காட்டிய பகுதி அவ்வளவு பொருத்தமுடையதல்ல. ஆசிரியர் நக்கீரரது உரை பல தலைமுறையாகக் கேள்வி வடிவமாக நின்று ஏட்டில் ஏறியதால் முன்பின் முரணுள்ள சில செய்திகள் அதனுட் காணப்படுதல் இயல்பே. அதுபற்றி அதனுட் கூறப் பட்ட சரித்திரம் முற்றிலும் பொய்யென்று ஊகித்தல் ஆராய்ச்சி முறைக் கேற்றதன்று. மூன்று சங்கங்களும் முற்றுப்பெற்ற காலத்திற்குப் பின்பு இவ்வுரை எழுதப்பட்டதாகத் தெரித லால் அவற்றைப்பற்றிய முழுவிவரம் இவ்வுரையிற் காணப் படுதற்கு உரியதே. உரையை ஏட்டிற் பொறித்தோர் தமது அறிவு காரணமாகவும் சார்பு காரணமாகவும் பிறரறிந்த சிலவற்றைத் தாமறியாதும் தாமறிந்த சிலவற்றை விடுத்தும் உரைவரைதல் இயல்பே.

கடைச்சங்கமிருந்த காலம் 1850 யாண்டுகளென்றும், நாற்பத்தொன்பது அரசர் அச்சங்கத்தைப் பாதுகாத்தன ரென்றும் அதன்க ணிருந்து தமிழாராய்ந்தார் நாற்பத்

தொன்பதின்ம ரெனவும், அவருள்ளிட்டு நானூற்று நாற் பத்தொன்பதின்மர் பாடினாரெனவும் கூறின உரைப்பகுதி சிறிது ஆராய்ச்சிக்குரியது. •1850 யாண்டு நாற்பத்தொன்பது அரசர்கள் ஆட்சி புரிந்திருத்தல் பொருத்தமான தொன்றே. அதன்கண் ஐயப்பாடு நிகழ்தற்குத் தகுதியான காரணம் ஒன்று மில்லை. சில அரசர் நீண்ட நாளும் சில அரசர் குறுகிய நாளும் அரசு செலுத்தி யிருத்தலுங்கூடும். இற்றை நாளினும் பண் டைக் காலத்தே யிருந்த மக்கள் நீண்ட ஆயுளுடையராய்த் திகழ்ந்தனரென்று கொள்ள இடமுண்டு காரணம் இவண் விரிப்பிற் பெருகும். தமிழாராய்ந்தார் நாற்பத்தொன்பதின்மர் எனவும் பாடினார் நானூற்று நாற்பத்தொன்பதின்மர் எனவும் குறித்த இடத்து ஒவ்வொரு ஆட்சியிலும் தலைமையாக இருந்து இந்நூல் தக்கது இந்நூல் தகாது என்று ஆய்ந்து முடிவுசெய்த புலவர் தலைவரின் தொகை நாற்பத்தொன்பது மென்பதும் பாடு வார் பலருள்ளும் குற்றமற்ற செவ்விய பாடல் இயற்றும் நல்வி சைப் புலவர் தொகை 1850 யாண்டுகளுக்கும் நானூற்று நாற் பத்தொன்பது என்றும் கொள்ளுவதால் போந்த இழுக்கு யாது மின்மை யறிக. சங்கத்தின் மொத்த அவயவிகள் நாற்பத் தொன்பது என்றும் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு புலவர் கள் இருந்திருந்தாலும் மொத்தத் தொகை குறைபடாது நாற் பத்தொன்பதாகவே யிருந்ததாகவும் கூறுவாருமுளர். ஆங்கில இலக்கிய சரித்திரத்தில் ஆயிரம் வருடக்கால எல்லைக்குள் நூற் றின் மேற்பட்ட நற்புலவர்கள் இருப்பதாகத் தெரியவில்லை.

நூல் வரலாறு ஒருபுறமிருப்ப நூலின் சூத்திரத்திலும் உரையிலுங் கூறப்பட்டன மிகவும் ஆராயத்தக்கனவா யிருக்கின் றன. முதற் சூத்திரத்துள் தமிழாது ஐந்திணை ஒழுக்கத்தை ஆரியாது கந்தருவ வழக்கத்தோ டொக்குமென்று கூறப்பட்டுள் ளது. அதனை முற்றிலும் களவொழுக்கத்தோடு ஒற்றுமை கூறுதல் தகாதென்பதை உரையாளர் நன்கு விளக்கியுள்ளார். அது பின்வரும் உரைப்பகுதியால் உணரப்படும் :

"இனிக் கந்தருவ வழக்கம் என்பது கந்தருவரென்பார் ஈண் டுச்செய்த நல்வினைப் பயத்தால் ஒருவர் கொடுப்பாரும் அடுப்

பாருமின்றி இருவரும் பொழிலகத்து எதிர்ப்பட்டுப் புணர்வது. அது கந்தருவமணம். அதனை ஒப்பதனைக் களவென்று வேண்டும் இவ்வாசிரியன். அஃதேயெனின், கந்தருவ வழக்கம் போல்வது என்னாது கந்தருவ வழக்கமென்றமையான் அதனைக் களவென்று கொள்ளாமோ வெனின், கொள்ளாம். நூற்கிடக்கை அவ்வியல்பிற்றன்றாகலாற் போல்வதென்றே கொள்ளாற்பாலது. போறலென்பது சிறுதொத்துச் சிறிதொவ்வா தொழிவது. என்னை? குவளைப் பூப்போலுங்கண் என்றால் நீல மாத்திரை யொக்கும், மற்றொவ்வாப்புடை பெரிது; பவளம்போலும் வாய் என்றாற் செம்மை மாத்திரை யொக்கும், மற்றொவ்வாப்புடை பெரிது. இங்கும் ஏகதேசத்துக் கொடுப்பாரும் அடுப்பாருமின்றிப் புணர்தலும், ஒத்த குலத்தினராகலும், ஒத்த அன்பினராகலுமென்னும் இத்துணையே ஒப்பிக்கப்பட்டது; மற்றப் புடையெல்லாம் ஒவ்வா'.

ஆரியருந் தமிழருங் கலந்து இருதிறத்தாரது கருத்துக்களும் கலந்த பின்னர் இந்நூலியற்றப்பட்டிருத்தல் வேண்டும். தமிழ் நாட்டுத் துறவியருள் ஒருவகையார்க்குரிய அந்தணர் என்ற பெயரை ஆரியப் பிராமணர் எடுத்துக்கொண்டு நெடுநாளாம் பின் இச்சூத்திரத்துட் போன்ற கருத்து நிலவியிருத்தல் கூடும்.

ஆரியரது வேதத்தை அருமறையென்றது தமிழர் கற்பதற்கு அரிதாம் வண்ணம் மறைத்துப் போற்றப்படும் நூல் ஆகலின் என்ப. "அதற்குரியார் அந்தணரே யாயின்" என்றதும் "ஆற்றல் அழியுமென் றந்தணர்கள் தம்மறையைப்போற்றி...... ......ஏட்டின் புறத்தெழுதார்" என்றதும் காண்க. அருமறையைப்போந்த எண்வகைப் புணர்ச்சிகள் எல்லாவற்றையும் மணமென்று கொள்வது உபசாரமே. உரையாசிரியர் கூறியபடி பெரிதும் ஒவ்வாத கந்தருவ வழக்கத்தைக் கற்பு நெறிக்கு வாயிலாகவுள்ள களவொழுக்கமே என்று கூறுதல் பெரிதும் பிழைபாடுடையது. தமிழ்க் கருத்துக்களையெல்லாம் ஆரியக் கருத்துக்களோடு ஒப்பிட்டுப் பின்னவற்றினின்று முன்னவை வந்தன

வென்ற தப்புக்கொள்கையை ஆரியப் பிராமணர் நிலை நாட்டக் கருதிய சூழ்ச்சியும் முதற் சூத்திரத்தின் பின்னைய இரண்டடிகளிற் புலனாகின்றது. இக்காரணம்பற்றித் தோல்காப்பியத்தில் "மறையோர் தே எத்துமன்றலெட்டனுள்" என்ற சூத்திரமும் இச்சூத்திரத்தின் பின்னிரண்டடிகளும் நூன்மூலத்து இல்லாதனபோலும் என்று சில அறிஞர் ஊகிக்கின்றார்கள். எவ்வாறாயினும் களவொழுக்கமும் கந்தருவ மணமும் ஒன்றல்ல என்பது தெளிவு. (தொடரும்)

---

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த சங்கத்தின்

### நான்காவதாண்டு நிறைவுவிழாவில்

தலைவர், திருவாளர். C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள்

நிகழ்த்திய

## முடிப்புரைச் சுருக்கம்

சகோதரர்களே! அன்பர்களே!

எனது முன்னுரையிலே சில அபிப்பிராயங்களைச் சொல்லி எஞ்சியவைகளை முடிப்புரையிலே குறிப்பதாகச் சொன்னேன். அதன்பின் பல பண்டித சிகாமணிகளும் பெருஞ்சொற்கள் வழங்கினார்கள். அவற்றின் முடிப்பிலே அப்போதைப்போது எனது சிற்றறிவிற் பெற்றனவாகிய சிற்சில அபிப்பிராயங்களையும் வெளியிட்டேன். இப்போது இறைவனது திருவருளால் இச்சபையின் இந்த ஆண்டு நிறைவுவிழாவானது மங்களகரமாகப் பூர்த்தியடையும் நிலையில் இருக்கிறதை மகிழ்ச்சியோடும் நான் அறிவிக்கக் கூடியவனாக இருக்கின்றேன். இந்த இரண்டு நாள்களிலும் நான் வெளியிட்ட கருத்துக்களுக்குமேல் இப்போது நான் புதிதாய்ச் சொல்லக்கூடியவை அதிகமாக ஒன்றும் இல்லை. முடிப்புரையாகச் சொல்லும் ஆசிமொழிகளிலும் பலவற்றை எனது ஆப்த நண்பர் திருவாளர். ம. ரா. குமாரசாமி பிள்ளையவர்கள் அப

கரித்து வழங்கிவிட்டு எனது வேலையைச் சுலபமாக்கி விட்ட மைக்கு அவர்கள்பால் நன்றி செலுத்துகின்றேன்.

சைவத்தின் தனித்தன்மையைப் பற்றியும் அதன் உயர்ந்த நிலை சமரச நிலைகளைப்பற்றியும் அநந்தமாக இவ்விரண்டு நாளும் பேசினோம். சைவத்தமிழ் சைவத்தமிழ்ப் பெரியார்களைப் பற்றியும் வாயாரப் புகழ்ந்துரைத்தோம். இனி நாம் செய்யவேண்டிய வேலைகளைப்பற்றிமட்டும் சிற்சில வார்த்தைகள் பேசி இவ்வுரையைப் பூர்த்திசெய்ய விரும்புகிறேன். நமது நண்பர் குமாரசாமி பிள்ளையவர்கள் பச்சிலையைக்கிள்ளிப் போட்டுகொண்டு சும்மா இருந்தாற் போதாதென்றார். அதுவும் செய்யாதிருப்பவர்களை அவர் என்னென்பரோ? பச்சிலையிடுவதன் பயன் சூத்திரங்கள் பேசும் பச்சிலையைக் கிள்ளிப்போட்டு அக்காலத்தே மனதார வாயாரப் பரமேசுவரனிடத்திலே

"ஆழ்க தீய தெல்லாம் அரனாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே"

என்று மனமுருகிப் பிரார்த்தித்தால் அவர் அதனை ஏற்றுக் கருணை செய்யமாட்டார் என்று நண்பர் எண்ணினாரோ? எண்ணவும் மாட்டார் என்று நினைக்கிறேன். நமது ஆயிரம் பிரசங்கங்களைவிட இத்தகைய ஒரு பிரார்த்தனைக்கு ஈசன் மேலானபலன் அளிப்பார் என்பதற்கு என்ன தடை? ஆனால் இதுமட்டும் செய்து சும்மா இருக்கும்படி நான் சொல்லவில்லை. இங்கே தாமிரபர்ணிக்கரையிலே திருக்குத்துறை சிந்துபூந்துறை முதலிய பல இடங்களிலும் சிவபூசை மேடைகள் பல இருக்கின்றனவல்லவா? சில வருஷங்களின் முன்னர் பூசை செய்வாரின் மிகுதியால் சிவபூசர்களுக்கும் போதுமான மேடைகள் இல்லாமல் ஒருவர்க்கொருவர் முந்திக்கொள்வார்களாய். பிந்திக்கொள்பவர் காத்திருக்கவேண்டுமாம் எனவே, முன்காலம் ஆள்களுக்கு பூசை மேடை போதாமலிருந்தன. ஆனால் நமது கண்முற்பட்ட இக்காலத்திலோ மேடைகளுக்கு ஆள்கள் போதாமல் அனேகம் பூசை மேடைகள் சும்மா கிடந்து நிலமாகின்றன என்று கேட்க எனது மனமும உங்கள் மனமும் பதைக்காமலிருக்க முடியுமா?

நித்தியம் சிவபூசை செய்வோர் தொகை அதிகமாகட்டும். பூசையிருக்கட்டும் ஐயா. முதலாவதாக விபூதி உருத்திராக்கமாகிய சிவசின்னங்கள் விளக்கம் பெறட்டும். சைவர்கள் வீடுகளிலே தானும் விபூதி உருத்திராக்க விளக்கம் குன்றிப்போக நாம் காண நேர்ந்ததற்கு 'கொடியேன் கண்கள் கண்டன' என்று நாம் இரங்கவேண்டாமா? விபூதி உருத்திராக்கங்களைச் சைவனாக உள்ள பெரியார் சிறியார் பெண்மணிகள் ஆகிய ஒவ்வொருவரும் அணிதல்வேண்டும். அணிவித்தலும் வேண்டும். உங்கள் திருநெறித் தொண்டர் குழாமானது நல்லவேலை செய்து வருகிறது. காரைக் குடியிலே சிவனடியார் திருக்கூட்டத்தார் நல்ல வேலைகள் செய்துவருகிறார்கள். நமது குழாமும் ஒன்று என்பதனோடு நில்லாமல் அங்கங்கே பலப்பல தோன்றி எங்கும் சிவசின்னம், எங்கும் சிவனாமம், எங்கும் அடியார் பெருமை, எங்கும் அன்புமயம், எங்கும் சிவசாதனம் என்னுமாறு சைவத்திருநெறியைப் பரப்பப் பட்டும், நமது தமிழர் இல்லங்கள் தோறும் தேவார திருவாசகாதி திருமுறைகளும், காந்தம் திருவிளையாடலாதி சிவபுராணங்களும் இவற்றின் வசனங்களும் சமயாசாரியர்களின் திருவுருவப் படங்களும் தனியிடம் பெற்று விளங்குவனவாக. இந்த எண்ணங்களைத்தந்த எல்லாம் வல்ல இறைவன் இவற்றை முடிக்குமாற்றலையும் நமக்கு அருள்வாராக."

இவ்விருதினங்களிலும் இச்சங்கத்தின் காரியத்திலேயே தம் கவனத்தைச் செலுத்திய உத்தமராகிய திருவாளர். திரவியம் பிள்ளை அவர்களின் ஞாபகம் நமக்கெல்லாம் வந்து கொண்டிருந்தது. சின்னாள் முன்னர் அவர் 'தொன்றுதொடு நிலையாமை, மேயவினைப் பயத்தாலே யிவ்வுலகை விட்டகல'வும் நம்மை நீத்து இறைவனைச் சாரவும் நேர்ந்தமைபற்றி நாம் கவலை மிகக் கொண்டோம். ஆயினும் தூல உடம்பு பிரிந்தாலும் அவர் உயிரானது சைவத்திருத்தொண்டிலேதானே ஈடுபட்டு நின்று உடம்போடு இச்சங்கத்திற்குச் செய்துவந்த ஊழியத்தைப்போலவே சூக்குமத்திலும் செய்துகொண்டு நம் நோக்கங்களை முற்றுவிக்கும் வண்ணம் முயற்சிக்கும் என்பது அடியேனது திண்ணமான துணிபு. மேலும் அவர்க்குப் பிரதிநிதியாகிய

அவரது அருமை மகனாராகிய திருவாளர். தி. மாணிக்கவாசகம் பிள்ளை அவர்களை நமக்குத் துணையாக அவர் அளித்துப் போயிருக்கின்றார் 'மகனறிவு தந்தையறிவு' என்றபடி அவரும் இம் முயற்சியிலே முழுதும் ஈடுபட்டு அவர் அருமைத் தந்தையாரின் பிரிவு நமக்குத் தோற்றாதவண்ணமே திருநெறித்தொண்டு செய்து வருவது மிகமகிழ்ச்சியைத் தருவதொன்றாம். அவர்க்கு இறைவன் எல்லா நலன்களையும் அருளித் திருநெறி வளர்க்கும் பணியிலே முன்னிற்குமாறு முன்னிற்பாராக.

உங்கள் காரியதரிசியார் இச்சங்கத்திற்குப் பொருள் சேர்க்குமுறையும் இச்சங்கத்தை நடத்தும் முறையும் பார்க்கும் போது எனக்குப் பெருவியப்பும் நயப்பும் உண்டாகின்றன. இரு நன்முயற்சியை அந்த உலக வியாபார முறையிலே மட்டுமன்றி இந்த உலக வியாபார முறையிலேயும் இலாபந்தரும் வகையிலே செய்து வருவதானது யாவரும் பாராட்டத்தக்கதாம். இச்சங்கத்திலே சைவ நன்மக்கள் எல்லாரும் பங்குகள் எடுத்துக் கொள்ள முன்வரவேண்டுமென்று அவர் வேண்டினார். அவ்வண்ணமே நானும் வேண்டுகிறேன். இச்சங்கம் செய்துவரும் வேலைகளிலே 'செல்வி'யின் வெளியீடானது மிகப்பயன் தருவதொன்றாகும். அதிலே சைவ உண்மைகளும் சைவசரித ஆராய்ச்சிச் சுருக்க கட்டுரைகளும் எல்லாருக்கும் பயன்படும் நிலையிலே மிகுதியாக வெளிவருதல் வேண்டும். சங்க வெளியீடுகளான சைவத்தமிழ் நூற்பதிப்புகளோ தமது உருவத்தாலும் உயர்வாலும் பார்த்தார் கண்ணையும் மனத்தையும் கவர்கின்றன. இப்புத்தகங்களை முன்னமே வேறு பதிப்புக்களிலே உடையவர்கள்கூட இவற்றையும் வாங்கிவைத்துத் தம் புத்தகசாலையை அழகுபடுத்த நினைக்கிறார்கள் என்பதை நான் நேரில் அறிவேன். புத்தகத்தைத் திறக்காவிட்டாலும் 'முருகன் புகழ்மாலையும் திருக்குறளும்' என் கையைவிட்டு எப்போதும் அகலாமல் வைத்திருக்க நான் விரும்புவேன். இத்தகைய பல நன்முயற்சிகளாலே வருகிற ஆண்டு விழாவின் ரிப்போர்டிலே உங்கள் காரியதரிசியார், பங்குக்காகப் பலப்பல விண்ணப்பங்கள் வந்தன. பங்குகள் முன்னமே செலவாகி விட்டமையால் கொடுக்கக்கூடாமைபற்றி

மன்னிக்கவேண்டுகிறேன்'' என்று தமது அறிக்கைப் பத்திரத்திலே வாசிப்பார் என்று நான் நினைக்கிறேன். இன்னும் சிறிது காலத்திலே கேட்பார்க்குப் 'போதியபங்குகள் இல்லை என்று சொல்வார் என்று நான் பயப்படுகிறேன்.

எனது நண்பர் குமாரசாமிபிள்ளையவர்கள் 'நாங்கள் திருநெல்வேலிக்கு வரப்பயந்தோம்' என்று சொன்னார். நானும் அவ்வண்ணமேதான் என்று நான் சொல்லவேண்டியதில்லை. ஏன்? அகத்திய முனிவராகிய தமிழரசர் இந்நாட்டுக்கு வருங்காலத்தே ஆங்கு போனாற் கேட்டார்க்குத் தாமுரைத்தல் வேண்டுமென்று அஞ்சியவராய் முதற்குருவாகிய பரமேசுவரனிடத்திலே தமிழுபதேசம் பெற்று அதன்பின் இங்குவந்து தங்கினார் என்று சரித்திரம் கூறுகிறது. அகத்தியர் பாடே அப்படியானால் எங்கள் பாட்டைக் கேட்பானேன். என்மீது வைத்த அன்பினாலும் என்னைச் சைவத்திற்கும் தமிழுக்கும் ஊழியஞ் செய்யுமாறு ஈடுபடுத்தும் வகையிலே என்மேற்கொண்ட கருணையினாலும் நீங்கள் என்னையும் ஒரு பொருட்படுத்தி மதித்து இப்பேரவைக்குத் தலைமை வகிக்கச்செய்து இந்த இரண்டுநாளும் செய்த பேருபகாரங்களுக்காக நான் மனமார்ந்த நன்றி பாராட்டுவதைத்தவிர வேறென்ன கைம்மாறு செய்யவல்லேன். இச்சங்கமும் முயற்சிகளும் என்றும் தழைத்தோங்கி வளர்ந்து நின்று நிலவுமாறும் இச்சங்கத்தார்க்கு அவர்கள் மேற்கொண்ட நன்னோக்கங்களையெல்லாம் முற்றுவிக்குமாறும் எல்லாம் வல்ல சிவபரஞ்சுடரின் திருவடிகளைச் சிந்திக்கிறேன்.

---

தூத்துக்குடி சைவசித்தாந்த சபையின்
முப்பத்தாறும் (1919 டிசம்பர்) ஆண்டு நிறைவு விழாவில்
திவான் பகதூர்
T. N. சிவஞானம் பிள்ளையவர்கள் B.A.
அவைத்தலைமை வகித்த போது செய்த

# முகவுரைப் பிரசங்கம்

சபையின் அங்கத்தினர்களே! சீமாட்டிகளே! சீமான்களே!

இந்த சபையின் முப்பத்தாறும் ஆண்டு நிறைவு விழாக் கொண்டாட்டத்தினமாகிய இன்று அக்கிராசனாதிபதியாக இருக்கும்படி எனக்குக் கொடுத்த பெரிய கௌரவத்துக்காக நான் மனப்பூர்த்தியாக வந்தனஞ் செலுத்துகின்றேன்.

சர்க்கார் உத்தியோகத்தில் அமரும் வரையில் மாணாக்கர் கல்வியில் முயற்சித்திருந்தேன். பிறகு கவர்ன்மெண்டுவேலையை என்னால் இயன்றமட்டும் நல்வழி தவறாமல் நடத்திவந்தேன். இந்த வருடம் ஜனவரி மாதம் முதல்தான் சர்க்கார் வேலையிலிருந்து விடுதிபெற்றேன். அது முதல் மதசம்பந்தமான ஆராய்ச்சி செய்ய வேண்டுமென்று எண்ணியிருந்தேன். ஆனால் என்னால் தடுக்கக்கூடாத சில ஏதுக்களினால் என் நோக்கங்கள் இதுகாறும் நிறைவேறாமற் போயிற்று. ஆகவே சைவசித்தாந்தத்தில் ஒரு நிபுணனாக நான் தங்கள் முன்னிலையில் வந்ததாக நினைத்துக்கொள்ளக் கூடாது. மற்றப்படி சித்தாந்த விசாரணையில் நான் ஆரம்ப நிலையிலிருப்பதாகவே நினைத்துக் கொள்ள வேணும். தங்கள் வாழ்நாள் முழுதும் சைவசித்தாந்த விசாரணையிலே பயின்றும், இப்பொழுது இந்த மகாசபையில் விஜயஞ் செய்து அலங்கரித்தும் இருக்கிற தேர்ச்சியடைந்த சைவசித்தாந்த பிரசாரகர்களுடைய உபந்நியாசங்களைக் கேட்டு சந்தோஷமடையலாமென்ற அவாவுடன் வந்திருக்கிறேன். இந்த சைவ சித்தாந்த சபையானது சைவமதத்தின் முக்கிய கொள்கைகளை அனுசரித்து ஸ்தாபிக்கப்பட்டது. சிவகாருண்ணியமே அதற்கு

அஸ்திவாரம். மாம்ஸ்தாரி, சீவ வதைசெய்து தன் உதரத்தை வளர்ப்பதனால் அவனைச் சைவனாகவே நினைக்கக்கூடாது. மாமிசம் தின்பது மனிதனுக்கு இயற்கையென்றும், அஃது அவனது இன்றியமையாத உணவென்றும் சொல்லிக்கொண்டிருக்கிற வழக்கம் வெகுகாலமாக இருந்தது. உயர்தர டாக்டர்களினால் சமீபமாய் ஏற்பட்ட பரிசீலனைகள் மூலமாய் மனிதனுக்கு மாமிசம் ஓர் அவசியமான உணவுப்பொருளல்லவென்றும், மாமிச உணவன்னியிலேயே மனிதன் தனக்கும், மற்ற உயிர்ப்பிராணிகட்கும் கஷ்டமில்லாமல் உயிர் வாழக்கூடுமென்றும் திட்டமாய் ரூபிக்கப்பட்டிருக்கிறது. மாமிசத்தை விலக்குவதனால் மனிதன் மற்ற உயிர்ப்பிராணிகளிடத்து அன்பைச் செலுத்த இயற்கையிலேயே பயிலுவதுடன் "அன்பே சிவம்" என்னும் தத்துவத்தை அநுட்டானத்திற்குக் கொண்டுவரவும் காரணமாகிறான். இவ்விடம் கூடியிருக்கிற சைவசித்தாந்த சபையின் அங்கத்தினரில் எவரேனும் மாமிச தாரியாக இருப்பார்களென்று நான் நினைக்கவில்லை. எவரேனும் மாமிசதாரியாக யிருந்திருப்பினும் இன்று முதல் அவ்வழக்கத்தை விட்டுவிட வேண்டுமென்பது என்னுடைய வேண்டுகோள். ஏனெனில் உலகத்தில் வாழ்ந்திருக்க நமக்கு எவ்வளவு சுதந்தரம் உண்டோ, அவ்வளவு மற்றஉயிர்ப்பிராணிகளுக்கும் உண்டென்பதையும் அவைகளின் வாழ்நாள்களை இடையே கவர்ந்துகொள்ள நமக்கு பாத்தியதையில்லையென்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது. வாயிலாப்பிராணிகள்மாட்டு அன்புபாராட்டக் கற்றுக்கொண்டபின் அயலார்களையும் நம்மை நாம் நேசிப்பது போலவே நேசிக்க வேண்டும். எவ்வுயிர்களையும் தம்முயிர்கள் போலவே பாவிக்கவேண்டும். அப்படி நடத்தலே உயர்ந்த கடமையென்பது யாவரும் அறிந்த விஷயமேயாயினும் அதை நானும் ஞாபகப்படுத்துகின்றேன். யாவரும் நன்ருய் அறிந்திருந்தும் அதை அநுட்டானத்திற்குக் கொண்டுவருவதில் அவர்களுடைய முயற்சி கைகூடவில்லை. கைகூடாததற்குப் பற்பல இடையூறுகள் நேரிடுகின்றன. ஆனால் நாம் மனம தளராமல் ஊக்கத்துடன் பிரதிதினமும் மற்றவர்களுக்கு நாம் செய்யவேண்டிய கடமை இன்னதென்பதைச் சிந்

பித்து அதை எவ்வளவு தூரம் அநுட்டானத்திற்குக் கொண்டு வரக்கூடுமென்றும், அவ்விதம் தினந்தோறும் செய்துவருகிறோமா என்றும் நம்மையே நாம் கண்டித்துக்கொண்டும் எச்சரித்துக் கொண்டும் வந்தால் நம்முடைய முயற்சி நாளடைவில் கைகூடுமென்பது திண்ணம். அவ்விதம் செய்தாலொழிய நம்மைச் சைவமதத்தாரென்று சொல்வதற்கு நாவே கிடையாது.

இனி இன்னொரு விஷயத்தைச் சொல்லப் புகுகின்றேன். அதாவது நம்முடைய ஆதியான சைவமதத்தில் ஒரு மேம்பாடான கொள்கையானது என்னவென்றால் நம்மதத்தில சாதிவித்தியாசமென்பது ஆதியில் ஏற்பட்டதாக நான் அறிந்தமட்டில் புலப்படவில்லை. நந்தனார் என்பவர் யார்? இழிவானபறையர் குலத்தில் தோன்றினவரன்றோ? மேற்குலத்திற் பிறந்த அவருடைய பிராமண எசமான் பக்தியில அவரினும் தாழ்ந்தவனன்றோ?

“ நல்லகுல மென்றுந் தீயகுல மென்றும்
சொல்லள விற்பொருள் இல்லை—தொல்சிறப்பின்
ஒண்பொருள் ஒன்றே தவம்கல்வி ஆள்வினை
யென்றிவற்றால் ஆகும் குலம்.”

“ தோணி இயக்குவான் தொல்லை வருணத்து
காணில் கடைப்பட்டான் என்று இகழார் நல்லாய் அவன்
துணையா ஆறு போய் அற்றே.”

ஆகவே தவம், கல்வி, ஒழுக்கம் இவைகளே ஒருவருடைய குலத்தைக் குறிப்பிக்கும். அப்படி நம்முடைய மதத்தின் கொள்கை இவ்விதமாய் இருந்தபோதிலும், யாதுகாரணம் பற்றியோ மத்திய காலத்தில் பிறப்பால் உயர்வு தாழ்வு என்று ஏற்பட்டுவிட்டது. அப்படி ஏற்பட்டதனால் நாம் அடையும் துன்பங்கள் அளவில. நம்முடைய விருத்திக்கும் நம்முடைய மதம் பரவுதற்கும் அது பெரும் இடையூறாக இருந்துவருகின்றது. தாழ்ந்த சாதியென்று நாம் பாராட்டும் சாதியில் பிறந்தவர்கள் கிறிஸ்துமதத்தில் சேர்ந்துவிட்டால் அவருடைய பிறப்புக்குக்

கொடுக்கும் கேவலத்தை நாம் காண்பிக்கிறதில்லை. அவர் தகுந்த உத்தியோகத்திலும் அல்லது ஐசுவரியத்திலும் மேம்பட்டு விட்டால் அவரை நாம் சமத்துவமாகவே நடத்தி வருகிறோம். அப்படி நடத்துவது அசம்பாவிதமன்றோ?

நம்மதத்திலிருந்து வேறுமதத்திற்குச் சென்றவர்களை நாம் திரும்பச் சேர்த்துக் கொள்வதில்லை. அஃது என்சிற்றறிவில் குறை என்றே தோன்றுகிறது. நம்முடைய குழந்தை தப்புச் செய்தால் நாம் அதைக்கண்டித்து நம்மிடமே வைத்துக்கொள்வதா? அல்லது வீட்டை விட்டுத் துறத்திவிடுவதா? குடும்பத்திற்கு அவ்வித நியாயமானால் மதவிஷயத்தில் அவ்விதமாய் ஏன் நடக்கக்கூடாது?

நம் சமயாச்சாரியர்களில முதல்வராகிய திருநாவுக்கரசு சுவாமிகள் சிலகாலம் ஜெயினமதத்தைப் பின்பற்றவில்லையா? அதை எல்லாம் நாம் ஏன் மறந்துவிடவேண்டும்?

இன்னும் ஒருவிஷயத்தைப் பற்றிச் சொல்ல எனக்கு அவாவிருக்கின்றது. அதாவது நமது சைவ மடாலயங்களின் தற்கால நிலைமையைப் பற்றியே. ஆதியில் நமது மதாபிமானிகளில் ஐசுவரியவான்கள், மிக்கு பூஸ்திதிகள்விட்டு மடாலயங்களை ஸ்தாபித்து தக்க மடாதிபதிகளையும் நியமனம் செய்தார்கள். நம்முடைய சைவமதம் என்றும் தழைத்துச் செழித்தோங்கும் படிக்கும், சைவசமயம் பரிபாலனமாகும் படிக்கும செய்த ஏற்பாடுகள் இப்பொழுது சரிவர நடந்துவரவில்லையென்று நாம் அனைவரும் மிக்க துயரத்தில் ஆழ்ந்திருக்கின்றோம். மேற்படி துயரத்திலிருந்து நீக்கும் பொருட்டு நாம் எல்லோரும் இன்று முதலே வேண்டுமுயற்சிகள் யாவும் செய்யவேண்டியது நம்முடைய முதற்கடமை. சைவநாட்டிலுள்ள பலவூர்களில் சபைகள் கூட்டி மடாலயங்களைச் சீர்திருத்துதற்குரிய ஏற்பாடுகள் செய்ய வேண்டியது அத்தியாவசியம். இந்த விஷயத்தில் நாம் எவ்விதத்தாட்சண்யமும் பார்க்கக்கூடாது. சிரமத்தையும், பொருட்செலவையும் கருதக்கூடாது. நான் இவ்விதம் சொல்வதனால்

நம்முடைய மடங்களுக்காவது, மடத்தின் அதிபதிகளுக்காவது விரோதியென்று எண்ணக்கூடாது. மற்ற சமயங்களைவிட நம்முடைய சைவசமயம் எவ்விதத்திலும் பின்வாங்கியதன்று. மற்ற சமயங்களெல்லாம் பரிபாலனம் செய்வதற்காக மற்றசமயிகள் எத்தனை பொருள் செலவழித்திருக்கிறார்கள்? எந்த எந்த தேசமெல்லாம் சஞ்சாரம் செய்திருக்கிறார்கள்? என்ன என்ன துயரத்திற்கெல்லாம் ஆளாயிருக்கின்றார்கள்? ஸ்காட்லாண்டு தேசத்திலிருந்து தென் அமெரிக்கா ஆஸ்திரேலியா தேசங்களுக்குப் போகிறார்களல்லவா? அவர்கட்கெல்லாம் அவ்வளவு மதாபிமான மிருக்கும்பொழுது நாம் நம்முடைய மதத்தை நமது சைவநாட்டிலேயே க்ஷீணமடைவதைப் பார்ப்பது தகுமா?

நம்முடைய மடங்களின் வரும்படியில் ஒருபாகத்தை மத பரிபாலனத்திற்காகச் செலவு செய்யும்படி மடாதிபதிகளை நாம் வேண்டிக்கொள்வதுடன் அவர்கள் அவ்விதமே கட்டுப்பட்டு நடக்கும்படிக்கு ஏற்பாடுகளும் செய்யவேண்டும். சைவசமயப் பள்ளிக்கூடங்களும், தேவாரப்பள்ளிக்கூடங்களும் முக்கிய பட்டணங்களில் ஏற்படுத்தவேண்டும். ஆங்கிலம் கற்பிக்கின்ற சுதேசக்கல்விச்சாலைகளிலும் சைவசமய போதகாசிரியரை மேற்படி மடத்து வரும்படிகளிலிருந்து நியமிக்கும்படிச் செய்யவேண்டும். மேல் நாட்டார்களின் நடை யுடை, பாவனைகளை எவ்வளவு ஆவலுடன் நாம் பின்பற்றத் தயாராயிருக்கின்றோமோ அது போல அவர்கள் தங்களுடைய மத பரிபாலனத்திற்குச் செய்யும் ஏற்பாடுகளை நாம் நம்முடைய மத பரிபாலனத்திற்குச் செய்ய நாம் ஏன் முயலக்கூடாது? இது விஷயத்தை நாம் எல்லாரும் நன்கு கவனிக்க வேண்டியது. நம்முடைய மாணாக்கர்கள் நம்மதத்தில் ஒரு சிறிதும் ஞானமில்லாமலிருக்கும் பொழுதே நம்முடைய மதத்தில் அது தப்பு இது தப்பு என்று தூஷிக்கிறார்கள். அதற்கெல்லாம் அவருடைய சிற்றறிவே தான் காரணம். அவர்களுக்கு நம்மதத்தை ஊட்டுவிக்கும்படி கல்விச்சாலைகளிலெல்லாம் தக்க ஆசிரியர்களை நியமிப்பது அவசியமாகின்றது.

---

# அரிசியும் தவிடும்

அரிசியில் தவிடு உடையது தவிடு போக்கியது என இரண்டு வகையுண்டு. கோதும்பையில் தவிடு எளிதில் நீக்க முடியும். ஆனால் அவ்வளவு எளிதில அரிசியினின்றும் தவிடு நீக்குதல முடியாது. இப்போது நெற்குத்துப் பொறியினுதவியால் அரிசியினின்றும் தவிட்டை எளிதிற் போக்கி விடுகின்றார்கள். இயற்கையிலுள்ள அரிசியில் தவிடு நிரம்பியிருக்கும். அது நமது வீட்டிலுள்ள உலக்கையினுதவியால் கிடைப்பது. அவ்வரிசி சத்துடை உணவாக இருந்தது. அதனால் நமது முன்னோரைப் பிணிப்பேய் எளிதில் அணுகுவதில்லை இப்போது சிறிது காலமாக விட்டாமன் (Vittamine) என்னும் தவிடு உடம்பின் வளர்ச்சி தருவதென்பதை ஆங்கில மருத்துவர் பத்திரிகை வாயிலாய் வெளியிட்டு வருகின்றார்கள். ஆகலான் நெற்குத்துப் பொறியால் கிடைக்கும் தவிடு போக்கிய அரிசியினை உணவாகக் கொள்பவர் திடம்பட வாழமாட்டார் என்பது புலனாகின்றது. பிணிப் பேயும் விடேன் விடேன் என்று தொடர்ந்து அவரது உடம்பைபபற்றிக கேட்டை விளைக்கும். ஆதலால் புதிய தத்துவ நிபுணரால கண்டு பிடிக்கப்பட்ட நெற்குத்துப் பொறிக்கு விடுதிகொடுத்து, நமது முன்னோர் வழக்கத்தைக் கையாண்டு திடம்பெற நெடிது வாழுமாறு நமக்கு இறைவன் அருள் புரிவானாக!

---

# சீவகாருணிய இயக்கம்

[காரைக்குடி. அரு. சோமசுந்தரஞ் செட்டியார்]

இப்பரந்த உலகில் வாழும் மக்கள் மாக்கள் ஆகிய பல்வகை உயிர்களிடத்தும் ஒற்றுமையை உண்டாக்கி அன்பைப் பெருக்குவது சீவகாருணிய இயக்கமேயாகும். உலகத்தை ஒழுங்கான முறையில் நடைபெறச் செய்யும் ஆற்றல் இவ்வியக்கத்துக்குத் தான் உண்டு. இதனாலேயே எல்லா அறங்களுள்ளும் கொல்லா அறமே தலை சிறந்தது எனப்பெரியார் பலர் பாராட்டிப் பன்னெடு நாட்களாகப் பெரும் பிரசாரஞ் செய்து வந்திருக்கிறார்கள். புத்தா பிரான் இவ்வியக்கத்தைப் பெரு முயற்சியுடன் யாண்டும் பரப்பி அன்பே வடிவமாக விளங்கினார். சுந்தரமூர்த்தி சுவாமிகள், நம்மாழ்வார், திருவள்ளுவர், தாயுமானார், இராமலிங்க சுவாமிகள் முதலிய பெரியோர்கள் இவ்வியக்கத்தைப் பெரிதும் ஆதரித்து, அன்பு நெறியின் பெருமையை உலகத்து மக்களுக்கு மிக அழகாக எடுத்துப் புகட்டி யருளினார்கள். அசோக மன்னன், மனுநீதிகண்ட சோழன், சிபிச்சக்ரவர்த்தி, பாரிவள்ளல் முதலிய அரசர் பெருமக்கள் பலர் இவ்வியக்கத்திற்குப பெருந்துணைவர்களாக முன்னின்று பலதிறப்பட்ட முயற்சிகள் செய்து இதனை வளர்த்து வந்திருக்கிறார்கள். நமது தமிழ் நாட்டில் புலவர் என வெளிப்போந்தவர்கள் அனைவரும் இதனை ஆதரித்துப் பேசி யிருக்கின்றார்கள். எப்பொழுதும் அன்பு நெறியை வளர்க்கும் தொண்டர் கூட்டம் ஒன்று இருந்து கொண்டே வருகின்றது. இது போழ்தும் இந்நெறி வளர்ச்சி கருதிப் பாடுபடும் அன்பர்கள் பலர் இருக்கின்றார்கள். இதற்கெனவே யுழைக்கும் கழகங்களும் பலவுள்ளன. எனவே, உலக நலத்திற்கு அன்பு நெறி வளர்ச்சி இன்றியமையாத தொன்றாகும் என்பது நன்கு புலனாகும். உலக ஒற்றுமைக்கு மக்கள் மாக்களுக்குள் அன்பு நெறி தழைத்தோங்குதல் வேண்டும். மக்கள் இன்பவாழ்வு வாழவேண்டுமானால் ஒருவருக்கு ஒருவர் பேரன்பராக—உடன் பிறந்தார் ஆக இலங்குதல் வேண்டும். உயிர்கள்பால் அன்பில்

லாதவர்களுக்கு ஒருநாளும் இறைவன்பாலும் அன்பு அரும்பாது. அன்பு நெறியில் ஈடுபடாதவர்கள் எவ்வளவு பேரறிஞராக விருப்பினும் அவர்கள் வாழ்வு பயனற்ற வாழ்வேயாம். மக்களாவார் ஒவ்வொருவரும் தன்னலங்கருதியும் உலக நலங் கருதியும் உடும்புப் பிடிபோல் கைப்பற்ற வேண்டிய தலைசிறந்த நீதிநெறி அன்பு நெறியேயாகும். "எவ்வுயிரு நீங்காதுறையும் பிறை சிவனென்று, எவ்வுயிர்க்கு முன்பாயிரு" என்னும் இன்பப் பாடலே உலகத்தை நல்வழியில் நிலை நிறுத்துதற்குரிய சிறந்த சட்டமாகும். அன்பு நெறியில் ஈடுபடாத உயிர்களும் இயக்கங் களும் ஒருநாளும் செழித்தோங்குதல் முடியாது.

மக்கள் இம்மை மறுமை இரண்டினும் நல்வாழ்வு வாழ்தல் வேண்டுமானால் அன்பை அணிகலனாகக் கொள்ளுதல் வேண்டும். பல்வேறு வகைப்பட்ட மக்கள் தொகுதியினர் இன்பவாழ்வு வாழ விழைந்தால், அன்பு நெறிவழி இச் செல்லுதல் வேண்டும் அன்பு நெறி வளர்ச்சியின்மையினாலேயே இந்நாளில் யாண்டும் சாதிப் பகைமைகள் தோன்றிப பெருங்கலாங்களை விளைவித்துக் கொண்டிருக்கின்றன. இனி ஒவ்வொரு சாதியினரும் உயர்வு பெறுவதற்கு அடிப்படையாக முன்னிற்பது அன்பு நெறியே யாகும். இரக்கமின்றி உயிர்க்கொலை புரிதலாலும், ஊன் விழைந்து உண்டலாலுமே பல வகுப்பார் தாழ்ந்தோராகக் கருதப்படுகிறார்கள். ஒவ்வொரு சாதியினரும் கொலை செய்தல், புலாலுண்டல், கள்ளுண்டல் முதலிய தீச்செயல்களை விடுத்து விட்டுப் புனிதமான வாழ்வுவாழத் தொடங்கி விடுவார்களானால், அனைவரும் உயர்ந்தவர்களாகவே அறிவுடையோரால் கருதப் படுவார்கள். எனவே, சாதிவளர்ச்சிக்கு அன்பு நெறி வளர்ச்சி பெரிதும் வேண்டற்பாலதென்பது நன்கு விளங்கும். சமய வளர்ச்சிக்கும் சீவகாருணிய இயக்கம் இன்றியமையாததே யாம். அன்பு நெறியை அடிப்படையாகக் கொள்ளாத சமயங்கள் சமயங்களேயல்ல. சமயத்தின் சார்பில் சிறுதெய்வங்கள், தேவர், பிதுரர் முதலியவர்களை முன்னிட்டும், வேறு பல மூடக் கொள் கைகளை முன்னிட்டும் ஏழையுயிர்களை வதைப்பது பேரிழிவா கும். இதைவிட அறியாமை வேறு ஒன்றும் இல்லை. அறிவை

யும் அன்பையும் பெருக்கி இறைவனோடு இசையும் இன்பத்தை அறிவுறுத்துவதே சமயத்தின் முக்கியமான குறிக்கோளாகும். ஆகவே, சமயத்தின் பெயரைச்சொல்லி நடைபெறும் உயிர்க் கொலைகள் அடியோடு நிறுத்தப்படல்வேண்டும். மக்கள் நாகரிக வாழ்வு வாழ்பவர் என்றால் உயிர்க்கொலை செய்து ஊனுண்டல் அறவே மறக்கப்படுதல் வேண்டும். காய் கனி கிழங்கு கீரைகளையும் வித்துக்களையும் உண்டுமகிழ்பவர்களே நாகரிக வாழ்வு வாழ்வோராவர். எப்பொழுதும் எவ்விடத்தும் எக்காரணத்தை முன்னிட்டும் யாரும் உயிர்க்கொலை புரிதல் ஆகாது. உலகமுழுவதும் இவ்வறநெறி பரவுதல் வேண்டும். எல்லோரும் அன்புமயமாகப் பிறங்குதல் வேண்டும். இத்திருநெறியைப் பரப்புதற்குப் பல நூற்றுக் கணக்கான தொண்டர் குழாங்கள் வேண்டும். அன்பர்கள் அனைவரும் வாளா உண்டு உடுத்து உறங்கி வீண் பொழுது போக்காமல், இவ்வின்ப நெறியை வளர்த்தற்குப் பெரும்பாடு படுதல் வேண்டும். எவ்வேலையும் பாடுபட்டால்தான் முடியும். "சும்மா இருந்தால் சோணாசலன் பாதம் கிட்டுமா?" என்னும் முதுமொழியை நாம் நன்கு உணருதல் வேண்டும். இனிமேல் உறங்குதல் கூடாது. ஒவ்வொருவரும் தத்தமக்குரிய வேலையைப் பிறர் வரவை எதிர்பாராமல் தாமே முன்சென்று செவ்வனே செய்தல் வேண்டும். தொண்டு புரியாத மனிதன் தக்கோனாகான். "நல்வாயில் செய்தார் நடந்தார் உடுத்தார் நரைத்தார் இறந்தார் என்று நானிலத்திற் சொல்லாய்க் கழிகின்றது" என்று நமது சுந்தரமூர்த்தி சுவாமிகள் சொல்லியருளியதுபோல், பிறர் நலங்கருதி வேலை செய்யாத மனிதன், "பிறந்தான்; வளர்ந்தான்; இருந்தான்: போனான்" என்னும் முதுமொழிக்கு இலக்காகி யுழல்வானே யன்றி நலனுறான். தொண்டர்கள் பூத உடல் அழிவுற்றாலும், புகழுடல் ஒருநாளும் அழிவுறாது. நமது திருநெறி வளர்ச்சி கருதிப் பாடுபடுந் தொண்டர்களுடைய திருப்பெயர் இவ்வுலகில் இனிய ஏடுகளில் சரித்திரக்காரர்களால் பொன்னெழுத்துக்களில் எழுதப்பட்டு உலகமுள்ளளவும் வைத்துப் போற்றப் பெறும். மறுமையில் என்றும் இன்புற்றிருக்கும் சிவபோக

வாழ்வு இத்தகைய தொண்டர்களுக்கே காணியாட்சியாகும். திருக்கைலைமலையில் தொண்டர்களுடைய திருப்பெயர் அழகிய மணிகளால் இழைக்கப்பட்டிருக்கும்.

"வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து, வீற்றிருந்தோரை யெண்ணுங்காலை, உரையும் பாட்டு முடையோர் சிலரே" எனும் இனியபா போற்றிப் புகழும் சிலர் இத்திருத் தொண்டர்களே யாவார்கள். இவ்வளவுதூரம் தொண்டர் பெருமையை விரித்துரைப்பதன் காரணம், தொண்டர் பலர் பணிசெய்தற்கு முன்வருதல் வேண்டும் என்னும் பேரவாவேயாம். எல்லா இடங்களிலும் சிவகாருணியக் கிளர்ச்சி செய்வதற்குப் பல தொண்டர்கள் வேண்டும். சில தொண்டர்கள் போதாது. ஒவ்வொரு ஊருக்கும் ஒரு தொண்டராவது அவசியம் வேண்டும். அந்த ஊரிலுள்ள மக்களுக்கு அவர் எப்பொழுதும் சிவகாருணிய போதனை செய்து கொண்டிருத்தல் வேண்டும். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வரையாவது ஊனுணவை விடுத்துப பயிர் வகையுணவினையே உட்கொள்ளும்படி திருத்துதல் வேண்டும். பலதொண்டர்கள் சேருமிடங்களில் திருநெறித் தொண்டர் குழாங்கள் ஏற்படுத்துதல் வேண்டும். சான்றோர்களும் செல்வர்களும் சிவகாருணிய இயக்கத்திற்குப் பெருந்துணை புரிதல் வேண்டும். இளஞ்சிங்க வேறுகள் தொண்டுபுரிந்து இவ்வியக்கத்தை நாடோறும் வளர்த்துக்கொண்டிருத்தல் வேண்டும். எளியேனுடைய இச்சிறு வேண்டுகோள் எல்லோருளத்தும் பதிந்து பயன் தருமெனப் பெரிதும் நம்புகின்றேன்.

---

# புத்த நிர்வாண காலம்*

[பண்டிதர் இ. மு சுப்பிரமணிய பிள்ளை.]

சரித்திர ஆராய்ச்சிக் காரர்களால் புத்த நிர்வாண காலத்தைப்பற்றி பல ஆண்டுகள குறிக்கப்பட்டுள்ளன. அவை களில் சிறந்த ஆராய்ச்சியாளர் குறித்தன கி. மு. 483, 486 முத லியன. மேலும் இவ் வாராய்ச்சிக்காரர்களெல்லாம் தாங்கள் குறிப்பிடும் காலம் முடிவானதுதா னென்கிருர்களில்லை. ஏனென் ருல் புத்தர் நிர்வாணமடைந்த காலத்தைத் தீர்மானித்து முடிவு கட்டுவதற்குத் தகுந்த ஆதாரங்கள் அவர்களுக்குக் கிடைக்க வில்லை. மேல்நாட்டு ஆராய்ச்சியாளரில் ஒருவராகிய வில்யம் கெய்கர் (Wilheim Geiger) என்பார் இத்துறையில் முயன்று புத்த நிர்வாணகாலம் கி. மு. 483 என்று தீர்மானித்திருக்கிருர். அப்படித் தீர்மானிக்குமிடத்து அவர் கூறுவதாவது :—" இந் தக் கணக்கும் உத்தேசமானதுதான் என்று நாம் நன்கெடுத்து இயம்புவோம். நமக்குச் சுமாராகவே சொல்ல இயலுமே ஒழிய மிகவும் உறுதியான முடிவெனச் சொலல இயலாது." (1912-ல் பதிப்பித்த மகாவம்சத்திற்கு கெய்கர் துரை மகனுர் எழுதிய முகவுரையின 24-ம் பக்கம் பார்க்க).

கௌதம புத்தருடைய வரலாற்றைக் கூறும் பழைய சரித் திரங்களில சில கணிதக் குறிபபுக்கள் காணப்படுகின்றன. அவை புத்த நிர்வான காலத்தைத் தீர்மானித்து முடிவுகட்டுவதற்குத் தகுந்த ஆதாரங்களாக இருக்கின்றன. அக் கணிதக் குறிப்புக் கள பின்வருவன :—ஈசானசகம 68 வைகாசித் திங்கள் வெள்ளி வாரத்து வநத நிறைமதியில் கௌதமபுததர் பிறந்தார். அவரு டைய 29-வது வயதில் அதாவது ஈசானசகம் 96 வைகாசி வெள்ளியன்று நிறைமதியில் அவர் வீடு துறந்து காடு சென் ருர். ஈசானசகம் 103 வைகாசி புதனன்று நிறைமதியில் அவர் ஞானமடைந்தார். ஈசானசகம் 107 ஆடித்திங்கள் சனிக்கிழமை

---

* இது சென்னையில் செனட் ஹாலில் நடந்த அகில இந்திய கீழ்த் திசை மகாநாட்டில் ஆங்கிலத்திற் படித்த கட்டுரையின் மொழிபெயர்ப்பு.

நிறைமதி அதிகாலையில் அவர் தந்தை இறந்தார். ஈசானசகம் 148 வைகாசி செவ்வாய்க்கிழமை நிறைமதியில் அவர் நிர்வாண மடைந்தார். இக்குறிப்புக்களில் பல மகாமகோபாத்தியாயர் வே. சாமிநாதய்யர் அவர்களால் புத்தசரித்திரம் 1908-ம்வருடம் 3-ம் பதிப்பில் 4, 12, 21, 50-ம் பக்கங்களிலுள்ள அடிக்குறிப்புக்களிலும் குறிக்கப்பட்டிருக்கின்றன. ஈசானசகம் என்பது அக்காலத்து வழங்கி வந்தது போலும். இதற்குச் சரியான கிரிஸ்து வருஷம் இன்னதென்பதும் சுலபமாக ஆராய்ந்தறியப்படும்.

எந்த ஆண்டைப் புத்த நிர்வாண காலமாகக்கொண்டால் மேலேகண்ட காலக்குறிப்புக்களெல்லாம் பொருந்துமோ அந்த ஆண்டே சரியானதாகக் கொள்ளப்படும். கி. மு. 483 வைகாசி 27-ம் நாள் செவ்வாயன்று நிறைமதி 40 நாழிகைக்கு மேல் வந்தது. கி. மு. 486 வைகாசி 31-ம் நாள் செவ்வாயன்று நிறைமதி 45 நாழிகைக்குமேல் வந்தது. இவைகள் ஒருவாறு புத்த நிர்வாணத்திற்குப் பொருந்தினும் மற்றைய குறிப்புக்களோடு பொருந்தவில்லை. ஏனைய ஆண்டுகளோ ஒன்றுக்கும் பொருந்தவில்லை. கி. மு. 600 முதல் கி. மு. 100 வரை கவனமாகக் கணித்துப் பார்க்குமிடத்து கி. மு. 493 மட்டுமே எல்லாக் கணிதக் குறிப்புக்களுக்குப் பொருந்தியதாகக் காணப்படுகின்றது.

கி. மு. 573 ஈசானசகம் 68 வைகாசித் திங்கள் 3-ம் நாள் வெள்ளியன்று நிறையதியாம். அன்றே பெரியார் கௌதம புத்தர் பிறந்தார். கி. மு. 545 ஈசானசகம் 96 வைகாசி 24-ம் நாள் வெள்ளியன்று நிறைமதியாம். அன்றிரவே அவர் அரண்மனையை விட்டுக் காடு சென்றவராவர். கி. மு. 538 ஈசானசகம் 103 வைகாசி 6-ம் நாள் புதனன்று நிறை மதியாம். அன்றிரவே புத்தர் ஞானமடைந்தார். கி மு. 534 ஈசானசகம் 107 ஆடித்திங்கள் 18-ம் நாள் சனியன்று நிறைமதியாம். அன்று சூரிய உதயத்தில் அவர் தந்தையார் இறந்தனர். கி மு. 493 கலி 2609 ஈசான சகம் 148 வைகாசி 19-ம் நாள் செவ்வாயன்று நிறைமதி 2 நாழிகை 11விநாடிக்குத் தொடங்கிற்று. அன்றே புத்தர் நிர்வாண மடைந்தார். இவ்வுண்மைகளால் ஈசானசகம் கி. மு. 641-ல் தொடங்கி நிகழ்ந்ததென நிலை நாட்டலாம்.

இனி, மேலே குறித்த முடிபை சரித்திரம் எவ்வாறு ஆதரிப்பதென ஆராய்வோம். தீபவம்சம், மகாவம்சம், புராணங்கள் ஆகிய இலங்கைச் சரித்திரங்கள் நமக்குத் தகுந்த ஆதாரமாக இருக்கின்றன. ஆசிரியர் வின்சன்ட் சுமித் (Vincent Smith) போன்ற ஆராய்ச்சிக்காரர்களால் புராணங்கள் சிறந்த ஆதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன. (வின்சன்ட் சுமித் எழுதிய ஆக்ஸ் போர்டு இந்துதேச சரித்திரம் இரண்டாம்பதிப்பு 1923, பக்கம் 57 பார்க்க.) இவைகளிலுள்ள சில குறிப்புக்களை எடுத்துக்கொண்டு நாம் மேலே கணிதக் குறிப்புக்கொண்டு தீர்மானித்துள்ள ஆண்டோடு இவை இயைகின்றனவா என ஆராய்வோம். அசோகர் அபிஷேகம் புத்தர் நிர்வாணத்தின் பின் 218 ஆண்டுகள் கழிந்தபின்னும் (ஓல்டன் பர்க் துரை 1889-ல் பதித்த தீபவம்சம் 5-ம் அத்தியாயம் 45-ம் பிரிவு, பக்கம் 141; 55-ம் பிரிவு பக்கம் 142, அத்தியாயம் 6, 1-ம் பிரிவு, பக்கம் 146: இவைகளைப் பார்க்க.) அதாவது கி. மு. 275 (493—218) ஆகும். மகாவம்சமும் இவ்வாறே கூறுகின்றது. (கெய்கர் மகாவம்சம் அத்தியாயம் 5, பிரிவு 21, பக்கம 27.) அசோகர் கி. மு. 278 லேயே பட்டத்துக்கு வந்துவிட்டார். இதிலிருந்து நான்காவது ஆண்டிலேயே (கி. மு. 275) அவருடைய அபிஷேகம் நிகழ்ந்தது. (தீபவம்சம் அத்தியாயம் 6, பிரிவுகள் 21, 22, பக்கம் 148—மகாவம்சம் அத்தியாயம் 5, பிரிவு 22, பக்கம் 28) அவருக்கு முன்னால் பிந்துசாரன் கி மு. 302 முதல் 278 வரை 25 ஆண்டுகள் ஆண்டனன். மகாவம்சத்திற்கும முன்னால் எழுதப்பட்ட தீபவம்சத்தில் பிந்துசாரன் ஆண்டகாலம் இவ்வளவெனக் குறிக்கப்படாததால் நாம் புராணங்களின் குறிப்பை இங்கே ஆதாரமாகக் கொண்டுள்ளோம். அவனுடைய ஆட்சிககாலத்தைப் புராணங்கள் 25 ஆண்டுகள் என்றும், பர்மீயர் வரலாறுகள் 27 ஆண்டுகளென்றும், மகாவம்சம் 28 ஆண்டுகளென்றும் குறிக்கின்றன.

பிந்துசாரனுக்கு முன்னால் சந்திரகுப்தன் கி. மு. 325 முதல் 302-வரை 24 ஆண்டுகள் ஆண்டனன். (தீபவம்சம் 5-ம் அத்தியாயம் 73-ம் பிரிவு, பக்கம் 144; 100-ம் பிரிவு, பக்கம் 146. மகாவம்சம் 5-ம் அத்தியாயம் 18-ம் பிரிவு, பக்கம் 27.) இதி

லிருந்து சந்திரகுப்தன் புத்த நிர்வாணத்தின்பின் 168 ஆண்டு கள் கழிந்தவுடன் [218—50 (325—275) = 168] பட்டத்திற்கு வந்தானென்பதை அறியலாம். ஆசிரியர் கெய்கர், மகாவம்சம் முகவுரை 24-ம் பக்கத்தில் சந்திரகுப்தன் பட்டத்துக்கு வந் தது கி. மு. 321-ல் ஆவது தவறினால் இதற்கு முன்பின் இரண் டாண்டுகளிலாவது இருக்கவேண்டுமென் றெழுதுகிறார். அவர் 25-ம் பக்கத்தில் பின்வருமாறும் குறிக்கின்றார்:—'நாம் மூலாதார மாகக் கொண்டு குறிக்கின்ற சந்திரகுப்தன் பட்டத்துக்கு வந்த ஆண்டாகிய கி. மு. 321 உத்தேசமாகவே சரியானது என்பதை நாம் மறத்தல் கூடாது. ஆதலினாலே சில ஆண்டுகள் முன்னாக வோ' பின்னாகவோ இருத்தலும் கூடும்." ஆசிரியர் வின்சென்ட் சுமித்தும் இதே அபிப்பிராயத்தை உடையவராக இருக்கின்றார்' (J. R. A. S. 1901 பக்கங்கள் 831—834; Early History of India: pp. 38—39). ஆக்ஸ்போர்டு இந்து தேச சரித்திரம் 1923, 2-ம் பதிப்பு 73-ம் பக்கத்தில் இவர் கூறும் பின்வரும் சொற்றொடர்களும் நாம் ஈண்டு நன்கு கவனிக்க வேண்டியவை. அவை பின்வருமாறு:—" சந்திரன் அல்லது சந்திரகுப்தனென் பவன் தன் இளமைப்பருவத்தில் அலெக்ஸாண்டரை கி. மு. 326 அல்லது 325-ல் சந்தித்தானென்பதும், அவனே நந்தர்களுக்கோர் கூற்றானன் என்பதும் உறுதியான செய்திகளாகக் காணப்படுகின் றன...... அலெக்ஸாண்டர் கி. மு. 323 ஜூன் மாதம் பாபிலோ னில் இறந்தான். அதிலிருந்து ஒன்றிரண்டு திங்களில் அச்செய்தி பஞ்சாபுக்கு எட்டியிருக்க வேண்டும். அந்நிய நாட்டார்மேல் தொடர்ந்தபோர் கி. மு. 323 குளிர்கால முதல் 322 வரை நடந்த தென்று சுலபமாக ஊகிக்கலாம். சந்திரகுப்தன் கி. மு. 322-ல் பட்டத்துக்கு வந்தானென்பதும் அதிகப் பிழையாகவிராது. மக தப்போர்க் கிளர்ச்சி தொடக்க முதல் முடிவுவரை ஓராண்டு இருக் கலாமெனத் தெரிகிறது. அஃது அலெக்ஸாண்டர் சாவுக்குமுன் முடிந்திருத்தலும் கூடுமாதலால் நந்தர்குல மழிந்ததும் மௌரி யனாகிய சந்திரகுப்தன் பட்டத்துக்குவந்ததும் கி. மு. 325-ல் என ஆண்டைப் பின் தள்ளியே கொள்ளவேண்டும். ஆதலின் 325 முதல் 320 வரை இரண்டாட்டுமுட்பட ஏதாவது ஓர்

ஆண்டுதான் உண்மையான காலமென்பது உறுதியாகின்றது.'' இதனால் சந்திரகுப்தன் பட்டத்துக்கு வந்தது கி. மு. 325-ல் என நாம் கொண்டது தவறாகாது. இதிலிருந்தும் புத்த நிர்வாண காலம் கி. மு. 493 (325+168) தான் என்பது நிலைபெறுவது காண்க.

இலங்கைச் சரிதங்களிலே கயவாகு என்ற அரசனைப்பற்றி அறிகிறோம். அவன் புத்த நிர்வாணத்திலிருந்து 642-வது வருஷமுதல் 664-ம் வருஷம்வரை ஆண்டவனென்று தீபவம்சம் கூறுகின்றது. மகாவம்சமோ 653-வது ஆண்டு முதல் 675 வரை அவன் ஆண்டவனென்கிறது. (ஓல்டன் பர்க்துரை தீபவம்சத்தையும், கெய்கர் துரை மகாவம்ச முகவுரையில் குறித்துள்ள பழைய இலங்கை மன்னரின் அட்டவணையையும் பார்க்க.) இக்கூற்றுக்கள் தம்முள் மாறுபடுகின்றமையால் அவன் காலத்தை வேறு சான்றுகள் கொண்டே தீர்மானிக்க வேண்டியதாகிறது. தமிழ் நூல்களில் மிகப் பழமையானவைகளில் ஒன்றாகிய சிலப்பதிகாரம் 30-வது வரந்தரு காதை 157—163 அடிகளில் கயவாகு சேரர் தலைநகராம் வஞ்சியில் கண்ணகி பிரதிஷ்டையைக்கண்டு வணங்கினன் என்ற செய்தி காணப்படுகிறது. கயவாகு மன்னனின் பாட்டன் வசவன் கைத்தொழிலைப் பரப்பி வளர்த்து பல கால்வாய்களை வெட்டி நிலத்தை வளம்பெறச் செய்தான். (தீபவம்சம் அத்தியாயம் 22, மகாவம்சம் அத்தியாயம் 35) அவன் காலத்திய மன்னனாகிய கரிகாற் சோழன் தன்னாட்டையும் இவ்விதமாகவே வளம்பெறச் செய்தான். கால்வாய்களில் வேலைசெய்வதற்குக் கூலிக்காரர்கள் வேண்டியிருந்ததால் அவன் இலங்கைமேல் படையெடுத்து அங்கிருந்தும் பலரைச் சிறைகொண்டு வந்தான் எனத் தெரிகிறது. கயவாகுவினுடைய தந்தை வங்க நசிக திசன் என்பான் மூன்றாண்டுகளே ஆண்டான். (தீபவம்சம் அத்தியாயம் 22, பிரிவுகள் 12, 27; மகாவம்சம் அத்தியாயம் 35, பிரிவு 112.) கயவாகு தான் பட்டத்துக்கு வந்த உடனே கரிகாற் சோழன் கொடுமையை மறவாதிருந்தவன் ஆதலால் சோழ நாட்டின்மேல் படைகொண்டு சென்றான். அக்காலத்தில்தான்

அவன் வஞ்சிக்கும் வந்து கண்ணகியை வழிபட்டதும். இச்செய்திகள் சென்னை இராஜதானி அரசாட்சி வரலாற்றில் (Manual of the Administration of the Madras Presidency) 117-ம் பக்கக் கீழ்க்குறிப்பால் வலியுறுகின்றன. அதில் நாம் காணும் செய்திகள் பின் வருவன:—("கி. பி. 110-ல் சோழர்கள் மீட்டும் இலங்கை மேல் படை சென்று 22,000 சிங்களவர்களைச் சிறைகொண்டு வந்தார்கள். கி. பி. 113-ல் இலங்கைமன்னன் கயவாகு சோழ நாட்டின் மேல் படையெடுத்துப் போய் 'சிங்களவர்களை மீட்டதோடு மேலும் பலரைச் சிறைகொண்டு தன் மனத்திலிருந்த சினத்தை ஆற்றிக்கொண்டான்.")

ஆடித்திங்கள் வெள்ளிக்கிழமை இருட் பக்கம் 8-ம் திதி இரவு 5 நாழிகைக்கு பரணிக்குமேல் வந்த கார்த்திகையில் மதுரைமாநகரில் கண்ணகியாள் எரி ஊட்டினாள் எனச சிலப்பதிகாரம் கூறும். (ஊர் சூழ்வரி, வழக்குரை காதை, வஞ்சினமாலை, கட்டுரைக்காதையில் 133—135 அடிகள் பார்க்க.) அதிலிருந்தும் நான்காண்டுகள் கழிந்தபின் எட்டாவது மாதத்தில் கண்ணகி பிரதிஷ்டை நடந்தது.

கி. மு. 100 முதல் கி. பி. 400 வரை கணித்துப் பார்த்ததில் கி. பி. 144 மட்டுமே நூலில் மதுரை யெரியுண்டது பற்றிக் கூறும் குறிப்புக்களுக்குப் பொருந்தியதாக இருக்கின்றது. கி. பி. 144-ல ஆடித்திங்கள் 15-ம் நாள் வெள்ளிக்கிழமை இருட் பக்கம் 8-ம் திதி அன்றிரவு 5 நாழிகைக்கு பரணிக்குமேல் கார்த்திகை வருகிறது. இதனால் கி. பி. 144ல் மதுரைமாநகர் எரி வாய்ப்பட்டதென்பதும், கி. பி. 149-ல் கண்ணகி பிரதிஷ்டை நடந்த தென்பதும், அதுகாணக் கயவாகு வஞ்சிக்கு வந்தானென்பதும் நிலை பெறும். இலங்கை மன்னன் இதற்கு ஓராண்டுக்கு முன்னரே அதாவது கி. பி. 148-ல் பட்டத்திற்கு வந்தவனாதல் வேண்டும். தீபவம்சத்தின்படி அவன் புத்த நிர்வாணத்தின் பின் 642-ம் ஆண்டில் பட்டத்துக்கு வந்தவனாவான். இதனால் புத்த நிர்வாண காலம் கி. மு. 493 (641—148) தான் என்பது நிலைபெறுவது காண்க.

* இதன் விவரமெல்லாம் 'செந்தமிழ்ச் செல்வி' சிலம்பு 3, பரல் 2-ல் சிலப்பதிகார காலம் என்ற ஆராய்ச்சி யுரையில் பரக்கக் காண்க.

# புறநானூறும் தமிழர் மாண்பும்

[திரிசிரபுரம், ம. பெரியசாமிப்பிள்ளை]

(கூஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

அறிவு:—அறிவு என்பது அறி என்ற வினையடியாகப் பிறந்த தொழிற் பெயர். அறிவு, இயற்கை அறிவு செயற்கை அறிவு என இருவகைப்படும். இயற்கை அறிவு என்பது ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்ற ஐம்புல உணர்ச்சி வகையால் எல்லா உயிர்கட்கும் உள்ளது. பொதுவாகிய இவ்வைம்புல னுணர்வோடு சிறப்பாகிய மனனுணர்வு (பகுத்தறிவு) உண்மையானே, மக்கள் மற்றை உயிர்களினின்றும் பிரித்து ஓதப்படுகின்றனர். "மக்கள் தாமே ஆறறி வுயிரே" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரும். மக்கள் யாக்கையிற் றோன்றினும் இப்பகுத்தறிவு இல்லாதாரை விலங்குகளோடு ஒத்த ஐயறிவுடைய மாக்கள் என்றே கூறுவர் ஆசிரியர்; "மாவும் மாக்களும் ஐயறிவினவே, பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" என்பது சூத்திரம். (தொல் - பொருள், மரபு - கூஉ.) எனவே, மக்கள் என்று சிறப்பித்துக் கூறப்படுதற்குக் காரணமாயதும் ஆறாவது அறிவும் ஆகிய பகுத்தறிவே இயற்கை அறிவு எனக் கூறத்தக்கது. அத்தகைய இயற்கை அறிவு கல்வி கேள்விகளான் வளர்ச்சி யடையின் அதுவே செயற்கை அறிவாகின்றது, "தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக், கற்றனைத் தூறும் அறிவு," "கற்றில னாயினுங் கேட்க அஃதொருவற், கொற்கத்தின் ஊற்றாந் துணை" என்பன அருமைத் திருக்குறள் மணிகளாகும்.

இத்தகைய அறிவுடைமை மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத தொன்றாகலின் இதனை உடையோரே சிறப்புடைய மக்கள் ஆவார். நமது பழந்தமிழ் மக்கள் இதனைச் சிறப்பாகப் போற்றி வந்ததுமன்றிப் பிறர்க்கு இதுபற்றி அறிவுறுத்தியும் வந்துள்ளார். பாண்டியன் ஆரியப்படை தந்த நெடுஞ்செழியன் 'அறிவுடையோன் சென்ற நெறியே அரசனும் செல்வான்' என்பதை "அறிவுடையோனாறரசும் செல்லும்" (புறம்—கஅங) எனக் கூறினர். அறிவுடைய நம்பி என்னும் பாண்டியனிடம்

சென்ற பிசிராந்தையார் என்னும் பெரும்புலவர் அவ்வரசனுக் கறிவுறுத்துங்கால் 'காய்த்த நெல்லை அறுத்துக் கவளங்கவளமாகக் கொள்ளின் ஒருமாவிற் குறைந்த நிலத்தில் விளைந்த கதிரும் ஒருயானைக்குப் பலநாள் உணவாகும்; நூறுசெய் நிலமேயாயினும் யானையானது தனித்து வயலில் புகுந்து உண்ணுமாயின் அதன் வாயின்கட் புகுந்த நெல்லினும் மிகுதியாக அதன் காலால் அழியும்; அதுபோல் அறிவுடைய அரசன் இறைகொள்ளும் நெறி அறிந்துகொண்டால் அவன் நாடு கோடிபொருளினை ஈட்டித்தந்து மிகவும் தழைக்கும்; வேந்தன் மெலிந்த அறிவுடையவனாய் (அறிவில்லாதவனாக) நாடோறும் தரமறியாத ஆரவாரத்தையுடைய சுற்றத்தோடு கூடி அன்புகெடக் கொள்ளும் பொருட்டொகுதியை விரும்பின், அந்தயானை புக்க வயல்போலத் தானும் உண்ணப் பெறான்; உலகமும் கெடும்' என்பதனைக்

''காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகும்;
நூறு செறு வாயினுந் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்;
அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே
கோடியாத்து நாடு பெரிது நந்தும்;
மெல்லியன கிழவ னாகி வைகலும்
வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின,
யானை புக்க புலம்போலத்
தானும் உண்ணான்; உலகமும் கெடுமே'' (புறம். கஅச)

எனக் கூறியுள்ளார். இஃது அறிவுடைய நம்பி என்ற அரசனுக்கு ஒரு புலவரால் அறிவுடைமைபற்றிக் கூறப்பெற்றதென்றால் நமது மூதறிஞரின் நுண்ணுணர்வினை என்னென்று கூறுவது!

செல்வமும் அதன் பயனும்:—செல்வம் என்பது செல் என்னும் பகுதியடியாகப் பிறந்த சொல்லாகும்; என்னை? உலக வாழ்க்கையில் மக்களைச் செலுத்துவது இதுவே ஆகலான். இத

னைத் தெய்வப்புலவர் "அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொரு ளில்லார்க், கிவ்வுலக மில்லாகி யாங்கு" என விளங்கக் கூறினர். இத்தகைய செல்வம் நன்னெறியில் ஈட்டப்பெறல் வேண்டும்; நல்லவழியில் வந்தபொருளே 'செல்வம்' எனச் சிறப்பித்துக் கூறத்தக்கது. "தீவினை விட்டீட்டல்பொருள்" என்றனர் நமது தவமூதாட்டியார். இங்ஙனம் நன்முயற்சியால் வந்தபொருளும் "தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு, வேளாண்மை செய்தற் பொருட்டு" என்று பொய்யில் புலவர் கூறியாங்கு இறு கப்பிடியாது தான் நுகர்தலோடு தக்கார்க்கு உதவி செய்தற் பொருட்டே 'பொருளை இறுகப்பிடிக்கும் ஊக்கமில்லாத உலோ பிகளுடன் சேர்தலும் கூடாது' என்பதனை "உடையதம், வள்ளன் வலி யுறுக்கும் உளமி லாளரொடு, டியைந்த கேண்மை இல்லா கியரோ" (புறம்—க௯௦) எனச் சோழன் நலனுருத்திரன் என் னும் அரசன் கூறினர். 'தெளிந்த கடலால சூழப் பெற்ற உலகத் தைப் பிறவேந்தர்க்குப் பொதுவாதலின்றித் தமக்கே உரித்தாக ஆண்டு, வெண்கொற்றக் குடையால் நிழற்செய்த ஒருதன்மை யையுடைய அரசர்க்கும் நடுயாமத்தும் நண்பகலும் துஞ்சானாய் விரைந்த செலவையுடைய விலங்குகளைக் கொல்லக் கருதிச் செல் லும் கல்வியில்லாத ஒருவனுக்கும் (வேடனுக்கும்) இன்றியமை யாது உண்ணப்படும் பொருள் நாழி, உடுக்கப் படுமவை இரண்டு ஆடையே, பிறவும் எல்லாம் (தூக்கம், மகப்பேறு முதலியவை களும்) ஒக்கும்; ஆதலால், செல்வத்தாற் பெறும் பயனாவது கொடுத்தல்; செல்வத்தை யாமே அனுபவிப்பேம் எனக்கரு தின் தவறுவனபல (அறம், பொருள், இன்பம்)' என்பதனை

"தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்
கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்
உண்பன நாழி உடுப்பன இரண்டே
பிறவும் எல்லாம் ஓரொக் கும்மே
செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் எனினே தப்புந பலவே" (புறம்-க௮௯)

என மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் மிகத்தெளிவாகவும் படிப்போர் மனத்தில் பசுமரத்தாணிபோல் பதியுமாறும் கூறியுள்ளார். ஆகவே செல்வமும் அதனால் எய்தும் பயனும் பற்றி மிக விரிந்த நோக்கமுடையராய்த் திகழ்ந்தவர் நம் முன்னையோர் என்க.

அன்பு:—'அன்பு' என்பது ஒருவனால் வேண்டப்பட்ட ஒரு பொருளினிடத்துத் தோன்றும் உள்ள நெகிழ்ச்சி. இது காட்சிப் பொருளன்று; கருத்துப்பொருள். எனினும் அன்புடையாரிடத்துத் தோன்றும் கண்ணீர் பெருகுதல் முதலிய மெய்ப்பாட்டால் (குறிகளால்) அன்புடைமை அறியப்படும். "அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர், புன்கணீர் பூசல் தரும்" என்றனர் தேவர். இவ்வன்பு மனைவி மக்கள் முதலிய தொடர்புடையாரிடத்துத் தோன்றுவது. இதுவே பெருகி எல்லா உயிர்களிடத்தும் செல்லுங்காலை 'அருள்' எனப் பெயர் பெறுகிறது. இங்ஙனம் அன்பினின்றே அருள் தோன்றுகின்றது என்பதை "அருள் என்னும் அன்பீன் குழவி" என அருளினார் பெருநாவலரும். பொதுவாக எல்லா உயிர்க்கும் அன்பு உண்டெனினும் சிறப்பாக மக்களுயிர்க்கு இன்றியமையாது வேண்டப்படுவதொன்றாகும். என்னை? மக்களே மனைவி முதலியோரிடத்து அன்புடையராய் வாழ்ந்து, அதன்மேல் எல்லா உயிர்களிடத்தும் அருளுடையராய்ப், பின்னர் இறைவனிடத்து இடையறா அனபு செலுத்தி வீடுபேறெய்தற்கு உரியவராகலின் இத்தகைய 'அன்புடையவரே உயிர் நின்ற உடம்பை உடையவர், அன்பிலாதார் உடல் உயிர் நின்ற உடம்பு அன்று'; இதனை "அன்பின் ஒழிய துயிர்நிலை அஃதிலார்க், கென்புதோல்போர்த்த உடம்பு" என்ற அருமைத் திருக்குறளான் அறிக.

அ்பெற்றித்தாய அன்பினைத் தங்கட்கு முதன்மையான அகத்துறுப்பாகக் கொண்டொழுகினவர் தமிழர். வேள் பாரி என்ற தமிழ்மகன் உயர்திணைப் பொருள்களிடத்தேயன்றிச் செடிகொடி முதலிய அஃறிணைப் பொருள்களிடத்தும் பேரன்பு செலுத்தினன் என்றால் அவன் அன்பின் பெருக்கினை என்

னென்று கூறுவது! ஒருகால், வேள்பாரி என்ற வள்ளல் தேரூர்ந்து காட்டிடையே செல்லும் பொழுது, அங்கு ஓர் முல்லைக் கொடி தளிர்த்துப் பூத்துப் படர்வதற்கோர் கொள்கொம்பில்லாது தளர்ச்சியுறுவதைக் கண்டனன். கண்டதும் அம் முல்லைக் கொடியின்பால் கழிபேரிரக்கங்கொண்டு தான் ஊர்ந்து வந்த தேரினை அக்கொடியின் அருகே அது படர்வதற்கென நிறுத்தித் தான் கால் நடையாகச் சென்றனன். இச்செயற்கருஞ் செயலை வேள்பாரியின் உயிர்த்துணைவரும் புலவர் பெருமானுமாகிய கபிலர் அவன் மகளிரைப் பற்றிக் கூறுங்கால்

"இவரே, பூத்தலை அறாஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரி மகளிர்" (புறம்—உ௱)

"இவர்யார் என்குவை யாயின், இவரே
ஊருடன் இரவலர்க் கருளித் தேருடன்
முல்லைக் கீத்த செல்லா நல்லிசைப்
படுமணி யானைப் பறம்பிற் கோமான்
நெடுமாப் பாரி மகளிர்" (புறம்—உ௱க)

என மிக அழகாக விளக்கிக் கூறியுள்ளார். அஃறிணைப் பொருள்களிடத்தும் இத்தகைய அன்பு செலுத்தியவர் நமது முந்தையோர் என்றால் அவர்கள் உயர்திணைப் பொருள்களிடத்து பேரன்புடையவர் என்பதுபற்றிக் கூறவேண்டுமோ?

ஒழுக்கம்:—ஒழுக்கம்—நன்னெறியில் ஒழுகுதல். இந்நல்லொழுக்கமே ஒருவன் செய்யும் நல்வினையாக மாறி அவனுக்கு இம்மையில் ஒளியையும் (ஒளி-பலராலும் நன்கு மதிக்கப்படுதல்) மறுமையில் நல்வினைப் பயனையும் தருகின்றது. ஆகலான் இவ்வொழுக்கம் உயிரினும் சிறந்ததாகும்; "ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம், உயிரினும் ஓம்பப் படும்" என்றார் ஆசிரியர் திருவள்ளுவனாரும். 'நல்லொழுக்கம் நன்மையே பயக்கும்; தீயொழுக்கம் தீமையைப் பயக்கும்' என்பதற்கு "நன்றிக்கு

வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம், என்றும் இடும்பை தரும்" என்னும் உள்ளங்கவரும் வள்ளுவர் வாய்மொழியே ஆணை என்க. பெரியார் சென்ற செந்நெறியைக் கடைப்பிடித்து அதன்வழி நடத்தலே ஒழுக்கம் ஆகலின், அதனை அறிந்து நடவாதார் பல நூல்களைக் கற்றாராயினும் அறிவிலாதார் ஆவர். இதனை "உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும், கல்லார் அறிவிலா தார்" என்னும் திருக்குறளாற் கண்டு கொள்க இத் தகைய ஒழுக்கத்தில் தலைசிறந்து விளங்கியவர் நமது பழந்தமிழ் மக்கள்.

உறையூர் முதுகண்ணன் சாத்தனார் என்னும் அறிஞர் 'கொடியோரைத் தண்டித்தலும் நல்லோர்க்கு அருள் செய்தலும் ஆகிய இடையறாத முறைமையிற் சோம்புதல் இல்லையாகி, நல்லது செய்தலால் நன்மையும் தீயது செய்தலால் தீமையும் இல்லை என்கின்ற அறிவிலிகளுடன் சேராதொழிக' என்பதனைக்

"கொடியோர்த் தெறுதலுஞ் செவ்வியோர்க் களித்தலும்
ஒடியா முறையின் மடிவிலை யாகி
நல்லதன் நலனும் தீயதன் தீமையும்
இல்லை யென்போர்க் கினனா கிலியர்" (புறம். உக)

எனச் சோழன் நலங்கிள்ளிக்கு அறிவுறுத்தியுள்ளார். நமது ஔவைப் பிராட்டியார் நிலத்தை இழித்துக் கூறுவது போல் நல்லொழுக்கமுடையாரின் சிறப்பைக் கூறுவர். 'நிலனே, நீ ஒன்றில் நாடாயினுமாகுக, ஒன்றிற் காடாயினுமாகுக; மேடாயினும் ஆகுக, பள்ளமாயினும் ஆகுக, எவ்விடத்து நல்ல ஆண் மக்கள் உளரோ அவ்விடத்து நீயும் நல்லை அல்லது, நினக்கென ஓர் நலனு மில்லை, வாழி" என்பதனை

"நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே" (புறம். கஅஎ)

என மொழிந்தருளினர். கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி என்பார் ‘ சாவாமருந்தாகிய இந்திரர்க்குரிய அமிழ்தம் கிடைப்பினும் அதனை இனிதெனத் தனித்து உண்ணுதாரும், யாவரோடும் வெறுப்பில்லாதாரும், பிறர் அஞ்சும் துன்பத்திற்கு அஞ்சி மடிந்திராதாரும், புகழ் வருவதாயின் தம் உயிரையும் கொடுப்போரும், பழிவருவதாயின் உலகமே தனக்குக் கிடைப்பதாயினும் கொள்ளாதவரும், மனக்கவற்சி இல்லாதாரும் ஆகிய இத்தன்மையுடையோராகத் தனக்கென முயலாத வலிய முயற்சியை உடைய பிறர்பொருட்டாகவே முயலுவார் உண்மையானே இவ்வுலகம் நடைபெறுகின்றது’ என்பதனை

“ உண்டா லம்ம இவ் வுலகம் ; இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே, முனிவிலர்,
துஞ்சலும் இலர்பிறர் அஞ்சுவ தஞ்சிப்,
புகழெனின் உயிருங் கொடுக்குவர், பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர், அயர்விலர்,
அன்ன மாட்சி அனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே ” (புறம்—௧௮௨)

என மொழிந்தனர். எனவே, விருந்தோம்பலும், விருப்பமுடைமையும், வீண்பயமின்மையும், புகழை விரும்புதலும், பழியை வெறுத்தலும், பிறர்க்குதவி செய்தற்கெனவே முயலுதலும் ஆகிய நல்லொழுக்கத்தைப் பெரிதும் வற்புறுத்துதற் பொருட்டு அவ்வொழுக்க முடையார் இருப்பதனாலேயே இவ்வுலகம் நிலைபெற்றுள்ளது என்று நம்முதியோர் கூறினர் என்றால், ஒழுக்கமுடைமை நம்முன்னோரால் மிகவும் குறிக்கொண்டு போற்றப்பெற்றுவந்த தென்பதற்கு வேறு சான்றும் வேண்டுமோ ? வேண்டா. இன்னும் இதுபற்றி விரிக்கிற் பெருகும்.

(தொடரும்)

# தமிழ்க் ககரத்தை யொட்டிய சிலகுறிப்புக்கள்

[க. ப. சந்தோஷம், பி.ஏ., எல்.டி.]

தமிழ் மெய்யெழுத்துக்களுள் ககரம் முதலிடத்தில் நிற்கின்றது. நாவினடி அடியண்ணத்துடன் சேர்வதால் பிறக்கு மொலியாதலின் நடுநா நடுவண்ணம் கூடுவதால் பிறக்கும் சகரத்திற்கு முன் ககரம் வருதலியல்பே. அன்றியும் நெஞ்சிலிருந்து வரும் உயிர்ப்பு மிகுதியுமிடர்ப்படாமல் வெளியே செல்வதால் பிறப்பதீ பற்றி உயிரெழுத்துக்களெனப் பெயர்பெற்ற அகர முதல் ஔகார வீருயவற்றின் இறுதிக்கண்ணிறுவப் பெற்ற அஃகேனத்துடன் ககரம் நெருங்கிய தொடர்புடைய தொன்றாகும். இவ்வஃகேனம் தமிழில் தனிநிலை யென் றழைக்கப்படும். இது, நெஞ்சிலிருந்து வருங்காற்று இதழாலும் நாவாலும் அடைபடாமல், வெளிப்போவதால் தோன்றும் உயிரெழுத்தனையது மன்று; அக்காற்று அடைபட்டு வெளிப்படுவதால பிறக்கும் மெய்யெழுத்தைப் போன்றது மன்று. இரண்டிற்கு மிடையே உயிருடன் சேராமலும் மெய்யுடன் சாராமலும் தனியே நிற்றலின் தனிநிலை யென்ப்பட்டது. ஆனால் மெய்யெழுத்துக்களில் முதலாகிய ககரத்துடன் அஃது ஒற்றுமையுடையதென்பது பழகிப் பார்க்கத் தெரியும். இது தெரிந்தபின் ககரம் சிலவிடங்களில் அஃகேனத்தை ஒத்திசைக்கக் கூடுமென்பதும், அஃகேனம் உயிராய்த்திரியக்கூடிய தொன்றென்பதும் ஒருவா றுணரலாகும்.

தொல்காப்பியத்திலும் திருக்குறளிலும் பிற நூல்களிலும் 'பகுத்து' எனுஞ் சொல் 'பாத்து' என வருகின்றது.

"பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந், தீப்பிணி தீண்டலரிது" (குறள் : ஈகை, எ.) இஃதுடன் 'பகுத்தல்' என்பது 'பாத்தல்' என்று வருவதையும், 'முப்பால்' என்ற சொற்றொடரில், 'பால்' என்பது பிரிவு எனப்பொருள்படுவதால் அது 'பகு' என்னும் முன்னிலை யடியாய்ப் பிறப்பதையும் நோக்குக. 'பகுதி'

யென்பது ‘பாதி’ யென்று நூலினும் வழக்கினும் வருவது பலரு மறிந்த ஒன்றேயாகும். நிகர்—நேர், அகழி—ஆழி, முகப்ப—மோப்ப என்று ஆன்றோர் வழங்கிய சொற்களையும்; அகமுடையான்—ஆமுடையான், அகப்பை—ஆப்பை, புகுந்த—பூந்த, மிகுந்த—மீந்த எனப்பேச்சில் வருவன வற்றையும் காண்க. இவற்றில் இடையிலுள்ள ககரம் நீங்கி முதனின்ற உயிர்மெய்யெழுத்து நீள்வது கருதத்தக்கது. அகம், முகம், பகுதி, மிகுதி என்ப வற்றிலுள்ள ககரம் நமதுவாயிற் பெரும்பான்மை பிறக்கும் ககர வல்லெழுத்தைப்போலன்றி ஆகு, நாகு என்பவற்றினிறுதிக் கண்ணுள்ள குற்றியலுகரத்தைப் போல் வெளிப்படுகிறது. ஆதலி னது ஒருவகையிலுயிராயும் மற்றொருவகையில் மெய்யாயும் உயிர்களினிறுதியிலும் மெய்களின் முதலிலும் நெடுங்கணக்கில் நிறுவப்பட்ட அஃகேனத்தை யொக்கும். அகம், மிகுதி என்பவற்றிலுள்ள ககரத்தின் மெய்ப்பகுதி குறைந்து அதன்மீ தேறிய அகர அல்லது உகர உயிர்த்தன்மை ஒருவாறு மிகுவதா யிற்று. இங்ஙனம் பெரும்பான்மை உயிர்ப்பண்பும் சிறுபான்மை மெய்ப்பெற்றியும் வாய்ந்து எழுத்துக்களினிடையே நின்ற ககரம் மொழிக்கு முதலில் நின்ற உயிரை நீளச்செய்து மாள்கின்றது. அறியார் வாய்ச் சொல்லில் ‘அகத்தி’ யென்பது ‘அவத்தி’ யென்றும், ‘பகுதி’ யென்பது ‘பவுத்தி’ யென்றும், ‘தெரிகிறது’ என்பது ‘தெரியிது’ என்றும் வருவதனால் மேற் கூறியதனுண்மை விளங்கும். இவற்றில் அகத்தி, பகுதி யெனுஞ் சொற்களில் ககரத்தின் மேல் அகர உகர உயிர்கள் ஏறி நின்றமையின், ககரம் நீங்குழி வகரந்தோன்றுதலும்; தெரிகிறான், எரிகிறது என்ப வை முறையே தெரியிது, எரியிது எனவருங்கால் ககரத்தின் மேல் இகரம் ஏறியதால், ககரம் நீங்குழி யகரந்தோன்றுதலும் உடம்படுமெய்க்குக் கூறிய கட்டளைகளைப் பொருந்தியிருப்பது கண்டு கொள்க. அஃகேனம் போல் ஒலிக்குமிக் ககரம் உயிர்த் தன்மை பெற்றும் முழுஉயிராகாமையால் தனித்துநிற்க வலி யற்று மறைய நேருங்கால் தன்முன்னுள்ள உயிருடன் ஒட்டிக் கொண்டு அதனளவை நீளச்செய்கிறது. ஆனால் முதனின்ற வெழுத்து நெட்டெழுத்தாயின் அஃது அளபெடுக்காது நெட்

டெழுத்தாகவே நிற்கும்: ஆகும்—ஆம், போகும்—போம் என்பவற்றாலதை யறிக. இனி புகட்டு—போட்டு, முகப்ப—மோப்ப, முகடு—மோடு என வருபவற்றில் இடையிலுள்ள ககரம் மறைய முதனின்ற உயிர்மெய் நீள்வதாயின் அவைமுறையே பூட்டு, மூப்ப, மூடு என்றன்றோ நிற்கவேண்டும்? அவை, போட்டு மோப்ப என நின்றவாறென்னை யெனின், உகர ஒகரங்கள் இதழிற் பிறக்கும் உயிர்களானமையால் அவை ஒன்றோடொன்று பிறழ்வது இறும்பூதாகாது. கொடுத்தான்—குடுத்தான், குடை—கொடை, தொங்கு—தூங்கு இவற்றாலஃதுணரப்படும்.

மேற்சொன்ன இவ்வெழுத்துக் கூறு ககரமொன்றையே பொருந்தியதன்று. வேறெழுத்துக்களிலுமது தோன்றும்: பொழுது—போது, உவகை—ஓகை, வியர்த்தல்—வேர்த்தல் என்பவற்றில் ழகர வகர யகரங்கள் விழுந்து முதனின்ற உயிர்மெய் நீண்டது. சிறுபான்மை இங்ஙனமா மெனக்கொள்க. பொழுது—போழ்து, விழுது—வீழ்து எனவருதலுமுண்டு. தெலுங்கில் 'கொழுப்பு' என்பது 'கோவு' என்றும், 'மரம்(ன்)' என்பது 'மான்' என்றுந் திரிவதையும் இஃதுடனமைத்துக் கோடல் வேண்டும். இங்கெடுத்துக் காட்டியவற்றால் வழக்கச்சொற்களுக்கும் ஆன்றோரெடுத்தாண்ட மொழிகளுக்குமுள்ள ஒற்றுமை விளக்கப்பட்டது. திருத்தமாய்ப் பேசவேண்டுமென்ற நினைவு உளத்திலெழுந்தாலொழியக் கற்றுயர்ந்தோரும் மற்றவர் போலவே பேசுகின்றார். 'வருகிறது' என்று நிகழ்காலவினைமுற்றை 'வருறது' என்று சொல்லுங்கால் இடையிலுள்ள ககர இகரம் விழுந்தது. "அங்கே யார்வருறது (வர்றது)?" என்பதைநோக்குக. ஆனால், "மாடு வருது" என்பதில் ககர இகரத்துடன் றகரமும் விழுந்தது. இரண்டெழுத்துக்கள் விழுந்தும் முதனின்ற உயிர்மெய் நீளவில்லை. இடையிலுள்ள ரகர உகரம் நீட்டத்தைத்தடுக்கின்றது போலும். ஏனெனின், வருகிறானெனுமுற்றில் ரகர உகரமும் ககர இகரமு மறைய "வாறான்" என முதல் நீண்டமை காண்க. இவ்விடத்தும் ரகர உகரம் விழாக்கால் முதலுயிர் மெய் நீட்டம் பெறாது 'வருறான்' அல்லது 'வர்றான்' என்று நிற்றல் கருதற்குரித்து. பெருவழக்காயுள்ள

இத்தகைய சொற்களிலெல்லாம் இடையில் நின்ற ககரம் மறையும்; போகிறான்—போறான், சொல்கிறான்—சொல்றான், பாடுகிறான்—பாடுறான், ஓடுகிறான்—ஓடுறான், திட்டுகிறான்—திட்டுறான் இவை யனையவற்றில் அது விளக்கமுறும். ஆனால் ககர ஒற்றை யடுத்துவருங் ககரம் விழுவதில்லை; சிரிக்கிறான், இருக்கிறான், ஒளிக்கிறான், அடிக்கிறான், படிக்கிறான் என்பவற்றாலிஃதறியப் படும். இனி, 'அவர்கள்' என்பது 'அவகள்' எனநின்று 'அவாள்' எனத்திரிவதில் மொழிமுதலெழுத்து நீளாமல் ககரத்தை யடுத்து முன்னின்ற வகரம் நீண்டது. பெருவழக்காய்ப் பேச்சில் வரும் சொற்கள் சிலவற்றில் லகர ளகர ஒற்றுக்கள் விழுவதுமுண்டு; வரவில்லை—வரவிலை—வரலை (வரல); செய்யவில்லை—செய்யலை (செய்யல); மாப்பிள்ளை—மாப்பிளை; ஆண்பிள்ளை—ஆண்பிளை, ஆம்பிளை: (இதில் ணகரம் பகரத்திற்கினமாய மகரமாயிற்று.) பெண்பிள்ளை யென்பதும் அவ்வாறாதல் நோக்குக.

---

# சங்கீதம்

## தமிழ் நாட்டுச் சங்கீதம்

[திருவனந்தபுரம். தி. இலக்குமண பிள்ளை, B. A.]

(முதற் சிலம்பு ௨௪௰-ம் பக்கத் தொடர்ச்சி)

இனி, நம் தமிழ் நாட்டுச் சங்கீதத்தைப்பற்றிச் சற்றாராய்வோம். தமிழ் நாட்டுச் சங்கீதம் வடநாட்டுச் சங்கீதத்தைப் போல 'ஒழுகிசை'யைத் தழுவி நிற்குமல்லாது ஆங்கிலேய சங்கீதத்தைப்போல 'ஒன்றிசை'யைத் தழுவி நிற்பதல்ல. 'ஒழுகிசை'யை ஆங்கிலத்தில் 'மெலடி' (Melody) என்பார்கள். அஃதாவது, ஒன்றன்பின் ஒன்றாகப் பல சங்கீத சுரங்கள் தொடர்ந்து வருவதால் எழுகின்ற அழகுணர்ச்சியாம். 'ஒன்றிசை'யை ஆங்கிலத்தில் 'ஹார்மனி' (Harmony) என்பார்கள். அஃதாவது, ஒரே காலத்தில் பல சங்கீத சுரங்கள் ஒருங்கு முழங்குவதால் எழுகின்ற அழகுணர்ச்சியாம். இவற்றில் முன்னையது

இந்திய சங்கீதத்திலும், பின்னையது ஐரோப்பிய சங்கீதத்திலும் முந்தி நின்று அணிபெறச் செய்கின்றது. இதனால், ஒன்றிசை இந்திய சங்கீதத்தில் சற்றுமில்லை யென்றோ, ஏழுகிசை ஐரோப் பிய சங்கீதத்தில் சற்றுமில்லை யென்றோ யான் கூறவரவில்லை. அவ்வவ்விசை அந்தந்த சங்கீத ஏற்பாட்டில் முதன்மையுற்று, விசேடமான விரிவுபெற்றிருக்கின்றது என்பதைத் தெரிவிக்கவே இவ்வாறு சொன்னேன். இவ்வேழுகிசைச் சங்கீதத்தில் நமது தமிழ் நாட்டார் முற்காலத்தில் மிகுந்த தேர்ச்சி பெற்றிருந்த தாகவும் இப்போது தேர்ச்சி பெற்றிருப்பதாகவும் நூன்முகமா யும் அநுபவமுகமாயும் காணப்படுகிறார்கள். அவர்கள் சங்கீதக் கலைக்கு இலக்கண முறை வகுத்தும் அதைப் பழக்கத்தில் பயின்றும் வந்தார்கள். 'இசை நுணுக்கம்' முதலிய அரிய பெ ரிய தமிழ் நூல்கள் பயின்றும், பாவராக தாளங்களோடு கலந்து கையாடி அநுபவத்தில் சுவை யறிந்தும் வந்தார்கள். குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழு சுரங்களையும் நமது முன்னோர் அடிப்படையாகக் கொண்டு 103 பண்கள் அல்லது, ராகங்களும் வேறு அநேக உபராகங்களும் ஏற்படுத்தி யிருந்தார்கள். நான்குவித யாழும் 15 வித உதவி வாத்தியங்களும் பழகப்பட்டு வந்தன. 'யாழ்' என்பது சில அம் சங்களில் வீணைக்கு ஒப்பும் சிலவற்றில் உயர்வுமான இனிமை பொருந்திய ஓர் சிறந்த வாத்தியமென்று அநேக மேற்கோள் களால் வெளிப்படுகின்றது. அதைப்பற்றி எவ்வளவோ நுணுக்க மாக ஆராய்ந்தறிந்து திரட்டிய விவரங்கள், திருச்சிராப்பள்ளி 'ஏப்ரகாம்' பண்டிதரவர்கள் எழுதிய 'கர்ணாமிர்தசாரம்' என் னும் பெரும் இசை நூலிற் காணலாம்.

அந்த வாத்தியம் எவ்வளவோ சிறப்புற்றிருந்தும் யாது காரணத்தாலோ உலக வழக்கொழிந்து போயிற்று. அத னுடைய உருவம் சிலப்பதிகாரம் என்னும் அருங்காப்பியத்தில் ஒருவாறு விவரிக்கப்பட்டுள்ளது. சங்கீதக்கலையை முற்காலத் தில் பாணர்குடி மக்கள் என்னும் தமிழ் வகுப்பினர் விசேடமாகப் பயின்று வந்தார்கள். யாழ்வாசிக்கின்ற ஓர் வகுப்பினர் இலங் கைத்தீவிற்கு வடக்கிருக்கும் ஓர் சிறு தீவில் இதற்கு (2000)

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே குடி புகுந்ததி னுல் அதற்கு யாழ்ப்பாணம் என்னும் பெயர் பிறந்துள்ளது. இப்போது யாழ்ப்பாணத்தாருக்கு யாழும் தெரியாது; வீணையுந் தெரியாது. கம்பராமாயணத்திலும், யாழ்மூரி முதலிய தேவாரப் பதிகங்களிலும், திருவாசகத்திலும், அங்கங்கே காணப்படும் குறிப்புக்களாலும், பாணர்க்கு நிதிகொடுத்த சேரன் சரித்திரத் தாலும், இன்னும் இதுபோன்ற வேறு லக்ஷியங்களாலும் பண் டைக்காலத்தில் யாழ் என்னும் தமிழ் வாத்தியம் தமிழரிடை யில் எவ்வளவோ சிறப்புற்ற வாழ்வு பெற்றிருந்ததென்பதை உய்த்துணரலாம். பின்வரும் பாட்டில் கம்பர் மகரயாழின் இனி மையைத் தெளிவாய்க் குறிப்பிடுகின்றார்:

"தண்டலை மயில்க ளாடத் தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கள் முழவி னேங்கக் குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை யெழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்
வண்டுக ளினிது பாட மருதம்வீற் றிருக்கும் மாதோ."

இடைக்காலங்களில் தமிழ் உலகத்தில் புத்தமதம் பரவியதால், தமிழ் மொழியில் பற்பல புத்த ஆசிரியர்கள் நீதி நூல்களாகவும், காப்பியங்களாகவும் எழுதிப் பெருக்கிவிட்டனர். அந்நீதி நூல் களில் சிலவற்றுள் சங்கீதம் சிற்றின்ப வுணர்ச்சியை எழுப்புவ தால் மனிதர் பயிலத்தகாத கலையென்று விலக்கப்பட்டிருந்தது. புத்தமதத்தார் அதை நான்முகமாக இழித்துக் கூறியும் பல ரிடம் 'அறவுரை'களால் உபதேசித்தும், தமிழ் இசையைத் தழைக்க வொட்டாமற் செய்துவந்ததால், வைதிக சம்பந்தமா யுள்ள சிலபண்கள் ஒழித்து மற்றைய தனி யின்பத்தைக் குறிக் கும் பல பண்களும் ஆதரிப்பாரின்றி உயிர்ப்பொழிந்து போயின. வேறு சில பண்கள் புத்தமத வைராக்கியமாகிய பந்தத்துக்குப் பயப்பட்டு நாட்டுப்புறங்களிலும் மலைப்புறங்களிலும் உருமாறி ஓடி யொளித்து தென்பாங்கென்னும் சிதைந்த உருவம்பெற்று வாழ்ந்தன. கணிகையரிடத்தில் மட்டும் அவை சிறுபான்மை வழங்கி வந்தன. புத்தமதத்தருடைய ஆதிக்கம் மிகச் செல்லா திருந்த மலைநாட்டிலும் தென்கோடிப் பாண்டி நாட்டிலும்

வைதிக ராகங்களை யொழித்து மற்றவை சிறுபான்மையில் உலாவி வருவதை இப்போதும் காணலாம். மலை நாட்டில் இப்போதும் கானக்குறிஞ்சி, புறநீர்மை, இன்னிசை, பாடி, இந்தளம் முதலிய தமிழ்ப்பண்கள் வழங்கி வருதலைக் காணலாம். அந்நாட்டில் செண்டை, உடுக்கை, முழவு, இடக்கை முதலிய பற்பல தமிழ் வாத்தியங்கள் இக்காலத்தும் நடைபெறுகின்றன. சில பண்கள் ஆரிய ராகத் தொகுப்பில் உட்பட்டு குறிஞ்சி, சுருட்டி, இந்தோளம், பாடி முதலிய ராகங்களாய் உருமாறி தமிழ்ப்பண்கள் என்னும் தமிழ்ப்பெரு வாழ்வை இழந்தன.

எஞ்சி நின்ற வைதீகப்பண்கள் 10-வது நூற்றாண்டிலிருந்த நம்பியாண்டார் நம்பியால் தொகுக்கப்பட்டு, கன்னிகையார் முதலியோரின் உதவியால் தேவாரப் பதிகங்களில் இசைக்கப்பட்டு தமிழுலகத்தில் சக்களத்திப் பிள்ளைகளைப்போலப் புறக்கணிக்கப்பட்டு அரைவாழ்வு வாழ்கின்றன. அவையாவன: கொல்லி, வியாழக் குறிஞ்சி, தக்கேசி, இந்தளம், கானக குறிஞ்சி, மேகராகக் குறிஞ்சி முதலிய சுமார் 30 பண்களாம். அப்பண்கள் பாடக் கேட்டோரின் உள்ளமாகிய இருட்டறைகளில் பக்தியுணர்ச்சியெனும் தீபத்தை யெழுப்பி அவர் ஆருயிரை நெக்குவிட்டுருகச் செய்யும் ஆற்றலுடையன. அவ்வளவு உருக்கம் ஆரியராகங்களுக்கு இல்லையென உறுதியாகச் சொல்லலாம். நீர, மீரு என்னும் தமிழ்ப்பகுதிகள் எவ்வாறு ஸம்ஸ்கிருதத்தில் ஆதியில் புகுந்து கொண்டனவோ, அவ்வாறே தமிழ்ப் பண்களிலுள்ள நீண்டகமகங்கள் அல்லது [illegible] பிற்காலத்தில் ஆரிய ராகங்களில் சென்று பரவி பெரும் இன்பத்தைக் கொடுக்கலாயின வென்பது தேற்றம்.

இவ்வாறு பல்வேறு காரண நிகழ்ச்சியால் தமிழ்ச் சங்கீதம் சிறுபான்மையிலன்றி மறைந்தொழிந்துவிட்டது. ஆரிய சங்கீதத்திற்கு புத்த சமயத்தாரால் மேற்கூறிய இடையூறுகள் ஒன்றும் நேரிடாததால், அது குறைவின்றித் தழைத்துவரலாயிற்று. இனி இப்போது நிகழ்ந்துவரும் தமிழ்ப் பண்களையாவது யாரேனும் ஒருங்கு சேர்த்து சுரத்தில் லக்ஷியப்படுத்துவார்களாகில்,

அம்மட்டிலாவது தமிழ்ச் சங்கீதம் வருங்காலத்தில் உயிர்த்து நிலை பெற்று விளங்குமென்று துணியலாம். யாழ் என்னும் பண்டைத் தமிழ் வாத்தியத்தின் உருவம் இவ்வாறென்பதைக் கூர்ந்தறியக்கூடுமாயின், அதை இன்னும் உயிர்ப்பித்து நடைபெறச் செய்யக்கூடும் என்று நம்புகிறேன். இதற்கெல்லாம் தமிழ் அபிமானிகளால் உண்மையான உணர்ச்சியுடனும் ஊக்கத்துடனும் பெருமுயற்சிகள் எடுக்கப்பட வேண்டும்.

இது நிற்க. தமிழ் மரபினர் சங்கீதத்தைப் (அதாவது, தமிழ்ச் சங்கீதமேனும், ஆரிய சங்கீதமேனும்) பயிலுவதில் எவ்வளவு மதிநுட்பம் காட்டியுள்ளார் என்று அறிந்து கொள்வது தகுதியாம். முற்காலத்தில் பாணபத்திரன் முதலியோர் யாழில் தமிழ்ச் சங்கீதம் பயின்று சேரமான் பெருமான் முதலிய பெருவள்ளல்களால் அளப்பரிய நன்கொடையும், நன்கு மதிப்பும் பெற்றுப் பிறங்கியதை உங்களில் பலரும் அறிந்திருப்பீர்கள். யாழ் வல்லார் ஒருவருடைய செருக்கை அடக்குவதற்காகத் திருஞானசம்பந்தசுவாமிகள் 'யாழ்மூரி' யென்னும் திவ்யத் தேவாரப் பதிகத்தை இயற்றியிருப்பது எவருக்கும் தெரிந்த விஷயமே. இது கி. பி. ஏழாம் நூற்றாண்டில் நிகழ்ந்தது. பிற்காலத்தில் அகபர் சக்ரவர்த்தி அரசாண்டபோது, தென் இந்தியாவிலிருந்து ஒரு நாயுடு வட இந்தியாவிற் குடியேறி, இக்காலத்துத் தியாகய்யர், தீக்ஷிதர் முதலிய பெரும் இசைப்புலவர் இயற்றியவை போன்ற இசைப்பாக்கள் இயற்றியிருந்தார் என்றும், அவற்றில் சில இப்போதும் வட இந்தியாவில் பாடப்பெற்று அனந்தம் ஜனங்களுக்கு ஆராவின்பம் விளைக்கின்றனவென்றும் கேள்விக்கு எட்டுகின்றது. தென் இந்தியாவில் ஆரிய கர்நாடக சங்கீதத்தில் 72-மேளக் கர்த்தாக்களைக் கண்டுபிடித்துப் பாகுபாடு செய்து ராகங்களைத் தொகுத்தெழுதியவர் சுமார் 200 வருஷங்களுக்கு முன்னிருந்த வேங்கடமகி என்னும் சங்கீதவித்வானே. அப்பாகுபாட்டை யொட்டியே தென் இந்தியாவில் சங்கீதம் இப்போது பாடப் பெற்றும், தியாகய்யர் முதலியோரால் இசைப்பாக்கள் இயற்றப்பெற்றும் வருகின்றது. நவீனகாலத்தில் ஆரிய சங்கீதத்தில் இசைப்புலமை காட்டிய அருணாசலக்கவிராயர்,

ஷட்காலகோவிந்தமாரார், திருநாள் அசுவதி மகாராஜா, சுவாதி திருநாள்மகாராஜா, பொன்னையா நட்டுவர், இரவிவர்மன் தம்பி முதலியோர் திராவிட மரபினைச் சார்ந்தவரே.

இனி கர்நாடக சங்கீதவித்தையில் தேர்ச்சியுற்றுப் புகழ் பெற்ற தமிழரைப்பற்றிச் சிறிது விவரிப்பேன். தமிழருள் உயர்ந்த வகுப்பினராய் மதிக்கப் பெறும் வேளாளர் முதலியோருள் சங்கீதப் பயிற்சி அதிகம் பரவியிருந்ததாய்க் காணப்படவில்லை. இஃது அவர்களுக்குச் சங்கீதஞானம் குறைவுற்றிருந்தமையாலன்று. சங்கீதப் பயிற்சி செய்யின் தமக்கு ஓர்குறைவென்று ஓர் பொய்யபிமானம் அவர்களுக்குள் நிகழ்கின்றது பற்றியேயாம். அவர்கள் சங்கீதத்தில் இயற்கை ஞானம் குன்றியவர்களல்லரென்பது அவர்களுள் ஓர் பிரிவினராகிய ஓதுவார்கள் இன்னும் தமிழ்ச் சங்கீதத்தில் பயின்று விளக்கமுறுவதாலேயே புலப்படும். முற்காலத்தில் பாண் குடிமக்களிடத்தும், கணிகையரிடத்தும் சங்கீதம் நிலைபெற்றிருந்ததென்று முன்னர் கூறினோமே. பிந்திய காலங்களில் சங்கீதம் கணிகையரிடத்தும், நட்டுவாங்கம் பயின்ற நட்டுவரிடத்தும், நாகசுரம் வாசிக்கின்ற ஓச்சர் முதலியோரிடத்தும் நிலை பெற்று வந்திருக்கின்றதென்பது நாம் துணியக்கூடிய ஓர் உண்மையாம். அது தற்போதும் அவ்வாறே காணப்படுகின்றது. ஓதுவார்களிடத்தில் வைதீகத் தமிழ்ச் சங்கீதம் நிலைபெற்றிருக்கக் காண்கின்றோம். அது பெரும்பாலும் தேவாரம், திருவாசகம், திருவாய்மொழியாதியான பக்தி நூல்களிலுள்ள பாடல்களைத் தழுவியே உயிர்த்து வாழ்கின்றது. முற்கூறிய நட்டுவர், ஓச்சர், கணிகையர் என்னும் மூவகுப்பாரும் ஆரிய அல்லது கர்நாடக சங்கீதத்தைப் பயின்று, அதில் அபரிமிதமான தேர்ச்சியடைந்து கீர்த்தி பெற்று வருகின்றார்கள். சங்கீதம் உலகில் உயிர் வாழ்வதற்கும் சங்கீத ஞானம் ஜனங்களிடையில் பரவுவதற்கும் இவர்களே பெருங் கருவியாளர்களா யிருக்கின்றார்கள். நவீனகாலத்தில் நட்டுவர்களில் பெரும்புகழ் படைத்தவர்களாகச் சிலருடைய பெயர்களைக் குறிப்பிடக்கூடும். திருவிதாங்கூர் மன்னர் கொல்லம் ஆண்டு 1022-ல் நாடு நீங்கிய சுவாதி திருநாள் மகா

ராஜா அவர்களுடைய காலத்தில் வடிவேலு, பொன்னையா, சிவானந்தம், சின்னையா என்ற நான்கு நட்டுவ சகோதரர்கள் சிறப்புற்று விளங்க அம்மகாராஜா அவர்களால் அன்புடன் ஆதரிக்கப் பெற்றுவந்தார்கள். அவர்களுள் சிவானந்தம் நட்டுவாங்கத்திலும், பொன்னையா இசைப்புலமையிலும், வடிவேலு பாட்டிலும், பிட்டில் வாத்தியத்திலும் பெயர் பெற்றிருந்தார்கள். வடிவேலு நட்டுவருக்கு மாதம் 1-க்கு 110 ரூபாய் சம்பள மிருந்தது. அக்காலத்தில் 100 ரூபாய் சம்பளம் இக்காலத்து 700 ரூபாய் சம்பளத்துக்கு இணையாகும். இதனால் அம்மகாராஜா அவர்கள் வடிவேலு நட்டுவருடைய சங்கீதத் திறமையை எவ்வளவாக மதித்திருந்தார்களென்று தெளிவாய்த் தெரிகின்றது. வடிவேலு நட்டுவர் பேரிசைப்புலவராகிய திருவையாற்றுத் தியாகையருடன் நெருங்கிப் பழகினவர். இவருக்கு இணையான வாய்ப்பாட்டுக்காரர் பிந்திய காலத்தில் திருவிதாங்கூரில் இருந்ததில்லையென்பது திருவிதாங்கூர் சங்கீத வித்தான்களுக்குள் தலைமை வகித்திருந்த பரமேசுவர பாகவதருடைய கொள்கை. வடிவேலு நட்டுவர் இயற்றிய அற்புதமான வர்ணங்கள் இப்போதும் நிலைபெற்றிருக்கின்றன. பொன்னையா நட்டுவர் அனேக வர்ணங்களும், சுரஜித்துக்களும், பதங்களும், சிந்துக்களும் இயற்றியிருக்கின்றார். அவற்றில் பல இன்னும் சாகித்திய உலகில் முதன்மை பெற்றுலாவுகின்றன. இவர்களுக்குப் பிந்திய காலங்களில் சபாபதி நட்டுவர், வேணு நட்டுவர், வீராசாமி நட்டுவர், அப்பாசாமி நட்டுவர், கோயமுத்தூர் சிதம்பர நட்டுவர் இவர்கள் பெயர்கள் தனிப்படக் குறிக்கத் தகுந்தன. பிற்றில் வெங்குப்பிள்ளை, திருச்சிராப்பள்ளி கோவிந்தசாமிப்பிள்ளை, மாமுண்டியாபிள்ளை, திருவனந்தபுரம் கனகசபாபதிப் பிள்ளை, தஞ்சாவூர் பொன்னையாப்பிள்ளை, நயினர் பிள்ளை இவர்களெல்லாம் சங்கீத வித்தையில் பெரும்புகழ் படைத்த தனித்தமிழராவார்.

1022-ம் ஆண்டு நாடு நீங்கிய சுவாதி திருநாள் மகாராஜா அவர்கள் சங்கீதத்தில் மிகுந்த தேர்ச்சியும், இசைப்புலமையும், பாஷா வல்லமையும் ஒருங்கே வாய்ந்த பெருந்தகையாளர். அவர்கள் 32 திருவயதிற்கே வாழ்ந்திருந்தனராகிலும், அதற்குள் 12

பாஷைகளில் வல்லமைபெற்று சங்கீதத்தில் வர்ணங்கள், சுரஜித்துக்கள், பதங்கள், கீர்த்தனங்கள், தில்லானைக்கள் இப்படி பல இனங்களில் சுமார் 250க்குக் குறையாத இசைப்பாக்கள் இயற்றிப் பெரும்புகழ் படைத்திருக்கின்றார்கள். அவர்களுடைய சாகித்தியங்கள் தற்காலம் மலைநாட்டிலும், ஒருவாறு பாண்டிய சோழ நாடுகளிலும் நடைபெறுகின்றன. இவர்களுடைய பெருமையை மட்டிட்டளவு சொல்லமுடியாது. கோவிந்தமாரார் அல்லது கோவிந்தசாமியென்னும் மலையாள நாட்டு மகாவித்வான் அயல்நாட்டில் தியாகையர் என்னும் மகாவித்வா ளிடக்குமிடம் சென்று, அவரிடம் தமது அரிய சங்கீதத் தேர்ச்சியைக்காட்டி அவரால் வியந்து பாடப் பெற்றனர். கோவிந்தசாமி வர்ணங்களாகவும், பதங்களாகவும், அநேக சாகித்தியங்களும் இயற்றியுள்ளார். அவை இப்போதும் கீழ்நாட்டுச் சில மகாவித்வான்களால் பாடப்பெற்று வருகின்றன. அவருடைய பதங்கள் தியாகையர் கீர்த்தனங்களிலும் இனிமை மிகுந்தனவென்று சங்கீதத்தில் அகன்ற நோக்குடைய சென்னை திருமலையா நாயுடு அவர்கள் கூறுகின்றார்கள். கோவிந்தசாமி இயற்றிய இசைப்பாக்கள், கோவிந்தசாமி வர்ணங்கள், பதங்கள் என்னும் பெயரால விளங்குகின்றன. இவர்களெல்லாம் திராவிட நன்மக்களே. தமிழ்ச்சங்கீதம் முற்றிலும் இக்காலம் உயிர்த்திருந்திருக்குமாயின் இத்தகையோர் அதை எவ்வளவு தழைக்கச் செய்திருப்பார்களென்று உய்த்துணர்ந்து கொள்ளத்தகும். இது நிற்க, சங்கீதத்தைக் கலியாணப் பந்தலிலும், கோவில்களிலும், தெருக்களிலும் மகா ஜனங்கள் கேட்க வாசித்துப் பரவச் செய்து அவர்களுடைய சிரக்கம்பமும் நன்குமதிப்பும் பெற்று உலகத்தில் சங்கீத ஞானம் ஒழியாது நிலைபெறச் செய்பவர் நாகசுரம் வாசிக்கும் ஓச்சர் என்னும் தமிழ் மரபினரே. சாதாரண ஜனங்களிடையில் இவ்வளவு எளிதிற் சங்கீத ஞானம் வளரச் செய்வதற்குத் தகுந்த வித்வான்கள் இவர்களைப்போல் யாருமில்லை. இவர்கள் செய்யும் பேருதவியை இவ்வளவென்று வரையறுத்துச் சொல்லமுடியாது. சங்கீதத்தில் பண் விரித்தல் அல்லது இராக ஆலாபனை, தாளம், பல்லவி, கீர்த்தனங்கள் முத

விய இயற்றொருகுதிகளை வியக்கத் தகுந்த மனவளத்தோடும், இலக்கணத்தோடும், அழகோடும் லயம் இம்மியளவு விடாமலும் வாசித்துவரும் நாகசுரக்காரர் அநேகர்! அநேகர்!! இவர்கள் சோழ நாட்டிலும், பாண்டி நாட்டிலும், மலை நாட்டிலும் ஒவ்வோர் இடத்தில் ஒவ்வோர் காலத்தில் தமிழுலகப் பிரசித்தி பெற்று விளங்கியிருக்கின்றார்கள். இவர்களின் உழைப்பால சங்கீத ஞானம் ஜனங்களிடையில் பரவிவருவதுந் தவிர, வாய்ப்பாட்டு வித்வான்களும், பற்பல வாத்தியங்கள் வாசிக்கின்ற வித்வான்களும் இவர்களிடம் பெறுகின்ற கேள்விச் செல்வத்தால் சங்கீத நடையும் மனவளமும் இனிமையும் வாய்க்கப்பெற்றுப் பொலிவுறுகின்றார்கள். இவர்களைச் சார்ந்த தவிற்காரர்களும் லயத்தில் இவர்களுக்கு ஒப்பாகதமான தகைமையுற்றிருக்கின்றார்கள். இவ்வாறு லயஞானமும் உலகத்தில் பரவுகின்றது. நாகசுரக்காரரில் சோழ, பாண்டிய, மலையாள நாடுகளில் மிகுந்த புகழ் பெற்றவரிற் சிலருடைய பெயர்களைமட்டும் கீழே குறிக்கின்றேன்: இவர்கள் சென்ற 50 யாண்டுகளுக்குள் வாழ்ந்திருந்தவர்கள். மூக்குவீரன், கந்தன், சிவக்கொழுந்து, மீனாட்சிபுரம் சுப்பு, மன்னார்குடிச் சுப்பு, ஆனையப்பன், சிங்காரவேலு, பக்கிரி, குறநாட்டு நடேசன், திருவிடை மருதூர் நடேசன், பக்கிரி, வைதத்தியநாதன், பொன்னுசாமி, இராமசாமி, கொச்சும்மிணி, சுப்பையா முதலியோராம்

தனித்தமிழரின் நிலைமை இவ்வாறிருக்க தமிழ் நாட்டு சங்கீதத்தைபபற்றி நாம் விவரிக்கப் புகுந்ததால் சங்கீத விஷயத்தில் சிறப்புற்ற ஆரியத்தமிழராகிய சில பெரிய வித்வான்களின் பெயர்களும் இவ்விடம் குறிப்பிடத் தகுந்தனவே. இவர்கள்பெரும்பான்மை வாய்ப்பாட்டிலும், சிறுபான்மை வீணை, பிற்றில் முதலிய வாத்தியங்களிலும் தமிழுலகப் பிரசித்தி பெற்றிருக்கின்றார்கள். இவர் தியாகையர், முத்து சுவாமி தீக்ஷிதர், பட்டணம் சுப்பிரமணியஐயர், மகா வைத்தியநாதய்யர், இராகவய்யர், திருக்கோடிக்காவுக் கிருஷ்ணய்யர், சேஷண்ணு, சுப்பண்ணு, கல்யாண கிருஷ்ணய்யர், மகா தேவய்யர், இராமச்சந்திர ஐயர், கிருஷ்ணப்பா, துரைசாமி ஐயர் முதலிய மகா பண்டிதர்களாம்.

இவர்களுடைய பெருமையையும் அளவறுத்துச் சொல்ல முடியாது.

ஆகையால், தமிழ் நாட்டுச் சங்கீதத்தால் உலகத்திற்குண்டாகும் இன்பப் பெருக்கின் பெருமிதம்

"கையோடவல்லவர்" ஓர் பன்னிரண்டு கருத்து வைத்து
மெய்யோ டெழுதினும் தாளடங்காத வியப்புடைத்தே"

---

# இளைஞர் கடன்

[காரைக்குடி. அரு சோமசுந்தரஞ் செட்டியார்]

(ஈகூஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

இளமை என்ற சொல்லின் பொருள் ஆண்டால் உருவத்தால் சிறியதாயிருத்தல் என்பது மட்டும் அன்று. இளமை எனும் பதப் பொருள் புதிது, கெடாதது, நலமது, ஊக்கம், உணர்வு, வீரம், அஞ்சாமை, என்பதாகும். இளமைக்குமுன் அச்சம் சோம்பர் முதலிய யாவும் கைகட்டி வாய் பொத்தும். இத்தகைய அருமையான இளமைப் பருவத்தை இளைஞர்கள் செம்மை நெறியில் பயன் படுத்துதல் வேண்டும். இளமைப் பருவத்தை யெல்லாம் சிற்றின்பத் துறையிற் கழித்து, இரத்த ஓட்டம் குன்றப் பெற்று, நரம்புக ளெல்லாம் தளர்ந்து தள்ளாட முதுமைப் பருவத்தைப் பெற்று நோயாளிகளாக இருத்தல் இயற்கைக்குப் பெரிதும் விரோதமாகும். இளமையிலேயே நரம்புகள் தளரும்படியும் இரத்த ஓட்டம் குறையும்படியும் செய்து கொள்வது உடலைச் சீக்கிரத்தில் அழித்துக் கொள்ள வழிதேடுவதே யாகும்.

இரத்தத்தைச் செலவழிப்பதில் இளைஞர்கள் பெரிதும் கவன முள்ளவர்களாக இருத்தல் வேண்டும். உடல் வளத்தைப் பாதுகாத்துக் கொள்வதோடு அறிவு வளத்தையும் சீர்படுத்திக் கொள்ளுதல் வேண்டும்.

அறிவைப் பண்படுத்திக் கொள்ளுவதற் கேற்ற செவ்விய பருவம் இளமைப் பருவமே யாகும். இளமையில் தோன்றும் அறிவு என்றும் அழியாத அறிவு ஆகும். உடலையும் அறிவை யும் வளர்த்துக் கொள்ளுதற்குரிய அவகாசம் இளமையில் உண்டு. இளமைப் பருவத்தின் வேலையும் இவ்விரண்டையும் வளர்த்தலே யாகும். எனவே, இளைஞர்கள் உடலையும் அறிவை யும் திண்மைப் படுத்துதலில் பெரிதும் நாட்ட முடையவர்களா யிருத்தல் வேண்டும்.

உடல் வளமும் அறிவு வளமும் நிறைந்த இளைஞர்கள்தான் தொண்டு புரிந்து நாடு, மொழி, சமயம் முதலியவற்றை வளர்க் குந் தன்மையுடையவராவர். இளைஞர்கள்பால் நாட்டுப்பற்றும், மொழிப்பற்றும், சமயப்பற்றும் நன்கு மிளிர்தல்வேண்டும், ஒவ்வோ ரிளைஞனும் தன் வீட்டையும் ஊரையும் நினைக்கு மள வில் நின்றுவிடாது, பரந்த பாரத தேசம் முழுவதையும் நினைத்து "இப் புண்ணிய நாடு எனது நாடு; நான் இந்தியன்" என எண்ணி இன்புறுதல் வேண்டும். தமிழ் நாட்டு இளைஞர் களாகிய நாம் "எங்கள் மொழி இன்பத் தமிழ் மொழி, நாங்கள் பழந்தமிழ் மக்கள்" என உன்னி உன்னி உவகை கொள்ளுதல் வேண்டும். இளைஞர்களனைவரும் "எங்கள் நெறி அன்பு நெறி" என நினைந்து மனமகிழ்தல் வேண்டும், பிறந்த நாட்டினையும், பயிலும் மொழியினையும், போற்றும் நெறியினையும் இளைஞர்கள் எண்ணி எண்ணி இறுமாப் பெய்துதல் வேண்டும்.

மொழிப் பற்றினையும் சமயப் பற்றினையும் வளர்த்துக் கொள்ளுதற்கு இளைஞர்கள் அறிவு நூல்களை வாசித்தல் வேண் டும். நாட்டுப் பற்றை வளர்த்தற் பொருட்டு, நாடு முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்தல் வேண்டும். அடைகாக்குங் கோழி களைப்போல் எப்பொழுதும் வீடுகட்குள்ளேயே இருந்து கொண் டிருந்தால் ஒரு நாளும் நாட்டுப் பற்று உண்டாகாது. வீரத்தனத் துடன் வெளியே போந்து இரு கண்களையும் திறந்து பரந்த உல கத்தைப் பார்த்தாற்றான் நாட்டின்பால் நிறைந்த அன்பு தோன் றும்; உலக அறிவும் மிகும்.

(தொடரும்)

# மதிப்புரை

**அன்பானந்தன்.**—இப்பெயர் புனைந்த தமிழ் மாதப்பத்திரிகை யொன்று நாகர்கோவிலினின்றும் வெளி வருகின்றது. இதன் ஆசிரியர் C A பெருமாள் என்பவர். இப்பத்திரிகை ஆடவர், பெண்டிர் என்ற இரு திறத்தாராலும் கட்டுரை வரையப்பட்டு வெளிவருகின்றது. கைத்தொழில, மருத்துவம் முதலியவைகளைப்பற்றிய கட்டுரைகளும், பெண்கள் சார்பாகச் சில நீதிக்கட்டுரைகளும் இதில் வெளிவருகின்றன. இதற்கு வருட சந்தா ரூ 1. விலாசம்:—பத்திராதிபர், அன்பானந்தன், வடசேரி, நாகர் கோவில்.

**கலைமகள்.**—இப்பத்திரிகை கொளும்பு, வெள்ளவத்தைத்திருக்குறட் பயிற்சிக் கழகத்தினின்றும் மாதந்தோறும் தவறாது வெளிவருகின்றது. இப்பத்திரிகை மிகவும் சைவத்துக்கே பாடுபடுகின்றது. இதன் வருட சந்தா ரூ. 2—0—0 விலாசம்:—காரியதரிசி, திருக்குறட் பயிற்சிக்கழகம், வெள்ளவத்தை, கொளும்பு.

**தமிழர்.**—இப்பெயர் கொண்டு ஒருபத்திரிகை திருச்சியிலிருந்து வெளிவருகின்றது. இதன் ஆசிரியர் திரு உ. க. பஞ்சரத்னம் என்பவர். இஃது ஒரு உயர்ந்த தனித்தமிழ் சஞ்சிகை. இது மக்கள் முன்னேற்றத் திற்குரிய எல்லாவளர்ச்சித் துறைகளையும் விளக்குவது. இதில் ஆராய்ச் சிக் கட்டுரைகளும் காணப்படுகின்றன. இதில நாவலும் வெளிவருகின் றது. கைத்தொழில் துண்டுத் துணுக்குகள், செய்திக்கொத்து, வியா பாரக்கொத்து முதலியவைகள் ஆசிரியரால் எழுதப்பட்டிருக்கின்றன. இவைகள் வாணிகஞ் செய்பவர்களுக்கு மிகவும் பயன் பெறுமென நினைக்கிறோம். இதன் ஆண்டுக் கையொப்பம் ரூ. 2-8-0; மாணவர் பதிப்பு ரூ. 2—0—0. இப்பத்திரிகை கிடைக்குமிடம் "தமிழர்" நிலை யம், 23, மலைவாசல், தெப்பக்குளம், திருச்சிராப்பள்ளி.

**தமிழ்ப் பொழில்.**—இப்பெயர் கொண்டவொரு இனிய செந் தமிழ்ப் பத்திரிகை கரந்தைத் தமிழ்ச் சங்கத்தினின்றும் மாதந் தோறும் வெளிவருகின்றது. இஃது அழகிய செந்தமிழ் நடையில் எழுதப்பட்டி ருக்கின்றது. கரந்தைத் தமிழ்ச்சங்கம் தமிழ் நாட்டின்கண் தோன்றி நிலவுகிற சங்கங்களில் முதன்மை பெற்றதென்பதும், அச்சங்கம் தமி ழுக்காக அளவற்ற முயற்சி யெடுத்துப் பாடுபடுகிறதென்பதும் தமிழுல கம் அறிந்ததே. அச்சங்கத்தார் ஒரு பத்திரிகையை அச்சிட்டு, அதற்குத் தமிழ்ப்பொழில் என்ற பெயர் சூட்டியதும் மிகவும் அழகாகவும் பொருத் தமாகவும் இருக்கிறது. தமிழ் நாட்டின்கண் ஆராய்ச்சித்துறையில் இறங்கும் யாவருக்கும் இளைப்புத் தோன்று வண்ணம் தண்ணிழல் ஈந்து இன்பம் பயப்பது இப்பொழிலேயாகும். இதன் ஆசிரியர் திரு. R. வேங்கடாசலம் பிள்ளையவர்கள். இதன் ஆண்டுக்கையொப்பம் ரூ. 3—0—0. மாணவர்கட்கு ரூ. 2—0—0. விலாசம்:—இதழா சிரியர் 'தமிழ்ப் பொழில்,' கரந்தைத் தமிழ்ச் சங்கம், கருந்திட்டைக் குடி, தஞ்சை.

---

Printed by Sivakami Vilasam Press, Published by V. Subbiah
for The S. I. S. S. W. P. Society, Ltd., Madras.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள்தோறும் வெளிவருவது

| | | |
|---|---|---|
| சிலம்பு ௫ | மெய்கண்டான் ஆண்டு-௭௱௨ ஆனித் திங்கள்<br>1925௵ ஜூன்௴—ஜூலை௴ | பரல் ௩ |

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## இறையனார் அகப்பொருள்

[கா. சுப்பிரமணிய பிள்ளை, M.A., M.L.]

(௱௩௮-ம் பக்கத் தொடர்ச்சி)

இனி இந்நூலின் முதற் சூத்திரத்துள்ளும் அதன் உரையினுள்ளும் போந்த சில பொருள்கள் ஆராயத்தக்கன. ஐந்திணை என்பதற்கு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று ஐந்தாகப்பகுத்து ஓதப்படும் நிலத்தில் நிகழும் ஒழுக்கம் என்ற பொருள் கொள்ளப்பட்டது. அவ் ஒழுக்கம் களவு கற்பு என்று

இருவகைப்படும். களவு ஒருதலையான அன்பால் நிகழ்வது. கற்பு அவ்வாறு எக்காலத்தும் நிகழ்வதன்று. ஆதல்பற்றி உரையாசிரியரும் இந்நூற் பெயர்க் காரணங்கூறிய இடத்து "களவு கற்பென்னும் கைகோளிரண்டனுள், களவினைச் சிறப்புடைத்தெனவேண்டும் இவ்வாசிரியன். என்னை? முற்படப் புணராத சொல்லின்மையிற், கற்பெனப்படுவது களவின் வழித்தே. என்று வேண்டுதலின் கற்புக் களவுபோல ஒருதலையான அன்பிற்றன்று" என்றார். எனவே "சிறப்புப்பற்றிக் கொடுப்பாரும் அடுப்பாருமின்றி அன்பினுளைய ஐந்திணை ஒழுக்கம் களவெனப்படுவதாகும்" என்று முதற் சூத்திரத்தின் முதலடிக்குப்பொருள் கொள்ளுதலுமொன்று. அங்ஙனங் கொள்ளுவார் முதலடி மாத்திரமே மூலச்சூத்திரம் என்ப.

இச்சூத்திர வுரையுள் உரையாசிரியர் பாயிரம் என்பது, நூலின் அமைப்பு முறையையும் நுதலிய பொருள் இயல்பையும் நூலின் சொற்பொரு ளையத்தையும் சுட்டுவதென்பதைக் குறிப்பான் உணர்த்துகின்றார்.

இவ் இலக்கணம் சிறப்புப்பாயிரத்துக்கே மிகுதியும் பொருத்தமுடையது. ஏனெனில் பொதுப்பாயிரம் சிறப்புப் பாயிரம் என்ற இரண்டனுள், முன்னது, ஈவோனதன்மை, கொள்வோன்றன்மை, ஈதல் முறை, கோடன் மரபு என்பவற்றின் சார்பாக உள்ளது என்று உரையாசிரியர் மொழிதலானும் அந்நான்கும் நூல் கற்பாரையும் கற்பிப்பாரையும் இத்தகையர் என்று விளக்கும் வாயிலாக நூலொடு தொடர்புடையனவேயன்றி நூற்பொருள் மிகுதியும் விளக்கும் இயல்பினவல்ல. இனிப் பொதுப்பாயிரந்தானே எந்நூற்கும் பொதுவானதாயும் ஓரினமான நூல்கட்குச் சிறப்பாயும் அமைதலுங் கூடும். பவணந்தி முனிவரது நன்னூலிற் கூறப்பட்ட பொதுப்பாயிர இலக்கணமானது இலக்கியம், இலக்கணம், தருக்கம், சமயசாத்திரம் முதலிய எவ்வகை நூலினையும் கற்பாருக்கும் கற்பிப்பாருக்கும் பொதுவாகிய இலக்கணங்களை அறிவுறுத்துகின்றது. ஆசிரியர் சிவஞானயோகிகள் தமது சிவஞானபோதப் பேருரையுள் இத்

தாந்தநூல் கற்பார் இன்ன இலக்கண முடையாராதல் வேண்டுமென்று சுட்டிய பகுதி பொதுச் சிறப்புப் பாயிரத்தின்பாற் படும். இதனைச் சிறப்புப்பாயிரத்து எண்வகை யுறுப்புள் 'இயைபு' என்பதன்பாற் படுத்துவாரு முளர். இயைபு என்பது நூல் கேட்டற்குரிய அதிகாரிகளைப் பற்றியதே யன்றி ஈவோன் றன்மை முதலியவற்றை உள்ளடக்காமை காண்க.

இனிச் சிறப்புப்பாயிரம் என்பது பதினொன் றுறுப்புடையது. ஆக்கியோன்பெயர் அவற்றுள் ஒன்றாகும். இக்கால ஆராய்ச்சி வல்லார் ஆக்கியோனது வாழ்க்கை வரலாற்றுணர்ச்சியும், நூலுட்போந்த அவனது உள்ளக்கிடையை யறிவதற்கு இன்றியமையாத தென்று கருதுகிறார்கள். திருத்தொண்டர் புராண ஆராய்ச்சிக்கு சேக்கிழார்புராணம் பெரிதும் துணைநின் றுதவுவது. அதற்கு எடுத்துக்காட்டாகும் இவ்வாறே, ஒவ்வொரு நூலாசிரியர்க்கும் அவரது வாழ்க்கை வரலாறு நன்கு தெரியக் கிடப்பின், நூலாராய்ச்சி மிகவும் திட்ப முடையதாகும்.

நூல்வழி என்பது முதனூல் ஒழிந்த பிற நூல்களுக்குக் கூறப்படுவதாகும். முன்னிருந்த நூலின் கருத்தைப் பின் வந்த நூல் தெரிக்கும் காலை, பின்னதை முன்னதின் வழித்தென்பர். முன்னூல் ஒன்றாகவாதல் பலவாகவாதல் இருத்தல்கூடும். முன்னூல் பலவற்றுள்ளும் போந்த கருத்துக்களைத் திரட்டி ஆக்கியோனது அறிவாற்றற்கேற்பச் செவ்விதின் அமைக்கப்பட்ட நூலும் வழிநூலின்பாற்படும். முன்னூல் ஒன்றாதற்கு மேற்கோள், அகத்தியத்தின் வழிவந்த தொல்காப்பிய மெனலாம். முன்னூல் பலவாதற்கு மேற்கோள், சிவஞானபோதம், சிவஞான சித்தியார் என்ற இரு நூற் கருத்துக்களும் பல கலை யாகமக் கருத்துக்களும் கலந்து உமாபதி சிவாச்சாரிய சுவாமிகள் அருளிச்செய்த சிவப்பிரகாச மெனலாம். "விளம்பிய நூலவை யிரண்டும்....................இறைவனூலும் கலந்து" என்று சிவப்பிரகாசமுடையார் கூறியமையால் விளங்கும். சிவப்பிரகாசத்தைச் சார்புநூலென்பாருமுளர். சார்புநூ லெனப்படுவதும் வழிநூலின் வழிநூலே. ஆசிரியர் தொல்காப்பியனார் முதனூல் வழிநூல் என

இருவகைப்படும். களவு ஒருதலையான அன்பால் நிகழ்வது. கற்பு அவ்வாறு எக்காலத்தும் நிகழ்வதன்று. ஆதல்பற்றி உரையாசிரியரும் இந்நூற் பெயர்க் காரணங்கூறிய இடத்து "களவு கற்பென்னும் கைகோளிரண்டனுள், களவினைச் சிறப்புடைத்தெனவேண்டும் இவ்வாசிரியன். என்னை ? முற்படப் புணராத சொல்லின்மையிற், கற்பெனப்படுவது களவின் வழித்தே. என்று வேண்டுதலின் கற்புக் களவுபோல ஒரு தலையான அன்பிற்றன்று" என்றார். எனவே "சிறப்புப்பற்றிக் கொடுப்பாரும் அடுப்பாருமின்றி அன்பினுைடய ஐந்திணை ஒழுக்கம் களவெனப் படுவதாகும்" என்று முதற் சூத்திரத்தின் முதலடிக்குப்பொருள் கொள்ளுதலுமொன்று. அங்ஙனங் கொள்ளுவார் முதலடி மாத்திரமே மூலச்சூத்திரம் என்ப.

இச்சூத்திர வுரையுள் உரையாசிரியர் பாயிரம் என்பது, நூலின் அமைப்பு முறையையும் நுதலிய பொருள் இயல்பையும் நூலின் சொற்பொருணயத்தையும் சுட்டுவதென்பதைக் குறிப்பான் உணர்த்துகின்றார்.

இவ் இலக்கணம் சிறப்புப்பாயிரத்துக்கே மிகுதியும் பொருத்தமுடையது. ஏனெனில் பொதுப்பாயிரம் சிறப்புப் பாயிரம் என்ற இரண்டனுள், முன்னது, ஈவோன்றனமை, கொள்வோன்றன்மை, ஈதன் முறை, கோடன் மரபு என்பவற்றின் சார்பாக உள்ளது என்று உரையாசிரியர் மொழிதலானும் அந்நான்கும் நூல் கற்பாரையும் கற்பிப்பாரையும் இத்தகையர் என்று விளக்கும் வாயிலாக நூலொடு தொடர்புடையனவேயன்றி நூற்பொருள் மிகுதியும் விளக்கும் இயல்பினவல்ல. இனிப் பொதுப்பாயிரந்தானே எந்நூற்கும் பொதுவானதாயும் ஓரினமான நூல்கட்குச் சிறப்பாயும் அமைதலுங் கூடும். பவணந்தி முனிவரது நன்னூலிற் கூறப்பட்ட பொதுப்பாயிர இலக்கணமானது இலக்கியம், இலக்கணம், தருக்கம், சமயசாத்திரம் முதலிய எவ்வகை நூலினையும் கற்பாருக்கும் கற்பிப்பாருக்கும் பொதுவாகிய இலக்கணங்களை அறிவுறுத்துகின்றது. ஆசிரியர் சிவஞானயோகிகள் தமது சிவஞானபோதப் பேருரையுள் சித்

தாந்தநூல் கற்பார் இன்ன இலக்கண முடையராதல் வேண்டு மென்று சுட்டிய பகுதி பொதுச் சிறப்புப் பாயிரத்தின்பாற் படும். இதனைச் சிறப்புப்பாயிரத்து எண்வகை யுறுப்புள் 'இயைபு' என்பதன்பாற் படுத்துவாரு முளர். இயைபு என்பது நூல் கேட்டற்குரிய அதிகாரிகளைப் பற்றியதே யன்றி ஈவோன் றன்மை முதலியவற்றை உள்ளடக்காமை காண்க.

இனிச் சிறப்புப்பாயிரம் என்பது பதினொன்றுறுப்புடையது. ஆக்கியோன்பெயர் அவற்றுள் ஒன்றாகும். இக்கால ஆராய்ச்சி வல்லார் ஆக்கியோனது வாழ்க்கை வரலாற்றுணர்ச்சியும், நூலுட்போந்த அவனது உள்ளக்கிடையை யறிவதற்கு இன்றி யமையாத தென்று கருதுகிறார்கள். திருத்தொண்டர் புராண ஆராய்ச்சிக்கு சேக்கிழார்புராணம் பெரிதும் துணைநின்றுதவு வது. அதற்கு எடுத்துக்காட்டாகும் இவ்வாறே, ஒவ்வொரு நூலாசிரியர்க்கும் அவரது வாழ்க்கை வரலாறு நன்கு தெரியக் கிடப்பின், நூலாராய்ச்சி மிகவும் திட்ப முடையதாகும்.

நூல்வழி என்பது முதனூல் ஒழிந்த பிற நூல்களுக்குக் கூறப்படுவதாகும். முன்னிருந்த நூலின் கருத்தைப் பின் வந்த நூல் தெரிக்கும் காலை, பின்னதை முன்னதின் வழித்தென்பர். முன்னூல் ஒன்றாகவாதல் பலவாகவாதல் இருத்தல்கூடும். முன் னூல் பலவற்றுள்ளும் போந்த கருத்துக்களைத் திரட்டி ஆக்கி யோனது அறிவாற்றற்கேற்பச் செவ்விதின் அமைக்கப்பட்ட நூலும் வழிநூலின்பாற்படும். முன்னூல் ஒன்றாதற்கு மேற் கோள், அகத்தியத்தின் வழிவந்த தொல்காப்பிய மெனலாம். முன்னூல் பலவாதற்கு மேற்கோள், சிவஞானபோதம், சிவஞான சித்தியார் என்ற இரு நூற் கருத்துக்களும் பல கலை யாகமக் கருத்துக்களும் கலந்து உமாபதி சிவாச்சாரிய சுவாமிகள் அரு ளிச்செய்த சிவப்பிரகாச மெனலாம். "விளம்பிய நூலவை யிரண் டும்......................இறைவனூலும் கலந்து" என்று சிவப்பிர காசமுடையா கூறியமையால் விளங்கும். சிவப்பிரகாசத்தைச் சார்புநூலென்பாருமுளர். சார்புநூ லெனப்படுவதும் வழிநூலின் வழிநூலே. ஆசிரியர் தொல்காப்பியனார் முதனூல் வழிநூல் என

நூல் இரண்டே கொண்டனர். பிற்றைக் காலத்தாசிரியர் நூல் மூன்றெனவும் நான்கெனவும் கொண்டனர். "முதல், வழி, சார்பு என நூல்மூன்றாகும்" என்றும், அவற்றோடு எதிர் நூலென்பது "தன் கோள் நிறீஇ பிறன்கோள் மறுப்பது எதிர் நூலென்பர் ஒரு சாரோரே" என்றமையாற் பெறப்படுமென்றும் கூறுப. அவையாவும் முதல் வழி என்பவற்றுள் அடங்கும்.

எல்லை என்பது தமிழ்நூற் பாயிரத்துச் சிறப்பாகக் கூறப்பட்ட ஓர் உறுப்பு. பண்டை நூல் ஒவ்வொன்றிற்கும் அது தோன்றிய நாட்டினது எல்லை விளங்குமாயின் அது அந்நூலாராய்ச்சிக்கு மிகவும் துணை புரிவதாகும். நூல் வழங்கு மெல்லை காலத்திற்குக் காலம் மாறுபடலாம். இந்நூற்கு உரையாசிரியராற் குறிக்கப்பட்ட எல்லையின் வைத்து இடைச்சங்கத்தார் காலத்திற்குப்பின் இந்நூலியற்றப்பட்டதென்பது தெளியப்படும்.

காலம் களம் என்பனவும் இவ்வாறே பெரிதும் பயன்தருவன. நூலின் காலத்தை யாராய்ச்சி செய்வார் நூலியற்றிய காலத்தில் வாழ்ந்த மக்களியல்பினையும் அரசரியல்பினையும் நாட்டின் நிலை முதலியவற்றினையும் நன்கு உணர்ந்து தெரிவிப்பாராயின் நூலின் போக்கினை யாவரும் செவ்விதின் அறிதல்கூடும். களம் என்பது நூல்தெரித்த அரங்கையும் குறிக்கும். 'நிலந்தரு திருவிற் பாண்டியனவையத்து அதங்கோட்டாசாற் கரிறபத் தெரித்து' என்ற விடத்துக் காண்க. அது நூலாசிரியனிருந்து நூலியற்றிய இடத்தையும் குறிக்கும்.

நூல் தோன்றுவதற்குக் காரணம் செம்மையாக விளங்குமாயின் நூலின் உட்கிடை உணர்தல் எளிதாகுமென்பதனைத் திருத்தொண்டர் புராண வரலாற்றின் வைத்துணர்க.

நூலுக்குப் பெயர் பலவகைக் காரணம்பற்றி அமைவதாகும். செய்வித்தான் பெயர் நூற்கமைதல் அரிதாகும். இடுகுறியாலும் பெயர் அமையுமென்பதால், நூற்பெயர்க்குக் காரணம் வேண்டுமென்பது மின்று.

நூலின் யாப்பு, பாச்செய்யுளானும் உரைச்செய்யுளானும் அமையும். இந்நூலுரையாசிரியர் யாக்கு முறையையே யாப்பெனக் கொண்டுளார். இவ் அகப்பொருள் நூலினைத் தொகுத்தல் யாப்பான் ஆசிரியர் இயற்றியதாக இவர் கூறுகின்றார். அதற்குக் காரணம் "உலகத்துள் நடக்கும் அகப்பொருட் செய்யுள் இலக்கணமெல்லாம் இவ் வறுபது சூத்திரத்துள்ளே தொகுத்தானாதலின்" என்றமையாற் பெறப்படும். தொகுத்தலென்பதற்கு முன்னூலுட் போந்ததனைத் தொகுத்தல் என்று கூறாது மேற்போந்தவாறு கூறியது ஓர் சிறப்பு முறையாகும். அதற்குக் காரணம் இந்நூல் முதனூலாகக் கருதப்படுதல் என்க.

யாப்பு என்பதற்கு இயைபு என்ற பொருளாட்சியும் உண்டு. நூல் நுதலிய பொருள், சுருக்கமாதல் பெருக்கமாதல் குறிக்கப்படும். பதிகமென்பது நுதலிய பொருளைத் தொகுத்துணர்த்துவதாகும். இற்றைக் காலத்திலே உரைநடையின் எழுதப்படும் நூன்முகத்தே நுதலியபொருளும் நூலமைப்பும் காணப்படுகின்றன. உரை எழுதினார் கேட்போரைக் கேட்டோரென்றல் அத்துணை பொருத்தமுடையதல்ல. களம் என்பதனுள் அஃதடங்கும். களவியல் என்பதற்குப் பொருளுணர்த்துமிடத்தும் 'களவு எனப்படுவது' என்பதற்குக் காரணங் கூறுமிடத்தும் இந்நூற்பயன் வீடுபேறெனச் செவ்விதின் உணர்த்தப்பட்டது. இந்நூலின் பயனாகக் கூறப்பட்ட புகழ், பொருள், நட்பு, அறன் என்பன எவ்வகை நற்கல்விக்கும் கூறப்படும் பொதுப்பயனே யன்றி இந்நூற் சிறப்புப்பயன் ஆகா.

நூல் என்ற சொல் பொதுப்பொருளினும் சிறப்புப்பொருளினும் வழங்கும். உரைச்செய்யுள் பாச்செய்யுள் யாவும் நூலென வழங்குமிடத்து அதன் பொதுப்பொருள் விளங்கும். அச்சொல்லின் சிறப்புப்பொருள், "நூ லுரை பாட்டு" என்றவிடத்து விளங்கும். ஒரு பொருளைப்பற்றிய உண்மைகளைக் கோவைப்படுத்துமுன்பின் முரணின்றித் தொகுத்தும் வகுத்தும் விளக்குவது சிறப்பாக நூலெனப்படும். இவற்றிற்கு, இலக்கண நூல், சைவசித்தாந்த நூல், மேல்நாட்டுப் பௌதிக நூல் என்பன

எடுத்துக்காட்டாகும். சிறப்பாக நூலென்பது தொல்காப்பியத்திற்கூறிய எழுவகை இலக்கியங்களுள் ஒன்றாகும். நூலென்றது உவமையாகுபெயர். அதனை இவ்வுரைகாரர் நன்கு விளக்கியுள்ளார். தமிழ்நாட்டுப் பண்டை அறிவன் நூல்களை வடமொழியாளர் தமது மொழியிற்கொண்டகாலத்து, அவ் வடமொழி நூல்களைத் தந்திரம் என்ற சொல்லால் வழங்கினர். நூல் என்பதன் நேர்மொழிபெயர்ப்புத் தந்திரம் என்பது. நூல் நூற்றலும் ஆடைவணிகம் செய்தலும் பண்டைக்காலத்து எந்நாட்டினுஞ் சிறப்பாகத் தமிழ்நாட்டில் நிகழ்ந்தன என்றும், தமிழரது ஆடைவணிகம் உலகெங்கும் புகழ்கொண்டதென்றும் சரித்திர வல்லார் கூறுகின்றார்கள். நூல் என்ற சொல்லைப் பெருவழக்காகச் சுவடிகள் யாவற்றையும் குறிக்க வழங்கும் மரபு, தமிழ்மொழிக்கே தொன்றுதொட்டுள்ளது. வேதம் சாஸ்திரம் என்பனவே அவ்வாறு வடமொழியில் வழங்குவதாகும். தந்திரமென்னுஞ் சொல் வைதிகத்தின் வேறாய நூல்களைக் குறிப்பிட வழங்குவது மொழிமரபு. இதனை நன்குணர்வோர் நூல் என்னும் தமிழ்மொழிப்பொருளையே, தந்திரமென வழங்குதல் வடமொழி வழக்கெனக் கொள்க. மாறிக்கோடல் உரையன்மையறிக.

சிறப்புப்பாயிரம், நூலிற்கேயன்றி உரைக்குங் கூறப்படலாம். உரை, பாட்டு முதலியனவும், நூலென்ற பொதுச் சொல்லாலே குறிக்கப்படுதல் காண்க. கடவுள் வணக்கமும்,வாழ்த்தும், நுதலிய பொருளும் ஆக்கியோனே கூறுதல்கூடும். திருவள்ளுவர் தமது நூற்கு அவற்றை இனிது மொழிந்தனர். பரிமேலழகர் நுதலிய பொருள் கூறும் உரைப்பாயிரங் கூறினமையுங் காண்க. ஆக்கியோனையும் நூலையும் புகழ்ந்து கூறும் சிறப்புப்பாயிரமே, பிறர் இயற்றுதற்குரியன. தோன்றாத் தோற்றித் துறைபல முடிப்பினும், தான் தற்புகழ்தல் தகுதியன்றே என்றலின் எனினும், தமதுரையின் பெருமையையும் நன்மையையும் தாமே யறியமாட்டாத சிற்றுயிர்க்கு அவற்றை உணர்த்தி உய்விக்கக் கருதும் கருணைகாரணமாக, திருவருள் பெற்ற பெரியோர் தமது உண்மை நிலையையும் தம் அருள்மொழியின் இயல்பை

யும் விளக்குவான் புகன்ற அருட்பாடல்கள், தற்சிறப்புப்பாயிரமாகக் கருதப்பட்டாலும், தற்புகழ்ச்சிப் பாடல்களென்று கொள்ளப்படா. திருஞானசம்பந்தர் முதலிய அத்தகைய சான்றோரது திருக்கடைக்காப்புச் செய்யுட்கள், மேற்கூறிய சூத்திரத்திற்குப் புறனடையாகும்.

முதற்சங்கத் திருந்தாருள், முரிஞ்சியூர் முடிநாகராயரையும் நிதியின்கிழவனையும் சேர்த்திருப்பது சில ஐயப்பாடுகளை விளைத்தல்கூடும். முடிநாகர் ஆயரா? முடிநாக ராயரா? என்பது ஓர் ஐயம். 'ராயர்' என்றசொல் தமிழ்ச்சொல்லென்று தோற்றவில்லை. முடிநாகராயர் ஒருவர் பாரதகாலத்தே பாண்டவருக்குச் சோறளித்த உதியஞ்சேரலாதனைப் பாடியதாகப் புறநானூற்றுள் காணப்படுகின்றது. அவர் தலைச்சங்க காலத்த ரல்லரென்பது தெளிவு. நிதியின் கிழவன் மனிதனா? இயக்கனாகிய வடதிசைப் பாலகனா? என்பது ஓர் ஐயப்பாடு. அவன் தமிழ்ப்பெருமக்களுள் ஒருவனாக இருந்திருத்தல் கூடுமென்பதே சரித்திரத்திற்குப் பொருத்தமானது. கடவுளர் ஆதரவில் முதற் சங்கம் நிகழ்ந்திருக்கலாம். ஆதலின் அவரும் சங்கமிருந்தாராகக் கூறியது ஓர்வகை உயர்வுநவிற்சியே. ஆசிரியர் தொல்காப்பியனார் முதற்சங்கத்தைச் சார்ந்தாரென்று கொள்ள இடமில்லை. இடைச்சங்கமிருந்தாருள் இவரும், இவருடைய ஆசிரியராகிய அகத்தியரோடு கூறப்பட்டுள்ளார். குறுமுனிவர் பெருந்தவத்தினராதலின், அவர் நீண்ட ஆயுளுடையர்போலும். வெள்ளூர்க்காப்பியன் என்ற புலவரும் இடைச்சங்கத்தினரே. காப்பியன் என்பது தமிழ்நாட்டிலுள்ள ஓர் குடிப்பெயரென்று தோன்றுகிறது. துவரை யென்றது தமிழ்நாட்டின் ஓர் பகுதியேயன்றி கண்ணன் நகரன்றென்பது, சங்க நூல் வல்லார் நன்குணர்வர். மாபுராணம், பூதபுராணம் என்ற சொற்றொடர்கள், வடமொழித் தொடர்களாகத் தோன்றுகின்றன. புதுமைபற்றி வடமொழிப் பெயர்களைத் தமிழ்நூற் கிட்டு வழங்கும் வழக்கம் இக்காலத்து முதன்முதல் தோன்றியிருத்தல்கூடும். ஆனால், கடைச்சங்கத்தார் காலத்திற்கூட, அவ்வழக்கம் இருந்ததாகச் செவ்வியின் விளங்காமையினாலும், புராணம்

என்ற சொல், இடைச்சங்க காலத்திற்கு முன்னுள்ள வடநூல்களுட் காணப்படுதல் அரிதாகலானும், மா, பூதம், புராணம் என்ற சொற்களைத் தமிழ்ச்சொற்களெனக் கோடற்கு இடமுண்டு. 'மா' என்ற சொல் தமிழிலே பெருமையுணர்த்தும் சாரியையாக இன்றும் வழங்குகின்றது. 'பூதம்' என்ற சொல்லும் 'சேந்தம் பூதனார்' என்ற இடத்தில் தமிழ்ச்சொல்லாகவே அமைந்துள்ளது. புராணம் என்பதும் அவ்வாறே கோடற்பாலது. கடைச்சங்கத்தார் காலத்து ஆரியர் கலப்பு மிகுதிப்பட்டது தெளிவு. இவற்றைப்பற்றிய நுணுகிய ஆராய்ச்சி பின் செய்யப்படும்.

இனி, 'களவியல்' என்ற பெயர்க் காரணம், உரையாசிரியரால், மிக்க நயமுற மொழியப்பெற்றுள்ளது. இந்நூற்பயன் வீடுபேறென்று குறிக்கப்பட்டது., இணைவிழைச்சி கருதிச் செல்வானைப் பையப் பைய வீடுபேற்றிற் குரிய உயர்நெறியிற் செலுத்துந் தன்மை இந்நூற் கிருப்பதாகக் கருதி உரையாசிரியர் அவ்வாறு மொழிந்தனர். அகப்பொருளிலக்கண இலக்கியங்கட்குச் சிற்றின்பச் சார்பாகவும் பேரின்பச் சார்பாகவும் பொருள் கொள்ளுதல் சான்றோர் மரபாமாதலின், முன்னைய பொருளைக் குறிப்பதுபோற் றோன்றிப் பின்னைய பொருளைக் குறிப்பான் வலியுறுத்துதல் காரணமாக, உரை ஆசிரியர் இந்நூலை வீடு பயக்கும் நூலென்றனர்போலும். எனினும், சிற்றறிவும் சிறு தொழிலுமுடைய எம்போலியர்க்கு இது, சிறந்த உலக இன்பவாழ்க்கையி னிலக்கணத்தைத் தெளிவுபெற அறிவுறுத்துவதாகவே தெரிகின்றது. பெருநூல்கள் கற்பார தறிவிற் கேற்றவண்ணம் பொருளமைதி யுள்ளவாகத் தோற்றுதல் இயல்பே.

களவொழுக்கத்திற்கு அடிப்படையாய அன்பினை திலக்கணம், இவ்வாசிரியர் தூய்மை செய்துரைத்த வண்ணம் வேறெவரும் கூறிற்றிலர். பண்டைத் தமிழரது ஆராய்ச்சி நுண்முறைச் சிறப்பை இது தெள்ளிதிற் புலப்படுத்துகின்றது. அன்புபற்றி யெழுஞ்செயல்கள் வேறு காரணம்பற்றியும் நிகழ்தல் கூடுமாத

வின், செயல்கள் மாத்திரையின் வைத்து அன்பே அவற்றிற்குக் காரணமென்று விரைந்துதுணிதல் தவறு. அவற்றிற்கு அன்பொழிந்த வேறு காரணங்களில்லையென்று உசாவி ஆய்ந்து தெளிந்த பின்னர்த்தான், அன்புண்டென்று ஊகித்தலே பிழைபடாதாகுமென்று, எடுத்துக்காட்டுகளால் இனிது விளக்கிய திறமை இவ்வுரை யியற்றியவர்க்கே யுரியது. அன்பு வடிவிலதாகலின், அதுபற்றிய செயலின் வைத்தே உணரப்படுமென்று விளக்குமிடத்து, பொருள்கள் பிழம்புணர்த்தப் படுவன என்றும், உண்மை யுணர்த்தப்படுவன என்றும் பிரித்துக் காட்டிய தொல்லாசிரியன்முறை ஆங்கில நூலார், abstract அறிவாற் பிரித்துணரப்படுவன என்றும், Concrete காட்சிப்புலனுவன என்றும் கூறு முறைமையினை நினைவூட்டுகின்றது. அன்புடைமை குறிக்கும் செயல்களும் போலியன்பு காரணமாக நிகழற்பாலன அல்ல. நிகழினும் அவை நிலைபேறுடையன அல்ல. அச்செயல்கள் உடன் சாதல், உடன் துன்புறுதல், பொருள் மிகக் கொடுத்தல், இன்சொற் கூறல், தலைக்கூடல் விருப்பம், பிரிதற்பால என்று குறிக்கப்பட்ட அருஞ்செயல்கள், அன்பில்வழி மிக்கு நிகழற்பாலன அல்ல. நிகழினும் அவை நிலைபேறுடையனவல்ல.

'என்மனார் புலவர்' என்று இறையனார் கூறியதற்குக் காரணம் கற்பித்துமொழிந்த நயம், இவ்வாசிரியரது வழக்கிடு திறனை அங்கை நெல்லிபோற் காட்டுவதாகும். இனி அடுத்த சூத்திரப் பொருள் ஆய்தற்பாலது. (தொடரும்)

---

# தம்பிரான்றோழர்

[பண்டிதர் இ.மு. சுப்பிரமணிய பிள்ளை]

திருக்கயிலாமலையிலே அருட்கடலாகிய கறைமிடற்றண்ணல் மலைமகளாகிய எம்பிராட்டி தம் இடப்பாகத்தே மேவ பேரொளி உடைய பெரிய இருக்கையின்மேல் எழுந்தருளியிருந்துகொண்டு அடியவர் வேண்டுவனவெல்லாம் தந்தருள்வார். அவர் எழுந்தருளியிருக்கும் திருக்கோவிலின் முன்னே நந்திப்பிரான்

பிரம்புப்படையைக் கையிலேந்தி இறைவனார் திருவுருக்காண வந்திருக்கும் இந்திரன் மால் அயன் முதலாம் எண்ணில் விண்ணவர் கூட்டத்தை வீசி ஒழுங்குபெற நிறுத்தி நின்றருள்வார். அடியார்களெல்லாம் ஐயனது கண்கொள்ளாக் காட்சியைக் கண்டு கண்டு என்புருக உளங்கரைய அன்புமேலீட்டால் 'அரகர' வென்று ஆரவாரம் செய்து ஆடிப்பாடி, உச்சிமேற் கரங் குவித்துப் பணிந்து நிற்பர். அம்மலையோ வெள்ளிமயமாகப் பல்முடிகளோடும் விளங்கிக்கொண்டிருக்கும். இம்மலையின் அடிவாரத்திலே சிவனடிக்கு உண்மையன்பராகிய உபமன்னிய மாமுனி பல முனிவர்கள் சூழ இருந்தருளினார். அவர் புலிக்கால் முனிவருக்குத் திருமகனார். சிதம்பரத்திலே ஓர்நாள் அவர் பாலை விரும்பி அழ எம்பிரான் அவர் உண்ணும்படி திருப்பாற்கடலையே வருவித்துத் தந்தார்.

துவாரகைக்கு இறைவனாகிய கண்ணன் முடிமேல் தமது அடியைவைத்து அவருக்கு ஞானாசிரியராய் அமர்ந்த பெருமையை உடையவர் இவர். இவர் பல முனிவர்கள் தம்மைச் சூழ அங்கிருக்கும் பொழுது, அவர்களுக்குமுன்னால் ஆயிரம் ஞாயிறு தோன்றினாற்போல் ஓர் ஒளி தோன்றிற்று. அங்கிருந்தாரெல்லாம் அதுகண்டு வியப்படைந்தனர். உபமன்னியரோ உடனே யெழுந்து கீழ்வீழ்ந்து இறைஞ்சிக் கைகள் கூப்பித் தொழுது நின்றனர். அம்முனிவர்கள் அவரை நோக்கி, "பெரியோய், தாம் சிவபிரான் அடிமலரே யல்லாமல் பிறிதொருவரையும் வணங்காத பெருந்தகைமையினர் அன்றே. இதனை வணங்கிய தேது?" எனத் தமது மனத்து நிகழ்ந்த ஐயம் நீங்க வினவினர். உடனே அப்பெரியார், "எம்பிரான் றோழர் எழுந்தருளி வருகின்றார். அவர் நாம் தொழும் தகைமையர்" என்றனர். அதுகேட்ட அந்தணர் அதனை வணங்கி, "இப்பேரொளி உடையார் வரலாறு கேட்க விரும்புகின்றோம். உரைசெய்தருள்க" என்றுவேண்டினர். உபமன்னிய மாமுனிவர் அவர்களுக்கு அவ் வரலாற்றைப் பேரன்போடும் சொல்லத் தொடங்கினார்.

"இக்கயிலையிலே மலர்கள் பல எடுத்து வந்து அவைகளைத் தொடுத்து எம்பிரானுக்கு அணியாக்கும் சிறந்த தொண்டினைச்

செய்துவரும் பெருமையையுடைய அடியவர் ஒருவர். அவர் பெயர் சுந்தரர். அவருக்குத் திருநீறு தாங்கும் பணியுமுண்டு. ஓர்கால் தேவர்களும் அசுரர்களும் கூடி அமுதம் பெறுமாறு மந்தர மலையை மத்தாகவும் வாசுகி என்ற பாம்பைக் கடைகயிறாகவும் கொண்டு பாற்கடலைக்கடைந்தனராக, அவணின்றும் ஆலாலநஞ்சு தோன்றி யாவரையும் அழிக்கத்தொடங்கிற்று. தேவர்தலைவனும், மலரோனும், திருமாலும் அதுகண்டு அஞ்சினராகி இரிந்தோடி இடைவிடாது பரமசிவனை நோக்கித் தவங்கிடந்தனர். அவர் துன்பங் கண்டிரங்கிய எம்பிரானார் விடைமீ தூர்ந்து தோன்றி, ‘அஞ்சல்’ என்றருளி அருகுநின்ற சுந்தரரை நஞ்சைக் கொணருமாறு ஏவினர். அவ் வாணைவழிச் சென்ற சுந்தரரோ உலகம் யாவையும் அழிப்பல் என்று எழுந்துவந்த நஞ்சினைத் தம் கையில் வந்துறப் பணித்தனர். அந் நஞ்சும் அவர் அங்கையில் கடுகளவாகி வந்திருந்தது. அதைக் கொண்டுபோய் சுந்தரனார் எம்பிரானுக்குத் தர அவர் கவலையுறும்போது காக்கும் கடவுள் தாமே யென்பதை உலகினர் உணர்ந்து உய்தற்காக அக் கடுவினையுண்டு கறுத்த கழுத்தினர் ஆனார். இவ்வகையாக ஆலாலத்தைக் கொண்டுவந்து ஐயனுக்கு அளித்த பெற்றியால் நம் சுந்தரனார் அதுமுதல் ஆலாலசுந்தரர் என அழைக்கப்பெற்றார். அச்செயலால் விண்ணவர் பலரும் பிழைத்தனர்.

ஒருநாள் நம் ஆலாலசுந்தரர் மலர் கொய்திடப் பூஞ்சோலை சென்றனர். அங்கே அவர் செல்லுமுன்னரே எம்பிராட்டியாகிய மலைமகட்குப் பூவெடுத்தற்காகப் போந்திருந்த சேடியரிருவர், அனிந்திதை கமலினி என்பவர், நிற்கக் கண்டனர். அப்பொழுது அவரை அம்மங்கையரும் பார்த்தனர். உடன் தம்முள் அவர்கள் மன்றல் எண்ணினர். ஆயினும் அவர் ஒருவர் மீது ஒருவர் சென்ற உள்ளத்தைத் திருப்பிக்கொண்டு தாம் வந்த வினைமுடித்துத் திரும்பினர். சுந்தரர் எம்பிரான் திருமுன் எய்தலும் யாவருள்ளத்தும் கலந்துறையும் அவ்வருட்கடல் அவரை நோக்கி, “அப்பா நீ மாதர்மேல் மனம் வைத்தனை. ஆதலின் தென்னாட்டிற் பிறந்து இப்பெண்களை மணந்திருந்துவா” என்று ஆணையிட்டார். அதுகேட்ட அடியவர் அகமிகக் கலங்கி, கைக

னைச் சிரமேற் குவித்துச் சேவடிதொழுது, "எம்பெருமானே உம்முடைய திருவடிநீங்கத் தீவினை செய்தேன். இச்சிறுதொழிலாளன் சீர்கெட்டு மயங்கும்போது எழுந்தருளிவந்து அடியேனைத் தடுத்தாண்டு அருள்செய்யும்" என்று வேண்டிநின்றார். நெற்றியங்கண்ணனார் அதற்கு 'ஓம்' என்று இசைந்தருளினார். சுந்தரனார், தென்னாட்டிற் றோன்றி இரு மங்கையரையும் மணந்திருந்து இப்போது எம்பிரான் அடித்தொண்டு செய்ய எழுந்தருளிவருகின்றார்."

இவ்வாறு உபமன்னிய மாமுனிவர் உரைத்தருள முனிவர் பலரும் அவர் பொன்னடி பணிந்துபோற்றி, "ஐயனே அவர் வரலாறு முழுதும்கேட்கப் பேராவல் உடையேம், சொல்லியருளுக" என்று தொழ, அப்பெரியார் அதனைச் சொல்லியருளினார். அது பின்வருமாறு.

வளம்மிகுந்த திருமுனைப்பாடி நாட்டிலே சிறந்து விளங்கியது திருநாவலூர். அதிலே சிவபெருமானுக்கு வழிவழி அடிமைசெய்யும் மாட்சிபெறற அந்தணர் குலத்திலே ஒழுக்கமிக்கவர் ஒருவர் சடையனார் என்பவர். அவர் கற்பித்தவற்றைக் கடைப்பிடித் தொழுகும் கற்புமிக்கார் இசைஞானியார். அவ்வம்மையார் திருமணி வயிற்றிலே தோன்றினார் நம் சுந்தரனார். அவருக்குத் தந்தையும் தாயும் நம்பியாரூரரெனப் பெயரிட்டு அணிபல அணிந்து அன்பொடும் வளர்த்து வந்தனர். நம்பியாரூரர் சிறுதேருருட்டும் பருவமடைந்தனர். அக்காலத்திலே ஓர்நாள் இத்திருமகனார் தெருவில் தேருருட்டிவிளையாடி நிற்பதை அந்நாட்டுக் கரசராகிய நரசிங்கமுனையர் கண்டு அன்புமிகக் கொண்டு அவர் இருமுது குரவர்பாற் சென்று மிகுந்த நண்போடும் அவரைத் தமக்கு வளர்ப்புப் பிள்ளையாகத் தரவேண்டிப் பெற்று அம்மகனாரோடும் அரண்மனையை யடைந்து அவரை அரசிளங் குமரர்க் கேற்பச் சிறப்புப் பலசெய்து வளர்த்து வந்தனர். அங்கே ஆரூரர் அறிவு நூல் பலவும் ஆவலோடும் ஓதி உணர்ந்து மணப்பருவமுற்றார். அதுகண்ட சடையனார் சைவ அந்தணர் குலத்துள் புத்தூரிலே சடங்கவி மறையோர் என்

பவரிடத்துச் சில பெரியோரை யனுப்பி அவர் மகளாரைத் தம் மகனாருக்கு மணம் பேசுவித்தார். அவரும் இசைந்தனராக மன மகிழ்ச்சியோடும் மணநாள் குறிக்கப்பட்டது. புத்தூரிலே மணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்து முடிக்கப்பட்டன. மணநாளுக்கு முன்னாள் மாப்பிள்ளைக்குக் காப்புக் கட்டப் பட்டது. மணநாளன்று காலையிலே நம்பியாரூரர் விதிப்படி குளித்துப் பல கலன்களையும் பூண்டு மணக்கோலங் கொண்டார். பின் அவர் ஓர்பெரிய குதிரையிலே ஏறிக்கொண்டு புத்தூருக்கு வந்து அவ்வூர் வீதியிலே புகுந்து சென்றார். அவ்வூரிலுள்ளார் யாவரும் அங்கங்கே கூடிக்கூடி அவரைக் காண நின்றனர். பலர் பாடி நின்றனர். பலர் ஆடி நின்றனர். சிலர் இக் காளையைக் காணக் கண்கள் எண்ணில்லாதன வேண்டுமென்பார். இவ்வாறு அவ்வூர்ப் பெண்கள் யாவரும் புகழ்ந்து காண நம்பியாரூரர் சடங்கவியார் வாசலிலே போடப்பட்டிருந்த திருமணப் பந்தலுக்கு முன்புசென்று, சங்கமொலிக்கக் குதிரையினின்றும் இறங்கி அப்பந்தலிலே தமக்கிட்டிருந்த பேரிருக்கையிற்சென்றிருந்தார். அப்பொழுது கயிலையிலே அவரைத் தடுத்தாட்கொள்வதாக வாக்களித்த எம்பெருமான் தம்சொல்லை நிறைவேற்றத் திருவுளங்கொண்டார். அவர் நெற்றியில் திருநீறு விளங்க, நரைத்த முடி அங்குமிங்கும் அசைய, மார்பில் முப்புரி நூலோடும் தோளின்மேல் அணிந்த வெண்ணிறமான மேலாடையோடும் கையிற் குடையோடும் மற்றொரு கையில் மூங்கிற்றடிகொண்டு அதனைக்கீழே ஊன்றிஊன்றிக் கிழ அந்தண உருவோடும் தள்ளாடித் தள்ளாடிப் புததூரை நோக்கி நடந்து வந்தார். அவரைக்கண்டாரெல்லாம் "இவ்வுரு அழகெல்லாம் திரண்டுவந்ததோர் உருவோ? இவருக்குமேல் வயதுமுதிர்ந்தோர் இருப்பரோ? இவர்தான் உண்மையான நெறியாகிய வைதிக சைவத்தை உலகில் முதல் முதலாக நிலைபெறச் செய்தவரோ?" என ஐயமுற்றனர். அம்முதியார் அப்புத்தூரிலே புகுந்து சடங்கவியார் வீட்டின்முன் வந்து சிறந்த மறைமுறை திறம்பாது மணத்தொழில் தொடங்கும் பந்தலிலே கூடியிருந்த பெரியோர் முன்னிலையிலே நம்பியாரூரருக்கு எதிராக வந்துநின்று, "யாவ

ரும் நான் சொல்லப்போகிற இச்செய்தியைக் கேளுங்கள்” என்றார். அதுகேட்ட மறையோரும் நம்பியும் அவரைநோக்கி, “ஐயரே உமது வரவு நல்வரவாகுக. நீவிர் இவண் போந்தது எங்கள் தவமே. நீர் சொல்லவேண்டியதைச் சொல்லியருளும்” என்றனர். எம்பிரானும், “எனக்கும் உனக்கும் பண்டுதொட்டு ஓர் பெருவழக்குண்டு. அதனை முடித்துவிட்டு உன் மணவினையை முயலுக” என்றார். அது கேட்ட நம்பி, “அவ்விதமாயின் அவ்வழக்கினை முடித்தாலல்லாமல் யான் வதுவை செய்யேன். அதனைச் சொல்லியருள்க” என்றார். அப்பொழுது அயனொடு மாலும் அனைத்துயிர் பலவும் தமக்கு அடிமையாகக்கொண்ட பெம்மான், “பெரியோரே கேளுங்கள். திருநாவலூரனாகிய இந்நம்பியாரூரன் என்னடியான் இதுவே நான்சொல்வது” என்றருளினார். உடனே கேட்டவர் யாவரும் ‘இவன் யாது நினைந்தான்’ என்று வெகுண்டனர். சிலர் சிரித்தனர். சிலர் வெளிச்சென்றனர். மணமகனாரோ “இவ்வந்தணன் மொழி மிக நன்று நன்று” என்று சிரித்தார். இதுகண்ட ஐயரோ மிக வெகுண்டாற்போற் காட்டி தம்மேலாடையை இழுத்துப்போட்டு முன்சென்று, “இதோ பார்த்தாயா உன் பாட்டன் தந்த ஆளோலை. ஏட! இதனை நீ இகழ்ந்ததென்’ என்றார். குற்றமற்ற குலத்திற் பிறந்த வள்ளலாகிய நம்பியாரூரர் இறைவனாரை நோக்கி அன்பால் மன நெகிழச் சிரிப்பு நீங்கி “குற்றமற்ற அந்தணர்கள் வேறோர் அந்தணர்க்கு அடிமையாதலை இதுவரை கேட்டோமில்லை. இன்று இவர் பேசக்கேட்டோம். இம்மறையோன் பித்தனோ” என்றார். அது கேட்ட சிவனார், “யான்பித்தனே யாயினும் ஆகுக. அன்றிப் பேயனே ஆயினும் ஆகுக. நீ இன்னும் எத்தனை தீங்குகள் சொன்னாலும் நான் அவற்றால் நாணேன். என்னை நீ சிறிதும் அறிந்திலை. விந்தை பேசேல். பணி செய்தலே உன் கடன்” என்றார்.

நம்பியாரூரர் தம்முன் நிற்கும் கிழவனார் உருவைக்காணக் காண அன்புமீதூர அத்துடனே அவர்சொல்லைக் கேட்கக் கேட்கச் சினம் பொங்கி எழ அவரை நோக்கி, “பித்தரே! அவ்வாளோலைகாட்டும். அதன் உண்மையறிவேன்” என்றனர். அவ்

அந்தணரோ, "நீ ஓலை காணும் தன்மை யுடையாயோ? அதனை இப்பெரியார்முன் காட்டப் பணிசெயற்பாலை" என்றனர். அச்சொல் செவியேறிய அளவில் மிகவெகுண்டு திருநாவலூரார் அவ்வோலையைப் பறித்தற்காக அவரை நோக்கி ஓடி, வலிந்து பின்தொடரலுற்றார். கிழவனாரோ அப்பந்தலில் அங்குமிங்கும் ஓடினார். நம்பியோ விரைந்து சென்று மாலும் அயனும் காணற்கரிய அம்மதி சூடியைப்பற்றி அவர்கையிலிருந்த ஆளோலையைப் பிடுங்கி "அந்தணர் அடிமையாதல் என்னமுறை?" என்று கிழித் தெறிந்தனர். தலைவனார் அவரைப் பற்றிக்கொண்டு "முறையோ, முறையோ" என்று கூவினார். அங்கிருந்தார் அவ்விருவரையும் விலக்கி, "ஐயரே! உலகிலில்லாத வழக்குக்கொண்டு பிணங்கி நின்றீர். உமக்கு எந்த ஊர் சொல்லும் என்றனர். உடனே ஐயா, "இப்பொழுது இங்கேதானிருக்கிறேன் என்னுடைய இருப்பிடமோ வெகு தூரமில்லை. இந்த வெண்ணெய்நல்லூரே. அஃதிருக்கட்டும், முரட்டுத்தனமாகத் தடித்தனம் செய்து என் கையிலிருந்த ஆவணத்தை வலியப் பிடுங்கிக் கிழித்தெறிந்து தான் அடிமை என்பதைத் தானே நிலைநிறுத்தினான் இவன்" என்றருளினார். நம்பியாரூரார் அவரை நோக்கி "இவர் பழைய மன்றாடிபோலும்? பித்தரே! உமக்குத் திருவெண்ணெய் நல்லூரானால் இத்தகுதியில் வழக்கைப் பேசுதற்காக அங்கே போவோம் வாரும்" என்றழைத்தனர். அதனைச் செவியுற்ற அந்தணர், "நன்று நன்று செல்லுவோம். அங்கே மூல ஓலைகாட்டி நீ அடிமையாதல் சாதிப்பேன்" என்று தம் கைத்தண்டை ஊன்றி ஊன்றி விரைந்து நடந்தனர். அப்போது காந்தத்தால் இழுக்கப்பெறும் இரும்புபோல நம்பியாரூரார் அவர் பின் சென்றார். அவ்வழக்கின் முடிவை யறிய அங்குக் குழுமியிருந்த சுற்றத்தார் பலரும் அவர் பின் சென்றனர். அனைவரும் அவ்வெண்ணெய் நல்லூர் சென்று ஐவர்பேரவை அடைந்தனர். அவ்வவையாரை நோக்கிக் கிழவனார், "பெரியோரே, இந்நம்பியாரூரன் எனக்கு அடிமையென்று நான் காட்டிய ஓலையைக் கிழித்தெறிந்து உங்கள் முன் போந்தான். இது என் முறைப்பாடு" என்று தெரிவித்தார்.

அவ் வவைத்தலைவராகிய அந்தணர் அவரை நோக்கி, "ஐயா, இவ்வுலகில் மறையவர் அடிமை யாதலில்லையே, நீர் என் சொன்னீர்?" என்று கேட்டார். அதற்குக் கிழவர், "பெரியீர்! நான் கொண்டுவந்தது பொய் வழக்கன்று; மெய் வழக்கே, வழக்கென்று வந்தமையால் நீவிர் உசாவி யறிந்து முடிவு செய்யுங்கள் இவன் கிழித்தெறிந்த ஓலை இவனுடைய பாட்டன் எழுதித் தந்ததாம்" என்று மறுமொழி தந்தார். உடனே அவைத்தலைவர் உளமிசைந்து; "உன் பாட்டன் எழுதித் தந்த ஓலையைக் காட்டினானால் அதனைப் பிடுங்கிக் கிழித்தெறிவது வெற்றியாமோ! இக்கிழவனார் தம் வழக்கைப் பொருந்தச்சொன்னார். ஆரூரர் எண்ணம் என்ன?" என்று கேட்டார் அதற்கு, நம்பியாரூரர் "பல கலைகளுமு வல்ல பண்புடையீர்! நான் ஆதிசைவனென்றறிவீர். என்னை இவர் தமக்கடிமை யென்று சாதிக்கின்றார். இது சிறியோன் மனத்தால் உணர்தற் கெட்டா மாயையா யுள்ளது. ஆதலின் நான் ஒன்றும் சொல்வதற்கிலலை" எனறனர். உடனே ஐவரும் சிவனாரை நோக்கி, "ஐயரே இவரை நீர் அடிமை யென்ற கடுஞ்சொல்லை எம்முன்பு நிலைநிறுத்தவேண்டும். விதி, ஓலை, சான்று இமமூன்றிலொன்று கொண்டு சாதியும்' என்றனர். கிழவர் அவர்களைப் பார்த்து பெரியோர்களே! அவன் முன் வெகுண்டு கிழித்த ஓலை படியோலை. மூல ஓலையை உங்கள் முன் காட்டுவதற்காக மறைத்து வைத்திருக்கின்றேன்" என்றுரைத்தார். "அங்ஙனமாயின் அதனைக்காட்டுக" என்று அவர்கள் கூற, ஐயர், "இவன் மீடடும் தீங்கியற்றாது காக்க வல்லீராகில் காட்டுவேன்" என்றிசைத்தனர். அவர் அவ்வாறே ஆணையிட தலைவனார் மூல ஓலையை அவர்களுக்குக் காட்டினார். ஐவர் ஏவலால் கரணத்தான் அதனைப் பணிவொடு வாங்கி அனைவரும் கேட்கப் படித்தனன். அவ்வோலையில், "திருநாவலூரில் மறை வல்ல ஆதிசைவனாகிய நம்பியாரூரன் செயல், திருவெண்ணெய் நல்லூர் முனிவராகிய பித்தனார்க்கு* நானும் என் மரபினரும் வழிவழி அடிமை செய்தற்கு உள்ளும்புறமும் இசைய இவ்வோலை எழுதித் தந்தேன். இதற்கு இவை என் கையெழுத்து:" என்று எழுதி யிருந்தது. அவ்வோலையிலே மேலெழுத்திட்ட

பெரியார் யாவரும் தம் எழுத்தை நோக்கி, "இவை எம்மதே" என்றிசைந்தனர். அப்பொழுது ஐவர், நம்பியை நோக்கி, "ஐயா இது உம்முடைய பேரனார் எழுத்துத்தானா? பார்த்துச் சொல்லும்" என்றார்கள். அதுகேட்ட ஐயரோ, "இத்தனைக்கப்புறமும் இவனா ஆவணம் காண்பான்? இவன் பாட்டன் எழுதிய வேறொரு கைச்சாத் தழைத்து அதனை இவ்வாளோலையோடும் ஒப்பு நோக்கி நீவிர் அறிந்த முடிவைச் சொல்லுங்கள்" என்று பகர்ந்தனர். அவ்வாறே, ஐவர் பேரவையார் காவலோடும் அவர் பாட்டனார் எழுதிய வேறு ஓலை வரவழைத்து ஆவணத்தோடும் ஒப்பு நோக்கி, "இரண்டெழுத்தும் ஒத்திருந்தன. இனி வேறு செயல் இல்லை, நம்பியாரூரரே! நீர் இம்முனிவனார்க்குத் தோற்றீர். இனி இவர்க்கு அடிமை செய்தலே உம் கடன்," என்று முடிவிசைத்தனர். நம்பியாரூரரும், "இதுவே விதிமுறையாகில் யான் இனி அடிமையில்லை என்னலாமோ" என்று இசைந்தார். அப்பொழுது ஐவரும் சிவனாரை நோக்கி, "முனிவரே நீர் எம்மிடம் காட்டிய ஓலையிலே உமக்கு இவ்வூர் என்று செய்தி காணப்படுகிறது. இங்கே உமக்குரிய வீடு வாசல் முதலிய எமக்குக் காட்டும்" என்று வினவினர். ஒப்பற்ற வழக்கிலே வென்ற பித்தனார், "ஒருவரும் என்னை இன்றொன்று உணரீராகில் என்பின் வம்மின்; எம் மிடம் காட்டுதும்" என்றறைந்து யாவரும் தம்மைத் தொடர்ந்துவரச் சென்று அவ்வூரிலுள்ள தம் கோவிலாகிய திருவருட்டுறையுட் புகுந்து மறைந்தனர். பலரும் அவரைக்காணாது மயங்கினர். நம்பியோ நில்லாது உட்சென்று விருப்பினோடும் தொடர்ந்து "தலைவரே" என அழைப்ப எம்பிரான் விண்ணிலே அம்மையாரோடும் விடைமேற்கொண்டு தோன்றி அவரை நோக்கி, "நீ முன்பே நம் தொண்டன். பெண்டிரை மணக்க விரும்பியதால் இங்ஙனே இம்மண்ணிற் பிறக்க எழுந்த நம் ஏவல் வழித்தோன்றினாய். துன்பம் தரும் இவ்வுலக வாழ்வு உன்னைப்பற்றாது நாமே வலியவந்து தடுத்தாண்டோம்," என்று அருள்மொழி தந்தார். அதுகேட்ட நம்பி உடல் புளகிக்க கைகள் தலைமீது ஏற கண்ணில் மகிழ்ச்சியால் நீர் பெருக "அடியேனை வலியவந்து ஆட்கொண்டது எம்பிரான் செயலோ?" என்றார்.

அப்பொழுது விண்ணவர் பூமாரி பொழிந்தனர். மண்ணவர் மகிழ்ச்சிகொண்டனர். எம்பிரான் அடியவரை நோக்கி, "நீ எம்மிடம் வன்மை பேசினமையால் உனக்கு வன்றொண்டன் என்று பேர் தந்தோம். நமக்கு மகிழ்ச்சி தருவது அடியார் பாடலே ஆதலால் இம்மண்ணில் நீ நமக்குத் தமிழ்மாலைபாடிச் சூட்டுக" என்றார். நம்பியாரூரரும் இறைவன் முன்பு கரங் குவித்து நின்று, "மாலும் நான்முகனும் காணா மலரடிமாண்பை ஏழையேன் எங்ஙனம் அறிந்து பாடுகேன. அடியேனை ஆட்கொள்ளற்கா அந்தணனாகி வந்தென்முன் நின்றபோதுகூட உம்மையறியாத சிறுமையேன் யான்" என்று மொழிந்தனர். அருள் சுரந்தாண்ட ஐயரும் நம்பியைப் பார்த்து, "அப்பனே முன்பு எம்மைப் பித்தனென்றாயன்றோ? அதனையே முதலாகக்கொண்டு பாடுக" என்று ஆணைதந்தார். அடியவரும் "பித்தா பிறைசூடி" என்றையனை நோக்கி உலகம் உய்யப் பதிகம் பாடியருளினார்.

(தொடரும்)

---

திருக்கைலாயபரம்பரைத் தருமபுர ஆதீனத்தில்
ஞான சற்குருபர தேசிகோத்தமரா
யெழுந்தருளியிருந்த
ஸ்ரீலஸ்ரீ
ஞானசம்பந்ததேசிக மகாசந்நிதானம்
திருவாய்மலர்ந்தருளிய

# முத்தி நிச்சயம்

சீர்மேவு மாரூர்ச் சிதம்பர நாதனெனும்
பேர்மேவு ஞானப் பிரகாசன்—றார்மேவு
சேவடிகள் போற்றித் திகழ்முத்தி நிச்சயமொன்
றுவ தெனமொழிவேன் யான். (க)

சந்தான நற்குரவர் தக்கோர் பிறர்சமய
நந்தாது தோற்றுவித்த நற்குரவர்—முந்தவே
யெந்தமுத்தி சித்தாந்த மென்றார்கள் சைவத்தி
லந்தமுத்தி நிச்சயிப்பேம் யாம். (உ)

அந்நிலையா னும்பிறவு மான்மாநந் தத்திறமா
மெந்நிலையே சித்திக்கு மென்றியம்பி—னுன்னிலைதா
னில்வலதென வேநீ யியம்பு முளவைமுதற்
சொல்லுமது கேளாய் துணிந்து. (௩)

ஈசன் றனதுசத்தி யின்பருந்து மீசனு
ளாசறத்தன் சத்தியின் பான்மாவு—நேச
முடனருந்து மென்னின்முத்தி யொவ்வாது பாசம்
விடவதுவாய் நிற்பதுவா மே. (௪)

சிற்றன்பம் பேரின்பஞ் சீவகுண மென்றனைநீ
புற்றின் பிரண்டு முணர்ந்திலையோ—சிற்றின்ப
நாடிற் கருமபல நாதனுறுப் பேரின்ப
நீடிப் படிகம்போ னீ. (௫)

பெறுவானும் பேறுநான் பெம்மானுள் ளுண்டே
லறிவாயோ வாநந்த மன்றி—யறிவேனு
ளுனந்தங் காட்டி யகத்திருப்ப ளுகிலனு
மானந்தான் கண்டறியாய் மற்று. (௬)

வேதா கமத்தின் விதித்தமுத்தி தானன்றி
நீதானே யின்பமென்ற னீதியோ—பேதாய்
பெறுவானீ யானந்தம் பேறென் றுரைத்த
தறியா திருந்தனைநீ யாம். (௭)

உன்னுருவங் கண்டிருப்ப தேகெட்டேன் முத்திசிவன்
றன்னுருவங் கண்டிருக்கத் தக்கதே—முன்னறிஞ
ரோது சிவன்றேற்ற மொன்றுமே காண்பரெனும்
போத மறந்தனையிப் போது. (௮)

ஈசனையே காண வெனத்தவமுன் செய்ததெலா
மோசமாய் வந்து முடிந்ததே—பாச
வினையகன்ற போதும் விமலனை நின்று
டனையறியா மூடர்க்குத் தான். (௯)

தானன்றி நிற்கவெழுஞ் சச்சிதா னந்தனை நீ
யானென் குணமென் னிடும்பென்றோ—ஊனநீ
ஞானகுணம் பெற்றின்று நாணு னெனநவிலு
மீனகுணம் போனதிலை யே. (௰)

தோன்றுபர மாநந்தச் சோதியன்றி நின்னறிவிற்
றோன்றுசுக முண்டென்றாய் சுத்தப்பொய்—தோன்றுமின்ப
மீசனுயிரறிவ தீதன்றி வேறுண்டேற்
பாசமலா தேதுண்டு பார். (௰க)

அண்ணலைப்போ லாநந்த மான்மாவிற் குண்டாகி
லெண்ணில் பிறப்பிறப்பை யெய்துமோ—கண்ணிருளை
யோட்டாதோ வாதவனுக் கொத்தவொளி யுண்டாகிற்
கேட்டாயோ கேட்டிலையேற் கேள். (௰உ)

ஓரின்ப மில்லா துறுமலங்கள் போக்கியிடும்
பேரின்ப நின்குணமென் பேதாய்கேள்—பேரின்ப
நின்குணம்போற றோன்றுமது நீயாகை யானிரும்பு
தன்குணமோ தீயியல்பு தான். (௰௩)

ஆசகற்றி நின்னறிவி லாநந்த மாஞ்சிவனைக்
கூசகற்றி யுன்றன் குணமென்று—பேசியிடும்
பேயாவா திக்கேது பேசிடினீ தானந்த
மாயவா திக்கே மகன். (௰௪)

என்றும் பிரியா விருளருளா னீங்கவின்பாய்த்
துன்றுசிவ போகமெனச் சொல்லாம—லுன்ற
னலம்போக மென்றுரைத்தாய் நாமறிவோ நீயு
மலம்போக முத்தியென்ப வன். (௰௫)

தன்பிரம கீதைவே தாந்தஞ் சிவாகமநூ
லின்பமுயிர்க் குண்டென் றியம்பியதே—லின்பஞ்சீ
வான்மாவிற் குண்டென் றறைந்ததன்று நின்றபர
மான்மாவிற் குண்டென்ற தாம். (௰௬)

சிவசத்தி யைத்திளைப்பார் சீவன்முத்த ரென்னு
மவசத்த மாபா தகமென்—சிவசத்தி
தன்னைப் புணர்ந்ததன்று சாற்றுவமை யுந்தெரியா
தன்னைமுலைப் பாலென் றறி. (௧௭)

சிவசத்தி யைத்திளைப்ப ராதிமுத்த ரென்னு
மவசத்த மாபா தகமென்—சிவசத்தி
தன்னைக்கண் டாங்கருளாற் சச்சிதா நந்தமெனு
மன்னைத் திளைத்துவாழ் வார். (௧௮)

அன்றியுயிர் சிற்சித்தே யாநந்த மில்லையதற்
கென்றுபல வாற்றானு மெய்துவிக்க—நின்ற
முறையானு மீசனொடு முற்றுஞ் சமதை
யறையாமை கூறியது மாம். (௧௯)

ஆநந்த மின்றி யரன்சமதை முத்தியெனிற்
றானந்த வேதா கமஞ்சாற்று—வூனம்
படுமே தசகா ரியத்திற் பலவுங்
கெடுமேயொன் றாமெனலுங் கேள் (௨௰)

சிவசமமே முத்தியெனிற் சித்தாந்த மன்றாஞ்
சிவசமய பேதமெனச் செப்பு—மவைகளிலே
யொன்றென்பர் வேறெனினு மோரேக தேசமத
மன்றெனின்மற் றோர்கரு மது (௨௧)

உள்ளமல நீங்கி யோங்குசிவா நந்த
வெள்ள நிளைத்ததுவாய் மேவுதலே—கள்ளவிழ்பூங்
கொத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்திற்
சித்தாந்த முத்தியெனத் தேறு. (௨௨)

முத்தி நிச்சயம் முற்றிற்று.

---

பாடபேதம்

இனபமுயிர்க் குண்டென்ற தேதோ வுபநிடதம்
துன்பில் பிரமற்கீதை சொன்னதெனில்—இன்பஞ்சீ
வான்மாவிற் குண்டென் றறைந்ததன்று நின்றபர
மான்மாவிற் குண்டென்ற தாம். (௧௯)

# பெரியபுராணமும் பொருளிலக்கணமும்

[திருச்சி, பண்டிதர், மு. வேங்கடசாமி நாட்டார்]

திருத்தொண்டர்களின் வரலாறு தெரித்துரைக்கும் பெரிய புராணத் திருமுறையின்கண்ணே காணப்படும் பொருளிலக்கணக் குறிப்புக்களுள் அகப்பொருட் பகுதியவாய சிலவற்றை யெடுத்துக் காட்டுதல் இச்சிறு கட்டுரையின் கருத்தாம். சேக்கிழார் பெருமான் பண்டைத்தண்டமிழ் இலக்கிய இலக்கணத் துறைகளெல்லாஞ் சென்று தெளிபொருள் கண்ட செந்தமிழ்ப் பேராசிரியர்களுள் ஒருவராவரென்பதனைப் பெரியபுராணச் செய்யுட்கள் பொதுவாகவன்றிச் சிறப்புவகையானும் உணர்த்தி நிற்கின்றன. பாண்டிநாட்டு மதுரையிலே தமிழ்ச்சங்கம் இருந்ததும், சிவபெருமான் சங்கத்து வீற்றிருந்ததும், பொருணூல் அருளியதும், திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளாகிய அப்பெருமான் தலைச்சங்கப் புலவராதலும் ஆகிய தமிழ் வரலாற்றுக் குறிப்புக்கள் பின்னுள்ள செய்யுட்களில் அமைந்திருத்தல் காணலாகும்.

‘சால்பாய மும்மைத் தமிழ்தங்கிய வங்கண் மூதூர்
நூல்பா யிடத்தும் முளனோன்றலை மேதி பாயப்
பால்பாய் முலைதோய் மதுப்பங்கயம் பாய வெங்குஞ்
சேல்பாய் தடத்தும் முளசெய்யுண்மிக் கேறு சங்கம்’
(மூர்த்திநாயனார் புராணம்)

‘மும்மைப் புவனங்களின் மிக்கதன் றேயம் மூதூர்
மெய்ம்மைப் பொருளாந் தமிழ்நூலின் விளங்கு வாய்மைச்
செம்மைப் பொருளுந் தருவார்திரு வால வாயில்
எம்மைப் பவந்தீர்ப் பவர்சங்க மிருந்த தென்றால்’ (ஷ புராணம்)

‘நீல மாமிடற் றாலவா யானென நிலவு
மூல மாகிய திருவிருக் குக்குறண் மொழிந்து
சீல மாதவத் திருத்தொண்டர் தம்மொடுந் திளைத்தார்
சாலு மேன்மையிற் றலைச்சங்கப் புலவனார் தம்முன்’
(திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் புராணம்)

மற்றும், திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணத்தில்

'அங்கண் முல்லையின் றெய்வமென் றருந்தமி ழுரைக்குஞ்
செங்கண் மாறொழுஞ் சிவன்மகிழ் திருமுல்லை வாயில்'

என்றுரைத்திருப்பது தொல்காப்பியம்போலும் தமிழிலக்கண முன்னூல்களின் ஆணைவரம்பு கடைப்பிடித்துய்க்கும் ஆசிரியர் இயல்பினைப் புலப்படுத்துகின்றது. தொண்டை நாட்டின் முல்லையை அணிந்துரைக்குமிடத்தே அத்திணைக்குரிய தெய்வத்தின் இருப்பை யுடன்பட்டுச் சைவத்தின் மேன்மை தெரிக்கும் சமற்காரம் பெரிதும் போற்றற்பால தொன்றாகும். இதனால் சிவபெருமான் எந்நிலத்துக்கும் இறையென்பது குறிப்பித்த வாறு மாகும். திருநாட்டுச் சிறப்பிலே 'மொய்வரையுலகம் போலும் முளரிநீர் மருதவைப்பு' என்பதிலுள்ள 'மொய்வரை யுலகம்' என்னும் சொற்றொடர் தொல்காப்பியத்திலுள்ள 'சேயோன் மேய மைவரை யுலகமும்' என்பதனை நினைந்து எழுந்ததாதல் வேண்டும். புராணத்தில் 'மைவரையுலகம்' என்றே பாடங்கொள்ளுதலும் சிறப்புடைத்தாதல் கருதற் பாலது. 'திருநாட்டுச் சிறப்பில்' இந்திரதெய்வதந் தொழுது நாறு நாடுவர்' என்றது இலக்கணங்கூறும் 'வேந்தன்மேய தீம் புன லுலக'த்திற்கு ஏற்புடைத்தாமாறு காண்க

பெரியபுராணத்திற் கண்ணப்பநாயனார் புராணம் முதலிய பல புராணங்களில் திணைகளின் பெற்றி விரிவாகவும் சுருக்க மாகவும் கூறப்பட்டிருப்பினும், திருக்குறிப்புத் தொண்டநாயனார் புராணத்திற்றான் ஆசிரியர் ஐந்திணைகளையும் ஒருங்கே ஆராய்ந்து அழகுபெறக் கூறிவைத்திருக்கின்றனர். சிவஞானமுனிவர் தமது காஞ்சிப்புராணத்தில் 'திருத்தொண்டை நன்னாட்டு நானிலத் தைந்திணை வளமுந் தெரித்துக் காட்ட மருத்தொண்டை வாய்ச் சியர் வாழ்குன்றை நகர்க்குலக் கவியே வல்லான்' என்று பாராட் டியது இப்பகுதியை நோக்கியேயாகும். பொருளிலக்கணங் கற்பாரெவரும் இதன் சுவையை நுகர்ந் தின்புறல்வேண்டும். இதிலுள்ள திணைப்பகுதியெல்லாம் எடுத்தெழுதின் மிகவிரியு

மாகலின் ஒன்றிரண்டு செய்திகளே இங்கே காட்டப்படுகின்றன.

'குறவர் பன்மணி யரித்திதை விதைப்பன குறிஞ்சி
கறவை யானிரை மானுடன் பயில்வன கானம்
பறவை தாமரை யிருந்திற வருந்துவ பழனம்
சுறவு முண்மருப் பணங்கயர் வனகழிச் சூழல்.'

தேனி றைந்தசெந் தினையிடி தருமலைச் சீறூர்
பானி றைந்தபுற் பதத்தன முல்லைநீள் பாடி
தூநெ லன்னநெய் கன்னலின் கனியதண் டுறையூர்
மீனி றைந்தபே ருணவின வேலைவைப் பிடங்கள்.'

இவ்விரு பாட்டினும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நான்கு நிலங்களின் பெற்றி நன்கு கூறப்பட்டிருத்தல் காண்க. முற்பாட்டில் நெய்தலுக்குக் கூறிய 'சுறவு முண்மருப் பணங்கயர் வன' என்னுஞ் செய்தி 'சினைச்சுறவின் கோடு நட்டு மனைச்சேர்த்திய வல்லணங்கினால்' என்று பட்டினப்பாலையிற் கூறப்பெறறுள்ளது. 'நெய்தனிலத்தில நுளையர்க்கு வலை வளந் தப்பின் அம்மகளிர் கிளையுடன் குழீஇச் சுறவுக்கோடு நாட்டிப் பரவுக்கடன் கொடுத்தலின் ஆண்டு வருணன் வெளிப் படுமென்றார்' என நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரையிற் கூறுதலும் இங்கே கருதற்பாலது.

இனி, திணை ஐந்தாயினும் ஆசிரியர் தோல்காப்பியனார் பாலைத்திணைக்கு நிலம் வேண்டிற்றில ரென்பது.

'நடுவ ணைந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே'

என்னும் அகத்திணையியற் சூத்திரத்தான் அறிபலாகும், பாலைத்திணைக்கு இயற்கையில் நில மின்றாயினும் வேனிற் காலத்து நண்பகற் பொழுதில் முல்லையும் குறிஞ்சியும் சார்ந்த இடங்கள் வெம்மை மிக்குப் பாலை யெனப்படும் என்பது தொல் லாசிரியர் கொள்கை. இதனை,

வேனிற் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்
தான லந்திருகத் தன்மையிற் குன்றி
முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து
நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்'

என்னும் சிலப்பதிகாரத்துக் காடுகாண்காதையான் அறிக. இது,

'கோல முல்லையுங் குறிஞ்சியு மடுத்த சில்லிடங்கள்
நீல வாட்படை நீலிகோட் டங்களு நிரந்து
கால வேனிலிற் கடும்பகற் பொழுதினைப் பற்றிப்
பாலை யுஞ்சொல லாவன வுளபரன் முரம்பு'

என்னும் பாட்டில் சேக்கிழார்பெருமானால் எவ்வளவு அழகு பெறக் கூறப்பெற்றுளது! சில்லிடங்கள், பொழுதினைப்பற்றி, பாலையுஞ் சொலலாவன என்னுந் தொடர்களெல்லாம் ஆழ்ந்த கருத்தினைக் கொண்டிருக்கின்றன. பற்று இப்பாட்டில் பாலைக்குத் தெய்வங் கூறியிருப்பது ஆசிரியரது தெளிவினைக் காட்டுகின்றது. 'மாயோன் மேய' என்னும் தொல்காப்பியச் சூத்திர வுரையில் நச்சினார்க்கினியர், 'பாலைக்கு ஞாயிற்றைத் தெய்வமாக்கி அவனிற்றோன்றிய மழையினையும் காற்றினையும் அத் தெய்வப் பகுதியாக்கிக் கூறுபவாலெனின், எல்லாத் தெய்வத்திற்கும் அந்தணர் அவி கொடுக்குங்கால் அங்கி ஆதித்தன்கட் கொடுக்கும் என்பது வேதமுடிபாகலின் ஆதித்தன் எல்லா நிலத்திற்கும் பொதுவென மறுக்க' என்றும், 'அவ்வந்நிலத்திற்றெய்வங்களே பாலைக்குந் தெய்வமாயிறறு' என்றும், 'தெய்வமுணாவே' என்னுஞ் சூத்திரவுரையில் 'இதனானே பாலைக்குத் தெய்வமும் இன்றாயிற்று' என்றும் தம் துணிபுரைத்துப் போந்தனர். உரையாசிரியராகிய இளம்பூரணவடிகளோ 'தெய்வம் கொற்றவை' என்று கூறினர். இக்கொள்கைக்கே இலக்கிய மேற்கோள்கள் மிகுதியாகக் காணப்படும். சேக்கிழார்பெருமானும் 'நீல வாட்படைநீலி' எனக் கொற்றவையைக் கூறிவைத்திருப்பது நாம் போற்றற் பாலதொன்றாகும்.

---

# கல்விச் செல்வம்

[ஆரியூர் வ. பதுமநாப பிள்ளை]

திருமகடோன்றற்கு ஏதுவாய்நின்ற பாற்கடலனைய வனப்புறு முந்நீர், வேலை சூழ்ந்த இவ் வையகந்தன்னுள் பெறுதற்கரிய மானிடப் பிறவியில், அடைதற்பாலனவாய அனைத்திலும், செல்வமே எவ்வாற்றானும் சிறப்புற்றோங்குவது. அஃதே, அறம், பொருள், இன்பம், வீடு எனும் நால்வகைப் பொருள்களையும், இனிது நல்கவல்லது. அத்தகைச் செல்வம், இருவகைப்படும். அவை பொருட்செல்வம், கல்விச்செல்வம் என்பனவாம். ஏனைய வனைத்தும் அவற்றுளடங்கும் இவற்றுட் பின்னதாய கல்விச்செல்வமே, பெரிதும் பெருமை யுடைத்து, எங்ஙனமெனின், பொருட்செல்வத்தை, ஈட்டலும், பின் அஃது களவாடப்படாவாறு காத்தலும், பிறர்க்கு அஃதை நல்குதலும் பெரிதுந் துயரைப் பயப்பனவேயாம். மற்றும் அஃது பிறர்கட்கு கொடுக்கப்படுந்தோறுங் குறைவதோடு, சின்னாட்களிலாயினும், இறந்துபட்டாலேனும் அஃது அழிந்துவிடும். கல்விச்செல்வமோவெனின், அங்ஙனமன்று அஃதை ஈட்டல், அத்தகைய அல்லல் நல்குவதொன்றன்று; அஃதை இடையறா அச்சத்தோடு காத்துக்கிடக்க வேண்டுவதுமின்று; மற்றும், அஃது பிறர்க்குதவப்பெறுந்தோறும், வளர்ந்து வருமேயன்றி ஒரு சிறுதுங் குறைவுறாது. மற்றும் அஃது இம்மையின் மாத்திரமின்றி மறுமையினுஞ் செம்மை பயக்கும். இக்கூறிய கருத்துக்கள், கீழ்வருவனவற்றால் தெள்ளிதிற் புலனாகும்:—

“வெள்ளத்தாற் போகாது வெந்தணலால் வேகாது வேந்தரானும்
கொள்ளத்தான் முடியாது கொடுத்தாலும் நிறைவொழியக் குறைபடாது
கள்ளற்கோ மிகவரிது காவலோ மிகவெளிது கல்வியென்னும்
உள்ளத்தே பொருளிருக்க வுலகெலாம் பொருடேடி யுழல்வதேனோ.

(ஆன்றோர்)

" அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும் - உறுங்கவ லொன்
றுற் றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லை
சிற் றுயிர்க் குற்ற துணை" (நீதிநெறி விளக்கம்)

" ஒருமைக்கட் டான்கற்றகல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து " (குறள்)

"கைப்பொருடன்னின் மெய்ப்பொருள் கல்வி"
(கொன்றைவேந்தன்)

அத்தகைச் சிறப்புவாய்ந்த கல்விச்செல்வத்தை மூவகைப் பகுப்பில் மொழியலாம். யாங்ஙனமெனின், (1) மெய்யறிவினை யடைதற்பொருட்டு பயிலுங் கல்வி, (2) மொழியறிவைப் பெறுதற் பொருட்டு கற்குங் கல்வி, (3) புகழ். பொருள் முதலியவற்றை ஈட்டற்பொருட்டு பயிலுங் கல்வி. இம்மூன்றனுள், முன்னதாய ஞானக்கல்வி பயிலுதலே மேன்மை யுடைத்து; ஏனையவிரண்டிற் கும் இடையதாய மொழியறிவுக் கல்வி கற்றல் இடைச்சால் புடைத்து; இறுதிய தாய ஊனக்கல்வி எவ்வாற்றானும் இழி புடைத்து. இவைகளைப்பற்றி, ஈண்டு, சிறிது இயம்புதும்:—

இவ்விருள்தரு மாஞாலத்தின்கண் இம்மானிடப்பிறவி சிறப் பாக ஆன்ம உணர்வெய்தப்பெற்று, ஆண்டவனது அடிமலர் களை அடைய முயலுதற் பொருட்டே ஈசனுலுதவப்பெற்றுளது. ஏனைய வெவற்றிற்குஞ் சிறப்பாகின்று. அதனிடையே அடைதற்பாலனவாய, இம்மைப்பேறுகளுக்கு சிலவுளவெனினும், ஆத்திக வுணர்வையே அடிப்படையாகக்கொண்டு, அவற்றையும் பெற்று, தத்தமது வாழ்க்கையைச் சிறப்பாக நடாத்திப் போகுதல் வேண்டுமென்பது அறிவு நூல்களாற் பெறப்படுவன அனைத்தினும் தலையாய உண்மை. இம்முயற்சிக்கேற்ப, இனிய கருவியாக உதவுவது கல்விச்செல்வமே. பண்டைநாளில் வாழ்ந்த பெரியாருட் பலரும் அக்கல்விச்செல்வத்தையே, பெரிதும் உறு துணையாகக் கொண்டு, பேரின்ப வாழ்வெய்தினர். ஆகலின்

அன்பாராவாரனைவரும், அக்கல்விச் செல்வத்தையே இக்காலத்தும் உறுதுணையாகக் கொண்டு வாழ்வாராகுக. மற்றும்,

கற்றலினால் மட்டும் விளையும் பேறு யாதொன்றுமிலது, கற்றவழி நிற்றலானும், கேள்வியுணர்வு உறுதலானுமே பிறவிப் பயனைப் பெறவியலும். இதுபற்றியே, சைவானுபூதி கைவரப் பெற்ற தவப்பெருஞ் செல்வராந் தாயுமானவர்,

"கற்றுமென்பயன் கற்றிடு நூன்முறை
சொற்ற சொற்கள் சுகாரம்பமோ? நெறி
நிற்றல் வேண்டும் நிருவிகற்பச் சுகம்
பெற்ற பேர்பெற்ற பேசாப்பெருமையே"

எனவும், திருவள்ளுவப் பெருந்தகையார்

"கற்கக் கசடற கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக"

எனவும், அருளிச்செய்வாராயினர். மற்றும், கல்விகற்றலால் ஆய நற்பயன், இறைவனது திருவடி நீழலை யெய்திவாழ முயலுதற்பொருட்டே யெனுஞ்சீரிய உண்மை கீழ்வருவனவற்றால் வெள்ளிடை மலைபோற் செவ்விதிற் புலனாம்:—

"கற்றுஞ் சிவஞான மில்லாக் கலதிகள்
சுற்றமும் வீடார் துரிசறார் மூடர்கண்
மற்றும் பலதிசை காணார் மதியிலோர்
கற்றன்பி னிற்போர் கணக்கறிந் தார்களே" (திருமூலர்)

"என்னதான் கற்றாலென்? எப்பொருளும் பெற்றாலென்
உன்னை யறியாதார் உய்வரோ? பூரணமே"

(திருவெண்காட்டடிகளார்)

"கற்குநிலை கற்றாற்—கருவியவி ழாதருளாய்
நிற்குநிலை கற்பதுவே நீதம் பராபரமே" (தாயுமானார்)

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்" (நாயனார்)

ஆகலான் ஏனையவற்றைக்காட்டிலும், மெய்யறிவுக்கல்வி பயிலு தலே சாலச்சிறப்புடைத்து என்பது பெறப்படும். விரிப்பிற் பெருகு மாகலின், மேற்செல்வோம்.

மொழியறிவுறுதற்குக் கல்விபயிலுவோரும், பொருளையே சிறப்பாக வேண்டிக் கல்வி பயிலுவோரும், தத்தமது கல்விப் பயிற்சியின் பயனாக, இம்மையில், என்றும் நிலைத்திராப் புகழை யும், செல்வப்பொருளையுமே, சிறப்பாக விரும்பாநிற்பர். அத் தகைக் கல்வியினானே, இவ்வுலகிற் சிற்சில பொன்றும் பொருள்க ளைப் பெறவியலுமெனினும், பிறவிப்பயனை யதனானே ஒரு சிறி தேனுமெய்துதல் அரிது! அரிது!! மற்றும், உறக்கம், நிலை யாமை, பிணி, மூப்பு என்பவற்றாடே அமைவுறும், இம்மாணிடப் பிறவியின் வாழ்நாட்க ளொருசிலவற்றுட் சிறப்பாகப் பெறற் பாலதாய மறுமைப்பேற்றை எளிதில் வழங்கவல்லது மெய் யறிவுக்கல்வி யல்லது பிறி தொஃது மிலதென்பது ஆன்றோர்க ளாய்ந்தறிந்து அறுதியிட்டவற்றுள் தலையாய உண்மை. இக்கூற் றைப் பெரிதும வலியுறுத்த கீழ்க்கூறுவனவே சாலும்.

“ அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லா
துலகநூல் ஓதுவ தெல்லாம்—கலகல
கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவா ரில் ”

“ கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல—தெள்ளிதி
னாராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகிற் றெரிந்து ” (நாலடியார்)

“ அறம் பொருள் இன்பம் வீடென்னும்,
உறுதிப்பொரு ளுணர்த்துவனவன்றிப்
பிறபொரு ளுணர்த்துவன சின்னாட்
பல்பிணிச் சிற்றறிவினர்க்கு ஆகா ” (பரிமேலழகர்)

இக்கூறியவாற்றால், ஏனைய கல்விமுறைகளனைத்திலும், மெய் யறிவை விளக்கும் கல்வி பயிலுதலே காலச்சிறப்புடைத்து என்

பது பெற்றும். இத்தகைக் கல்வியை, "எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும், அப்பொருள் - மெய்ப்பொருள் காண்பதறிவு." —என செந்நாப்போதார் செப்பியவாறு மெய்ந்நூல்களைக் கற்ற றிந்தோர் இழிகுலத்தோராயினும் அன்னாரிடத்தும் உயிர்க்கு உறுதிபயப்பனவாய உயர்பொருள்களை அறிந்துகோடல் வேண் டும். இதுபொருட்டே,

"வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்—கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே"

எனும் புறநானூற்றுச் சூத்திரமு மெழுந்தது. இன்னோரன்ன, விழுமிதாய கல்விச்செல்வத்தை, சாந்துணையும் வாய்ப்பப் பெறாதோன், ஆறறிவுடைய உயிருடையோனாயிருப்பினும், அன் னான் ஐயறிவுடைய விலங்கன்னானே எனக்கூறுப; பின்னும், அன்னானது கண்கள், பார்வை மாத்திரத்தை அறியுந் திற னுடையன எனினும், அவை புண்களோடே ஒப்பாவன. இவை கீழ்வரூஉம் பொய்யில்புலவரது பெருவாக்குகளா னினிது பெறப் படும்:—

"விலங்கொடு மக்களனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்"

"கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்"

ஆகலின், இறுதியாக, இறைவன் றிருவளாற் கிடைக்கப் பெற்ற, இவ்வரிய மானிடப் பிறவியுடையோ ரனைவரும், ஒரு சில நூல்களைக் கற்ற துணையானே அமைதியுறாது, "நூல்பல கல்"—என ஔவைப் பெருமூதாட்டியார் பணித்தவாறு மெய் யறிவினை விளக்கும் உண்மை நூல்களை, கற்றுய்ந்தொழுகிய கலைவல்லுநர் எக்குலத்தினரேனும், அன்னார்பாற் பணிந்து, உயிர்க்குறுதி பயப்பனவாய உயர் பொருள்களை நல்குங் கல்வி பயின்று, கசடறக்கற்று, அக்கற்றவாறு நின்றொழுகி இருமையி னும் பெருமை யெய்தி, இறைவன் றிருவருள் பெற்று இன்ப வாழ்வெய்துவோமாக.

---

# சடங்குகள்

[காரைக்குடி, அரு. சோமசுந்தரஞ் செட்டியார்]

சைவப் பெருமக்களாகிய நாம் நமது சமயச் சடங்குகளையும் சாதிச் சடங்குகளையும் சைவக் குருமார்களைக்கொண்டு, சிவாகம விதிப்படியே செய்தல் வேண்டும். சுமார்த்தரையும் வேறு பலரையும் கொண்டு செய்தலாகாது. அவர்களுடைய பத்ததியின்படி செய்வது நமது சமயக் கொள்கைக்குப் பெரிதும் வேறுபட்டதாகும். நமது சடங்குகளில் கடவுள் தோத்திரமாகத் தேவாரம் திருவாசகம் முதலிய அருட்பாக்களையே ஓதுதல் வேணடும். 'போற்றித் திருத்தாண்டகங்களும், சிவபுராணம், திருவெழுகூற்றிருக்கை முதலியவைகளும் இம்முறையில் ஓதுதற் குரியவைகளாகும்.' சடங்குகளைச் செய்யும் பொழுது எல்லாவற்றையும் தென்றமிழ் மொழியிலேயே சொன்னல், சொல்லுவோர்க்கும், செய்வோர்க்கும், கேட்போர்க்கும் இன்பமாக இருக்கும். வடமொழியிலே சொலவது 'தாழ்வுடையதாகும் என்பது எனது கருத்தல்ல. வடமொழியிலே சொல்லுவதனல் செய்முறைகள் ஒன்றும் மக்களுக்கு விளங்கவில்லை. எனவே, சடங்குகளைச் செய்வோர், என்ன சொல்லுகின்றோம் என்கின்ற உணர்ச்சியேயின்றி கிரீக், லத்தீன் முதலியவைகளை உச்சரிப்பதுபோல் உரையாடுகின்றார்கள். மக்களுக்கு உண்மை தெரியாதபடி வேற்றுமொழியில் உணர்ச்சியின்றிக் கீதப் பேழைகளைப் (Gramophones) போல் சடங்குகளைச் செய்யும்படி செய்வது பயனில் செயலேயாம். சிறந்த உணர்ச்சியுடைய மக்கள், சொல்லியவற்றைச் சொல்லுங் கிளிப்பிள்ளைகளைப் போல் பொருள் தெரியாமல் கிரியைகளைச் செய்வது அறிவிலாத குழந்தைகள் விளையாடுதலையே ஒக்கும். நினைப்பின்றிக் செய்யும் காரியங்கள் பயனிலாதனவே யாம். தமிழிலேயே சொல்லச் சொன்னல் குருமார்களும் அரைகுறையாகச் சடங்குகளை முடித்துவிடாது, முழுவதையும் அன்போடு சொல்லுவார்கள். மக்களும், "இப்பொருள் குறித்து இவ்வுரையை வழங்குகின்

றோம். இன்னபயன் உண்டாதல் வேண்டும்” என்பதை இனிது உணர்ந்து உய்வார்கள். சடங்குகளைச் செய்வது சமய உண்மைகளை உணர்ந்து கொள்ளுவதற்கேயாகும். ஆகவே, உணர்ச்சியின்றிச் செயும் சடங்கு எவ்வகையானும் ஒவ்வாததே யாகும். உணர்ச்சியின்றிச் செய்யும் சடங்கு குறித்த மனிதனை விடுத்து நிழலைப் பிடிப்பதை யொக்கும். உணர்ச்சியுடன் செய்வதே உயர்வுடையதாகும். இனி எவ்வகையான சடங்கும் மிகச் செட்டான முறையிலேயே செய்யப்படல் வேண்டும். சடங்குகளைச் செய்வதற்கு அதிகச் செலவு செய்ய வேண்டியதாக இருப்பதால், ஏழை மக்கள் பெரிதுந் துன்புறுகின்றார்கள். சடங்கு செய்யவேண்டியது இன்றியமையாததாக இருப்பதால், ஏழை மக்கள் கடன்பட்டுக் கலங்குகின்றார்கள். பல உபகாரியங்கள் நடைபெறாமல் தயங்குகின்றன. மக்கள் வாழ்வு தடைப்படுகிறது. செல்வர்கள் சடங்குகளை ஆயிரக் கணக்கான ரூபாய்களைச் செலவிட்டுச் செய்கிறார்கள். சடங்குகளை அநாவசியமாக இவ்வளவுதூரம் விரித்துச் செய்வது வீண் செயலேயாகும். சமய உண்மைகளை அறிந்து இன்புறுதலே முதற்பெருங் கடனாகும். சடங்குகள் இரண்டாவது படியிலேயே வைத்து எண்ணக் கூடியவைகளாகும். சாதாரண மக்கள் சடங்குகளையே மிக முக்கியமானவைகளாகக் கொண்டு, உண்மைகளை அறிந்தின்புற மறந்து விடுகிறார்கள். இது சரியான முறையாகாது. முதற்கண் உண்மைகளையே அறிந்து கொள்ள முயலுதல் வேண்டும். இரண்டாவதாகவே சடங்குகளைச் செய்து இன்புறல் வேண்டும். புறச்சமயச் சடங்குகள் மிக எளிதான முறையிலே செய்யப்படுவதால், மக்கள் பெரிதும் இன்பவாழ்வு வாழ்கின்றார்கள். நமது சமயச் சடங்குகள் அதிகச் செலவுடையனவாக விருத்தலால், மக்கள் ஆற்றொணாத்துயருறுகின்றனர். சமயச்சார்பில் இத்துயரம் நிகழ்வதால் சமய வளர்ச்சிக்கு இஃது ஓர் பெரிய இடையூறாக விருக்கிறது. இவ்விடையூற்றை எளிதிலே தீர்த்துவைக்க வேண்டியது சமயப் பற்றுடையோர்களின் முக்கியமான வேலையாகும். செல்வர்கள் சடங்குகளைச் செய்தலில் வீண் செலவு செய்தல் கூடாது.

சமயத்தை வளர்க்கும்பொருட்டே ஏராளமான பணத்தைச் செல வழித்தல் வேண்டும். சடங்குகளின் நினைவுக்குறியாக, ஏழை விடுதிகள் (Poor houses) திக்கற்ற குழந்தைகளைக் காப்பாற்று மிடங்கள் (Orphonages) கலாசாலைகள் (High Schools, Colleges,) முதலியவைகளை ஏற்படுத்துதல் வேண்டும். இஃதே பயனுள்ள செயலாகும். சடங்குகளை ஊரார் புகழ வெகு ஆடம்பரமாகச் செய்வது வீண் டம்பவேலையேயாகும். சமய வளர்ச்சி கருதிச் செய்யப்படும் வேலைகள்தான் என்றும் நிலை பெற்று நின்று அழியாப் பெரும்புகழ் விளைவிப்பனவாகும்.

## சமயச்சடங்குகள்

திருக்கோயில்களிலே நடைபெறும் சமயச் சடங்குகள் எல்லாம் அதிகச் செலவை விருத்தி செய்துகொண்டேயிருக் கின்றன. திருக்கோயில்களில் சடங்குகளுக்கு அதிகமாகச் செலவிடுவதைக் கட்டுப்படுத்தி, அப்பணத்தைச் சமய வளர்ச் சிக்குப் பாடுபடுதலில் பயன்படுத்தினால் பெறுநலன் உண்டாகும். விழாக்காலங்களில் வில்லடித்தல், கரகமெடுத்தல், பொய்க்காற் குதிரையாட்டம், வேசையர் நடனம் வாணவேடிக்கை முதலிய வைகள் நிறுத்தப்பெறுதல் வேண்டும். கும்பாபிடேகத்திற்கு இப்பொழுது கொள்ளையான பணம் செலவழிக்கப் பெறுகின் றது அஃது குறைக்கப்படல் வேண்டும். அபிடேக ஆரா தனைகள் வேண்டிய அளவுடன் செய்யப்படுவதுதான் சிறப் புடையதாகும். வண்டி. வண்டியாகப் பட்டைச் சாதங்களைச் செய்து வாணிபம் புரிவது அநாவசியமேயாகும். ஆயிரக் கணக்கான ரூபாய்கள் செலவிட்டு அக்காரவடிசில் சித்திரான்னங் கள் முதலியவைகளைச் செய்வதைக்காட்டிலும் சமயநூல்களை அச்சிட்டு, வரும் அன்பர்களுக்கு எல்லாம் இலவசமாக அளிப் பது உத்தமமாகும். கோயில் நடைமுறைகள் சமய அறிவை வளர்த்தற்குரியனவாக விருத்தல் வேண்டுமேயன்றிச் சோம் பேறி வாழ்வைப் பலப்படுத்துவனவாக விருத்தல்* கூடாது. அர்ச்சனை, தீபாராதனை முதலியவைகளுக்கெல்லாம் மிக அற்ப மான கட்டணம் அரையணா கால் • அணாவே விதிக்கப்பெறல்

வேண்டும். சுங்கச்சாவடிபோல் ஒவ்வொரு சந்நிதானத்திலும் சுவாமியைப் பார்ப்பதற்கு வரி விதிக்கக்கூடாது. இது, சமயத்தையே இழிவு செய்வதாகும். இவை, நாம் திருக்கோயில்களிலே செய்ய வேண்டிய முக்கியமான சீர்திருத்தங்களாகும். இவைகளைத் தருமகர்த்தர்களும், அன்பர்களும், பிரார்த்தனைக்காரர்களும் அவசியம் கவனித்தல் வேண்டும். இனி, தீக்ஷை, புறச்சமயம் புகுந்தோர்க்குச் செய்யும் பிராயச்சித்தம் முதலியவைகள் ஐந்து ரூபாய் அளவிலேயே செய்யப் பெறுதல் வேண்டும். நீராடுதுறைகளிலும் தலங்களிலும் செய்யும் சங்கற்பம், பிராயச்சித்தம் முதலியவைகள் சிறு செலவில் செய்யப்பெறுதல் வேண்டும். சடங்குகளில் கணக்கில்லாத பணத்தைச் செலவழிப்பது மூடத்தனமேயாகும்.

## சாதிச்சடங்குகள்

சுபகாரியங்கள்:—திருமணம், ருதுசாந்தி, வளைகாப்பு, ஸ்ரீமந்தம், தீர்த்தங்குடித்தல், வேவுஎடுத்தல், குழந்தைக்குக் காதுகுத்தல், புதுமை அல்லது அப்தபூர்த்தி, உபநயனம், சஷ்டியப்த பூர்த்தி, சாந்தி முதலிய பலவகையான விசேடங்களும் மிகச் சுருக்கமான செலவிலேயே செய்யப்படுதல் வேண்டும். பெண்ணுக்கு ஸ்ரீதனம் சீர்முறை நகை கொடுத்தல் மிகச் செட்டானமுறையில் இருத்தல்வேண்டும். பெண்ணை விலைக்குவிற்றல் பெரும் பாவமாகும். சுபகாரியங்களைத் திருக்கோயில்களில் செய்வது மிகச் சிறந்த முறையாகும். செலவும் செட்டாகமுடியும். திருமணம் முதலியவற்றிற்குச் சான்றும் தெய்வச்சான்றாகத் திகழும். சுவாமிக்கு அபிடேக ஆராதனைகள் செய்து விபூதி குங்குமம் மஞ்சள் மலர்மாலை முதலிய பிரசாதங்களை மணமக்களுக்கு ஈந்து நாகஸ்வரம் ஒலிப்ப, அடியார்கள் மங்கலவாழ்த்துக் கூறக், குருமார்கள், “மண்ணினல்ல வண்ணம் வாழலாம்” முதலிய திருப்பாசுரங்கள் பாட மணமகளும் மணமகனும் திருப்பூட்டிக் கொள்வது சிறப்புடையதேயாகும். சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கும், சங்கிலிநாச்சியாருக்கும் நடந்த திருமணம் திருக்கோயிலிலே நடைபெற்றது. திருஞானசம்பந்தப் பெரு

மானது திருமணத்தில் திருக்கோயிலிலேயே சோதிச்சான்று நடைபெற்றது. பால்ய விவாகத்தால் விதவைகள் மலிந்து வருவதால், பருவம் வந்தபின்னரேயே மணமக்களுக்குத் திருமணம் செய்வித்தல்வேண்டும். சுபகாரியங்களில் சில சாதிகளில் அர்த்தமற்ற சடங்குகள் பல நடத்தப்படுகின்றன. அவைகளெல்லாம் நிறுத்தப்படுதல் வேண்டும். திருமணம் நடந்த பின்னர்*, மணமகன் ஊடல்கொண்டு தவவேடம்பூண்டு காசியாத்திரை செல்லுவதாகப் பிள்ளையார் கோவிலுக்குச் செல்லுகின்றான். பின்னர் உறவினர் வந்து அழைத்துப் போகிறார்கள். மணமகன் மணநாளிலேயே ஊடல் கொண்டு ஓடுவதாகச் செய்யும் இச்சடங்கைப்போல் அபசகுனமும், அநாகரிகமும் வேறு ஒன்று இல்லை. இவ்வாறு பொருளில்லாது செய்யும் சடங்குகள் அடியோடு நிறுத்தப்படுதல் வேண்டும். திருமண ஊர்வலத்திற்குச் சில சாதியார் ஆயிரக்கணக்காகச் செலவழிக்கிறார்கள். இது ஒரு வீண்வேலையாகும்.

## இழவுச் சடங்குகள்

பெரும் பிரிவுத்தானம், கோதானம், அந்தியஷ்டி, சபிண்டி, மாசியம், வருஷாப்தீகம் முதலியவைகளில் செய்யும் செலவிற்கு ஒரு எல்லையில்லை. இழவுச் சடங்கு மிகச்சுருக்கமாக இருத்தல் வேண்டும். ஏழைகள் பத்துரூபாய் அளவிலும் செல்வர்கள் ஐம்பது ரூபாய் அளவிலும் செய்தாற்போதும். செல்வர்கள் இறந்தவர்களின் நினைவுக்குறியாக அறச்சாலைகளை அன்னோர் உள்ளத்தை மகிழ்விக்குமாறு அமைப்பதே அறிவுடைமையாகும். ஏகோதிட்டம் தடிக்கம்புத்தானம் முதலியவற்றில் ஆயிரக்கணக்காகச் செலவழிப்பது அறிவின்மையேயாகும். இனி இழவுச்சடங்குகளில் சில திருத்தமான முறைகளை அநுட்டித்தல் வேண்டும். நோய் வாய்ப்பட்டிருப்போர் நெற்றியில் நீறும், கழுத்தில் கண்டிகையும் எப்பொழுதும் பொலிதல்வேண்டும். அவர்களுக்கு நேரே ஒரு நடராஜர் படம் மலர்மாலையுடன் விளங்குதல் வேண்டும்.

---

* குறிப்பு:—இது மற்ற ஊர்களில் திருமணத் திருப்பூட்டுக்கு முன்னர் நடைபெறுவது வழக்கம்.

நாடோறும் அன்பர்கள் நோய் நீங்கிய திருப்பாசுரங்களை ஓதுதல் வேண்டும். "நோய் நீங்கிவிடும். கவலைப்படக் கூடாது. இறைவனையே நினைத்துக் கொண்டிரு" என்று சொல்லுதல் வேண்டும். நல்ல புண்ணிய சரித்திரங்களைச் சொல்லிமகிழ்வித்தல் வேண்டும். திருக்கோயிலில் அர்ச்சனைசெய்து பிரார்த்தித்து விபூதிப்பிரசாதம் கொண்டுவந்து கொடுத்தல்வேண்டும். இறந்துபோதல் கூடும் என்று வைத்தியரால் கைவிடப்பட்டவரா இருந்தால் ஆன்மார்த்தமாக நல்ல உபதேசங்களைச் செய்தல் வேண்டும். எப்பொழுதும் எதிரில் இருக்கும் நடராஜர் படத்தையே பார்த்துச் சிந்தித்துக்கொண்டிருக்கச் சொல்லவேண்டும். வேறொன்றையும் நினைத்து வருந்தாமலிருக்கும்படி செய்தல் வேண்டும். 'இயமதூதர் வருகின்றார்கள்' என்று இறப்பவன் அறிந்தோ அறியாமலோ புலம்பினால், எதிரே இருக்கும் நடராஜரைக்காட்டி, "காலால் முயலகன் எனுந் தீயனை மிதித்துக் கொண்டிருப்பதைப் பார், அப்படியே இயமனையும் அவன் தூதுவர்களையும் மிதித்துத் தள்ளிவிடுவார். ஆடுங்கழலில் அதிரும் சிலம்பொலியாலும், அமைத்த அழகிய காதலத்தாலும், புன்முறுவல் தவழும் இன்முகத்தாலும் அவர் உன்னை அன்புடன் அழைக்கிறார். நீ அவரையே நினைத்துப் பெருமகிழ்வுடன் உருகுவாயாக"! என்று இயம்புதல் வேண்டும். இறப்பவன் இறக்குமிடத்தில் எப்பொழுதும் நறுமணம் கமழ்ந்து கொண்டிருத்தல் வேண்டும். ஒருவரும் அழுதுகதறி அவன் மனத்தை வேறுபடுத்தக் கூடாது. இறக்குந் தறுவாயிலே இறப்பவனுடைய செவியிலே ஐந்தெழுத்தைச் சொல்லிக்கொண்டிருத்தல் வேண்டும். இறப்பவன் புலம்பாமல் சிவநாமத்தைச் சொல்லிக்கொண்டிருக்கும்படி முன்னரேயே போதித்து வைத்திருத்தல் வேண்டும். தேவாரத்தில் மூவர் முத்திகாலத்தில் பாடியபாடல்கள், திருவாசகத்தில் யாத்திரைப்பத்து, வாழாப்பத்து அச்சோப்பதிகம் முதலியவைகளை ஓதுவாரைக் கொண்டு ஓதுவித்தல் வேண்டும். இந்நடை முறைகளைக், குருமார் உள்ள இடங்களில் அவர்களைக் கொண்டு செய்வது சாலச் சிறப்புடையதாகும். இறந்தபின் செய்வதினும், இறக்குந்தறுவாயில் செய்தல்தான் பெருஞ்

சிறப்புடையதாகும். இறந்த பின்னர் பெண் மக்கள் அனைவரும் கூடிக்கட்டியழுதல் கூடாது. அமைதியாகப் பிணத்தைச் சீக்கிரம் அகற்றிவிடுதல் வேண்டும். இரவில் உள்ளூர்த் திருக்கோயிலில் திருவிளக்கேற்றி, அருச்சனை செய்து இறந்தவரின் ஆன்மா முத்தி யடையும்படி பிரார்த்தித்தல் வேண்டும். செல்வர்கள் எல்லாப் பெருந்தலங்களிலும் இவ்வாறு செய்தல் வேண்டும். மிகப்பெருஞ் செல்வர்கள் சபிண்டியன்று ஏழைகளுக்கு அன்ன மிட்டு ஆடைகள் கொடுக்கலாம். ஏழைகள் சுருக்கமான முறையி லேயே இழவுச் சடங்குகளைச் செய்தல் வேண்டும். மேற்கூறிப் போந்த சீர்திருத்த முறையினை யாண்டும் செய்கையிற் பரப்பு மாறு நான் அன்பர்கள் பலரையும் பெரிதும் பணிவுடன் வேண் டிக் கொள்கின்றேன்.

வேறுபல சடங்குகள்:—கன்னிக்கு வைத்தல் அல்லது சுவாமிக்குப் படைத்தல் என்னும் பிரார்த்தனை செய்யும்பொழுது இறந்த பிதுரர்கள் நன்னிலை யடையும்படி இறைவனை நோக்கித் துதித்தல் வேண்டும். இறந்தவர்களைத் தெய்வமாக வைத்து வணங்கக்கூடாது. ஆடு கோழிகளை யறுத்து உயிர்க் கொலை புரிதலை அறவே யொழித்தல் வேண்டும். சிறு தெய்வங்களுக்கு உயிர்ப் பலியிட்டு வணங்கக்கூடாது. விரதம் பிடிக்கும் போது பட்டினி யிருப்பது சிறப்புடையதாகும். நல்ல நாட்க ளில் தூய நீருள்ள தீர்த்தங்களிலேயே குளித்தல் வேண்டும் பாசிக்குளங்களில் கால் வைத்தல் கூடாது. பொதுவாக நம் நம் முடைய சடங்குகள் அனைத்தையும் பொருள் பொதிந்த முறையில் சுகந்தரும் வழியில் சுருக்கமான செலவில் செய்தல் வேண்டும். சடங்குகளைச் செய்வது சமய உண்மைகளை உணரு வதற்கே யென்பதை ஒவ்வொருவரும் நன்கு அறிந்துகொள்ளு தல் வேண்டும். சடங்குகள் இரண்டாவது படியிலேயே வைத் துக் கருதப்படத் தக்கவை யென்பதை,

"விரத மேபர மாகவே தியருஞ்
சரத மாகவே சாத்திரங் காட்டினர்"

எனும் நமது மணிவாசகப் பெருமானது பொன்னுரையானும் நாம் நன்கு தெளியலாம். ஆகவே, மக்கள் சமய உண்மைகளை

யே முதற்கண் அறிந்துகொள்ள முயலுதல் வேண்டும். கண் மூடித்தனமாகச சடங்குகளை மட்டும் செய்வதிற் பயனின்று. பொருளுணர்ச்சியுடன் செய்யும் புனிதமான சடங்கே புண்ணியந் தருவதாகும். இதுகாறும் எளியேன் நமது சடங்குகளைச் சீர்திருத்தும் முறை குறித்து வழங்கிய உரைகளையும் அன்பர்கள் ஆராய்ந்து தங்கள் அரிய கருத்துக்களையும் செல்வியின் மூலமாவது வேறு பத்திரிகைகளின் மூலமாவது வெளியிட்டு இக் கொள்கைகளை இனிது பரப்ப வேண்டுகின்றேன்.

---

## மதிப்புரை

**முப்பானூற் சுருக்கம்:**—இந்நூல் கோப்பாய் வி. வேலுப்பிள்ளையவர்களாற் செய்யப்பட்டது. இந்நூல் திருக்குறளையே வழிப்படுத்து மற்றும் பற்பல நூல்களிலுமுள்ள நீதிமுதலானவற்றையுஞ் சேர்த்துத் தொல்லாசிரியர் நூற்பொருளையேயன்றி அவர் சொல்லையும் பொன்போற் போற்றி அவ்வுரை நடையிற்றானே இயற்றப்பட்டுளது. இந்நூல் தமிழ்த்துறையிலிறங்கும் மாணவர்க்கும், கலாசாலை மாணவர்க்கும் மிகுந்தபயனை விளைவிக்கும். நீதிநூல்களைச் செவ்வனே உரைநடையிற் பயில விரும்புகிறவர்களுக்கு இந்நூல் பெரிதும் பயனுடையதா யிருக்கும். இதன் விலை ரூ. 3—0—0.

**நாலடியார் உரையுடன்:**—இவ்வுரை அகநானூற்றுப் பதிப்பாசிரியர் வே. இராஜகோபாலய்யங்காரவர்களா லியற்றப்பட்டது. இவ்வுரை குறிப்புரையா யிருந்தாலும் விரிந்து கிடக்கின்றது. இவ்வுரையில் ஆங்காங்கு அதற்குரிய மேற்கோள்களும் காட்டப்பெற்றிருக்கின்றன. இதன் விலை ரூ. 1—8—0. இப்புத்தகம் மைலாப்பூர் கம்பர் விலாசத்திற் கிடைக்கும்.

**சைவசித்தாந்த ஆராய்ச்சி:**—இந்நூலை இயற்றியவர் சோமு - கந்த-சச்சிதானந்தனார் என்பவர். இந்நூல் ஆண் பெண் இருபாலார்க்கும் மாணவர் முதல் முதியவர் வரை படிக்கத்தக்கதோர் நூலாகும். இந்நூல் எளிய நடையில் சைவசித்தாந்தக் கருத்துக்களை மிகவுந் தெளிவாக எடுத்துரைத்துச் செல்கின்றது. இதன் விலை ரூ. 1—0—0. கிடைக்குமிடம்:—மா. ரா. நாகமுனிப் பிள்ளை, 45, காளத்திப்பிள்ளை தெரு, சென்னை.

**விசால ஹிருதயம்:**—இது ஒரு மாதசஞ்சிகை. நாகர்கோவிலினின்றும் வெளிவருகின்றது; இது தமிழ்நாட்டின் சீர்மைக்கும்,

தமிழின் உயர்ச்சிக்கும் பாடுபட எழுந்தது. இதன் உள்நாட்டின் சந்தா ரூ. 1—0—0.

**கொங்குமண்டலம்:**—இப்பெயர் புனைந்த மாதசஞ்சிகை திருச்செங்கோட்டினின்றும் வெளி வருகின்றது. இதன் ஆசிரியர் திரு. தி. அ. முத்துசாமிக் கோனாரவர்கள். இது கொங்குநாட்டின் சரித்திரக் குறிப்பையும், அந்நாட்டில் அவ்வப்போது தோன்றி விளங்கிய பெரியார் பலரின் வாழ்க்கையினையும் வெளியிட முன் வந்துள்ளது. ஆராய்ச்சிக் குறிப்புக்களும் வெளிவருகின்றன. இதன் சந்தா ரூ. 2—0—0.

**முத்துநாயனார் திருவிரட்டை மணிமாலை:**—கொட்டையூர் சாமிநாத தேசிகரவர்களியற்றிய உரையுடன் வெளிவந்துள்ளது. உரையில் பல அரிய மேற்கோள்கள் ஆளப்பட்டிருத்தல் பாராட்டத் தக்கது. இந்நூல் யாழ்ப்பாணத்தில் பதிப்பிக்கப் பெற்றது. இதன் விலை அணு 3

## தென்னிந்திய தமிழ்ச்சங்கம்

### திருநெல்வேலி

இச்சங்கம் தக்கார் முன்னிலையில் நடத்தப்படுகின்றது. இதனைச் சார்ந்த 'செந்தமிழ்க் கல்லூரித்' தேர்வு முறையோடொப்ப இச்சங்கத்தார் ஏற்படுத்தியிருக்கும் தமிழ்த்தேர்வு முறைகள் அடியிற் காட்டியிருக்கிறபடி திருநெல்வேலி, திருச்சிராப்பள்ளி, சிதம்பரம், சென்னை, திருவனந்தபுரம் ஆகிய ஐந்து நகரங்களிலும் 1926 ஜூன்மீ 28-உ முதல் நடைபெறும். இதில் தமிழ்த்தேர்வு (Matric), இளந்தமிழ்ப் புலவர் (F.A.), தமிழ்ப்புலவர் (B A & B A Hons.) என்ற மூன்று பரீக்ஷைகள் நடத்தப்படும்.

ஒரு பரீட்சையிற் றேறி மற்றொன்றிற்குச் செல்லவேண்டுமென்ற நியதியில்லை.

பரீட்சைப் பாடமுறைகட்கு (Syllabus) மேற்படி சங்க அமைச்சருக்கு அல்லது சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாருக்கு ஒரு அணு தபாற்றலை அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

இதன் சம்பந்தமாக ஏதேனும் தெரிந்துகொள்ள விரும்புவோர் சங்க அமைச்சருக்கு ரிப்ளை போஸ்ட் கார்டு எழுதித் தெரிந்துகொள்ளலாம்.

இப்பரீட்சை விஷயத்தில் மொத்தத்தில் 100-க்கு 60 அம்சம் வாங்குவோர் முதல் வகுப்பினர். 100-க்கு 50-க்கு மேல் 60 வரை வாங்குவோர் இரண்டாம் வகுப்பினர். 100-க்கு 40-க்குக் குறையாமல் வாங்குவோர் மூன்றாம் வகுப்பினர். இத்தரம் எல்லா வகுப்புத் தேர்வுக்கும்

உரித்து. தேர்ச்சிக்குத் தகுதியாவார் ஒவ்வொரு பாட வகையிலும் 100-க்கு 25-க்குக் குறையாமல் எடுக்கவேண்டும்.

மேற்படி தேர்வுகளில் முதல் வகுப்பிற் றேர்ந்தவர்கள் யாவர்க்கும் சங்கத்தாரால் தேர்ச்சி இதழ்கள் தலைவர்கள் கையெழுத்துடனும், சங்க முத்திரையுடனும் அனுப்பப்பெறும். தேர்வுகளிற் றேர்ந்தவர்கள் விவரம் 'சேந்தமிழ்ச் செல்வி' முதலிய இதழ்களில் வெளியிடப்பெறும்.

| எண். | தேர்வு. | முதற் பரிசு. | இரண்டாம் பரிசு. | மூன்றாம் பரிசு. |
|---|---|---|---|---|
| 1. | தமிழ்த்தேர்வு. | 50 ரூபாய் பெறத்தக்க தங்கப் பதக்கம். | 30 ரூபாய் பெறத்தக்க வெள்ளிப் பதக்கம். | 20 ரூபாய். |
| 2. | இளந்தமிழ்ப் புலவர். | 75 ரூபாய் பெறத்தக்க தங்கப் பதக்கம். | 50 ரூபாய் பெறத்தக்க தங்கப்பதக்கம். | 30 ரூ. பெறத்தக்க வெள்ளிப் பதக்கம். |
| 3. | தமிழ்ப்புலவர். | 100 ரூபாய் பெறத்தக்க தங்கத்தோடா. | 75 ரூபாய் பெறத்தக்க தங்கப்பதக்கம். | 50 ரூ. பெறத்தக்க தங்கப் பதக்கம். |

தமிழ்த்தேர்வு முறைக்கு ரூபாய் ஒன்றும், இளந்தமிழ்ப் புலவர் தேர்வுக்கு ரூபாய் இரண்டும், தமிழ்ப் புலவர் தேர்வுக்கு ரூபாய் மூன்றும் ஒவ்வொருவரும் செலுத்த வேண்டியதாகக் கட்டணத் தொகை விதிக்கப் பெற்றுள்ளது. இத்தொகை விண்ணப்பத்துடன் ஒவ்வொரு ஆண்டும் சித்திரை மாதம் முதல் தேதிக்குமுன் சங்க அமைச்சர் விலாசத்துக்கு அனுப்பப் பெறவேண்டும்.

தேர்வுக் காலங்களிற் பெண்பாலர்களுக்கு வேண்டிய சௌகரியங்கள் செய்து கொடுக்கப்பெறும்.

தேர்வு நடைபெறும் தேதி, ஒவ்வொரு வருடத்திலும் திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்று வெளிவரும் 'சேந்தமிழ்ச்செல்வி' மாத இதழில் குறிக்கப்படும்.

பதின்மருக்கு மேல் விண்ணப்பங்கள் இருக்குமானால் முக்கியமான பிற இடங்களிலும் பரீட்சை நடத்த ஏற்பாடு செய்யப்படும்.

இங்ஙனம்:

R. P. சேதுப்பிள்ளை,

திருநெல்வேலி. பு. சி. புன்னைவனநாத முதலியார்.

அமைச்சர்கள்

Printed by Sivakami Vilasam Press, Published by V. Subbiah
for The S. I. S. S. W. P. Society, Ltd., Madras.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள்தோறும் வெளிவருவது


| | | |
|---|---|---|
| சிலம்பு ௩ | மெய்கண்டான் ஆண்டு-௭௱௨ ஆடித் திங்கள்<br>1925௵ ஜூலை ௴—ஆகஸ்டு ௴ | பரல் ௭ |


திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## இறையனார் அகப்பொருள்


[கா. சுப்பிரமணிய பிள்ளை, M.A., M.L.]



(முன் ௨௪௯-ம் பக்கத் தொடர்ச்சி)


ஐந்திணை யொழுக்கத்துள் அன்பினைச் சிறப்பாகக் கொண்டொழுகும் ஒழுக்கம் களவென்று தொகுத்துச் சுட்டிய ஆசிரியர் அதன் இலக்கணத்தைத் தெளிவுபட இந்நூலின் இரண்டாவது சூத்திரத்திற் கூறுகின்றார். சுருங்கிய சொற்களால், மிகுந்த பொருளை அமைத்தலில் இவ்வாசிரியர் மிக்க திறமை வாய்ந்தவ

றென்பது இச்சூத்திரவுரையாலே யாவர்க்கும் அங்கை நெல்லி போல் விளங்கற் பாலது. இச்சூத்திரத்தில் களவிற் கிலக்கணங் கூறுதலால் களவொழுக்கம் கந்தருவ வழக்கத்தின் வேறுபட்ட தென்பது ஊகிக்கப்படும். 'தானே அவளே' என்ற சொற்றொடராலே 'தானே அவள் அவளே தான்' என்னுங் கருத்தைச் சுருக்கமாக அமைத்தமை காண்க. இருவரும் அன்பினானும் பண்பினானும் உருவினானும் திருவினானுங் கல்வியினானும் ஒத்த சிறப்புடையவர் என்பது இச் சொற்றொடரின் பொருள். இருவரும் ஒத்த உணர்ச்சியினராய் இரண்டுடற்கு ஓருயிர் போலவும் இருதலையுடைய ஒரு புட்போலவும் வேறுபாடின்றித் திகழ்தற்குக் காரணமாகிய ஒத்த தன்மைகள் வேண்டுமென்பது பெறப்பட்டது.

இனி, உரையாசிரியர் கூறும் வண்ணம் ஆண்மக்களுள் ஒப்பற்ற உயர் குணங்கள் தலைவனுக்கும், அவ்வாறே பெண்டிருள் ஒப்பற்ற உயர் குணங்கள் தலைவிக்கும் அமைதலைக் குறித்தற்காகப் பிரிநிலை ஏகாரம் எழுந்ததென்று கொள்ளின், சிறந்த எடுத்துக்காட்டாய் உலக வழக்கிற் பெரிது மில்லாத ஒரு தனி ஒழுக்கத்தை முன்மாதிரியாக இவண் சுட்டக் கருதினர் ஆசிரியர் என்ற கொள்கை நிலைபெறும். அது களவியலென்ற சொற்றொடர்க்கு உரையாசிரியர் கூறிய பொருளிற்குப் பொருத்தமாக 'தானே அவளே' என்ற சொற்றொடர்க்கும் பொருள் கொண்டதாக முடியும்.

'தமியர்' என்ற சொல்லிற்கு உரையாசிரியர் கொண்ட பொருளே 'தானே அவளே' என்பதற்குப் பொருளாகக் கொள்ளுதல் உலக வழக்கிற்குப் பொருத்தமாகத் தோன்றுகின்றது. தமியர் என்பதற்குத் 'தம்முணர்வினரன்றி' என்ற பொருள் கொள்ளப்பட்டது. தலைவனும் தலைவியும் ஒருவரை யொருவர் காணு முன்னமே தத்தம் தனியியல்பிழந்து தம்முள் வேற்றுமையின்மை யுணர்தற்குக் காரணமாகிய உழுவலன்பு உடையவர் என்பது இச் சொற்றொடரால் சுட்டப்பட்டது. எப்பொழுது அவரது உணர்வின் இழப்பு நேருமென்பதைப்பற்றி உரையாசிரியர் மிக நுட்பமாகவும் மிகவிரிவாகவும் ஆராய்ச்சி செய்து

உணர்வு கெடுதலும் காட்சியும் உடன் நிகழுமென்பதைத் தெளிவாக நிறுவியுள்ளார்.

'தமியர்' என்ற சொல்லிற்குத் தலைவனும் தலைவியும் பாங்கன் பாங்கிகளின் நீங்கித் தனியாய நிலையினராய் என்று பொருள் கோடலே தெளிவான உரையாகத் தெரிகின்றது. களவு கந்தருவ வழக்கம்போல்வதென்று முன்னே கூறியிருப்பினும் அக்கூற்று தொகுத்துக் கூறியதாகுமேயன்றி வகுத்துக் காட்டியதாகாது. உரையாசிரியர் கூறிய பொருள் அவர் இந் நூலினது இயல்பைப்பற்றிக் கொண்ட கொள்கைக்கு இணக்கமாயுள்ளது. அது உள நூல் வல்லார்க்கு மிக்க இனிமை பயப்பது. நல்லறிவும் நல்லொழுக்கமும் நிலை பெறுவதற்குரிய குணங்கள் மறைவு பட்டு நிற்பதையே உணர்விழத்தல் என்றனர். நன்று இது தீது இது என அறிதலும் உண்மை தெளிதலும் ஒழுக்கங் காத்தலும் நற்கொள்கை மறவாமையும் ஆடவர்க்குச் சிறந்த குணங்களாகக் கூறப்படும். இவை மறைந்தவிடத்து மக்கட்குரிய சிறப்புணர்ச்சி இல்லையென்று கொள்ளப்படும். இவை மறைந்த நிலையில் உயிரைப் பற்றிநின்றது வேட்கை ஒன்றுமே யாகும். அவ்வேட்கை உயிரின் ஒரு சார் நிலையாதலால் அதனினின்றும் அதனை வேறு பிரித்திலர். ஆதலின் வேட்கை மாத்திரம் உடைய உயிரைத் தனியாய் நிற்பதாக உரையாசிரியர் குறித்தனர். இவ்வாறே நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்ற நால்வகைப் பண்பு மிழந்து வேட்கை மீதூரப் பட்ட தலைமகளையும் தனியாய் நின்றதாகக் கூறுதல் உரையாசிரியர் கருத்தாகும். இனி, செயற்கையால் வருகின்ற குணங்கள் யாவும் மறைந்தொழிய இயற்கையன்பு மாத்திரம் மிக்குத் திகழ்ந்து நின்ற நிலையைத் 'தனிமை' யென்பதும் பொருத்தமுடையதே. தமியர் என்பதற்குப் பொதுப் பொருள் கொள்வோர் 'தானே அவளே' என்ற சொற்றொடரால் இக்கருத்துக்கள் யாவும் விளங்குவதாகக் கருதுவர்.

இச் சொற்றொடர்களாலே இருதலையும் ஒத்த அன்பு கூறப்பட்டிருப்பினும் புணர்ச்சிக்கு முன்னும் பின்னும் அன்பு ஒத்தி

.ருத்தல் வேண்டு மென்பார் 'காமம்' என்ற சொல்லை அமைத்த னர். முன்னும் பின்னும் எவ்வாறு அன்பு ஒத்திருக்கு மென்பதை உரையாசிரியர் தமது செவ்விய ஆராய்ச்சி முறையால் இனிது விளக்குகின்றார். புணர்ச்சிக்கு முன்னுள்ள வேட்கை புணர்ச்சியாற் குறைவுபட்டவிடத்து முன்னின்ற அன்பு குறைவு படாமல் நிறைவுறுதற்குக் காரணம் குணவுணர்ச்சியேயாம். புணர்ச்சி மகிழ்தற் கேதுவாகிய நன்றியுறிவும் அன்பு ஈரிடத்தும் ஒத்திருத்தற்குக் காரணமாகும். புணர்ச்சிக்கு முன் காட்சியின் கண்ணும் புணர்ச்சிக்குப் பின் பிறர் காணுமற் பிரிவுற்ற விடத்தும் வேட்கை ஒத்திருத்தலையும் இருவயினொத்தல் என்பதாற் பெறப்படும்.

இந்நூல் தொகை நூலாதலின் காட்சி, ஐயம், துணிபு, நயப்பு, பிரிவு என்னுந் துறைகளை ஆசிரியர் ஊகத்தாற் பெற வைத்தனர். அவை பின் விரிக்கப்படும்.

(தொடரும்)

---

# அகம் புறம்

[வேலூர். க. ப. சந்தோஷம், B.A., L.T.]

அகம் புறமென்பன உள் வெளி என்றவற்றுடன் ஒரு பொருளன. உள் என்பது மக்கள் உளத்தையும் புறம் என்பது அதற்கு அயல வென்று கருதப்படும் மரம், விலங்கு, மலை, கடல் காற்று முதலியவற்றையுங் குறிப்பதாகக் கொண்டவற்றைப்பற்றிச் சிறிது சொல்ல வெழுந்த திவ்வுரை. அகமும் புறமும் ஒன்றையொன்று தழுவியே நிற்பனவாதலின் அவற்றை முரண்படுவனவாகப் பிரித்தல் தவறு. அவ்வாறு பிரித்துக் கருதியதனாலன்றோ நம் நாட்டில் புறப்பொருளறிவு குன்றி இப்போது நாம் பெரிது மிடர்ப்படநேர்ந்தது. தன்னையறியாதவன் பிறரையறியான்; பிறரையறியாதவன் தன்னையறியான். இங்ஙனமே அகத்தைக்கொண்டு புறமறியப்படும்; புறத்தைக்கொண்டு அக

மறியப்படும். 'கதிரவன் சினந்தான்' 'காடு களித்தது' என்று பேசுங்கால் உளத்தின் தன்மை புறப்பொருள்களின்மே லேற்றப்பட்டது. 'கல் நெஞ்சன்', 'அகமலர்ச்சி' என்பவற்றில் புறப்பொருள்களின் தன்மை உளத்தின்மே லேற்றப்பட்டது. அகந் தூய்மைபெறும் நிலையைக் காட்டுவதற்கும் புறப்பொருள்கள் வேண்டும். படலம் நீங்கின கண்ணை 'அழுக்கு நீங்கிய உயிருக் கொப்பிடுதல் வழக்கம். 'அழுக்கு நீங்கிய உயிர்' எனும் போதே அதில் புறப்பொருட்டன்மை கலந்தது. உயர்வு, தாழ்வு, மேன்மை, கீழ்மை என்ற பண்புப் பெயர்களும் நிலத்திலுள்ள மேடு பள்ள ஏற்றத்தாழ்ச்சிகளினின்றும் பெறப்பட்டது வெளிப்படை. ஆதலின் புறப்பொருள்களை புறக்கணித் தகற்றல் கூடாது. அங்ஙனஞ் செய்தல் தமிழர் தன்மைக்கு ஒவ்வாது. தொல்காப்பியமாகிய பெருநூலில் பொருட்பால், அகத்திணை, புறத்திணை என விரண்டாகப் பிரிக்கப்பட்டு ஒன்றையொன்று பற்றிநிற்றல் கருதத் தக்கது அகத்திணை கூறவந்த பண்டைத் தமிழ் நூல்களும் புறப்பொருளை மிக விரித்துக் கூறும். பட்டினப்பாலை முழுவதூஉம் முன்னூற்றோரடிகளானமைக்கப் பட்டிருக்கின்றது. இவற்றுள் இருநூற்றுத் தொண்ணூற் றேழடிகளிற் புறப்பொருள் விரிவும் ஏனை நான்கடிகளில் மாத்திரம் அகப்பொருட் சுருக்கமும் சொல்லப்பட்டிருக்கின்றன. இவ்வாறே திருமுருகாற்றுப்படை முதலிய செய்யுட்களினும் புறப்பொருட் சிறப்பே பெரும்பான்மையாற் கூறிவைத்து ஏனைய அகவுணர்வின் றிறனெல்லாம் மிகச் சுருங்கவே சொல்லப்பட்டன. புறத்தே விரிந்த அறிவெல்லாம் முறைமுறையே சுருக்கப்பட்டு அகத்தே செல்வுழி அஃதொன்றில் மாத்திரமே உறைந்து நிற்றலிற் புறப்பொருள் வழிவைத்து விளக்கப்படு மகப்பொருளெல்லாம் மிகச் சுருக்கிக் கூறுதலே மனவியற்கைக்கு இயைந்ததாம் என்று மறைமலையடிகள் தமது பட்டினப்பாலை ஆராய்ச்சியுரையிற் கூறியது காணத்தக்கது.

புறமென்பது வெளியிலுள்ள வனைத்தையுங் குறிப்பது கொண்டு தொல்லைத் தமிழர் நிலத்தையு மதிலுள்ள மரம் விலங்கு புள் முதலியவற்றையும் ஐம்பெருங் கூறாக்கி அவற்றி

னியல்பையும் விளக்கினர். மலையும் மலை சார்ந்த இடமும், காடும் காடு சார்ந்த இடமும், வயலும் வயல் சார்ந்த இடமும், கடலும் கடல் சார்ந்த இடமும், சுரமு மதைச் சார்ந்த விடமும் எனப் பகுத்துக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை யென முறையே பெயரிட்டனர். இங்ஙனம் வகைப்படுத்திய நிலங் களைப் பண்டைத்தமிழர் உளத்திலெழுஞ் சில வுணர்ச்சிகளுக் கிடமாக்கியது அவர் நுண்ணிய அறிவினைத் தெள்ளிதிற் புலப் படுத்தும். இதைச் சற்றுநோக்குவோம். அகவுணர்வால் புறப் பொருள் மாறித் தோன்றுவதும், புறப் பொருட்டன்மையால் அகவுணர்ச்சி வேறுபடுவதும் கற்றுணர்ந்தோ ரறிந்ததே. ஒருவ னெவ்வளவு அழுக்குத்தன்மை யுடையவனாயினும் தூய்மை யான விடத்தில் உமிழத்துணியான். கடும்பசியா லொடுங்கிய வன் இயற்கையில் தானருந்த அஞ்சுவனவற்றையும் உண்ணக் கூசான். ஆற்றில் நீராடிக் கடவுளைத் தொழவேண்டுமென்று துணிந்தவன் வைகறையை நோக்கி மகிழுமாறு திருடப் புகுந்த வன் வைகறையை எதிர் பார்ப்பானோ? மக்களுக தானும் மாள வேண்டுமென்ற துணிபுடன் சென்ற நல்ல தங்கைக்குத் தோன் றிய கிணறு, புதிதாய் மணம் நிகழ்ந்து தோழியர் பலருடன் நீரெடுக்கச் செல்லுமொரு மங்கை காணுங் கிணறுபோலிருக்கு மோ?

உளத்திலுள்ள உணர்ச்சிக்கேற்ப, வெளிப்பொருள்கள் மாறித்தோன்றும். கணவனுள்ளவரையில் மிகுதியும் போற்றி வளர்க்கப்பட்டவுடல், அவன் போனபின் கற்புடைய மனைவிக்கு மிக்க அருவருப்பாதல் கேட்டிலர் யார்? நாளெல்லாம் உழைத்து இளைத்த நன்மகன், ஞாயிறு மேற்கடல் செல்வதைக் கண் ணுற்று அகமகிழ்ந்து மனைவி மக்களைக் காண வீடு செல்லுமாறு கொடும் பிணியால் வருந்து மொருவன் வெய்யவனின் செவ் வொளியைக் காண்பனோ? இனி, புறப்பொருள் அகவியற்கை யைமாற்றுவதற் கெடுத்துக் காட்டாகச் சில காண்பாம். ஓங்கி வளர்ந்த மலைப்புறத்துத் தனியே திரியுமொருவன தெண்ணங் கள் பலர் சூழ மாளிகை யொன்றிலமர்ந்திருக்கும் முதலாளியின் நினைவுகளை யொத்திரா வென்பது திண்ணம். கடல் கொந்தளித்

தாட புலி போற் சீறும் அலைமேற் படகை விரைந்து செலுத்தும் பரதவனது உளநிலை, சிறு குளத்தில் உடை தோய்த்து நிற்கும் மருதநில மகனது அகப்பான்மையை ஒக்குமோ? செவிடு படும்படிப் பலவகை ஓசைகளெழுமிடத்தி லமர்ந்தவன் அகவமைதி பெற்றிருத்தலரிது. இயற்கையி லவனெத்துணை யமைதி வாய்ந்தவனாயினும், இன்னொலி இடைவிடா தவன் காதில் நுழைந்தால் சீற்றங்கொள்வா னென்பதி லையமில்லை. யாதானுமொன்றுபற்றிச் சினந்தவன் வெளியிலுள்ள பொருட்களில் தன் சீற்றத்திற்குத் துணையானவற்றைக் காண்கின்றானேயன்றி அதைத் தணித்தற்குரியவற்றைப் பாரான் தன் மனைவிமேல் வெறுப்படைந்தவன் அவள் செய்கையிலும் பேச்சிலும் தகாதனவே காண்பான்; தக்கவை அவன் கண்ணிற்கு மறையும். "மருண்டவன் கண்ணிற்கு இருண்டதெல்லாம் பேய்" என்பது பழமொழியன்றோ? முற்றத்துறந்த முனிவர்கள் ஒருகால் அகத்தையும் புறத்தையும் பிரித்து ஒன்றிலொன்று செல்லாமற் காத்தல் கூடும். அத்தகைய பெரியோ நம் அகவமைதி பெறும் பொருட்டுப் புறவமைதி நிறைந்த காடு மலை குகைகளை நாடிச்செல்வர்.

வெங்கதிர் மிகவும் வீசுந் தமிழ் நிலத்தை யொத்த நாடுகளில் வெம்மையால் மக்களுக்குப் பெரிதும் வருத்தம் நேர்கின்றமையால் வெப்பத்தை யவர் விரும்பார். காலை ஞாயிறு கடுங்கதிர் பரப்பி யாவையும் வாட்டு நம் நாட்டிற் பெரும்பாலும் நெருப்பினன்மை வெறுப்பையே தரும். ஆதலின் வெப்பத்தோடு தொடர்புடைய தமிழ்ச் சொற்கள் பலவும் இன்னாப் பொருளையே குறிக்கும். சுடு, கொளுத்து, வாட்டு, பொங்கு, காய், வெம்பு, எரி, புழுங்கு, வேதல், கொதித்தல், மூள்தல், புகைதல், வெயில், தீ, அனல், கனல், தழல், அழல் என்பவற்றை யாராய்வதா லது நன்கறியபட்டும்.

"என்பிலதனை வெயில் போலக் காயுமே
அன்பி லதனை யறம்" (குறள்; அன்பு, எ,)

ஆகலின் உளம் நொந்து வாடும் நிலையை வெப்பத்தோடு புணர்த்திக் கூறுவது தமிழ் நிலத்திற்கு மிகவும் பொருத்தமானது.

இதுபற்றி யன்றே, காதலனுங் காதலியும் ஒருவரை யொருவர் பிரிந்து புண்படுவதைத் தீப்போலுங் கொடிய சுரமாகிய நிலத்துடனும் முதுவேனிலாகிய பெரும்பொழுதுடனும் நண்பகலாகிய சிறுபொழுதுடனும் பண்டைப் புலவர் சேர்த்தமைத்தார். தலைவனைப் பிரிந்த தலைவியின உளம் அன்பெனும் ஈரஞ்சற்று மிலாது காய்ந்து, உலையிலூதுந துருத்திபோ லவள் நெட்டுயிர்த்து, உள்வெதும்பிக் கலங்கித் தனிமையுற்ற நிலைமையை உள்ளவா றுரைப்பதற்கு, 'நிழலும் நீருமில்லாத அழல் வெங் கானமும்," அடிகொப்புளிக்க நிலஞ் சுடுங் கோடையும் காங்கை தாங்குதற்கரிய நண்பகலும் ஒன்று கூடின.

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்
வருவர்கொல் வயங்கிழாய் வலிப்பல்யான் கேளினி;

அடிதாங்கு மளவின்றி யழலென்ன வெம்மையாற்
கடியவே கனங்குழாய் காடென்ற ரக்காட்டுட்
டுடியடிக் கயந்தலை கலங்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே;

இன்பத்தி னிகந்தொரீஇ யிலைதீந்த வுலவையாற்
றுன்புறூஉந் தகையவே காடென்றா ரக்காட்டு
ளன்புகொண் மடப்பெடை யசைஇய வருத்தத்தை
மென்சிறக ராலாற்றும் புறவெனவு முரைத்தனரே;

கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலாற்
றுன்னரூஉந் தகையவே காடென்றா ரக்காட்டு
ளின்னிழ லின்மையான் வருந்திய மடப்பிணைக்குத்
தன்னிழலைக் கொடுத்தளிக்குங் கலையெனவு முரைத்தனரே
எனவாங்கு,

இனை நலமுடைய கானஞ் சென்றோர்
புனை நலம் வாட்டுந ரல்லர் மனைவயிற்
பல்லியும் பாங்கொத் திசைத்தன
நல்லெழி லுண்கணு மாடுமா லிடனே." (பாலைக்கலி; ௧௧.)

இப்பாலைக்கலி, அகத்திற்றோன்றிய பிரிவாற்றாமையெனு முணர்ச்சியை பெரிதும் பெருக்குதற்குரிய வெளிப் பொருட் சேர்க்கையுடன் அமைக்கப் பெற்றிருத்தல் காண்க

''கோவலன் பிரியக் கொடுந்துய ரெய்திய
மாமலர் நெடுங்கண் மாதவி போன்றிவ்
வருந்திறல் வேனிற் கலர்களைந் துடனே
வருந்தினை போது நீ''

(சிலம்பு - புறஞ்சேரி ; வரி ; சஅ - ருக)

என்பதையு நோக்குக. இங்ஙன மகத்தையும் புறத்தையுமொன்ற வைத்தல் தமிழ் மரபு. இது பிறநாட்டார் நூல்களிற் காணக் கூடிய தொன்றன்று பட்டினப்பாலையில் இருநூற்றுப் பதினெட் டடிகள் காவிரியையும் மருத நிலத்தையும் செம்படவர் சேரி யையும் கடலையு நகரையும் பற்றிக் கூறுவனவாதலால் பாலை யெனு மகத்திணைக் கது ஒக்குமோ வெனின், இங்குப் பிரிதல் நிகழாமையின் அது குற்றமன் றென்பதையும், பின்வரு மடிக ளில் மருதநிலம் பாழாகி நீரற்றுப் போய், மன்றங்களழிந்து நரிகள் ஊளையிடு மிடமாவதைக் குறித்துக் கூறப்படுவதால், பாலைத்திணையின் தன்மை ஒருவாறு காட்டப்பட்ட தென்பதை யுங் கருத வேண்டும்.

(தொடரும்)

---

# ஒரு குறளுண்மை விளக்கம்

[ஜலகண்டபுரம், அ. வரதநஞ்சைய பிள்ளை]

அடியில் வரும் திருக்குறளை ஊன்றிப் படித்துப் பல்காற் சிந்தித்த காலையில் என் சிற்றறிவிற்குத் தட்டுப்பட்ட சில உண் மைகளை ஈண்டுத் தருகின்றேன்.

''வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில.'' (திருக்குறள் க - ச)

இதற்குப் பரிமேலழகர் எழுதிய பொழிப்புரை:—"ஒரு பொருளையும் விழைதலும் வெறுத்தலு மில்லாதவ னடியைச் சேர்ந்தோர்க்கு எக்காலத்தும் பிறவித் துன்பங்களுளவாகா" என்பதாம்

கடவுள் வாழ்த்துக் கூறும் முதலதிகாரத்து நான்காஞ் செய்யுளிதுவாகலின், மேற்போந்த மூன்று குறட்களோ டிதற் குளதாம் இயைபை, முதற்கட் கூறுதும். யாண்டும் காரண மின்றிக் காரியம் நிகழாமையின், காணப்படும் புகையைக் கொண்டு காணப்படாத நெருப்பை யுண்டெனத் துணிதல் போலக், காணப்படும் (சடப்பொருட்களாம்) பிரபஞ்சத்தை நோக்கி இதனை ஆக்குவாரொரு தனிமுதற்பொருள் உண்டெ னக் கொள்ளும் கருதலளவை முற்றிலும் பொருந்துமென்றும், எல்லா வெழுத்துக்களும் வாய்திறந்தே யோதப் பெறுதலின், வாய்திறந்த மாத்திரையே இயல்பாயெழும் அகர வுயிரோடு அவ்வெல்லா அக்கரங்களும் கலப்புற்றிருக்குமாறே இறைவனே இவ்வெல்லாவுலகும் கலந்து நிற்கின்றனவென்றும், கருதல், உவ மம் என்னும் இரண்டளவைகளால் கடவுளுண்மையையும், வியாபகத்தையும், "அகர முதல" என்னும் முதற் குறளால் மொழிந்து வலிப்புறுத்துப், பின்னர் "கற்றதனாலாய" என்னும் இரண்டாங் குறளால், மேலுணர்த்தபபட்ட கருதல், உவமை அளவைகளும் போலியல்ல. அக்கடவுளின் அருளைப்பெற றுத் துய்த்த சுவாநுபூதிமான்கள் தம் அநுபவங்களை மற்றையோர் பொருட்டு அருளிச்செய்தனவாகிய உரையளவைகளும் ஒத்த லின் இதிற் சிறிதும் ஐயுற வேண்டா என நிலைநாட்டி, அவ் வாகம வறிவின் பெரும்பயன் அக்கடவுளை மனமொழி மெய்க ளான் வழிபடுதலேயாம். அது செய்யாவழிக் கல்வியறிவாற் போந்த பயன் ஒரு சிறுதும் இல்லை யென்றியம்பி, "மலர்மிசை" என்னும் மூன்றாங் குறளில், முற்கூறியவாறு இறைவனை வழிபடு வோருள்ளத்து அவன் மகிழ்ந்து மெல்கி அருள்வடிவோ டமர்ந்து விளங்குதலையும் என்றும் அழியா வின்பங்கைவருதலைப் பொதுவகையானும் புகன்ற நம் தெய்வப் புலவர்பெருமானார், இந்நான்காங் குறளில், மேலுண்டென நாட்டிய கடவுளின் சிறப்

பியல்புகளையும். வழிபடற்குரிய உயிர்களின் பொது வியல்புகளை யும் பிறவியின் துன்பக் கூறுபாடுகளையும். அத்துன்பங்களின் நீங்கி வீடடைவதற்கேற்ற சிறப்பியல்புகளையும், அவற்றைச் சாதித்தற்கேற்ற உபாயங்களையும் அங்கை நெல்லிக்கனியேபோல் நன்கு விளக்கி யுள்ளாராதலின் இக்குறள், முதல் மூன்று குறட் களோடியையு பெற்று, மேலாம் நிலையாம் நாலாம் நிலையில் வீற் றிருந்து மிளர்வதாயிற்று

தெய்வத்திருமணங் கமழும் இத்திருச்குறளில் நிறுவப் பெற்ற சொற்றொடர்களாற் பெறும் பொருட்கள் மூன்றுள் ளன. (1) வேண்டுதல் வேண்டாமையிலான். (2) அடிசேர் வார். (3) இடும்பை. இவற்றாற் போதருவன:—வேண்டுதல், வேண்டாமை யென்னும் இரண்டு தன்மைகளுமற்ற கடவுள் ஒருவர் உளர். அவரடி சேர்ந்தல்லது உய்யும் வழி பெறாத ஆன் மாக்கள் பல வுள. இறைவனடி சேர்ந்து பெறற்குரிய அழியா வின்பத்தைப் பெற வொட்டாது இடைநின்று தடுத்து, (விருப்பு வெறுப்பு) வேண்டுதல் வேண்டாமைகளைத் தோற்றி, உயிர்கட் குப் பிறவித் துன்பங்களை விளைக்கும் மூலமலமு முண்டு. எனப் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளுண்மை அவற்ற தியல்பு களை முறைப்பட வகுத்தோதிய வாறும்.

இனி அம் முத்தொடர்புப் பொருட்களில் முதற்கண் ணின்ற "வேண்டுதல் வேண்டாமையிலான்" என்னும் பொரு ளைப்பற்றிச் சிந்திப்பாம்.

இத் தொடர், கடவுளின் சிறப்பியல்பு கூறி, அதனானே உயிர்களின் இயல்பையும் குறிப்பித்தவாறு. என்னை? "ஒன்று நீயல்லை யன்றி யொன்றில்லை"..................................

"விண்ணாகி மண்ணாகி யித்தனையும் வேறாகி" என அவன ருள்பெற் றுராத்துய்த்த அநுபூதிச் செல்வர்கள் அறிவித்தாங்கே, எல்லாப் பொருளோடும் தோய்ந்தும் தோயாது நிற்கும் கடவுட் டன்மை, ஒன்றை வேண்டலும், ஒன்றை வேண்டாமையுமற்ற (விருப்பு வெறுப்பறநின்ற) நன்னிலைமையான் வருவதென

விளக்கி, இவ்விருப்பு வெறுப்புக்கள் காரணமாக எய்தநின்ற இன்பதுன்பங்களை இயல்பின் நீங்கி (அநாதி முத்தனுகி) அழியா இன்பவுருவினனுக விளங்குகின்றனன இறைவன் எனக் குறிப்பித்தலின், "இன்பமும் துன்பமு மில்லானே யுள்ளானே" "குணங்கடா மில்லா இன்பமே" என நம் ஆளுடையஅடிகள் அருளியவற்றையும் நோக்குக. "இலான்" என ஒருமைச் சொல லாலுரைத்தார். அவ்வொரு முதல்வனையன்றி வேறில்லை, உலகினர் வழிபடும் பற்பல கடவுளுமாகின்றான் அவ்வொருவனே எனத் தெருட்டுதற்கு, "யாதொரு தெய்வங்கொண்டீர் அத் தெய்வமாகி யாங்கே - மாதொரு பாகனர் தாம் வருவர்" என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தக் கருத்து மீதேயாம்.

இனி "வேண்டுதல் வேண்டாமையிலான்" கடவுள் எனக் கூறியவாற்றால் அவனடி சேராதார் அவ்விரண்டு முடையராய் யாண்டு மிடும்பையே துய்ப்பாராயினர் என அருத்தாபத்திபோ தரும். இக்குறளுரைக் குறிப்பில் பரிமேலழகர், "அடி சேர்ந் தார்க்கு அவ்விரண்டும் (வேண்டுதல் வேண்டாமை, இன்மையின் அவை காரணமாக வரும் மூவகைத் துன்பங்களும் இலவாயின" என்று நுனித்துணர்த்துவதையும் கருதுக. இறைவனது பண்ணற்கரிய பல் பெருங்குணங்களுள் ஏனையவற்றை எடுத்தோதாது "வேண்டுதல் வேண்டாமையின்மை" என்னும் ஒன்றை மாத்திரம் விதந்து கூறிய குறிப்பு உயிர்த்தொகுதிகள் இவ் வேண்டுதல் வேண்டாமைகளை இயற்கையே மூலமலச் சார்பால் அடைந்து, அவ்வாற்றான் உள்ளத்தில விருப்பு வெறுப்புக்களோடு கருமம் புரிந்து அவை காரணமாக வரும் இன்பதுன்பங்களை நுகரப் பிறவிப் பெருங்கடலில் வீழ்ந்து சுழன்று தடுமாறுவனவாயின என்பதுணர்த்தற்கேயாம் இங்ஙனம் "வேண்டுதல் வேண்டாமையிலான்" என்னும் இச்சிறு சொற்றொடர் இறைவன் சிறப்பியல்புகளை உயிர்களின் இயற்கைத் தன்மையோடொருங்குபதேசித்து மற்றும், இவ்வண்ணம் துக்கக்கடலிற் சுழலும் உயிர்கள் விருப்பு வெறுபபற்றாலன்றி, மெய்யின்பத்தைத் தலைபடாவாகலின், இறைவனைப்போல அவ்விருப்பு வெறுப்பற நின்றுய்தி பெற முயலவேண்டும் என அடுத்து வரும் "அடி சேர்தல்"

என்னும் பொருண்மைக்குத் தோற்றுவாய் செய்து நின்றதென்க.

உடலும் உள்ளமும் உலகும் போகமும் ஒருங்கிருக்க, உலகப் பொருட்களில் பற்றுச்செய்யாது நிற்றல் எங்ஙனம் இயலும்? ஈது பொருளில்கூற்றேயாம் எனின், அற்றன்று. மனத்தானினைத்தன்றே உலகப் பொருட்களிற் பற்றுண்டாகின்றது. அம் மனம என்றும் அழிவற்ற இறைவனையே நாடி நிற்குமேல் அவ்விருப்பு வெறுப்புக்கள் பற்ற வழியின்றிக் கழியும், ஆதலின் இதையன்றிப் பிறிது செயலில்லையென உணர்த்துவார் இறைவன அடிசேர்தல் வேண்டுமென்றனர். இதனானே உயிர்கள் துன்பம் அறவே நீங்கி இன்பம் முழுது மெய்துதற்கேற்ற மார்க்கம் கூறப்பட்டது காண்க. "அடிசேர்தலாவது" இடைவிடாது நினைத்தல்" எனப் பரிமேலழகர் 'மலர் மிசை' என்னும் மூன்றுங் குறளுரைக் குறிபபில் விளக்கினர். நினைப்பினாலன்றி விடயப்பற்றுக்கள் தோன்றி வலியுறா என்னும் உண்மை, பகவத்கீதையில் "த்யாயதே...பிரணஸ்யதி" என வரும் சுலோகத்தால் பரம்பரை அனர்த்த காரணங்களோடு விளக்கப்படுகின்றன. இதன் பொருள்:—"மனிதன், விடயங்களை நினைவு கூர்வதால் கருதப்பட்ட அவ் வெளிப்பொருட்கும், கருதிய அவ்வுட் பொருட் (மனத்துக்) கும், ஓர்வகைத் தொடர்பு முதற்கட்டோன்றி, அதை அடைவேன் என்னும் ஆசையும், அதனை அடைய வொட்டாது தடை செய்யும் காரணங்களின் மேல் வெறுப்பும் உண்டாகி அதினின்று முறையே மோகம், மனவேற்றுமை, அறிவீனம் முதலிய துர்க்குணங்கள் படிப்படியாய் ஒன்றினொன்று தோன்றி மனிதனைக் கெடுக்கத் தலைப்படுகின்றன என்பதாம். நன்கு சிந்திப்போமாயின் மனதின்விடயப் பாய்ச்சலே எல்லாப் பெருங் கேட்டுக்கும் மூலகாரணமென்பது தெற்றென்னும். கேடுகள் முளைக்குந்தானமாகிய இவ்விடய சிந்தனையைக் கெடுப்பதற்கேற்ற வழி அதற்கு மாறாகிய வேறோர் சிந்தனையைச் செய்வதேயாம். யாதொரு நினைப்புமின்றி மனதை நிறுத்தல் கூடாதோ? எனின் ஒருக்காலும் கூடாது. இயற்கையை யாரே தடுப்பவர்? பஞ்சீகரணத்தில் மனம் வாயுவின் கூறாய்த்

தோன்றினதென்பர். வாயு, யாதேனும் ஓர் பொருளைப்பற்றியன்றி நில்லாதவாறே, (காரணத்தின் குணம் காரியத்து மிருக்குமென்னும் நியமப்படி) மனமும் யாதேனுமொன்றை நினையாது சும்மா விருத்தல் இயலாததொன்றே. ஆதலின் இறைவனை நாடி நிற்றலில் மனதை முற்படச் செய்தல்வேண்டும். இஃதொன்றே பிறவித்துன்பத்தை அற மாற்றி அழியா இன்பத்தாழ்த்தும் பெருஞ்சாதன மாகின்றது. இவ்வுண்மையை,

> "சிந்தனை நின்றனக் காக்கி நாயினேன்றன்
> கண்ணிணை நின்றிருப்பாதப் போதுக் காக்கி
> வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன்
> மணிவார்த்தைக் காக்கியைம் புலன்க ளார
> வந்தெனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
> மாலமுதப் பெருங்கடலே! மலையே! யுன்னைத்
> தந்தனை செந் தாமரைக்கா டனைய மேனித்
> தனிச்சுடரே! யிரண்டுமிலித் தமிய னேற்கே"

என மணிவாசகப் பெருமானும்,

> "நெஞ்சம் உமக்கே யிடமாக வைத்தேன்
> நினையாதொரு போதுமிருந் தறியேன்"

என வாகீசப் பெருந்தகையாரும் கூறித் தாம் ஒழுகிய நன்னெறியைப் பிறரும் அடைந்து பேறெய்தக் கருதிய பெருங்கருணையை வெளியிட்டனர்.

நம் ஞான நூற்களில எங்கு பார்ப்பினும் பெருவழக்காய்த் தோன்றும் உபதேசம், அவாவறுத்தலே "ஆசையறுமின்கள் ஆசையறுமின்கள், ஈசனோடாயினும் ஆசையறுமின்கள்." "அற்றது பற்றெனில் உற்றது வீடு" "அவாவென்ப எல்லா வுயிர்க்கும் எஞ்ஞான்றும், தவாஅப் பிறப்பீனும் வித்து!" "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்" "ஆசையெனும் பெருங்காற்றூ டிலவம் பஞ்செனவு மனமலையுங் காலம்—மோசம் வரும்" எனப் பெரியோர் பலரும் ஒரே வாக்காய் முழக்குகின்றனர். ஆசையை நீக்குவது எங்ஙனம்? உலகப்பற்றுக்களை

நீக்கியபின் அவ் வாசைக்குப் புகலிடந்தான் எங்கே? எனவினுவுதிரேல், "மற்றுப் பற்றெனக் கின்றி நின்மலர்ப் பாதமே மனம் பாவித்தேன் - பெற்றலும் பிறந்தேனினிப் பிறவாததன்மை வந்தெய்திநேன்" எனச் சைவசமயாசாரியர் அருளியவாறு பரமகருணாநிதியின் பால் அவ்வாசை செல்லப் பயிலல் வேண்டும். மருந்துண்பதே பிணி நீக்கத்திற்கும் தேக சுகத்திற்கும் அமையுமாறே, கடவுள்பாற் பற்றுச் செய்வதே, அப்பற்று முதிர்தற்கேற்ப இப்பொய்யுலகப் பற்று விடற்கும் உதவியாகின்றது. இதனை மிக எளிதாக "பற்றுக பற்றற்றான் பற்றினையப் பற்றைப் - பற்றுக பற்று விடற்கு" என நம் தெய்வப்புலவர் செப்பினர். "வேண்டுதல் வேண்டாமை யிலான்" எனக் கடவுளின் குணநலங்கூறிய இப்பொருளையே ஆன்மாக்களின திறத்துப் பயனுறச் செய்வாராகி மற்றோரிடத்து "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை, மற்றது வேண்டாமை வேண்டவரும்" எனச் சொல்லணியும் பொருட்செறிவும்படத் தேவர் மொழிந்துள்ளார். இறைவன்பாற் பற்றுச் சிறிதே செய்யும் ஆற்றலினேம், அதனாற் போதரும் பயன் யாதாகும்? என்று கருதற்க. எத்துணைச் சிறிது பற்று இறைவன்மாட்டுச் செயினும் அதற்கேற்ப வரக்கடவன வாகிய உலகத் துன்பங்கள் நீங்கும் என ஊக்குவார். "யாதனின் யாதனின் நீங்கியான் நோதல் - அதனி னதனின் இலன்" எனவும் கட்டளையிட்டனர்

இனி ஆசையினால் பிறவித்துயரம் பெறுவதெங்ஙனம்? எனின் விருப்பு வெறுப்புடன் செய்யுங் கருமங்கள் ஆகாமியமெனப்பட்டு முன்னைப் பிறவிகளில் ஈட்டப்பட்டு மேல்வரும் பிறவி நுகர்ச்சிக்கெனத் தொகுத்துள்ள சஞ்சிதத்துடன் கலந்து இவ்வுடலூழ் (பிராரப்தம்) முடிவுற்ற காலையில் பக்குவப்பட்டுப் பயன்தர நின்று இங்ஙனம் பிறவியை மேன்மேலும் விளைத்து வருமென்க. இவ்வாறு விருப்பு வெறுப்புக்கள் மிக ஒவ்வொரு பிறவியிலும் முற்செய்வினையைத்துய்த்துக் கழிப்பதனோடமையாது, மீண்டும் ஆகாமிய வினைகள் ஈட்டப்பட்டுக் குறையாவாய் நிரம்புதலின் பிறவிப் பெருங்கடல் நீந்தப் பெறுமாற்போம். அதற்காகவே இறைவனடி சார்தல் வேண்டும் என்றும், இவ்வுல

யில் ஒருவன் எத்துணை இன்ப நலங்களைப் பெறினும், பெறும் அவையும், பெறுகின்ற தானும், நிலை அழிவுடைப் பொருட்களா தலின் தானுள்ள ஞான்றே அவைகெடினும், அவை யுளதாக வும் தான் மரணவாய்ப்படினும் பிற காரணங்களானும் அவ்வப் போழ்து துன்பவுணர்ச்சி தலைப்படா தொழியாமையின் அதற் கேற்ற தன்னிகரில்லா மருந்து, தனக்குவமையில்லாதான் தாள் சேர்தலே யன்றிப் பிறிது கிடையாது என்றும், உள்ளத்தில் பெருங்காதலை மிக எழுப்பும் விஷயப் பற்றுக்களினின்றும் மீட் கும் பெருந்துணை, அறவாழியந்தணன் தாளேயாமென்றும், பல்லாற்றானும் இந் நான்காங் குறளின் நாட்டிய வுண்மையைச் செய்கையில் கொணர்கவெனத் தெருட்டிய நம் உத்தரவேத முடையார், இங்ஙனம் மனத்தால் கருதியதனோ டமையாது வாயார வாழ்த்தியும் தலையாரக் கும்பிட்டும் அவனருள்வழி நிற்றல் வேண்டும் என வுணர்த்துவார், "இருள்சேர்" "பொறி வாயில்' "கோளில் பொறி" என்னும் ஏனை மூன்று திருக்குற ளானும் புகல்வாராயினர்.

உலகப் பொருட்கள் நேரில் காட்சிப்பட்டு எமதறிவைக் கவர்ந்து மனதை யீர்த்து இன்பம் வழங்கவல்லன வாகத் தோன்று தலின், அவற்றின்பால் எளிதில் ஈடுபடுகின்றேம்; கடவுட் பொருள் அங்ஙனம் காட்சிக் கிலக்காகாமையின் மனம் செல்லப் பெறுதயர்க்கின்றேம்; என்பிரேல், நாம் இன்பமென விழையும் பொருட்களையும் அவற்றைத் துய்த்தற் கிடமாகிய தனுகரணங்க ளையும் ஒருசேரக் கூட்டித் தந்த தனிப்பெருந் துணைவன் யாவன்? எனச் சிறிது நன்றியறிவுடையீராய்க் கருதுவீராயின் அன்னவனையன்றி மற்றியாரையும் நினைக்கும் கடப்பாடு பெறீர். நம் ஆளுடைய நம்பிகள் - திருமழபாடித் தேவாரத்துள்,

"பொன்னார் மேனியனே புலித்தோலை யரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை யணிந்தவனே
மன்னே மாமணியே மழபாடியுண் மாணிக்கமே
அன்னே உன்னையல்லால் இனியாரை நினைக்கேனே"

என்றருளியவாறே, தோன்றாத்துணையாய்க் கணந்தோறும் நமக் கினியவே செய்து நிற்கும் பேரருளாளனையன்றி யாரை நினை வது? (தொடரும்)

# 'ஆலவா யருளாடல்'

## கால்மாறி நடித்த காதை

['குறு முடியான்']

உலகெலாம் உணர்ந்து ஓதற் கரியவன்
நிலவு லாவிய நிர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

கண்ணுதற் பெருங் கடவுளும் கழகமோடமர்ந்து பண்ணுறத் தெரிந்தாய்ந்த பாங்குறு தமிழ் மண்டிலம் சேரநாடு, பாண்டிநாடு, சோணாடு என்ற மூன்று பிரிவுடையது. இதில் மங்கலம்புனை பாண்டி நாடாகிய மகளுக்கு முகமாகச் சொல்லப்படுவது மதுரை. சங்கம் வளர் கூடலென்று சிறப்பித்துச் சொல்லப்படும் இதனைத் தலை நகராகக் கொண்டு பழம்பதியாம் பாண்டி நாட்டை ஆண்டுவந்த அரசர்கள் பாண்டியர்களாவர். இப்பாண்டிய மன்னர்களில் விக்கிரம பாண்டியன் என்பவரொருவர். இவருக்குப் புதல்வராகத் தோன்றியவர் இராசசேகர பாண்டியர்.

இவர், தம்மைப் பெற்று வளர்த்து, உரிய பருவத்தே இம்மைக்கும் மறுமைக்கும் நன்மை புரியும் நற்கலைகளைப் பயிற்றுவித்த தந்தையார் சொல்வழி யொழுகும் தூயதன்மையர். ஆலவாய் அவிர்சடைக் கடவுளரிடத்து இடையறா அன்பு செலுத்துபவர். இரு முனிவர் வேண்டுகோட் கியைந்து, வென்றுளே புலன்களைந்தார் மெய்யுணருள்ளந்தோறும் சென்றுளே அமிர்தமூற்றும் சிவபெருமான் திருநடம்புரி வெள்ளிமன்றுளே சென்று சென்று நடங்கண்டு என்புக நின்றுருகி எழில் கண்டு களிப்பதைப் பொழுது போக்காக உடையவர். அப்பெருமான் ஆடல்புரி அரும் பரதகலை நீங்கலான அறுபான் முக்கலைகளையும் ஆசறக் கற்ற அறிஞர். நிற்க,

இவர் காலத்தே சோணாட்டைப் புரந்து வந்தவர் கரிகாற் சோழனெனும் புரவலர். இவர் எண்ணெண் கலைகளையும் ஐயந்திரிபறப் பயின்றவர். திருவானைக்காவில் எழுந்தருளியிருக்கும்

நன்னாவற் பெருமானை நலமுறப் பணிந்து நாளும் வழிபடுவர். தமிழ் மொழியிடத்தும் தமிழ்ப் புலவரிடத்தும் பேரன்பு வைத்துப் பேணி வருபவர். ஆகவே, தம்மாண்மனையில் அரும்பெரும் புலவர் பலருடன் அளவளாவி மகிழ்ந்திருப்பதே அவர்தம் அறநெறி.

இப்பேரரசர் புலவர்களிலொருவர் பாண்டி நாட்டரசனைப் பார்த்துச் செல்லப் பரிவுற்று அவன் வீற்றிருக்குங் கோயில் முன்றிலை அடுத்தனர். அரண்மனை வாயிற் காப்பாளர் வாயிலாகத் தமது வரவை மன்னற் கறிவித்தனர். மன்னனும் புலவரென்ற அளவில் பேருவகை பூத்துப், போயழைத்திடுமினின்னே, போயழைத்திடுமினின்னே, போயழைத்திடுமினின்னே யென விரைபொருளில் வாயிற் காப்பாளர்க் காணையிட்டனன். அவர்களும் புலவரை யடைந்து ஆணையுணர்த்தி அன்புடன் அழைத்துச் சென்றார்கள். புலவர் வேந்தனை யடுத்ததும் அவரை யன்பொடு பணிந்து, 'அரசே, யான் ஓரிசைப் புலவன். இருப்பது சோணாடு. பிழைப்பது கரிகால் மன்னனகம். எம்பெருமானெழுந்தருளு மின்னிடந்தொறும் எழுச்சியுளத்துடன் சென்று தொழும் வேட்கையன். இலைமுகபைம்பூணிறையும் இறையோடொக்குமாதலின் நும்பா லன்பால வந்தனன்' என்றனன்.

என்றனு மிறைவன், 'புலவ! என்பால் வந்த நீ வேண்டுவது யாது. விரைந்து கூறுக: இசைந்து தருவல்: என்றியம்பினன்.

புலவர்—'மாநிலங் காக்குமன்ன! காவலனாவான் கலைகளெட்டெட்டும் கற்றறி புலவனாதலொருதலை. எந்நாட்டு மன்னனோ எண்ணெண் கலையு மினிதுணர் புலவன். தாமும் நாலிரட்டியெட்டு நற்கலையும் நன்கறிந்தவரெனவே நம்புகின்றேன்.'

அரசன்—புலவ! உள்ளதை யொளித்தலொவ்வாது. உயிர்களினுயர்நிலை கருதி உளந்தோறொளிந்துறை யிறைவன் உவகையாடற்கலையாம் பரத நூலொழிந்த பிறவற்றையே பயின்றுள்ளேன்.

புலவர்—வேந்தே! தாங் கூறுவது முற்றும் சரியே. எனினும், பரதக்கலை பயின்றிருந்தாலொழிய பரதநாட்டியம் புரியும் மக்களினுயர்வு தாழ்வுணர்ந்து வரிசை பிசகாது பரிசிலளித்

தல் இயலாதன்றோ? ஆதலின் அது மன்னன் முறைக்குக் குறைவு தருவதாகுமே.

அரசன்—அங்ஙனமாயின் அறிஞ! அக்குறை நீங்குமாறாக வாயினும் அவ்வாடலை ஆர்வமுடன் விரைவிற் கற்பல். எங் குறை நீங்கத் துணைபுரிந்த நீவிர் எம்மருமை விளக்கு வரிசைப் பரிசும் அன்புடன்பெற் றின்புற்றேகுவிர்.

புலவரேகியது முதல் தனக்குப் பரதநூற் பயிற்சியின்மைக் குக் கவன்று, இரவு பகலா யிளைத்துப் பின் அமைச்சர் முதலி யோரா லழைத்துவரப்பட்ட பரத நூலாசிரியருடன் அவ்வாடற் கலை பயிலலாயினன். ஆலவாய் அண்ணலருளால் சால வக்கலைத் தேர்ச்சியடைந்தனன். பரத நாட்டியப் புலவர்க்கு, அவர்வரு மையறிந்து முன்னிலும் பன்மடங்கு பரிசளித்துவந்தனன். எனினும் தான் பயிலும்பொழுது தனக்கேற்பட்ட மெய் வருத் தம் உழைப்பு முதலியவற்றை வெள்ளியம்பலவாணரைக் காணுந் தொறும் உள்ளியுள்ளிப் பெருமூச்செறிவன். வலக்காலையூன்றியே தாண்டவம்புரியும் அம்பலவாணர் நிலையைநோக்கி யக முருகுவன். வலக்கால் நோகுமே யிதனை மாற்றி இடக்காலூன்றி நடம்புரிய வேண்டுவதே முறையெனத் துணிந்தனன். அத்துணிவை நிறை வேற்றச் சிறந்த நாளெதுவெனச் சிந்தித்தனன். உமையம்மை யார் இறைவனை வழிபட்ட இரவாகிய சிவராத்திரியே ஏற்றமுற்ற தென எண்ணினன். அற்றை நாள் ஆலவாய்ப் பெருமாற்கு அழகுற விழா வியற்றி அவ்வழகர் அருளொழுகு நிலை கண்டு சேவித்து அம்பலவாணர் திருமுன் படைந்து உள்ளும் புறமு மொத்த தன்மையுடன் அங்கை கூப்பி அகமிக நைந்து, 'எம் பெருமானே, நின்ற திருவடியை எடுத்து வீசி, எடுத்த திருவடி யைக் கீழே யூன்றி அடியேன் காணும்படி இன்று மாறியாடித் தமியேனது வருத்தம் முழுவதையும் தீர்த்தருளும். அங்ஙனஞ் செய்யா தொழிவீரேல் இதோ என் உறையிலுள்ள உடைவா ளுருவி உன் முன்பு நாட்டி உயிரை மாய்த்துக்கொள்வேன்' என்று கூறி மாளப்புகுந்தனன்.

அன்பன் மாளல் நீக்கி ஆளக்கருதிய அந்நுதற்கட் பெரு மான் ஆடற்கலை யுணரறிஞனுக்கிரங்கித் தமது இடக்காலூன்றி

வலக்கால் எடுத்து வீசிமாறி யாடிக்காட்டினார். காண்டற் கரிய காட்சி கண்ட கன்னி நாடனும், கழிபேருவகைக் கடலுளாழ்ந் தனன். உண்மை யறிவின்ப வெள்ளத்து ளாழ்ந்த இராச சேகரன் அம்பலவாணரிடத்து ஈடுபட்டுருகி,

பழையாய் புதியாய் சரணம் பணிலக்
குழையாய் சரணம் கொடுவெண் மழுவாள்
உழையாய் சரணம் உருகா தவர்பால்
விழையாய் சரணம் விகிர்தா சரணம்.

இருளாய் வெளியாய் சரணம் எனையும்
பொருளாக நினைந்து புரந்தரன்மால்
தெருளார்த நடம் தெரிவித்தெனை யாள்
அருளாய் சரணம் அழகா சரணம்

என்று போற்றிப் பின்னும் எம்பெருமானே! இருமுனிவர் வேண்டுகோட் கிணங்கித் திருநடம்புரியும் தாம் எளியேனையாட் கொண்டருளும். கால்மாறி யாடியருளிய காட்சியை யென்றும் அன்பர் கண்டின்புறும் வண்ணம் நின்றருளல்வேண்டு மென்று வேண்டியபடியே கால்மாறியாடுந் திருக்கோலத்துடனே இன்றும் நின் றும்பருந் தொழும் அம்பலவாணர் இம்பரை மகிழ்வித்து வருகின்றார்.

பெருமாறிற் கிளர்தடந்தோள் ஒருமாறன் மனங்கிடந்த
புழுக்கம் மாற
வரும்ஆறிற் கண்ணருவி மாறாது களிப்படைய
மண்ணும் விண்ணும்
உருமாறிப் பவக்கடல்வீழ்ந் தூசலெனத் தடுமாறி
உழலும் மாக்கள்
கருமாறிக் கதியடையக் கால்மாறி நடித்தவரைக்
கருத்துள் வைப்பாம்.

என்று மின்பம் பெருகு மியல்பினு
லொன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கு நிலவி யுலகெலாம்.

# திருப்பாசுரம்

[வேலூர். C. S. இராஜாப்பிள்ளை]

(முன் ௩௩௨-ம் பக்கத் தொடர்ச்சி)

அரிய காட்சிய ராய்த்தம தங்கைசேர்
எரிய ரேறுகந் தேறுவர் கண்டமுங்
கரியர் காடுறை வாழ்க்கைய ராயினும்
பெரிய ராரறி வாரவர் பெற்றியே.

(இதன் பொருள்) சுட்டி யுணரப்படுந் தன்மையவாய புல னுணர்வுக்கு அரியராகவும், அன்பின் வழிப்பட்டு அவனது திரு வருளாற் காண்பார்க்கு எளியராகவும் உள்ளவர். தமது அழகு நிறைந்த கையில அக்கினியை யுடையவர். இடபத்தின்மீது விரும்பி ஏறுபவர். திருக்கழுத்து ஆலமுண்டதனாற் கருநிறமாகப் பெற்றவர். இடுகாட்டின் வாழ்க்கையுடையவர். ஆயினும் அனை வர்க்கும் பெரியர். அவரது தன்மையை அறிபவர் யார்.

மாயாகாரியமாய்ச் சுட்டி யறியப்படு மியல்பிற்றாய உலகப் பொருள் யாவும், தோற்றம், நிலை, இறுதி என்னும் முத்தொழி லுடையவாகலான், இவை அசத்துப் பொருளாகலின் சத்தாகிய சிவத்தை அறியாவாகலின், இறைவன் இச்சுட்டுப் பொருள் கட்கு அரியன் என்பதுணர்த்த அரிய காட்சியர் என்றார்.

உணரக்கூடாத பொருள் எனின் முயற்கோடு போலச் சூனியமோ எனின் அவ்வாறன்று. அவன் சுட்டுணர் விறந்து நிற்பினும், தவமுதிர்ச்சியாற் பக்குவ முடையராகி இருவினை யொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் எய்தப் பெற்ற ஆன்மாக் கள் "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்னும் மணி வாசகப்பெருமான் திருவாக்கின்வழி அவனருளை கண்ணாகக் காணின் அவர்களது கரவிலாத பேரன்பினுக் கெளிவருங் கருணையுடையான் என்பதுணர்த்துவார் காட்சியர் என்றார்.

எனவே, அரிய காட்சியரென்பது ஒருவாற்றானறியப்படா மையும், ஒருவாற்றா னறியப்படுதலுமாகிய இரண்டு தன்மையு

முடையான் எனும் பொருளுணர்த்தி, இறைவன் சொரூப இலக்கணம் விளக்குவதாயிற்று.

மெய்கண்டநாதன் அருளிய "வாக்குமனதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென்றுணர்ற்பாற்று" எனனுந் திருவாக்கும் இக்கருத்தேபற்றிய தென்க.

அரியராகிய அவ்விறையனுர் உள்ளன்புடன் காணுமாறு விழைவார்க்கு அங்கை சேரெரியராகவும், ஏறுகந்தேறுவராகவும், கண்டங்கரியராகவும் வெளிவந்தருள்புரியு மியல்பினரென்பது தோன்ற, அங்கை சேரெரியார், ஏறுகந்தேறுவர், கண்டமுங் கரியர் என்றார். மேலும், அங்கைசேர் எரியர், காடுறை வாழ்க்கையர் என்பன அவரே மகாசங்கார கருத்தா வென்பதையும், ஏறுகந்தேறுவர் என்பது ஏனைய சமயத்தவராற் கடவுளராகக் கருதப்படுந் தேவர்களும் அந்நிலைமை யடையத் தமது திருவருளே காரணமாகக்கொண்டு வாழ்பவர் என்பதையும், இறைவர் திருவருளே படைப்பாதி ஐந்தொழிற்குங் காரணமாயுளதென்பதையும், கண்டமுங்கரியரென்பது தம்மை வழிபடுந் தொண்டர்களது வினையகலத் தாமே நீறணிவதுபோல, அபயமென்றடைந்த தேவர்கள் ஆலகாலவிடத்தாற்றுயருறுவண்ணம் அதனையுந் தாமே யுண்டு ஆதரித்த பெருங்கருணை வள்ளல் என்பதையும் விளக்குகின்றன. இதுபற்றியே, தொண்டர் சீர் பரவுஞ் சேக்கிழார் பிரானும்

"அரிய காட்சிய ரென்பதவ் வாதியைத்
தெரிய லாநிலை யிற்றெரி யாரென
உரிய வன்பினிற் காண்பவர்க் குண்மையாம்
பெரிய நல்லடை யாளங்கள் பேசினர்"

எனப் பொருளருளிச்செய்தனர்.

சிவபெருமானுக்கு இவை யடையாளங்களெனின்—அடையாளங்களுடைய எல்லாப் பொருள்களும், கண்டிதப்பொருளாகி, அளவையெலாங் கடந்து, மனங்கடந்து, குணங்குறிகளிகந்து நிற்கும் அப்பெருமானுடைய வியாபகத்திற்கு இழுக்கு

நேருமே! அது நேராது காத்தற்பொருட்டே ஆயினும் பெரியார் என்றார்.

பெரியா ரென்பது "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி யமானனா யெரியுங் காற்றுமாகி, அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகாசமா யட்ட மூர்த்தியாகி" எனவும்,

"ஐம்பெரும் பூத மிருசுட ரான்மா வன்றி வேறுலகில்லையவைதாம், உன்பெரு வடிவ மெனப்படும்" எனவும் எழுந்த பெரியார் திருவாக்குகளின்படி இறைவன் அட்டமூர்த்தியாய் நிற்கின்றா னெனப்பொருள் தருதலின், தெய்வப்புலவரும்

"ஆயி னும்பெரி யாரவ ரென்பது
மேய விவ்வியல பேயன்றி விண்முதற்
பாய பூதங்கள் பல்லுயி ரண்டங்கள்
ஏயும் யாவு மிவன்வடி வென்றதாம"

எனத் திருவாய்மலர்ந்தனர்.

அட்ட மூர்த்தியாய் நிற்கும் அப்பரசிவப் பெருமான், அரிய காக்ஷியராயும், அடையாளங்களுடையவராயும், காடுறை வாழ்க்கையராயும, பெரியராயும் நிற்றலின் அவரதியல்பு இதுவெனத் தெனறு துணிநதுசொல்லக் கூடாமையானும், அவரருளிய வேத முகனூல்களே, அவரதியல்பு கூறுமிடங்களில் "பூதங்களல்ல பொறியல்ல வேறு புலனல்ல உள்ளமதியின் பேதங்களல்ல இவையன்றி நின்ற பிறிதல்ல" என அன்மைச் சொற்களாற் றுதிக்கின்றமையானும், "யாரறிவா ரவர் பெற்றியே" எனுந் தமிழ்மறையைக் குன்றைப்பிரான்

'பின்பு மாரறி வாரவர் பெற்றியை
யென்ப தியாருணர் வானுஞசென் றெட்டொணா
மன்பெ ருந்தன்மை யாரென வாழ்த்தினர்
அன்புகூழ் சண்பை யாண்டகை யாரவர்'

என விளக்கினர்.

வெந்த சாம்பல் விரையெனப் பூசியே
தந்தை யாரொடு தாயிலர் தம்மையே
சிந்தி யாவெழு வார்வினை தீர்ப்பரால்
எந்தை யாரவ ரெவ்வகை யார்கொலோ'

சிவபெருமானுடைய ரௌத்திரி சத்தியினால் எல்லாப்பொருள்களும் வெந்து, அதனால் உண்டாகிய சாம்பலைக் களபமாயணிந்து, தந்தையுந் தாயுமில்லாதவ ராகிநின்ற தம்மை நினைத்து எழுகின்றவருடைய வினைகளைத் தாமே நீக்கியருளுகின்றார். இவ்வியல்புடைய எமது பரமபிதாவாகிய அவர் எத்தன்மையுடையரோ அறியோம்.

பரசிவப் பெருமானது திருவருளால் மாயையினின்றுங் காரியப்பட்ட உலகம், சர்வசங்காரகாலத்தே முதற்காரணமாகிய மாயையின் ஒடுங்கி அழிய, அந்த மகாசுடுகாட்டிலே வாழ்ந்து அப்பொடியைத் திருமேனியில் அணிந்து, தனக்கு ஆதியும் அந்தமுமில்லாமல் நிற்கின்றானென்பதை விளக்குகின்ற,

"வெந்தசாம்பல் விரையெனப்பூசி"

என்னும் மறைமொழியைத் தண்டக நாட்டுப் பெரியார்

வெந்த சாம்பல் விரையென் பதுதம
தந்த மில்லொளி யல்லா வொழிபெலாம்
வந்து வெந்தற மற்றப் பொடியணி
சந்தமாக் கொண்ட வண்ணமுஞ் சாற்றினார்—என

விரித்தருளினார்.

இனித் "தந்தையாரொடு தாயிலர்" என்பது தாமே எல்லாவுயிர்கட்குந் தந்தையாகவும் உமையவளே தாயாகவும் நின்று உலகத்தைப் படைத்துக் காத்துப் பராசத்தியிலொடுக்கிக்கொள்ளுதலுடையராகியும், தாம் வேறொருவராற் படைக்கப்படாதவராகலிற் பிறப்பிறப்பில்லாதவராயும் நிற்கின்றாரெனப் பொருள் உணர்த்துமாகலின், சேக்கிழார் சுவாமிகளும்,

தமக்குத் தந்தையர் தாயில ரென்பதும்
அமைத்திங் கியாவையு மாங்கவை வீந்தபோ
திமைத்த சோதி யடக்கிப்பின் ஈதலால்
எமக்கு நாதர் பிறப்பில ரென்றதாம்—என்றருளினர்.

இனித் "தம்மையே சிந்தியா வெழுவார் வினைதீர்ப்பர்" என்பது பிறப்பில்லாதவராய அப்பெருமான் தம்மை உண்மையறிவானந்த முடையவராகத் தியானிக்கின்றவர்களுக்கு, அவர்களது இருவினையையும், அவ்வினைப்பயனா லெய்தும் சுவர்க்க நரகத்தையும் நீக்கி, இவை யெல்லாவற்றிற்கும் மேற்பட்ட பேரின்ப நிலையை யளிக்குமென்பதுணர்த்தலின், தொண்டை நாட்டு வேளாளர் பெருமானும், இதனை

தம்மையே சிந்தி யாவெனுந் தன்மைதான்
மெய்ம்மை யாகி விளங்கொளி தாமென
இம்மை யேநினை வார்தம் இருவினைப்
பொய்ம்மை வல்லிருள் போக்குவ ரென்றதாம்

என விளக்கினர் என்க.

"எந்தை யாரவ ரெவ்வகை யார்கொலோ" என்பது சிவபெருமான் அருவம், உருவம், அருவுருவம் என மூவகைப் பட்டு நின்றும், இவற்றின் மேலாகிய சொரூப சிவனாகியும், அட்டமூர்த்தியாகியும், தோற்றநாச மில்லாதவராகியும், முன்னைப்பழம் பொருட்கு முன்னைப்பழம் பொருளாயும், பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனாயும், ஒருவரானும் ஒருவாற்றானும் துணிந்துரைக்கக் கூடாதவனாகின்றானெனப் பொருள்படுதலின் பெரியபுராண ஆசிரியரும் இதனை,

எந்தை யாரவ ரெவ்வகை யார்கொலென்
றிந்த வாய்மைமற் றெப்பொருட் கூற்றினும்
முந்தை யோரை யெக்கூற்றின் மொழிவதென்
றந்தண் பூந்தராய் வேந்த ரருளினர்

என விளக்கினர்.

ஆட்பா லவர்க் கருளும் வண்ணமு மாதிமாண்பும்
கேட்பான் புகிலள வில்லை கிளக்க வேண்டா
கோட்பா லனவும் வினையுங் குறுகாமை யெந்தை
தாட்பால் வணங்கித் தலைநின் றிவைகேட்க தக்கார்

முன்னர்க் கூறப்பட்ட இயல்பினை யுடைய அப்பரசிவன் தனது அடியார்கட்கு அருள்செய்யும் வகையும், அருள்செய்கின்ற அம் முதல்வனது பெருமையும், கேட்கப்புகின் அளவில்லாதனவாம்; ஆகலின் இப்படிப்பட்டதென்று கேட்டல் வேண்டாம். அநுபவிக்கத் தக்கனவாகிய பிராரத்தவினையும், இனிவரக்கடவன வாய ஆகாமிய சஞ்சித வினைகளும குறுகா வண்ணம் எமது பிதாவாகிய அக்கடவுளின் திருவடியை வணங்கி நின்று கேட்பாராக.

(தொடரும்)

---

# தமிழ் மொழி யாக்கம்

## II

[சாத்தூர். T. S. கந்தசாமி முதலியார், B. A.,]

(முன் கக-ம் பக்கத் தொடர்ச்சி)

மக்கள் வழங்கும் மொழிகள் எண்ணில. அவைகளின் தன்மையும் பலதிறப்படும். சில பேச்சு வழக்கில் மட்டும் நிற்பன. சில நூல் வழக்கில் மட்டும் உள்ளன. சில இரண்டினு முயர்ந்து விளங்குவன. வடமொழி நூல்வழக்கு மட்டு முடையது; பேச்சு வழக்கொழிந்து நிற்பது. அஃதெஞ்ஞான்றும் பேசப்பட்டிராத மொழியேயாதல் வேண்டுமெனக் கூறல் தவறாகாது. சில மொழிகள் இருவகை வழக்குமுடையன வெனினும் அவ்விரண்டினுள் ஒன்றிலேனும் சிறப்புடையனவல்ல. சில மொழிகள் அவ்விரண்டினும் சிறந்து விளங்குவனவாம். நூல் வழக்கிற் சிறந்து விளங்கும் மொழிகளுள்ளும் ஆன்றோர் புலனெறி வழக்கிற் சிறந்தனவாய்ச் செம்மொழியாய்த் திகழ்வன மிகச் சிலவேயாம்.

உலகத்து மொழிகள் எண்ணிலவேனும் அவற்றைத் தனிமொழி, வழிமொழி யென்ற இருகூறுட் படுப்பர் மொழிநூல்

வல்லார். தனிமொழி தானே இயங்குந் தன்மையதாய், வேறு மொழிகள்வாய்த் தோன்றாததாய், பிறமொழிகளின் துணையின்றியும் தானே பிறங்கவல்லது. வழிமொழியோ எனின், அது பிறிதோர் மொழியிற்றோன்றி அம்மொழியின் றுணையின்றிச் சிறவாது தன்னை யுயிர்த்த 'தாய்மொழியின் சீரே தன் சீராகப்' பெரும்பாலும் பெற்றுக், காலத்தினானும், நாட்டியற்கையானும், மற்றும் பல்வேறு காரணங்களானும் தாய்மொழியின் வேறாய்ச் சிறிது உருத்திரிந்து, சிலவின்றி தன்னை யுயிர்த்த நற்றாயை மறந்து வேறு மொழியைத் தன் தாயென அது கொள்ளினும், நுண்ணறிவுடையோர் அஃது இதன் வழித்தெனத் திண்ணிதிற் கூறுதற் கேற்றவாறு தன் நற்றாய் இயல்புகளைத் தன்னகத்தே நுண்ணிதில் பொதியப் பெற்றுள்ளது.

அங்ஙனமாயின் தமிழ் எவ்வகை மொழி? எத்தன்மையது? அது தனிமொழியோ? அன்றி வழிமொழியோ? என்ற வினாக்கள் எழும். அது மற்றெம்மொழியின் றுணையும் இம்மியும் வேண்டாது தானே தனித்தியங்கி மிளிரவல்லது. மற்றைய மொழிகளுட் காணப்படாச் சில சீர்களைப் படைத்துள்ளது. பேச்சு வழக்கினும் செய்யுள் வழக்கினும் சிறந்து விளங்குவது. ஆன்றோர் புலனெறி வழக்கி லகன்றுயர்ந்துள்ளது. தெலுங்கு முதலிய தென்மொழிகளுக்கு நற்றாயாவது. அது ஓர் உயர்தனிச் செம்மொழி.

மொழிகள் யாவும் தனிமொழி, வழிமொழி யென்ற இரு பெரும் பிரிவுளடங்குமேனும், மொழிகளின் பிறப்பு நோக்கியும் சேர்க்கை நோக்கியும், அவைகளை வெவ்வேறு இனமொழிகளாகப் பிரிப்பர் மொழிநூ லுணர்ச்சியுடையார். அவ் வினமொழிகளுள்ளும் பல கிளைமொழிகள் காண்பர்.

மொழிகள் யாவும் ஆரிய மொழிகள், ஆரியமல்லா மொழிகளென விருகூற்றுத் தன்மையன என்பர் சிலர். ஆரிய மொழிகள் பல கிளைமொழிகளாய்ப் பிரிவன. ஆரியமல்லா மொழிகளும் பல கிளைப்படுவன.

தமிழ் ஆரிய மொழியா? அன்றி ஆரியமல்லா மொழிக் கணத்தொன்றா? என உசாவினர் பலர். அஃது ஆரிய மொழிக் கூட்டத்து ளொன்றென்பாரும், அதை மறுத்து ஆரியமல்லா மொழிகளு ளொன்றென்பாருமாய் அப்பலரும் தம்முள் மாறு பட்டாராயினர். அது ஆரியமொழி யென்றதில் அமையாது, வடமொழியின் வழிமொழியேயாம் என்று கூறிச் சென்ற வட மொழி மயக்கம் கொண்ட சில அறிஞரும் உண்டு. அது ஆரிய மல்லா மொழிகளு ளொன்றெனக் கண்டாருட் சிலர், அது சித்தியக் கிளைமொழிக் கூட்டத்துட்படுமென்று கூறிக்களித்தார். வட மொழி வேறு: தமிழ்மொழி வேறு. வடமொழி இலக்கணமும் தமிழ்மொழி இலக்கணமும் வெவ்வேறும் அவை தம்முள் ஒற்றுமையுடையனவல்ல. வடமொழிச் சொற்கள் பல பிற்காலத்தில் தமிழ்மொழிக்கட் புகுந்தன. அது நோக்கித் தமிழ்மொழி வடமொழியின் வழித்தெனக் கூறத் துணியார் அறிவுடையார். வெவ்வேறு மொழிகள் வழங்கும் மக்கட் கூட்டத்தார் தம்முட் கலக்கநேரின் தத்தம் மொழிகளும் தம்முட் கலப்பது முறையேயாம். வடமொழிச் சொற்கள் தமிழ்மொழிக்கட் புகுந்ததும் உண்டு. அங்ஙனமே தமிழ்ச் சொற்களும் வடமொழியிலேறியிருத்தலும் உண்டு. வடமொழி பேச்சு வழக்கற்று நிற்பதால் அம்மொழிக்கண் ஏறிய தமிழ்ச்சொற்கள் சிலவாம். நடு நின்றாரயும் செம்மையுடையாரெலலாம் 'சிவம்' தமிழாதுடைமையெனக் காண்பர். 'சிவம' பண்டை வடமொழிகளிலும் பரவியிருத்தலைக் காண்க.

தன்மை முன்னிலைப் பெயர்களும், எண்ணுப் பெயர்களும், தமிழ் மொழியிலும் வடமொழியிலும் வெவ்வேறாக இருக்கின்றன. அவை தம்முட் சிறிதும் ஒற்றுமை யுடையனவல்ல. ஆனால் தமிழிலும், அதன் வழிமொழிகளான தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம் முதலிய மொழிகளிலும் அப்பெயர்கள் ஒற்றுமையுடையனவாம். தமிழ், வடமொழியின் வேறுதலைப் புலன்வென்ற புலமிக்க ஆசிரியர் சிவஞானமுனிவர் தெள்ளிதில் விளக்கியுள்ளார். அம்முனிவர் பெருந்தகையார் அக்கொள்கையினை நாட்டற்குக் கூறும் காரணங்கள் எவருள்ளத்தையும்

பிணிக்கும் தன்மை வாய்க்கப் பெற்றன. அக்காரணங்களை யொதுக்குதல் எவர்க்கும் எளிதன்று.

'தமிழ்மொழிப் புணர்ச்சிக்கட்படும் செய்கைகளும், குறியீடு களும், வினைக்குறிப்பு வினைத்தொகை முதலிய சொல்லிலக் கணங்களும், உயர்திணை அஃறிணை முதலிய சொற்பாகுபாடு களும், அகம்புறமென்னும் பொருட்பாகுபாடுகளும், குறிஞ்சி வெட்சி முதலிய திணைப் பாகுபாடுகளும், அவற்றின் பகுதி களும் இன்னோரன்ன பிறவும் வடமொழியிற் பெறப்படா...' என்று ஆசிரியர் மாதவச் சிவஞானமுனிவர் கூறும் பொருள் பொதிந்த உரை உண்மைகாண விரும்புவார்க் கொப்பமுடிந்த தாகும்.

'தமிழ்' ஆரிய மொழிகளு ளொன்றன்று. சித்தியக் கிளைமொழிகளு ளொன்றுமன்று. சித்தியக்கிளை மொழிகள் பலவும் உயர்தனிச் செம்மொழிகளல்ல. அம்மொழிகளில் 'அறம்' முதலிய விழுப்பொருள்களைச் சுட்டும் சொற்கள் இல; கொலை முதலிய தீவினைகளை யுணர்த்தும் சொற்கள் பல. அத் தகைய மொழியா தமிழ்? தமிழ்மக்கள் அறம்வழிநின்றொழு கும் ஒழுகலாற்றினையுடையார்: ஒழுக்கத்தை உயிரினும் ஓம்பு பவர். அறமுணர்த்தும் சொற்களும் எண்ணில: நூல்களும் எண்ணில. இத்தகைய மாண்புமிக்க தமிழ் மொழியினை சித்திய மொழிகளோ டொருங்கெண்ணுதல எங்ஙனம் பொருந்தும்?

தொடர்பொன்றும் இல்லாத மொழிகளில் ஒத்த ஓசை யுடைய சொற்களைக் காணலாம். அச்சொற்களின் பொருள் களும் ஒப்புமை யுடையனவாகவுமிருக்கலாம். அவ்வொப்புமை கள் போலியாம். அத்தகைய சொற்கள் உண்மையிற் றொடர் புடையன வல்லவாதல் நுண்ணிதி னாராய்வார் காண்பர். அது எவ்வாறெனிற் காட்டுதும். 'இரும்பு', 'அருவி' என்ற செந் தமிழ்ச் சொற்கள் Iron (அயண், பண்டை உரு இரன் என்பர்) River (ரிவர் என்ற ஆங்கிலச்சொற்களுடன் ஒலியானும் பொரு ளானும் ஒப்புமையுடையன போற் காணப்படுகின்றன. ஆனால் 'இரும்பு' என்ற செந்தமிழ்ச் சொல் 'இரு' என்ற தமிழ்

முதலடிப் பிறந்ததென்றும், அம்முதற்குக் கருமை யென்னும் பொருள் என்றும், கருநிறமுடைய உலோகம் 'இரும்பு' எனக் காரணப்பெயர் பெற்றதென்றும், அம்முதலடியாக இருள், இருட்டு, இரவு, இருந்தை (கரி) முதலிய சொற்கள் பிறந்துள் ளன வென்றும் கூறிக் 'கரும்பொன்' என இரும்புக்கு மற்றொரு பெயர் இருத்தலையும் சுட்டி, இரும்பின் உண்மை வடிவைக் காட்டுவர் செந்தமிழறிஞர். Iron என்ற ஆங்கிலச் சொல்லுக்கு அப்பொருளில்லை யாதல் ஆங்கில அறிஞர் காண்பர். ஆகையால் 'இரும்பு'ம் Iron ம் தொடர்புடையனவல்ல என்பது தெளிவு. 'அருவி' என்ற செந்தமிழ்ச் சொல் 'ஆர்' என்ற முதலடிப் பிறந்ததென்பர் தமிழறிஞர். 'ஆர்த்தல்' ஒலித்தலென்னும் பொருட்டு. River (ரிவர்) என்ற ஆங்கிலச்சொல்லின் முதலுக்கு ஒலித்தல என்னும் பொருளில்லை. அவைகளுள் யாதொரு பொருட்டொடர்புங் காண்டலரிதாம்.

யாதொரு தொடர்புமில்லாத மொழிகளுள் ஒற்றுமை யுடைய பொருள்கள் பயக்கும் ஓசை யொற்றுமையுடைய சொற் கள் இருக்கலாம். அவ்வொப்புமை காணின் உடனே அச்சொற் களும், அச்சொற்களை யுடைய மொழிகளும் தொடர்புடையன வாதல் 'கண்டோ'மெனக்கூறி யகமகிழ்கின்றார் சிலர். அங்ங னங் கூறுவார்கூறுக மொழிநூல வல்லார் அவ்வொபபுமை கொண்டு மொழிகளின் தொடர்பை நாட்டத் துணியார். அஃது அன்றிச் சொற்களின் அப்போலி ஒப்புமை கொண்டு, மொழி களின் தொடர்பு நாட்டத் துணிவரேல் அவ்வா துணிவு, நீர் வீழ் வண்டின் சுழற்சியில் தமிழெழுத்தொன்றின் வடிவொப்புமை கண்டு அவ்வண்டிற்குத் தமிழெழுத்துப் பயிற்சியுண்டெனத் துணிவார் துணிவோ டொக்கும்.

தொடர்புடைய மொழிகளாயின் அம்மொழிகளின் தன்மை முன்னிலைப் பெயர்களும், எண்ணுப் பெயர்களும், மக்கள் வாழ்க் கைக் கின்றியமையாப் பொருள்களின் பெயர்களும் ஒற்றுமை யுடையனவாதல் இயற்கை. அவ்வொற்றுமைகளுடன் இலக்கண ஒற்றுமையும் அம்மொழிகட்குண்டு. ஒரு மொழி பேசும் மக்

கள் தம்மிடம் விட்டுப் புடைபெயர்ந்து வேற்றுமொழி மக்களுடன் எய்திக் கலக்கத் தலைப்பட்டு, அவருடன்கூடி நெடுங்காலம் வாழ்ந்து, அவ்வேற்றுமொழிக்கணுள்ள சொற்கள் பலவற்றைக் கடன்கொண்டு வழங்கினும், அம்மக்கள் தங்கள் உரிமை மொழியின் தன்மை முன்னிலைப் பெயர்களை யாதல், எண்ணுப் பெயர்களை யாதல் புறக்கணித்து ஒதுக்கி அப்பெயர்களை வேற்றுமொழியனின்று கடன்கொணடு வழங்கார். ஆதலின் மொழிகளின் தொடர்புக்குக் கட்டளை யாதெனின், மொழிகளுள் தன்மை, முன்னிலை, எண்ணுப் பெயர்கள் ஒற்றுமை யுடைமையே. தமிழ் மொழியிலுள்ள அப்பெயர்களுக்கும் ஆரியசித்திய மொழிகளிலுள்ள அப்பெயர்களுக்கும் யாதோரியையும் தொடர்பு மில்லை. அம்மொழிகளின் இலக்கண அமைதியும் வெவ்வேறும். ஆகையால் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளுவம் முதலிய திராவிட நன்மொழிகள் ஓர் தனிக்கூட்டமாவன எனக் கோடலே சிறப்புடைத்து.

(தொடரும)

---

# புறநானூறும் தமிழர் மாண்பும்

[திரிசிரபுரம், ம. பெரியசாமிப்பிள்ளை]

(௩௨௫-ம் பக்கத் தொடர்ச்சி)

அறன் பயன்குறியாது செய்தலும் ஈகையும் :—அறம் என்பது அறன் என நிற்கும்; னகரம் மகரத்திற்குப் போலி; நிலம்-நிலன் என்பதுபோல. அறம் அறு என்னும், பகுதியடியாகப் பிறந்த பெயர். செய்வன இவை தவிர்வன இவை என வரையறுப்பதே அறம் என்க. ஈகை என்பது, ஈ (கொடு) என்னும் வினையடியாகப் பிறந்த தொழிற்பெயர். வறியார்க்குக் கொடுத்தலே ஈகையாம். என்னை! "வறியார்க்கொன் றீவதே ஈகை" என்பது திருவள்ளுவர் வாய்மொழியாதலின் என்க. பெற்றோர்ப் பேணல், புதல்வர்ப்போற்றல், பிறர்க்குதவி செய்தல் முதலிய

செய்யத்தக்க அறச் செயல்கள் பலவாம். ஆயினும் அறம் (தர்மம்) என்னும் சொல் ஈகை என்னும் பொருளிலேயே பெரிதும் வழங்கப் பெறுகின்றது. ஒப்புரவின்பாற் படும் செயல்கள் பலவற்றுள்ளும் முதன்மையானது இவ்வீகையே. இதனனே ஆசிரியர் திருவள்ளுவனரும் 'ஒப்புரவறிதல்' என ஓர் அதிகாரம் கூறிய தோடமையாது அதனை யடுத்து ஈகையென மற்றோர் அதிகாரமும் கூறியுள்ளார். ஆகலின், ஈகை அறமும் ஒப்புரவும் ஆகும். இத்தகைய சிறப்புவாய்ந்த அறத்தைச் செய்யுங்கால யாதொரு பயனும் கருதாது செய்தல் வேண்டும்; அறஞ் செய்தல் நமது கடப்பாடு (கடமை) எனக் கொள்ளுதல் வேண்டும். கைம்மாறு அலைது பயன்' குறித்துச் செய்யில் அது வாணிபம்போன்ற தாகுமல்லது அறம் ஆகாது. ஆன்றோர் துணிபும் இதுவே. "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு, என் ஆற்றும் கொலலோ உலகு" "வறியார்க்கொன் றீவதே ஈகைமற் றெல்லாம், குறியெதிர்ப்பை நீரதுடைத்து" (குறிஎதிர்ப்பை-அளவு குறித்து வாங்கி அவ்வாங்கியவாறே எதிர்கொடுப்பது) என்பன அரும் பெறல் திருக்குறள் மணிகள்.

உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் ஆய் என்னும் தமிழ் மகனைப்பற்றிக் கூறுங்கால், 'இப்பிறப்பிற் செய்தது மறுபிறப்பிற் குதவும் என்று கருதிப் பொருளை விலையாகக் கொடுத்து அறத்தை வாங்குபவன் (வாணிகன்) ஆய் அலலன்; சான்றோர் பலரும் சென்ற நல்வழி என்று உலகத்தார் கருத அந்த நற் செய்கையிலே பொருந்தியது அவனது கைவண்மை' என்பதனை,

> "இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
> அறவிலை வாணிகன் ஆஅய் அல்லன்;
> பிறருஞ் சான்றோர் சென்ற நெறியென
> ஆங்குப் பட்டன் றவன்கைவண் மையே." (புறம்-௧௩௪)

எனக் கூறியுள்ளார். இத்தகைய வள்ளன்மையை உடையவன் ஆய் என்னும் தமிழ்மகன் என்றால், அவன் வரையாது ஈயும் கடையெழு வள்ளல்களில் ஒருவனுக எண்ணப்பெற்றது ஒரு வியப்பன்று.

பாரி என்றும் வேள்பாரி என்றும் அழைக்கப்பெறுபவன் மற்றொரு வள்ளல். இவனது மலை பறம்புமலை; நாடு பறம்பு நாடு; இந்நாடு முந்நூறூர்களை உடையது. மேகமானது கைம்மாறு கருதாது மழைபெய்து உலகத்தைப் பாதுகாப்பதைப் போன்று இவ்வள்ளலும் தனது முந்நூறூர்களையும் பரிசிலர்க்கு (இரப்பவர்க்கு) அளித்து அழியாப் பெரும்புகழ் படைத்தவன். முடியுடைவேந்தராகிய சேர சோழ பாண்டியர் மூவருக்கும் இத்தகைய புகழ் கிடைத்திலது. இவ்வள்ளல் ஈகையில் மேகத்துக்கு ஒப்பானவன் என்று கூறவந்த 'புலனழுக்கற்ற அந்தணாளர்' ஆகிய கபிலர் பெருமான் 'பாரி, பாரி என்று சொல்லி அவனுடைய பல புகழ்களையும் ஏத்தி அவ்வொருவனையே புகழ்வர் செவ்விய நாவையுடைய புலவர்; பாரியாகிய அவ்வொருவனுமே அல்லன், மாரியும் (மேகமும்) உண்டு இவ்வுலகத்தைப் பாதுகாத்தற்கு' என்பதனை

"பாரி பாரி என்றுபல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்;
பாரி ஒருவனும் அல்லன்,
மாரியும் உண்டீண் டுலகுபுரப் பதுவே" (புறம் - ௱௭)

எனப் பழித்தது போலப் புகழ்ந்து (நிந்தாஸ்துதியாகக்) கூறியுள்ளார். ஒருகால் மூவேந்தரும் ஒருங்குகூடிப் பாரியை வெல்லக் கருதிப் படைகளுடன் அவன் பறம்புமலையினை முற்றி (சூழ்ந்து) இருந்தனர். இருந்தும் என்! மலையைக் கைப்பற்றுதல் எளிதில் கூடவில்லை. இந்த நிலையில், பாரியின் உயிர்த்துணைவரும் 'பொய்யாநாவிற் கபிலனு'மாகிய அப்புலவர் பெருமான், பாரியின் வள்ளன்மையும் வன்மையும் மற்றை மூவேந்தரது எளிமையும் தோன்றப் பாடக்கருதியவர் பறம்பு முற்றியிருந்த மூவேந்தரையும் பார்த்து 'வஞ்சியாது எதிர் நின்று கொல்லும் படையினையுடைய மூவிருங்கூடிப் போர் செய்தீராயினும் பறம்பு கொள்ளுதற்கரிது; முந்நூறூர்களை உடையது குளிர்ந்த நல்ல பறம்பு நாடு; அம்முந்நூறூரும் பரிசிலர் பெற்றனர்; நீயிரும் பாடினிராய் (பரிசிலர்போலப் பாடி) வரின் நமக்குப் பரிசிலாக

யாமும் பாரியும் உள்ளேம்; அதுவேயன்றி மலையும் உண்டு என்பதனை,

"கடந்தடு தானை மூவிருங் கூடி
உடன்றனி ராயினும் பறம்புகொளற் கரிதே;
முந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னாடு;
முந்நூ றூரும் பரிசிலர் பெற்றனர்;
யாமும் பாரியும் உளமே
குன்றும் உண்டுநீர் பாடினிர் வரினே." (புறம் - ௱௰)

எனப் படிப்போர் உள்ளம் திகைப்பும் வியப்பும் உறுமாறு மொழிந்தாள்ளார். இங்ஙனமாகப் பாரி ஈகையில் மிகச்சிறந்தோன் ஆதலினன்றே சைவசமயாச்சாரியராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளும் தமது அருமைத் தேவாரத்தில் "கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினும் கொடுப்பாரிலை" எனத்திருவாய் மலர்ந்தருளினர். கடையெழுவள்ளல்களில் மேற் கூறிய ஆய், பாரி இவர்களேயன்றி மற்றைக் காரி, ஓரி, நள்ளி, பேகன், அதியமான் ஆகிய ஐவரும் இத்தகைய ஈகையிற் சிறந்தவர்களே. (இவர்கள் வள்ளன்மையைப் புறம்-௧௫௮-ம் செய்யுளிலும், சிறுபாணாற்றுப்படை (அடி ௮௪-௧௨௨) யிலும் காண்க. ஈண்டு உரைப்பிற் பெருகும்.) ஆகலான் தமிழ்மக்கள் அறன் பயன்குறியாது செய்தலிலும், வரையாது கொடுத்தலிலும் பெருஞ்சிறப் பெய்தியவர் என்பது தெள்ளிதின் புலனாகும்.

தாளாண்மை:—தாளாண்மை தாள் என்னும் பகுதியடியாகப் பிறந்த பெயராம். தாள் - முயற்சி; அதனை ஆளுதல் தாளாண்மை ஆகும். ஆகவே தாளாண்மை என்பதற்கு முயற்சியுடைமை என்பது திரண்டபொருளாம். பிறர்க்குபகாரம் செய்தல், ஈகை ஆகிய இவ்விரும்பெருஞ் செயல்களுக்குப் பொருள் இன்றியமையாத கருவியாகும். அப்பொருளும் நன்முயற்சியாலேயே ஈட்டப் பெறல்வேண்டும். அம் "முயற்சி திருவினை ஆக்கும்." (திரு-செல்வம்) 'எல்லாருக்கும் உதவிசெய்தல் என்னும் மேம்பாடு முயற்சியாகிய உயர்ந்த குணத்தின்கண்ணோ நிலை பெற்றது என்பதனைத் "தாளாண்மை என்னும் தகைமைக்கட்

டங்கிற்றே, வேளாண்மை என்னும் செருக்கு" (வேளாண்மை - உபகாரம்) என்னும் திருக்குறளான் அறிக.

இனித் தாளாண்மையாற் பொருள் ஈட்டுதற்குரிய தொழில்கள் பலவற்றுள்ளும் தலை சிறந்தது உழவுத் தொழிலே. இத் தொழில், பொருளை ஈட்டித்தந்து பலர்க்கும் உபகாரம் செய்தற்கு இன்றியமையாததாகலினன்றே, வேளாண்மை என்றும் வழங்கப் பெறுகின்றது. இதனை அடுத்து நிற்பது வாணிபம். உணவுப்பொருள் விளைத்தலாகிய வேளாண்மைத் தொழில் இன்றெனின் உலகில் வேறு எத் தொழில்நிகழ்ச்சியும் இல்லை. ஆகலான், அரசர் தம்படையால் வெற்றி பெறுவதும் இத்தொழிலின் பயனாலேயே என்றும் உழவுத் தொழிலுக்கு வேண்டிய நீர்நிலை அணை முதலியவற்றை (Reservoir & Anicuts, etc.,) ஆக்குதல் அரசர் கடமை என்றும் கொண்டனர் நமது முந்தையோர்.

வெள்ளைக்குடிநாகனார் என்னும் அறிஞர் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனுக்கு அறவுறுக்குங்கால் 'கூரிய வேலினையுடைய வளவ! இளைய பனைமரத்தினது துண்டுகள்போல வேறுவேறு கிடக்குமாறு யானைக் கூட்டங்களைக் கொன்ற இடமகன்ற போர்க்களத்தின்கண் வருகின்ற படையை எதிர் நின்று பொறுத்து, அது புறங்கொடுத்தலைக்கண்டு ஆரவாரித்து நினதுபோர் செய்யும்படை தரும் வெற்றியும் உழுகின்ற படையாகிய கலப்பை நிலத்திலே ஊன்று சாலிடத்து விளைந்த நெல்லினது பயன்' என்பதனை,

"......................கூர்வேல் வளவ!
வெளிற்றுப் பனந்துணியின் வீற்றுவீற்றுக் கிடப்பக்
களிற்றுக் கணம்பொருத கண்ணகன் பறந்தலை
வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்
பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை
ஊன்று சால் மருங்கின் ஈன்றதன் பயனே"

என வேளாண்மையின் பெருமையை எடுத்துக் கூறினர். குடபுலவியனார் என்னும் புலவர் உழவுத் தொழிலுக்கு வேண்டிய

நீர்நிலைகளைப் பெருக்குதலினாலேயே அரசர் தம்பெயரை இவ்வுலகில் நிலைநாட்டினவராவர் என்பதனை அறிவுறுத்துவான் வேண்டிப் பாண்டியன் நெடுஞ்செழியனை நோக்கிப் 'பெரியோய்! நீரை இன்றியமையாத உடம்பிற்கெல்லாம உணவு கொடுத்தவர் உயிரைக்கொடுத்தவராவர்; உணவை முதலாக உடைத்து அதனால் உளதாகிய உடம்பு; ஆதலால், உணவென்று சொல்லப்படுவது நிலத்தோடு கூடியநீர் (உழுது பயிர்செய்வதற்கு நிலத்தில் நீர் சேரவேண்டும் என்பது கருத்து); அந்நீரையும் நிலத்தையும் ஒருவழிக் கூட்டினவர் இவ்வுலகத்து உயிரையும் உடம்பையும் படைத்தவராவர்; நெல் முதலியவற்றை விதைத்து மழையை எதிர்பார்த்திருக்கும் வன்புலம் (புன்செய்) இடமகன்றதாயினும் பொருந்தியாளும் அரசனது முயற்சிக்குப் பயன்படாது; ஆதலால், கொல்லும் போரையுடைய செழிய! இதனைக் கடைப்பிடித்து, விரைந்து, நிலங்குழிந்த இடத்தே நீர்நிலை மிகுமாறு தளைத்தோர் (அணைகட்டியவர்) இவ்வுலகத்துத் தம்பெயரை நிலைநிறுத்தினோராவர்; அந்நீரைத் தளையாதார் இவ்வுலகத்துத் தம் பெயரை நிறுத்தாதோர்' என்பதனை,

"........மிகுதியாள !
நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே;
உண்டி முதற்றே உணவின் பிண்டம்;
உணவெனப் படுவது நிலத்தொடு நீரே;
நீரும் நிலனும் புணரியோ ரீண்டு
உடம்பும் உயிரும் படைத்திசி னோரே;
வித்தி வானோக் கும் வன்புலம் கண்ணகன்
வைப்பிற் றாயினும் நண்ணி ஆளும்
இறைவன் தாட்குத வாதே; அதனால்,
அடுபோர்ச் செழிய! இகழாது வல்லே
நிலன்நெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோர், அம்ம இவட்டட் டோரே;
தள்ளா தோரிவட் டள்ளா தோரே." (புறம் - ௧௮)

எனக்கூறினர். ஆகலின், வேளாண்மையின் சிறப்பையும் இன்றி யமையாமையையும்பற்றி அரசர்களுக்கும் அறிவுறுத்தியவர் நமது தமிழறிஞர்கள் என்றால் இவர்கள் வேளாண்மையாகிய தாளாண்மையில் எவ்வளவு குறியுடையவர்களா யிருத்தல் வேண்டும்!

இனித் தாளாண்மையில் வேளாண்மையை அடுத்து நிற்பது வாணிபம் என முன்னர்க்கூறப்பட்டது. நமது முன்னை யோர் உள் நாட்டிலேயே யன்றித் "திரைகடலோடியும் திரவியந் தேடிப்" பெரும்பொருள் ஈட்டும் முயற்சி யுடையராயிருந்தனர் என்பதனைச் சிலப்பதிகாரம் முதலிய நூல்களிற் பரக்கக் காணலாம். இவ்வாணிபமும் அறநெறி பிறழாது செய்தல் வேண்டும் என்பது தமிழர் கொள்கை. இதனை "வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப், பிறவும் தமபோற் செயின்" என்னும் திருக்குறளான் அறிக.

மலையமான் திருமுடிக் காரியைப் பாடிய மாறோக்கத்து நப்பசலையார் என்பவர் 'இந்நிலவுலகிற் பிறந்த மக்கள் எல்லாரினும் அறிவில் மாசற்ற அந்தணனாகிய கபிலன் இறந்து செல்லும் மக்கட்கு இனிப்பாடுதற்கு இடனில்லாதவாறு பரந்து புகழ் நிற்பப் பாடினான்; அதனால் சினமிகுந்த சேனையையுடைய வானவன் (சேரன்) மேல் கடலில் பொன்னைத்தரும் மரக்கலத்தைச் செலுத்திய அவ்விடத்து வேறு சில மரக்கலம் போகமாட்டாத அத்தன்மையுடையேம் ஆயினேம்' என்பதனை

" நிலமிசைப் பிறந்த மக்கட் கெல்லாம்
புலனழுக் கற்ற அந்த ணாளன்
இரந்துசெல் மாக்கட் கினியிட னின்றிப்
பரந்திசை நிற்கப் பாடினன்; அதற்கொண்டு
சினமிகு தானை வானவன் குடகடல்
பொலந்தரு நாவாய் ஓட்டிய அவ்வழிப்
பிறர்கலம் செல்கலா தனையேம். ... " (புறம்-௧௨௬)

என்று கூறுகின்றார். இதில் உவமையாகவந்த "சினமிகுதானை ......அனையேம்" என்னும் தொடரினால் சேரர் மேல்கடலிற்

சென்று பொன் கொணர்ந்தார் என்றும், அவ்வாறு செய்தலில் அவரின் மேம்பட்டார் இல்லை என்றும் காணக்கிடக்கின்றது. சோழன் கரிகால்பெருவளத்தானின் முன்னோரில் ஒருவன் மரக்கலம் ஊர்ந்து கடலிற்செல்லுகையில் காற்று இயங்காததனால் மரக்கலம் தடைப்பட அதுபோது வளிச்செல்வனை (காற்றை) அழைத்து, ஏவல்கொள்ளும் வலியுடையவனாயிருந்தா னென்பது கரிகால்பெருவளத்தானை வெண்ணிக்குயத்தியார் என்பவர் பாடிய

"நளியிரு முந்நீர் நாவா யோட்டி
வளிதொழி லாண்ட உரவோன் மருக" (புறம் - ௬௬)

என்னும் தொடரினால் தெரியவருகின்றது. ஆகலான் கடல் கடந்து வாணிபம் முதலியன செய்தலினும் நமது முன்னோர் முயற்சியுடையராயிருந்தனர் என்பது இனிது விளங்கும் என்க. தாளாண்மையின்பாற்படும் நெய்தற்றொழில், கப்பற் கட்டுதல் முதலியவற்றிலும் சிறந்து விளங்கியவர் தமிழர் என்பதனை இதுவே இடனாகத்தந்துரைத்துக்கொள்க. விரிவஞ்சி விடுப்பன்.

நட்பு:—நட்பு என்பது நள், என்னும் பகுதி யடியாகப் பிறந்த பெயர். நள்—நெருங்கு, கூடு. இக்கூட்டம் மனத்தானும் மொழியானும் மெய்யானும் ஆம். ஒருவனுக்குத் தொடர்புடையாரிடத்து உள்ள அன்பு அப்பழக்கத்தால் பிறரிடத்தும் செல்லும்வழி ஆர்வம் எனப்படும். அவ்வார்வமே நட்பை உண்டாக்குவது. இதனை "அன்பீனும் ஆர்வ முடைமை அதுவீனும், நண்பென்னும் நாடாச் சிறப்பு" என்னும் திருக்குறளானும் அறிக. ஆகவே நட்புச் சுற்றத்தார் மாட்டே யன்றிப் பிறரிடத்தும் செய்யத் தக்கது என்பது ஈண்டே போதரும். சுற்றத்தாரிடை இயல்பாக உண்டாகும் நட்பினும் பிறரிடத்துச் செய்யும் நட்பு நாடாச் சிறப்பினைத் (அளவிறந்த சிறப்பை) தருதலான், நட்பு என்று சிறப்பித்துக் கூறத்தகுவது இதுவே. நாடாச் சிறப்பினைத் தருதலானும், எல்லாப் பொருள்களும் உதவிகளும் எய்துதற்கு ஏதுவாகலானும், மக்கள் வாழ்க்கையே ஒருவர்க்கொருவர் உதவி செய்வதைச் சார்ந்து நிற்பதாகலானும் இந்

நட்பு மக்களுக்கு மிகமிக வேண்டப்படுவதொன்றாகும். அதி லும் பண்புடையார் நட்பாயின் மேன்மேலும் பெருகிப் பேரின் பத்தை அளிக்கும் என்பது ஒரு தலை.

"நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு."

"நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு."

என்பன அருமைத் திருக்குறள் மணிகள். இந்நட்பினைப் பற் றிய மற்றைச் செய்திகளெல்லாம் திருவள்ளுவர் வாய்மொழி யால் மாண்புற விளக்கப் பெற்றுள்ளன. ஆகலின் இதன் விரிவு ஆண்டே கண்டுணரத்தக்கது

நட்பிற்குக் காரணம் புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சி என்னும் மூன்றாகும். புணர்ச்சி - ஒரு இடத்தாராதல்; பழகுதல் - பல கால் கண்டும் சொல்லாடியும் மருவுதல்; உணர்ச்சி - நட்புடையா ரிருவர்க்கும் ஒத்தமன உணர்ச்சி. இம்மூன்றனுள்ளும் பின்ன தே சிறப்புடையது. இவ்வுணர்ச்சி உளதாயின் மற்றை இரண் டும் வேண்டா; இதுவே நட்பாம் உரிமையைத் தரும்.

"புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்"

என்பது திருக்குறள். உடனுயிர் நீங்கும் உரிமைத்தாய இவ் வுணர்ச்சி ஒத்த நட்பிற்கு எடுத்துக்காட்டாக உரையாசிரியர் பரிமேலழகரால் ஆளப்பெற்றது கோப்பெருஞ்சோழற்கும் பிசி ராந்தையார்க்கும் உள்ள நட்பு.

கோப்பெருஞ்சோழன் பழைய சோழ ராசதானிகளில் ஒன்றாயதும் மிகச் சிறப்புற்றதுமான உறந்தை (உறையூர்) யில் அரசு செலுத்தியவர்; அறநெறி வழாது ஆண்டு வந்தவர்; கல்விகேள்விகளில் மிக்குக் கவிபாடுதலில் வல்லுநராய் விளங்கிய வர்; பல அறிவுரைகளை மக்ட்குப் புகட்டியவர். பிசிராந்தை யார் பாண்டி நாட்டில் உள்ள பிசிர் என்னும் ஊரில் உள்ளவர்;

கல்வி அறிவு நிரம்பியவர்; மனைவி மக்களுடன் இல்லறத்தைச் சிறப்புற நடாத்தியவர்; அங்குள்ள அனைவராலும் நன்கு மதிக்கப்பெற்ற ஓர் சிறந்த அறிஞர். இவர்கள் ஒருவரை யொருவர் கண்டுபழகியும் சொல்லாடியும் அறியார்; எனினும் ஒருவர் பண்புகளை ஒருவர் கேட்டு அறிந்தனர். உள்ள உணர்ச்சி ஒத்தலான் சிறந்த ஆருயிர் நண்பர்களாயினர்.

---

# பழந்தமிழ்

[மாகறல்- கார்த்திகேய முதலியார்.]

(முன் ௨-ம் சிலம்பு ௬௩௫-ம் பக்கத் தொடர்ச்சி)

## வரிவடிவின் விளக்கம்

பழந்தமிழ் மக்கள் முதலிலேயே எழுத்தாணி கொண்டெழுதுதல் கூடாதாகலின், மூங்கின் மடலைச் செவ்வனஞ் செய்து அதனிடத்தே இறகினாலே சித்திர வெழுத்துகள் எழுதி எழுதிப் பழகின பிறகே யெழுத்தாணியால் பனையோலையில் எழுதத் தலைப்பட்டனரெனல் வேண்டும்.

பனையோலையி லெழுதுவதைப் பார்த்து ஆங்கிலர் வியக்கின்றனர் அவர்க்கு அரிதாகலின் என்க.

மடலென்பது மூங்கின் மடலையும் மூங்கிலினமாகிய பனை மடலையும் உணர்த்தும். நெடுங் கணக்கு ஓலைக் கணக்கு முதலிய சொற்காரண முணரின் முறம்போலகன்றுள்ள மூங்கின் மடல் அக்காலத்திருந்ததெனப் புலனாகின்றது.

நெடு + கணக்கு = நெடுங் கணக்கு

நெடு = மூங்கில், கணக்கு = நூல், மூங்கின் மடலின்கண்ணே யெழுதப்பட்ட நூலென்பது பொருள். புத்தகமென்பது மயிலிறகால் எழுதப்பட்ட நூலை யுணர்த்தலின் அக்காலத்தில் மயிலிறகினால் எழுதிவந்தன ரென்பது பெறப்படுகின்றது.

'சுட்டுப்போடு புத்தகந் தன்னையே' என்னும் குணவாகடத்தால் புத்தகமென்பது மயிலிறகினை யுணர்த்தல் காண்க. வாகடம் பிடக மென்பதன் மரூஉ.

மூங்கிலும் மயிலும் குறிஞ்சிக் கருப்பொருள். வருணங்களினுலெழுதப்பட்டமையின் வருணமென்னுஞ் சொல் எழுத்தினை யுணர்த்திற்று. எழுத்தென்பதற்கும் சித்திரமென்பதே பொருள். சூரியனிடத்து இயல்பாகப் பஞ்சவருணங்களிருக்கின்றமையின், அச்சூரியனை யுணர்த்தும் எல் என்னுஞ் சொல் 'து' என்னும் பெயர் விகுதியோடு சேர்ந்து எலுதது எளுத்து எழுத்தெனத் திரிந்து சித்திரத்தையும் சித்திரிக்கப்பட்ட வரிவடிவையும் உணர்த்திற்று.

எழுத்துப் புடவை = சித்திரப் புடவை.

ஓலைக் கணக்கரென்பது மாணவரையும் புலவரையும் உணர்த்தி நிற்கும். மூங்கிலின் மடலிலெழுதப்பட்ட நூலினை ஆராய்வாரென்பது பொருள். ஓலைக் கணக்கு + அய்யர் என்பது ஓலைக் கணக்காய ரென்றாய்க் கற்பிக்கும் ஆசிரியரை யுணர்த்திற்று. அய்யர் = ஆசிரியர்: அனபுடன் கற்பிப்போர் என்பது பொருள்.

"கற்றதூஉ மின்றிக் கணக்காயர் பாடத்தால்"
(நாலடியார் - அவையறிதல்: ச. செ.)

என்பதுள் கணக்காயரென்பது ஓலைக்கணக்காயரென்பதன் முதற்குறை.

முச்சிலிக்கை யென்பது நாணற் சிவலால் எழுதப்பட்ட நில சம்பந்தமான முறி.

முஞ்சி—முச்சி = நாணற் சிவலாலெழுதுவோன்.

முஞ்சி = ஓர் வகை நாணல்.

முச்சி—முச்சிலிக்கை. முஞ்சி—மௌஞ்சி.

பூர்ச பத்திரத்திலும் அக்காலத்தார் எழுதி வந்தனர். போகர் பூசபத்திரமென்பர். மஞ்சணிறமுடையதென்பது பொருள்.

## மயக்கம்

உடனிலை மெய்ம் மயக்க முதலியவற்றின் ஆராய்ச்சியாலும் தமிழ் உலகில் முதல்முதல் உண்டான இயற்கை மொழி யென்பது தெளிவாகும்.

[மொழிநூல், இலக்கணவியல் 34—வது பக்கம் பார்க்க.]

மயக்கம் வேறு, கூட்டம் வேறு.

அச்சம் வெட்க முதலியன மயக்கமாகும்.

கன்மலை முதலியன கூட்டமாகும்.

மயக்கம் = இயல்பால் அமைந்த பிரிவில் சொல்லியைபு.

கூட்டம் = செயற்கையால் அமைந்த பிரிவுடைச் சொல்லியைபு.

புள்ளிமயங்கியலெனத் தொல்காப்பியர் கூறியது ஒற்றுமை பற்றி.

## குற்றிய லுகரம்

பழந் தமிழில் குற்றியலுகரம் இல்லாமையால் அதன் பிரிவாகிய பஞ்சத் திராவிடங்களிலும் ஆரியத்திலும் இலதாயிற்று. அது பிற்காலத்தது. இதழ்குவித்தலே அரிது, வல்லினமெய்யின் மேலுகரத்துக்கு இதழ்குவித்தல் அதனினும் அரிதாகலின் செந்தமிழி லுண்டாயிருத்தல் வேண்டும். இனிக் குற்றியலுகர மொழியெனின் வல்லின மெய்யீற்று மொழியெனக் கொள்ளல் வேண்டும். இவ்வாராய்ச்சியிலும் 'தமிழ்' உலகத்து முதன் மொழி யென்பது பெறப்படும்.

தமிழில் இதழ் பொருந்தும் உச்சரிப்பு மிகுதி.

மற்றைய பாஷைகளில் இதழ் பொருந்தாத உச்சரிப்பு மிகுதி.

(தொடரும்)

---

திருநெல்வேலி ஜில்லாப் போர்ட் தலைவராகிய

திருவாளர். S. குமாரசாமி ரெட்டியாரவர்கட்கு

அரசினரால் அளிக்கப்பெற்ற

'திவான் பகதூர்ப்' பட்டச் சிறப்புப் பாராட்டாக

அவர்கள் செயல் வியந்தளித்த

# வாழ்த்துப் பாக்கள்

[பு. சி. புன்னைவன நாதன்]

அறுசீர்க்கழிநெடிலாசிரியம்

*பொன்னுலகும் புகழ்வளங்கள் பொருந்துமெழில் இங்கிலாந்திற்*
*பொருந்தி இங்கு*
*மன்னுயிருந் தன்னுயிர்போல் மாண்பினினி துறப்புரக்கும்*
*மன்னர் மன்னன்*
*நன்னர்பல நலமுடையன் நாகரீகச் சிறப்பன்*
*நளினப் போதார்*
*மின்னருள்நல் வலியுடையன் மேதகும்ஐந் தாம்ஜார்ஜ்நம்*
*மேரி நாதன்.*

*ஆழியுல கிலகுமுயிர் அனைத்துமுயர் அறநெறியில்*
*அன்பால் அன்றிப்*
*பாழியதிண் டோள்வலியாற் படைவலியால் இன்புறநாம்*
*பார்த்தல் இல்லென்*
*ஏழியல்எட் வர்டமைதி இறைவனுரை இருநிலத்தில்*
*இயங்கச் செய்சீர்*
*வாழியநம் ஜார்ஜரசன் வளரறுப தாண்டடைந்தான்*
*வளர்க செங்கோல்.*

*தருமநெறி பிறழாது சகலஜனங் களும்நலமே*
*சாரச் செய்நம்*
*பெருமனதார் விக்டோரி யாபேரன் பெட்புறுதன்*
*குணவொழுக்கம்*

அருமையுறப் பெற்றோர்க்கும் அரியதிருத் தொண்டாற்றும்
அன்பர் ஊக்கம்
பெருமையுறப் பட்டமளித் துயர்த்திடுநற் பெருவழக்கம்
பேசப் போமோ! ௩

மாகாண வளநெறியின் மதியமைச்ச! சிவஞான
மன்ன! நின்பின்
வாகான செயலுஞற்று வழக்கறிஞன் தமிழன்பன்
வளர்சை வத்தும்
பாகான ரசமுணர்வன் பகரிந்து கல்லூரி
பண்பின் ஓங்கற்
கேகாணு நெறியமைச்சன் கேடிலிரு செல்வனிசை
கெழுமு நண்பன். ௪

நாற்றிசைசொல் போர்ட்தலைவன் நடுப்பள்ளி யவைத்தலைவன்
நண்ணு ருஞ்சீர்
போற்றுநல வாலிபசா ரணசங்கப் பொறுப்பிறைவன்
புகழ்நம் சென்னை
தோற்றுமிள மக்களுயர் பட்டமுறச் செய்செனட்டும்
பொருந்து நீதோன்றல்
ஏற்றவெலாம் செய்குமார சாமிரெட்டி எனும்பேரோ
டெழிலுற் றோனே. ௫

பன்னுதிவான் பகதூரெனும் பட்டமிறை பிறந்தநாட்
பெற்ற நின்போல்
மன்னினனிவ் யாண்டிந்த மகிழ்ச்சியுரை காஸ்மாப்
பாலிட்டன் வண்ணை
துன்னியபே ரவைத்தலைமை யுறுசிவஞா னச்செம்மால்!
துலங்கு நின்சீர்
பின்னிவனும் அடைதல்முறை பெரிதெனும்பூ தலத்தருரை
பிழையா தன்றே. ௬

எல்லொளி மழுங்கா தோங்கும்
இடமெலாம் ஆட்சி செய்ய

வல்லநம் ஜார்ஜ் செங்கோல்
வளமுடன் வாழி மன்னன்
சொல்லுறு குடிகள் வாழி
தோன்றுநெல் வேலி வாழி
நல்லநம் குமார சாமி
நலமுடன் நாளும் வாழி.

---

# திருநெல்வேலி ஜில்லாச் சிவாலய சாத்திர பாடசாலை தாபனம்

சிவாலயங்களெல்லாம் சைவ சமயிகளுக்குத் தெய்வ பக்தியையும் சிவஞானத்தையும் வளர்ப்பிக்கும் புண்ணிய தலங்களாகும். அத்தலங்கள் தற்காலம் இயல்புமாறி மிகவும் பரிதாபமான நிலைமையிலிருக்கின்றன வென்பது அனைவரும் அறிந்ததொன்றாகும். ஆலயத்திற் கைங்கரியஞ் செய்யும் ஆதிசைவர்களும் ஓதுவார் முதலியோர்களும சைவ சமய உண்மையை நன்கு அறிந்து ஒழுகுவார்களாயின் சிவாலயங்கள் இவ்வித நிலை மாறுபாட்டிற்கு வந்திராவெனபது திண்ணம்.

ஆகையால் ஆதிசைவர் ஓதுவார் முதலியவர்களுக்குச் சைவ சமய வுண்மையை விளக்கும் கலாசாலை ஒன்று ஏற்படுத்துதல் மிகவும் இன்றியமையாதது. அக்கலாசாலையில் அவர்களுக்குச் சிவாகமங்களும், சைவத் திருமுறைகளும், சிவஞானபோத முதலிய சித்தாந்த சாத்திரங்களும், அவற்றிற்கு வேண்டுங் கருவி நூல்களும் கற்பிக்கப்படல் வேண்டும். இக்கலாசாலையில் கற்றுத் தேறியவர்களே சிவாலய கைங்கரியங்களைச் செய்வார்களாயின் சைவ சமயிகள் சிவாலயத்தாலாம் பயனை உள்ளவாறு பெறுவார்கள்.

இவ்வுண்மையைத் திருநேல்வேலிச் சிவ கமிட்டியாரில் ஒருவரும், சேரன்மாதேவி தாலூகா போர்டு தலைவரும், சைவ சாத்திர விற்பன்னருமாகிய அம்பாசமுத்திரம் வக்கீல் திருவாளர்

V. P. காந்திமதிநாத பிள்ளை, B.A. அவர்கள், உணர்ந்து தமது சிரமத்தைச் சிறிதும் பாராட்டாது தாமே நேரில் ஒவ்வொரு தேவஸ்தானத்து அறத்தலைவர் (தரும கருத்தர்)களிடமுஞ் சென்று, அந்தந்த தேவஸ்தான வரும்படியில் ஒருபாகம் மேற்படி பாடசாலை ஏற்படுத்துதற்கென்று தேவஸ்தான வரவு செலவு திட்டமசோதா (Budget)வில் ஏற்படுத்தும்படி வேண்டும் முயற்சிகள் செய்து வருவதாகத் தெரிந்து மகிழ்கிறோம். திருச்செந்தூர் தேவஸ்தான அறத்தலைவர்களும், திருநெல்வேலி தேவஸ்தான அறத்தலைவர்களும் மேற்குறித்த ஏற்பாட்டை மிக்க அன்புடன் ஆதரித்து தேவஸ்தானங்களின் வருவாய்க்குத் தகுந்த பெருந் தொகை வரவு செலவு மசோதாவில் திட்டஞ் செய்திருக்கிறார்களென்பதும் கேள்விப்பட்டு மகிழ்கிறோம்.

மற்றைய தேவஸ்தான அறத்தலைவர்களும் இவ்வுத்தம சிவ புண்ணியத்தைப் பின்பற்றித் தங்கள் தங்கள் தேவஸ்தானத்தின் வரும்படிக்குத் தக்க பெருந்தொகை உதவி செய்தும், சிவ கமிட்டியார்கள் தேவஸ்தான அறத்தலைவர்கள் செய்தனுப்பும் திட்ட மசோதாவை ஆதரித்தும், சென்றல் போர்டார் அங்கீகரித்தும் மேற்படி சிவபுண்ணியத்தை நடத்திச் சிவபெருமானுடைய திருவருளுக்கு உரியவராகும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.

தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கத்தார்.

---

# தென்னிந்திய தமிழ்ச் சங்கம்,

## திருநெல்வேலி

[செல்வி ௬-ம் இதழில் இச்சங்கத்தினரால் நடத்தப்படும் பரீக்ஷைகளின் விவரமும், நடத்தப்படும் இடங்களின் பெயர்களும், பரீக்ஷை விதியும், பரிசு விவரமும் வெளிவந்துள்ளன. இவ்விதழில் முதலாவதாயுள்ள தமிழ்த்தேர்வுப் பரீக்ஷைக்குள்ள பாடங்கள் மட்டும் வெளிவருகின்றன. அடுத்த இதழில் இளந்தமிழ்ப் புலவர்க்குரிய பரீக்ஷைகளுக்குள்ள பாட விவரங்கள் வெளிவரும்.]

## தமிழ்த்தேர்வு

I நீதிநூல்

(1) திருக்குறள் :-கடவுள் வாழ்த்து, அன்பு, ஒழுக்கம், வாய்மை, கல்வி, நட்பு.

(2) நாலடியார் :-அறத்துப்பால். (கழகப் பதிப்பு.)

(3) சோமேசர் முதுமொழி வெண்பா. (கழகப் பதிப்பு.)

II சிறுகாப்பியம்

(1) நளவெண்பா :-கலிநீங்கு காண்டம். (கழகப் பதிப்பு.)

(2) நால்வர் நான்மணிமாலை.

(3) இளைசைப் பதிற்றுப்பத்தந்தாதி. (கழகப் பதிப்பு.)

(4) பிள்ளைத் தமிழ்க் கோவை (செய்யுட் பாடக் கோவை தொள்ளாயிரத்தில்) புன்னைவன நாத முதலியார்.

(5) அருணைக் கலம்பகம். (கழகப் பதிப்பு.)

(6) திருவேங்கடமாலை.

III பெருங்காப்பியம்

(1) பாரதம் :-(வில்லிபுத்தூரர்) கன்ன பருவம்.

(2) திருவிளையாடற் புராணம் :-தடாதகை திருமணப் படலம்.

(3) பிரபுலிங்கலீலை :-மாயை பூசனைகதி, பிரபு தேவர் வந்த கதி,

IV சமயநூல்

(1) தேவாரம் :-திருப்பாண்டிக் கொடுமுடி, மற்றுப் பற்று (சுந்தரர்) கோளறுபதிகம் (சம்பந்தர்) திருப்பூவணம், திருவதிகை வீரட்டானம், திருவடித் திருத்தாண்டகம். (திருநாவுக்கரசு.)

(2) திருவாசகம் :-குயிற்பத்து, பிடித்த பத்து, அருட்பத்து, எண்ணப்பதிகம்.

(3) குலசேகர ஆழ்வார் பதிகம் :-பெருமாள் திருமொழி 9-வது 10-வது திருமொழிகள், தலையன் கான்புகத் தசரதன் புலம்பல், தில்லை நகர்த் திருச்சித்திர கூடமால் தொல்லிராமனாய்த் தோன்றிய கதை முறை.

V இலக்கணம் :

நன்னூற் காண்டிகை:-(நாவலர்)

யாப்பணி இலக்கணம்:-(விசாகப் பெருமாளையர்)

VI வசனம்.

பெரிய புராண வசனம்:- ஆறுமுக நாவலர்

பஞ்ச தந்திரம் :-நட்புப்பேறு, ஆராயாது செயல்.

தமிழ் வரலாறு:-சூரியநாராயண சாஸ்திரியார்.

அறிவுரைக்கொத்து:-வேதாசல சுவாமிகள்.

VII வியாசம்: மேற்குறித்த பாடப் பொருள்கள் குறித்து.

# குறிப்பு

தண்டமிழ்த் தாய்க்குத் தொண்டு பூண்டொழுகுபவரும்; தமிழ்த் தாயி னருந்தவப் புதல்வருமாகிய திருவாளர் பா. வே. மாணிக்கநாயக்கரவர்கள் மேனிலைப் பொறிவலாளர் (Superintending Engineer) என்னும் நிலையில் உறுதி செய்யப்பட்டுள்ள செய்தியை யறிந்து அளவிலா மகிழ்ச்சி யடைந்தோம். இப்பெரியாரது தன்மையினை உணர்ந்து செய்த அரசாங்கத்தினருக்கு வந்தன மளிக்கின்றோம். இப்பெரியார்க்கு உடல் வலிவும், உளவலிவும் குறையாமல் நீண்ட ஆயுளையு மளிக்குமாறு இறைவனை வழுத்துகின்றோம்.

---

# மதிப்புரை

காரியசித்தியின் இரகசியம் :—இந்நூல் இயற்றியவர் ச. கந்தசாமி முதலியாராவர். இஃதோர் அருமையான உரைநடை நூல். இது பெரிதும் மாணவர்க்குப் பயன்றரத்தக்கது. சுவாமி இராமதீர்த்தா அவர்கள் ஆங்கிலத்தில் அமெரிக்காவிலும் ஜெப்பானிலும் செய்த இரு சொற்பொழிவுகளை மொழிபெயர்த்ததாகும் இந்நூல். இதில் ஏழு இரகசியங்களடங்கியிருக்கின்றன. அவ்விரகசியங்களை விளக்குவதற்கு மேற்கோள்களாகச் சில பெரியார்களது அநுபவங்கள் எடுத்துக் காட்டப்பட்டிருகின்றன. இதன் விலை அணா 3. கிடைக்குமிடம் :—அம்பாவிலாச புத்தகசாலை, கோமளேசுவரன் பேட்டை, சென்னை.

நல்லைச் சண்முகமாலை :—இஃது ஓர் அருமையான தோத்திர நூல். இந்நூலை யியற்றியவர் வண்ணைநகர் ந. வெ. செல்லையா என்பவர். செய்யுட்களெல்லாம் தெளிவாயும், உருக்கமாயு மிருக்கின்றன. கிடைக்குமிடம் :—தையல்நாயகி யச்சுயந்திரசாலை, யாழ்ப்பாணம்.

இராமக்ருஷ்ணா விஜயம் :—மைலாப்பூர் இராம கிருஷ்ணமடத்திலிருந்து இத்திங்கள் வெளியீடு இரண்டு திங்களாக வெளிவராமலிருந்து இப்பொழுது வெளிவருகின்றது. இனித்திங்கள்தோறும் வெளிவருமென்று அறிந்து மகிழ்ச்சியடைந்தோம்.

---

Printed by Sivakami Vilasam Press: Published by V. Subbiah
for The S. I. S. S. W. P. Society, Ltd., Madras.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்
திங்கள்தோறும் வெளிவருவது

சிலம்பு ௩ } மெய்கண்டார் ஆண்டு-௭௱௨ ஆவணித் திங்கள் 1925௵ ஆகஸ்டு௴—செப்டம்பர்௴ { பரல் ௪

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## இறையனார் அகப்பொருள்

[கா. சுப்பிரமணிய பிள்ளை, M.A., M.L.]

(௨௮௪-ம் பக்கத் தொடர்ச்சி)

களவொழுக்கத்துள் தலைவன் தலைவியைக் காண்டலும் அவள் வரையர மகளிரோ வானர மகளிரோ அல்லது மயில்விசேடமோ என்று ஐயுறுதலும் மக்கட்குரிய இலக்கணங்கள் கண்டு அவள் மக்கள் வகுப்பினளென்று துணிதலும் அவளது உள்ளக் குறிப்பை யறிதலும் புணர்ச்சிக்கு முற்பட்ட துறைகளாகும் என்பது பெரும்பான்மையோர் கொள்கை. ஐயம், துணிபு என்

பன கைக்கிளை இலக்கணத்திற்கே சிறப்பாக உள்ளன வென்றும் அவை ஐந்திணை யொழுக்கத்துள் கூறப்படுதல் திணைமயக்க மென்றும் ஐந்திணையொழுக்கத்துள் அவை நிகழற்பாலன அல்ல வென்றும் இந்நூலின் உரையாசிரியர் கருதுகின்றார். காட்சி, ஐயம், தெரிதல், தேறல் என்னும் நான்கும் கைக்கிளைக்கு உரியனவென்பது ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்துமாகும். 'முன்னைய நான்கும் முன்னதற் கென்ப' என்னும் சூத்திரத்திற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் அவ்வாறு பொருள் கொண்டார். அவர் கூறுவதாவது "களவியிலிற் கூறும் கைக்கிளை சிறப்பின்மையின் முன்னதற்குரியவெனச் சிறப்பெய்துவித்தார். இது தலைவி வேட்கைக் குறிப்புத் தன்மேல் நிகழ்வதனை தலைவனறிவதற்கு முன்னே தன் காதன் மிகுதியாற் கூறுவனவாதலிற் கைக்கிளையாயிற்று." இதனால் களவியலுள்ளும் கைக்கிளை நிகழும் என்றும், ஆனால் அஃது அத்துணைச் சிறப்புடையதல்லவென்றும் உணரக்கிடக்கின்றது. ஆசிரியர் தொல்காப்பியனார் 'ஒத்த கிழவனும் கிழத்தியுங் காண்ப' என்று கூறியதன்பின் ஐயம், துணிபு, குறிப்பறிதல் என்னும் துறைகளுக்குரிய இலக்கணங்களையுங் கூறியுள்ளார். ஆதலின் களவியற் றுறைகூறுங் கோவைநூலோர் இந்நான்கு துறைகளையும் முதற்கணமைத்தல் மரபாக இருக்கின்றது. ஆசிரியர் திருவள்ளுவர் ஐயம் என்னுந் துறையினைத் தகையணங்குறுத்தல் என்னும் அதிகாரத்து முதற்பாட்டினுள் அமைத்தாரெனினும் கோவைநூலோர் கூறுவது போல நான்கு துறைகளையும் விரித்துக் கூறினாரல்லர். கைக்கிளையொழிந்த ஐந்திணை யொழுக்கத்திற்கும இருவரதுகாட்சியும் குறிப்பறிவும் இன்றியமையாதனவேயாகும். இருவர்பாலும் வேட்கை நிகழினும் சொல் நிகழ்வது தலைவற்கே சிறத்தலின் தலைவனது வேட்கை உணர்ச்சியையே தகையணங்குறுத்தல் என்ற அதிகாரத்துள் ஆசிரியர் திருவள்ளுவர் விதந்தோதினர். எனினும் குறிப்பறிதல் என்ற அதிகாரத்தால் தலைவியினது வேட்கையினையும் தலைவன் கூற்றினால் புலப்படவைத்தார். ஆதலின் தகையணங்குறுத்தல், குறிப்பறிதல் என்ற இரண்டதிகாரமும் ஐந்திணை யொழுக்கத்தின்பாற்படும் தன்மையினவாகவே இறையனு

ரகப்பொரு ளுரையாசிரியர் கருத்துக்கிணங்க அமைந்துள் ளன. 'அணங்குகொல் ஆய்மயில்கொல்' என்று கூறிய பகுதி யும் தலைவியின் வனப்பைப் பெரிதும் புகழ்ந்துகூறும் கருத்துப் பற்றியெழுந்தனவென்று கோடலும் தக்கதே. இஃதிவ்வா றிருப்ப திருச்சிற்றம்பலக் கோவையுடையார், ஆசிரியர் தொல் காப்பியனார் களவியலுட்கூறிய முறைக்கேற்பவும்; உயிர் பேரின்பத்தை நாடியுடைதற்குரிய நெறியினை அமைத்தற் குரிய துறைவைப்பிற் கேற்பவும் காட்சி, ஐயம், துணிவு, நயப்பு, உட்கோள், தெய்வமகிழ்தல், புணர்ச்சிதுணிதல் என் னுந் துறைகளை முதற்கண் தமது அருள்நூலுள் அமைத்துள் ளார். துணிபிற்குப்பின் நயப்பும், உட்கோளிற்குப்பின் தெய்வ மகிழ்தலும் பிறகோவைநூலுட் காண்டல் அரிது. இவ்வாறு பேரின்பக் கருத்திற் கேற்பத்தெய்வமகிழ்தல் முதலிய துறைகளை யமைத்தல் பேரின்பக்கருத்தினைத்தும் குறிப்புடன் இயற்றப் பெற்ற கோவைநூல்களிலேதான் காணப்படும். திருக்கோவை யாருண்மை என்ற நூலில் அதன் பேரின்பக் கருத்து குறிக்கப் பட்டுள்ளது. அவை ஆராய்ச்சிக்கு அரியனவாகலின் விடுத்தாம்.

இறையனாரகப்பொருளுள்ளும் தொல்காப்பியக் களவியலுள் ளும் அவற்றிற் கிணங்கிய திருக்குறள், திருச்சிற்றம்பலக்கோவை யார் முதலிய நூல்களுள்ளும் இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் பாங்கற் கூட்டமும் இடந்தலைப்பாடுமே கூறப்பட்டுள்ளன. இயற் கைப் புணர்ச்சியினுள்ளே தெய்வப்புணர்ச்சி தலைவியிற் புணர்ச்சி என்ற பகுதிகள் கூறப்படவில்லை. ஆயின் பிற்கால நூல்களாகிய நம்பி யகப்பொருள் விளக்கத்துள்ளும் அந்நூலைத் தழுவி யியற் றப்பெற்ற தஞ்சைவாணன்கோவையினுள்ளும் இடந்தலைப் பாட்டிற்கு ஆசிரியர் தொல்காப்பியனார் கூறிய துறைகளை இயற்கைப்புணர்ச்சியினுள்ளே தலைவியிற்கூட்டம் என்ற ஒரு பிரிவிற்கு உரியனவாகக் கூறப்பட்டுள்ளன. இயற்கைப்புணர்ச்சி யினுள்ளே இரந்து பின்னிற்றல், வழிபாடு மறுத்தல், இடை யூறு கிளத்தல், நீடுநினைந்திரங்கல், மறுத்தெதிர்கோடல் முதலி யன அமைதல் அன்பொழுக்கத்திற்கு ஏற்றதாகாது. அது பிற்காலத்தார் ஆசிரியர் தொல்காப்பியர் கருத்தினை உணராமை

யான் வந்த இழுக்காகும். நூல்செய்தார் காலத்துள்ள உலக இயலைத் தழுவி அத்துறைகள் இயற்கைப் புணர்ச்சிப் பகுதியுள் அமையப் பெற்றிருத்தல் கூடும்.

இதுகாறுங் கூறியவாற்றால் கைக்கிளைக்குரிய ஐயம் துணிபு முதலியன வின்றிக் காட்சியின் பயனாக வேட்கை மிக இருவரும் ஒத்துத் தம்முள் இயைவது அன்பொழுக்கத்திற்குச் சிறந்த இலக்கணமா மென்றும், வனப்பின் வியப்புக் காரணமாக ஐயந்தெரித்தல் வேட்கைக்குறிப்பாகக் கொள்ளப்படுமென்றும், அதனால் அன்பொழுக்கத்திற்கு இழுக்கில்லை யென்றும், அன்பொழுக்கத்திற்கு முற்சார்பாக கைக்கிளை நிகழ்தல் திணைமயக்கமாய் ஆசிரியர் 'தொல்காப்பியனாரால் தழுவப்படுதலின் அக் கைக்கிளையும் ஒருவாறு இயைபுடைத்தாமெனவும், கைக்கிளையின் பெருக்கமாக தலைவியிற்கூட்டம் என்ற ஒரு பிரிவினைத் தழுவிக் கோடல் அன்பொழுக்கத்திற்கு அத்துணைப் பொறுத்தமுடையதல்ல வென்றும் அறியலாயிற்று.

இனி, வேட்கை மேலீட்டால் தலைவன் தனது வியப்பை ஐயவடிவாகச் சொல் நிகழ்த்துவதுபோல உள்ளத்துள் தலைவன் வனப்பினை வியத்தல் வேட்கைமிக்க தலைவிக்கும் இயல்பாமென்பதுணர்க. இவ்வகைத்தான தலைவன் தலைவியர் கூற்றிற்கு மேற்கோள் பெரியபுராணத்துட் காணப்படும் துணிபிற்கு முற்பட்ட ஐயந்தெரித்தலே தலைவிக்குப் பொறுத்தமாவதில்லை யென்று நூலோர் கொள்வர். ஆனால் வியப்புப பற்றிய ஐயவுணர்ச்சி தலைவிக்கு நிகழுமென்பதனைக் கவி எடுத்துரைப்பதாற் போந்த இழுக்கு யாது மின்மை யுணர்க. தடுத்தாட்கொண்ட புராணத்துள் ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் பரவையாரைக்கண்டு வியந்ததும், பரவையார் நாயனாரது திருமேனி வனப்பினை வியந்து நினைந்ததும் இருவரது உழுவலன்பு காரணமாக வென்பது கீழ் வரும் பெரியபுராணச் செய்யுளால் விளங்கும்.

'கற்பகத்தின் பூங்கொம்போ காமன்றன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவனருளோ வறியேனென் றதிசயித்தார்.'

'முன்னைவந் தெதிர்தோன்று முருகனோ பெருகொளியாற்
றன்னேரின் மாரனோ தார்மார்பின் விஞ்சையனோ
மின்னேர்செஞ் சடையண்ணல் மெய்யருள்பெற் றுடையவனோ
என்னையென் மனந்திரித்த விவன்யாரோ வெனநினைந்தார்'

இருவர் எண்ணங்களும் ஒன்றோடொன்று மிக்க ஒற்றுமை பெற்றிருந்தன வென்பதை ஆசிரியர் சேக்கிழார் மிகவும் நயமாக எடுத்து விளக்கியுள்ளார். சுந்தரமூர்த்திசுவாமிகள் பரவையாரை 'கற்பகத்தின் பூங்கொம்' பென்று நினைத்தார். கற்பகத்தின் பூங்கொம்பென்பது இந்திரன் மகளாகிய 'தெய்வயானை,'யைக் குறிக்குமாதலின், அதற்கேற்ப 'பரவையார்' சுந்தரமூர்த்தி சுவாமிகளை 'முன்னைவந் தெதிர்தோன்றும் முருகனோ' என்றார். வள்ளிநாயகியாரைக் கூறாது தெய்வயானையைக் குறித்தது முருகப்பெருமான் முதற்கண் அவரை மணந்தமையாற்போலும். இளமையும் அழகும் உடையனென்று குறிக்கின்றசொல்லே முருகப்பெருமான் தமது திருப்பெயராகக் கொண்டமை போல 'சுந்தரன்' என்ற நாயனாரது திருப்பெயரும் அவரது வனப்பையும் இளமையையும் குறிப்பதாயிற்று. ஆதலின் பிறதெய்வங்களைக் கூறாதுமுருகப்பெருமானையே ஆசிரியர்கூறினர்போலும். இருபெண்கொண்டமையும் இருவர்க்கு மொக்கும். இனி, நாயனார் 'காமன்றன் பெருவாழ்வு' என்றதற்கேற்ப 'பெருகொளியாற் றன்னேரில் மாரனோ' என்று நினைந்தார் பரவையார். சிவபெருமானை எதிர்த்து மன்மதன் எரியுற்றனன். நாயனாரோ எதிர்த்துப் பெரும் பயன் பெற்றனர். ஆதலின் 'தன்னேரில் மாரனோ' என்றார். 'அற்புதமோ' என்றதற் கேற்ப 'விஞ்சையனோ' என்றார். 'சிவனருளோ' என்றதற்கேற்ப 'மின்னேர்செஞ் சடையண்ணல் மெய்யருள்பெற் றுடையவனோ' என்றார். இவ்வாறு இருவர் கருத்துறவு ஒருமைப்படுதல் மிக வியக்கற்பாலதா மென்க.

(தொடரும்)

---

# கோயில்

[பண்டிதர், ந. மு. வேங்கடசாமி நாட்டார்.]

கடவுள் வழிபாடு இன்ன காலத்திற் றொடங்கியதென வரையறுத்தற் கியலாவாறு தொன்றுதொட்டிருந்து வருவதாயினும், இப்பொழுது காண்கின்றபடியாக எண்ணிறந்த திருக்கோயில்கள் பல்லாயிர ஆண்டுகளின் முன் இருந்தில என எண்ணுதற்கு இடனுண்டு. யானையும், சிலந்தியும் வழிபட்டஞான்று ஆனைக்காக் கோயில் இற்றையிற்போன்று அமைந்திருத்தல் சாலுமா? கடம்பவனமா யிருந்தஞான்று மதுரைக் கோயில் எப்படி யிருந்திருக்கும்? மற்றும் பல திருக்கோயில்களின் பழைய நிலைமையும் இத்தன்மையதே. கோயில் எடுக்கத் தொடங்கிய பின்னரும் தொடக்கத்திற்றானே இப்பொழுதுள்ளவாறு மிகப்பெரிய மதில்களும், மண்டபங்களும், கோபுரங்களும் இயற்றப்பட்டில என்பது தெளிவு. அக்காலத்தில் இன்னாரின்னார் இத்தூணைத் தூரத்தில் அன்றி இன்ன மண்டபத்தில் இருந்து கடவுளை யிறைஞ்சவேண்டுமென்னும் வரையறை யிருந்திருக்குமோ என்பதை அறிஞர்கள் ஆராய்ந்து பார்த்தல் வேண்டும். இச்சிறிய கட்டுரை இவற்றை யெல்லாம் ஆராய்தல் கருதியதன்று; முன்னைய நிலைமையோ இற்றை நிலைமையோ நேரிதென்றுதல் அன்றென்றுதல் காட்டக் கருதியதுமன்று; கோயிலைக் குறிக்குஞ் சில பெயர் வழக்கினையும், பிற சிலவற்றையும் தமிழ் நூல் கொண்டு ஆராய்தல் கருதியது.

இப்பொழுதுள்ள தமிழ் நூல்கள் எல்லாவற்றினும் தொன்மை யுடையது தொல்காப்பிய மென்பது தமிழறிஞர் பலர்க்கும் ஒப்ப முடிந்தது. அதன்கண் கடவுளரைப் பற்றியும், வழிபாட்டினைப்பற்றியும் பலவிடத்துக் குறிப்புக்கள் உள்ளன. ஆனால் கடவுளர் வடிவினைப்பற்றியாவது, கோயிலைப்பற்றியாவது கூறியிருப்பது புலனாகவில்லை. 'மேவிய சிறப்பி னேனோர் படிமைய' என்னும் அகத்திணையியற் சூத்திரப் பகுதிக்கு 'நால்வகை நிலத்தினும் மேவிய சிறப்பை யுடைய மக்களையல்லாத தேவரது படி

மையவாகிய பொருள்கள்' என இளம்பூரணர் உரை கூறினர். நச்சினார்க்கினியர் இங்ஙனம் கருதிற்றிலர். உயிர் மயங்கியலில் ஒகாரவீறு கூறுமிடத்தில் 'இல்லொடு கிளப்பி னியற்கையாகும்' என ஒரு சூத்திரம் இருத்தல் கொண்டு 'கோயில்' என்னும் பெயர்வழக்கு அப்பொழு திருந்ததாகக் கொள்ளப்படுகிறது. பெயர் இருத்தலின் அதற்குப் பொருளும் இருந்திருக்கவே வேண்டும். ஆயின், கோயில் என்பது அரசமனையைக் குறிக்கும் பெயராய்த் தொன்னூல் பலவற்றினும் பெருவழக்காக வழங்கி யிருத்தலின், தொல்காப்பியத்தாற் பெறப்படுவது இன்னதெனத் துணிதற கரிதாகின்றது.

இனி, கடைச்சங்க நாளிலே யெழுந்த பனுவல்களில் கடவுளிருக்கையைக் குறித்தற்குக் கோயில் என்னும் பெயரும், வேறுபல பெயர்களும் வழங்கியுள்ளன. 'முக்கட் செல்வர் நகர் வலஞ் செயற்கே' என்பதில் நகர் என்ப தப்பொருட்டாதல் காண்க. தேவகுலம் என்பது அப்பொருளதாதல் இறையனாரகப் பொருளுரையால் அறியப்படும் இனிப் பலவற்றையும் விடுத்து அக்காலத்துத் தமிழக வரலாறனைத்தையும் வரித்த சித்திரம் போலுள்ள சிலப்பதிகாரம் ஒன்று கொண்டு நோக்குவோம்.

சிலப்பதிகார இந்திரவிழவூ ரெடுத்த் காதையில்,

'பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வே ளணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீலமேனி நெடியோன் கோயிலும்
மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்'

எனக் கடவுளிருக்கையைக் குறிக்கக் கோயிலென்னுஞ் சொல் பயின்றுள்ளமை காண்க. ஈண்டு 'மன்னவன்' என்பதற்கு வாசவன் என்று பொருள் கொள்ளப்பெற்றுள்ளது. 'சென்றனரசன் செழுங்கோயில் வாயில் முன்' என்புழிக் கோயில் அரசமனையைக் குறிக்கின்றது.

இனி, கோட்டம் என்னும் பெயர் இக்காப்பியத்துப் பெரிதும் பயின்றுளது.

கஞத்திற முறைத்த காதையில்,

'அமரர்தருக் கோட்டம் வெள்ளியானைக்கோட்டம்
புகர்வெள்ளை நாகர்தங் கோட்டம் பகல்வாயில்
உச்சிக்கிழான் கோட்டம் ஊர்க்கோட்டம் வேற்கோட்டம்
வச்சிரக் கோட்டம் புறம்பணையான் வாழ்கோட்டம்
நிக்கந்தன் கோட்டம் நிலாக்கோட்டம் புக்கெங்கும்'

என வந்திருத்தல் காண்க. 'பத்தினிக்கோட்டம்' முதலிய பெயர்களும் காணப்படும். கோட்டமென்பது இங்ஙனம் பொதுவாக இருப்பவும், பதிகத்தில்,

'குணவாயிற் கோட்டத் தரசுதுறந் திருந்த
குடக்கோச் சேர விளங்கோ வடிகட்கு'

என்னும் பகுதிக் குரையெழுதுங்கால், அடியார்க்கு நல்லார் 'கோட்டம் - அருகன்கோயில்' என எழுதியது என் கருதியோ? அருகன்கோயில் 'புறநிலைக்கோட்டம்' எனப் பிறிதோரிடத்துக் கூறப்பட்டிருத்தலின், அது நகர்க்குப் புறம்புள்ளதாமெனக் கொண்டு, குணவாயிற் கோட்டம் என்பதற்கு அங்ஙனம் பொருளுரைத்திருப்பரோ என ஐய முளதாகின்றது.

ஊர்காண் காதையில்,

'நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலும்
உவணச் சேவ லுயர்த்தோ னியமமும்
மேழிவல னுயர்த்த வெள்ளை நகரமுங்
கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்'

எனப் பலபெயரும் பயின்றுள்ளன. 'நியமம்' என்பது முன் காட்டப்பெறுதது. அருகன் கோயிலைக் குறித்தற்குப் 'பள்ளி' முதலிய பெயர்களும் உள்ளன.

மேலே காட்டியவற்றிலிருந்து 'கோயில்' முதலிய பெயர் வழக்குகளே யன்றி, அக்காலத்துச் சமயநிலை பற்றிய வேறு சில செய்திகளும் வெளிப்படும். இப்பொழுது யாண்டும் காணப் படாதும், அருகியுமுள்ள கோயில்கள் பல அப்பொழுதிருந்தன. இந்திரனுடைய வச்சிரம், வெள்ளானை, கற்பகத்தரு என்பவற்றுக் கெல்லாம் கோட்டமிருந்ததும், இந்திரவிழாப் பெருஞ்சிறப்பு

டன் இருபத்தெட்டு நாள் கொண்டாடப் பெற்றதும் இப்பொழுதைக்கு அரிய செய்திகளாம். ஞாயிறு, திங்கள் என்பன நவக்கோளிற் சேர்த்தும், ஒரோவழி இறைவனை வழிபட்டமை கருதித் தனித்தும் அமைக்கப்பட்டிருத்தலன்றி, இப்பொழுது அவற்றுக்குக் கோயில் எங்குள்ளன? அந்நாளிற் பெரிதும் பயின்றுள்ள நான்கு கடவுளரில் ஒருவனாகவுள்ள பலராமன் கோயிலை இப்பொழுது யாம் கண்டிலேம்.

இனி, இங்ஙனம் பல சமயக் கொள்கைகளும் அப்பொழுது மலிந்து கிடந்தன வாயினும் சிவசமயமானது முதன்மையுடையதாகக் கொள்ளப்பெற்று வந்ததென்பது மேற் காட்டியவற்றிலிருந்தே நன்கு புலனாம். யாண்டும் சிவன் முதலில் வைத்துக் கூறப்படுதலேயன்றி, 'பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்' என, முதற்கடவுட்கு இன்றியமையாத இலக்கணத்தால் வேறு பிரித்துக் கூறப்படுதலும் காண்க.

---

## அகம் புறம்

[க. ப. சந்தோஷம் B.A., L.T.]

(௨௩௮-ம் பக்கத் தொடர்ச்சி)

மற்றும் பாலைத்திணையில் பிரிதலன்றிப் பிறிதொன்றுஞ் சொல்லொணாதென்றொரு வரம்பில்லை. அதற் குடன்பட்டவற்றையுங் கூறுதல் பொருந்துமெனறு முன்னோர் தெளிய விளம்பினாராதலின், பிரியக் கருதி யொன்று கிளத்தலு மதன்பாற்படும். இதில் பல திணைச் செய்தி விரவி வருதல் வியப்பன்று. 'பாலை' என்ற பெயர் பால் எனுஞ் சொல்லினின்றுந் தோன்றுவது. பால் = பகுப்பு. ஆண்பால், பெண்பால், முப்பால் என்பவற்றால் அதை யறியலாகும் பகுப்பு = பிரிவு; ஆகலின் பாலை பிரிதற்கிடமாயிற்று இதனுடன், பகல் = பிரித்தல் என்ற பொருளையுட் கொண்டு நண்பகல் பாலைக்குப் பொழுதானமையின் பொருத்தங் காண்க. பட்டினப்பாலை முழுவதும் அகத்திற் கின்பமூட்டும் அழகிய காட்சிகள் நிரம்பியுள. ஒன்றைக்கூறி மேற்செல்வாம்:

"வீட்டு முற்றங்களிலே உலரவைத்திருக்கும் நெல்லுக்குக் காவலாயிருக்குஞ் சிறு பெண்கள், ஒளிவிளங்கு நெற்றியும் கள்ளமறியாத பார்வையும், திருந்திய அணிகலங்களும் உடையர்; இவர்கள் அந்நெல்லைத் தின்ன வருங்கோழிகளை வெருட்டும் பொருட்டு எறிந்த மகரக்குழைகள் அம்முற்றத்திற் சிதறிக்கிடந்து, அங்கே சிறுபையன்கள் மூன்று உருள் உடைய சிறிய தேரைக் குதிரையின்றி இழுத்துக்கொண்டு வருகையில், அதன் உருள்களை இடறி அச்சிறு தேர் போகாமல் வழி முன்பை விலக்குகின்றன." (பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை) இக்காட்சியைக் கண்டு உளங்குளிராதவர் தமிழ்நூல்களைக் கற்றுப் பயனடையார். உரைநடையி லிது உளங்கவரும் வன்மை பெற்றிருத்தலை நோக்கச் செய்யுளின் இனிமை வெளியாகும்.

ஆங்கில நூல்களில் ஆங்காங்குப் பொருத்தம்பற்றி வரும் ஒப்புமைகளின் நயத்தையும் இயற்கையழகு நவிற்சியின் திறத்தையும் மேனாட்டு மக்கள் பெரிதும் போற்றி மகிழ்கின்றார். பத்துப்பாட்டு முழுமையும் இயற்கையழகுக்கொரு களஞ்சியமாகும். எவ்வளவுதான் அருந்தினுந் தெவிட்டாத தீங்கனியனைய சுவைநிறைந்த இயற்கையழகு கண்டு மகிழவிரும்புவோர் பத்துப்பாட்டில் அதைக் கண்குளிரக் காணலாகும். உயர் கல்வி பயிலுந் தமிழ் மாணுக்கர் பலர் தாம் பாராத மேல் நாட்டுக் காட்சிகளை ஆங்கிலத்திற்படித்து அவற்றைப்பற்றிப் பலவாறு பேசி யுவக்கின்றனர். ஆங்கிலப்புலவரின் நூல்களை வருந்திக் கற்குமாறு இவர்கள் பழய தமிழ்ச் செய்யுள்களை யுணர்ப்புகுவரேல் இதுவரையிற் கண்டிரா இன்பத்திலாழ்வர். தமிழைக் கற்பிப்போரிற் பலர் தமிழின் இனிமையைக் காட்ட வகையிலராயிருத்தல் இரங்கத்தக்கது. அகச்சுவையுடைய தமிழ்ப்பாடல்கள் உணர்ச்சிவகையா னூட்டப்படுமேயன்றி அறிவு வகையாற் புகுத்தப்படா. உண்மை யிங்ஙனமிருப்ப, தமிழ்ப்புலமை யுடையோரிற் பெரும்பாலர் எழுத்துக்கூறு, சொற்கூறு முதலியவற்றைப் பெரிதும் பாராட்டிக் கற்பவரை அலைக்கின்றனரேயன்றிப் பொருட்சுவைகாட்டி மகிழ்விப்பதில்லை. சிறியேனுக்குத் தமிழ் புகட்டிய பெரியோர் ஒருநாள், வகுப்பிலுள்ள பிள்ளைகள் புணரியல் கற்

றுச் சிறிது சலிப்புற்றிருத்தலைக் குறிப்பாலறிந்து, பத்துப்பாட்டில் நெடுநல்வாடையிலுள்ள சில வியற்கையழகு நவிற்சியை எடுத்துக் கூறிய காலை எளியேனுள்ளம் பள்ளத்து வழி வெள்ளம்போ லோடியதை ஒருபோதும் மறவேன். அந்நாட்குப்பின் பலவாண்டுகளெனக்குத் தமிழ் பயில இடங்கிடைக்க வில்லை; ஆயினும், அன்று கேட்டவை உள்ளத்தை விட்டகன்றதில்லை. எங்ஙனமாயினு மப்பாடலைக் கற்கவேண்டு மென்றெழுந்த அவாவினால் ஏழாண்டுகட்குப் பின் அதைப் பிறருதவி யின்றிப் பார்க்கலானேன். அதிற் கூறியிருப்பவை முற்று மெனக்குப் புலப்படவில்லையாயினும், குளிரின் கொடுமையும் ஊதையின் நடுக்கமும் உணர்ச்சிக்கேறின. பின் பன்முறை பயில்வதற் கஃதோர் தூண்டுகோலாய் நின்றது. சிறுவர்கள் உளம் புறப்பொருளிற் படியுமாறு அறநெறி புகலுஞ் செய்யுள்களிலும் எழுத்தியல் புணரியல்களிலும் உறையாது. 'பட்குடம்', 'கற்றீது' என்று புணரியலுக்கு எடுத்துக்காட்டாகக் கூறுஞ் சுவையிலாச் சொற்கள் இளைஞர் நெஞ்சில் தங்கா; தங்கினுங் கொழுகொம்பில்லாக் கொடிபோல் இடர்ப்படும். ஆகையால், சுவை நிறைந்த பாடல்களைத் தெரிந்தெடுத் தவற்றின் வழியாய்ச் சொற்கூற்றை விளக்கித் தமிழில் ஆவல் பெருகச் செய்யவேண்டும். தேனின்சுவையறியாதவனுக்கு அதை எடுக்கும் முறை கற்பித்தாலவன் கூர்ந்து கேளான். தேனின் இனிமையை உண்டு கண்டவனே உடலை வருத்தி உயர் மரமேறி யதைக் கவரவும் பின்வாங்கான். முன்னோர் இயற்றிய நூல்களால் இது இனிது விளங்கும். வலியவற்றை எளிதாக்கிக் காட்டுவதை விட்டு, எளிதி லறியக் கிடப்பனவற்றைக் கடுவகையிற் கையாடி, தமிழை நினைந்து இளைஞர் நெஞ்சொடுங்கச் செய்தல் யாதுபயனைத் தரும்? இது நிற்க.

உள உணர்ச்சிக் கேற்ப இயற்கையை யமைத்துக் காட்டுதலால் அவ்வுணர்ச்சி மிகுதியும் வலியுறுமென்பதைப் பாலைத்திணையின்பாற் கண்டோம். குறிஞ்சியையு மவ்வாறு நோக்குதல் நன்று. தட்பமிகுந்த நாடுகளில் ஊதை வீசுங் கூதிர்நாள் நஞ்சு போலஞ்சி வெறுக்கப்படும். உறைபனி தெருக்களிலும் வீடுகள் மேலு மமர்ந்து, விசும்பெங்கு மிருண்டு தோன்ற முகில்

மூடி, இலையற்ற மரங்கள் வெறுங் கிளைகளுடன் பட்டனபோல் நிற்க, வெளியின் புற்றாலுந் தலைகாட்டா தொடுக்குங் குளிர் காலம் மேனாட்டாருக்குச் சாலவுங் கொடிய காலமாகும். நமக்கோ, மழை, முகில், நீர், நிழல், பனி, ஓடை, பொய்கை, குளம், கடல், அலை, நுரை, ஆறு, நுரை, ஆறு, ஊற்று, சுனை, வாய்க் கால், மதகு, ஈரம், தட்பம், பசுமை, புனலாடல், நனைதல் ஆறு தல், தணிதல், குளிர்தல் ஆகிய இவை பெரும்பாலும் இனிமை யையே தரும். "அவன் கருங்குழற் கற்றை மருங்கு திருத்தி, அளகமும், நுதலும் தகைபெற நீவி, ஆகமுந்தோளும் அணி பெறத் தைவந்து, குளிர்ப்பக் கூறித் தளிர்ப்ப முயங்கிப் பிரிவ லென்று வலித்தான்" (இறையனாரகப் பொருளுரை). இஃதனைய உரைகளால் அவ்வினிமை யுணரப்படும். 'ஆதலின் மலைச் சார லையுங் கூதிர்ப்பொழுதையும் நள்ளிரவையும் ஒன்றாக்கிப் புணர் தலோடு பொருத்தினர் முன்னோர். குறிஞ்சித்திணை களவுப் புணர்ச்சிக்குச் சிறந்ததாகலின, மக்கள் நடமாட்ட மில்லாத மலைப்புறமும் ஒருவரும் வெளிவரா கூதிர்ப்பொழுதும் கொடி விலங்குகள் விழித்துத் திரியும் நள்ளிரவும் அதற்குத் துணை யாயின.

திருந்திழாய் கேளாய் நம்மூர்க்கெல்லாஞ் சாலும்
பெருநகை யல்கனிகழ்ந்த தொரு நிலையே
மன்பதை யெல்லா மடிந்த விருங்கங்கு
லந்துகிற் போர்வை யணிபெறத் தைஇநம்
மின்சாயன் மார்பன் குறிநின்றேன் யானாகத்
தீரத்தறைந்த தலையுந்தன் கம்பலுங்
காரக்குறைந்து கறைப்பட்டு வந்துநஞ்
சேரியிற் போகா முடமுதிர் பார்ப்பானைத்
தோழிநீ போற்றுதி யென்றி, யவனாங்கே
பாராக் குறழாப் பணியாப் பொழுதன்றி
யாரிவ ணின்றி யெனக்கூறிப் பையென
வைகாண் முதுபகட்டிற் பக்கத்திற் போகாது
தையா றம்பலந் தின்றியோ வென்றுதன்
பைக்கழித்துக் கொண்டீ யெனத்தாலும் யாதொன்று

வாய்வாளே நிற்பக் கடிதகன்று கைமாறிக்
கைப்படுக்கப் பட்டாய் சிறுமிநீ மற்றியா
னேனைப் பிசாசருளென்னை நலிதரி
னிவ்வூர்ப் பலிநீ பெறுமற் றென்வே னெனப்
பலவுந் தாங்காது வாய்பாடி நிற்ப
முதுபார்ப் பானஞ்சின னாத லறிந்தியா
னெஞ்சா தொருகை மணற்கொண்டு மேற்றூவக்
கண்டே கடிதரற்றிப் பூச்சொரடங்கினா னங்கே,
யொடுங்கா வயத்திற் கொடுங்கேழ்க் கடுங்க
ணிரும்புலிக் கோண்மார் நிறுத்த வலையுளோ
ரேதில் குறுநரி பட்டற் றாற்காதலன்
காட்சி யழுங்க நம்மூர்க் கெலாஅ
மாகுலமாகி விளைந்ததை யென் றுந்தன்
வாழ்க்கை யதுவாகக் கொண்டமுது பார்ப்பான்
வீழ்க்கைப் பெருங்கருங் கூத்து. (குறிஞ்சிக்கலி - 65)

இதிற் குறிஞ்சி நில ஒழுக்கம் அதற்கேற்றபொழுதுடன் கூறப் பட்டது "மன்பதை யெல்லா மடிந்த விருங்கங்குல்" என்பதனால் நள்ளிரவும், "அந்துகிற்போர்வை யணிபெறத்தைஇ" என் பதனால் குளிர்காலமும் பெறப்பட்டன "ஒடுங்கா வயத்திற் கொடுங்கேழ்க் கடுங்கண் இரும்புலி கோண்மார் நிறுத்த வலை யுளோர் ஏதில் குறுநரி பட்டற்றால்" என்ற ஒப்புமையால் மலைப் புறத்தின் அணிமை பெறப்பட்டது. இப்பாடலில் காதலன் வர வை எதிர்நோக்கிக் காத்திருந்த தையல் ஒரு பார்ப்பான் கண் ணிற்பட்டு அவனால் வருத்த மெய்தியதைக் காட்டுகின்றது. இங் ஙனம், மக்களாலும், விலங்குகளாலும் இருளாலும், நிலவாலும், காவலராலும், உறவினராலும் வரக்கூடிய தடைகளை மேற் கொண்டு கூடுவது களவியலுக்கு மிகுதியும் பொருத்தமானது. 'நிழலருமை வெய்யிலிலே நின்றால் தெரியு'மென்பது பழமொழி யாதலின் காதலிருவர் தமது கருத்துக்கு முரண்பட்ட யாவற் றையும் விலக்கித் தம்மைப் பிரிக்கவெழுந்த இடையூறுகளை யொதுக்கி யொருவரை யொருவர் பார்ப்பது அதிக வின்பத்தை யளிக்கு மென்பது எளிதிலறியப்படும். மலை என்பது விலங்கு;

விலங்கு குறுக்கே வளர்வது. காதலனும் காதலியும் சேர்வதற்குக் குறுக்காய் நிற்கும் பலசெய்திகளை நோக்கி, மலை புணர்ச்சிக்கிடமாயிற்று. அன்றியும், குறுக்கிடுதல் = எதிர்ப்படுதல்; குறுகலா = பகைவர், பொருந்தாதவர்; ஆகையினால், குறுகுதல் = அணுகுதல், பொருந்துதல், கூடுதல, புணர்தல்; அது நடக்குமிடம் குறிஞ்சி. குறிச்சி = குறுகிய ஊர், சிற்றூர், மலைப்புறத்துச் சிறிய ஊர். இவற்றால் நிலத்திற்குந் திணைக்குமுள்ள தொடர்பு ஒருவாறு புலப்படும் மேற்கூறியவற்றால் நமது தமிழ் முன்னோர் இயற்கையை மக்களினின்றும் பிரித்துத் தனியாய்க் கூறினரல்லர் என்பது தெற்றெனத் தெரியும். மக்களுக்கு வரும் நன்மை தீமைகளாற் பிறக்கும் மகிழ்தல், இரங்கல் முதலியவற்றோடு பொருந்த வைத்து இயற்கை யழகை யுரைப்பதே தமிழ் மரபு. அதாவது இயற்கையை இருக்குமாறு உரையாது அது இருக்கவேண்டியவாறு உரைப்பது. (Describing Nature not as it is, but as it should be.) இங்ஙனம், இயற்கையைத் திரித்தாள்வது தகுமோவென்று சிலர் ஐயுறலாம். வையகத்திற்கும் வானகத்திற்கும் உயிராய் நின்றிலங்கும் இறைவனது தன்மையைத் தம் மகத்தடக்கிய மகாகளின் பெருமையைக் கருதி இயற்கையை அவர்கள் உளப்பான்மையுடன் ஒன்ற வைத்தல் தவறாகாது.

இதுகாறும் கண்டவற்றால், குளிர்காலத்தில் மலைச்சிறையிற் புணர்தலும், முதுவேனிற் பாலையில் பிரிதலும் ஏன் நிகழவேண்டுமென்பது காட்டப்பட்டது. இவை பிறவிடத்திலும் பிறபொழுதிலும் நிகழாதோ? எனின், இவை எவ்விடத்தும் எப்பொழுதும் நிகழும், என்றாலு மவற்றை நூலிற் கூறப்புகின் பெரியோர் வகுத்தவாறு கூறவேண்டுமென்பது. யாதுபற்றி யவ்வாறு கூறவேண்டுமென்று கடாவின்; நூலியற்றுதல் ஓவியமெழுதலை யொத்த ஒருளத்தொழில், உளத்தின்கட் டோன்றிய காட்சிகளை ஓவிய வல்லான் நிறத்தில் எழுதி வெளிப்படுத்துகிறான்; மொழிவல்லான் சொற்களில் வெளிப்படுத்துகிறான் இருவரும் அகத்தில் தோன்றியதையே புறப்படுத்துகின்றனர். ஒரு பட்டினத்தின் சிறப்பைக் காட்ட வெழுதிய ஓவியத்தில் அழகிய

மாளிகைகளுங் கோவில்களும் கல்விமன்றங்களும் கண்ணுக்கினியவை விற்குங் கடைத் தெருக்களும் நன்மக்களுந் தோன்றுவர்; அது கொண்டு அப்பட்டினத்தில் இடிந்த வீடுகளுங் கோழியாடு கொல்லப்படு மிடங்களுங் குருடர் முடவர் முதலியோரு மில்லையென எவருந் துணியார். ஓவியப்புலவன் தன் கருத்திற்கேற்பப் பட்டினத்துள்ள சிலவற்றை நீக்கிச் சிலவற்றைக் குறைத்து வேறு சிலவற்றைப் பெருக்கி எழுதுவான். இதனைலவன் உள்ளத்தை யுள்ளவாறு சொல்ல விலையெனக் கற்றோர் குற்றங் கூறார்.

> "பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
> செய்யாமை செய்யாமை நன்று"

என வள்ளுவர் கூறி யிருப்பதைக் கருதி அவர் பிறவறஞ் செய்யாதிருத்தல் நன்றென விளம்பினரென்று பொருள் கொளல் குற்றறிவாகும். கொண்ட நோக்கத்திற்கேற்ப ஒன்றைக் குறைத்தும் வேறொன்றைக் கூட்டியுஞ் சொல்வதியல்பு. இதற்கிசையவே புணர்தல் பிரிதல் முதலியவை உலகில் எக்காலத்தும் எவ்விடத்தும் நிகழினும் கற்றுணர்ந்தோர் அவற்றை இடம் பொழுது செய்தியுடன் சேர்த்துக் கூறி இனிமை யூட்டுவரென்க.

(தொடரும்)

---

# ஏடுதேடல்

[சீயாழி. ப. அ. முத்துத் தாண்டவராய பிள்ளை]

1903-ஷு மேமீ 25வ மதுரைத் தமிழ்ச் சங்கத்து வருஷோற்சவக் கூட்டத்தில் 'ஏடு தேடல்' என்று அடியேன் பிரசங்கித்த விஷயமும், அதன்பின் ஸ்ரீமாந். பொ. பாண்டித்துரைத் தேவரவர்கள் திருவாளர் எம். ஆர். கந்தசாமிக் கவிராயரவர்களை அத்துறையினியோகித்த ஏற்பாடும் அன்பர் பலரும் அறிவர். இதன் முன்னரும் பின்னரும் தமியேன் ஏடு தேடிவருங்கால், சிறந்த பல பல தாளபத்திர ஸ்ரீகோசங்கள் ஸ்ரீகாழி

ஸ்ரீமாந் கி. சிதம்பரநாத முதலியாரவர்களது திருமாளிகைப் புத்தக நிலயத்துக் காணப்பெற்றேன். அப்பிராசீந கோசங்களில் கஉ சைவத்திருமுறைகளும், கச மெய்கண்ட சாத்திரமும் கச பண்டார சாத்திரமும் சிற்றம்பல நாடிகள் சாத்திரக் கொத்தும், சதமணிக்கோவையுட்பட உள சிவஞான நூல்களும் பிறவும் உள. இவற்றுள் சிவஞானபோத முதலிய சைவ நூல்களின் தத்துவார்த்தமும் துகளறுபோதச் செய்யுளும் அந்நூற்குச் சிறந்ததோர் குறிப்பும் சில தேவாரப் பதிகங்களும் இற்றைவரை அச்சுக்கு வாராதன இவ்வேடுகளைக் 'செல்வி' யபிமானிகள் நோக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

---

[ப. அ. மு.]

P. S. மேற்கண்ட சைவநூற்க ளன்றி, கம்பராமாயணம் ௭ ட பிரதிகளும், குருபரம்பரை உ காண்டமும், ஸ்ரீகோசம் ஆறாயிரப்படியும், பகவத் கீதையும், பரமாசாரிய சுவாமிகள் ஸ்ரீ மணவாளமா முநிகள் விஷயமும், உபதேச ரத்தினமாலையும் ஆழ்வார் திருநகரி சடகோபரந்தாதியும், மணவாள மாமுநிகள் நூற்றந்தாதியும், நூற்றெட்டுத் திருப்பதிக் கலித்துறையும், மஹா புராணமும், முக்கூடற் பள்ளும், அருஞ் சொல் விளக்கமும், இலக்கண விளக்கமும், திருவானைக்காவுலாவும், வருணகுலாதித்தனுலா மடலும் உள்ளன. இவையும் பிரதி பேதங்களையுற்று நோக்குவார்க்குப் பெரும்பய னளிப்பனவாம்.

# திருப்பாசுரம்

[வேலூர். C. S. இராஜாப் பிள்ளை]

(௩௱௩௬-ம் பக்கத் தொடர்ச்சி)

முதன் மூன்று பாசுரங்களிற் பல வகையாக விரித்துக்கூறப் பெற்ற அவ் விறைவன், யாவரானும் இத்தகைய னெனத் துணியக் கூடாதவனாக நிற்றலின், அவனது மாண்பும், அடியார்க்கருளுந் திறனும், சொல்ல வொண்ணாததாய், எல்லையின்றி விரியுமென்றெண்ணிப், பிரமபுரத் தலைவர் "ஆட் பாலவர்க் கருளும் வண்ணமும், ஆதி மாண்பும் கேட்பான் புகிலளவில்லை கிளக்க வேண்டா" எனத் திருவாய்மலர்ந்ததை விளக்கிச் சேக்கிழார் பெருமான்"

"ஆதி யாட்பா லவர்க்கரு ளுந்திறம்
நாதன் மாட்சி கேட்க நவிலுங்கால்
ஓது மெல்லை யுலப்பில வாகலின்
யாது மாராய்ச்சி யில்லையா மென்றதாம்"

என விளக்கினரென்க. இறைவ னியல்பு சொல்ல வொண்ணாதெனினும் திருவடிஞானங் கைகூடப்பெற்று, திருவருள் வழி நின்று, விரும்பிக் கேட்பா ராயின், அவர்தம் வினைகளனைத்தும் வேறாகிக் கெட்டொழிதல் துணிபாகலின், அதனை வற்புறுத்திப் புகலிவேந்தர் "தக்கார் கோட்பாலனவும் வினையுங் குறுகாமை எந்தை தாட்பால் வணங்கித் தலை நின்று கேட்க" என்று மொழிந்தருளியதைத் தொண்டை நாட்டுத் தூயோர்,

"அன்ன வாதலி னாதியார் தாளடைந்
தின்ன கேட்கவே ஏற்றகோட் பாலவும்
முன்னை வல்வினை யும்முடி வெய்துமத்
தன்மை யார்க்கென் றனர்சண்பை காவலர்"

எனப் பொருள் விரித்தனர்.

ஏதுக்க ளாலு மெடுத்த மொழியாலு மிக்கு
சோதிக்க வேண்டா சுடர்விட் டுளனெங்கள் சோதி
மாதுக்க நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கள் மிக்கீ ரிறையே வந்து சார்மின்களே

(இ-ள்) எங்கள் சோதி மயமாகிய அச்சிவன் சுடர்மாத்திர மாய் நிற்கின்றானாகலின், காட்சி, அநுமானம், ஆகமம் முதலிய பிரமாணங்களாலும், எடுத்துரைக்கும் மொழிகளாலும் ஆராய் தல் வேண்டா. சாதுக்களே! நீங்கள் அவனை மனத்திற் பற்றுங் கள். அவனைச் சாருங்கள். அல்வாறாயின் உங்கள் பெரிய துன் பத்தினின்றும் நீங்குவீர்கள் (எ - ம்)

"ஏதுக்க ளாலு மெடுத்த மொழியாலு மிக்குச் சோதிக்க வேண்டா" என்பது, முழுமுதற்கடவுளாகிய பரசிவப்பெரு மான், கண் முதலிய இந்திரியங்களாற் காணுங் காட்சியளவைக் கும், கண்ட ஏதுவைக் கொண்டு காணாத பொருட்களை ஊகித்தறி யும் அநுமான அளவைக்கும், மெய்ம்மொழியாகிய ஆகம வள வைக்கும் அப்பாற்பட்டவனாய், ஒப்பும், உயர்வுமின்றித் தானே தனக்கு நிகராக நிற்பவ னெனப் பொருள்தருதலின், தொண் டர் புராண முடையாரும் இதனை,

" மன்னு மேதுக்க ளாலெனும் வாய்மைதான்
தன்ன தொப்புவே றின்மையிற் சங்கரன்
இன்ன தன்மையை யேதுவெடுத் துக்காட்
டன்ன வற்றா லளப்பில னென்றதாம்"

என விளக்கினார்.

"சுடர்விட் டுளனெங்கள் சோதி" என்பது புறவிருளை நீக்கிப் புறவொளியாய்த் திகழும் அக்கினிபோல ஆன்மாக்க ளின் வியாபக ஞானத்தை இருட்படலம்போல் மறைத்துநிற்கும் அக விருளாய ஆணவத்தை நீக்கி உள்ளொளியாய் விகற்ப மில் லாத சுடர் மாத்திரமாய் நிற்கின்றா னெனப் பொருள் தருமாக லின் சேக்கிழார் சுவாமிகள்,

தோன்று காட்சி சுடர்விட் டுளனென்ப
தான்ற வங்கிப் புறத்தொளி யாயன்பில்
ஊன்ற உள்ளெழுஞ் சோதியாய் நின்றனன்
என்று காண்பார்க் கிதுபொரு ளென்றதாம்''

எனப் பகர்ந்தனர்.

''மாதுக்க நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்'' என்பது சுடர்விட் டொளிரும் அவ்விறைவனை அன்பினாற் பிணித்து அகத்தே நிறுவி ஞானக்கண்ணாற் கண்டு, இரவும் பகலும் எந்நேரமும் ஓய்வின்றிச் சிந்தை செய்யின் அவரது விபரீத உணர்ச்சியைத் தரும் பிறவிப்பிணி நீங்குமென்று பொருள்படுத லின் பெரியபுராணமும்,

''மாதுக்க நீங்க லுறுவீர் மனம்பற்று மென்ப
தாதிச் சுடர்ச்சோதி யையன்பி னகத்துள் ளாக்கிப்
போதித்த நோக்குற் றொழியாமற் பொருந்தி வாழ்ந்து
பேதித்த பந்தப் பிறப்பின் னெறிபேர்மி னென்றும்''

என அருளிய தென்க.

இவ்வாறு சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களினின்று தாம் விரும்பிய எல்லாப் பேறுகளையும் பெறுவோரே சாதுக்க ளாகலின் ''சாதுக்கள் மிக்கீ ரிறையே வந்து சார்மின்களே'' என்பதைச் சேக்கிழார்,

''ஈண்டு சாதுக்க ளென்றெடுத் தோதிற்று
வேண்டும் வேட்கைய வெல்லாம் விமலர்தாள்
பூண்ட வன்பினிற் போற்றுவீர் சார்மினென்
றூண்ட சண்பை யரச ரருளினார்''

என விளக்கி யருளினர்.

ஆடும் மெனவு மருங்கூற்ற முதைத்து வேதம்
பாடும் மெனவும் புகழல்லது பாவ நீங்கக்
கேடும் பிறப்பு மறுக்கும் மெனக்கேட் டீராகில்
நாடுந் திறத்தார்க் கருளல்லது நாட்ட லாமே.

(இ-ள்) அப்பெருமானுடைய திருவடிஞான சபையில் நின்று ஐந்தொழில் நடனம் புரியும் என்றும், யாவராலும் வெலற்கரிய இயமனை உதைத்ததென்றும், வேதங்களாற் புகழப்படுகின்றதென்றும், தனக்கொரு புகழ்கருதாது ஆன்மாக்களைப் பற்றிய இருள் அகலவேண்டுமென்ற ஒன்றே கருதி எழுந்த பெருங் கருணையானே, அவர்கட்குண்டான துன்பத்தையும், மாறாது மேன்மேலும் உற்பத்தியாகின்ற பிறவியையும் நீக்கும் என்றும், பெரியோர் கூறக் கேட்டலால் அத்திருவடியை அவனது திருவருளெனக் கூறுவதன்றி வேறியாதெனக் கூறல் பொருந்தும் (எ.ம்)

உலகத்திற் சாமானிய மனிதர்களாலும், கற்றறிந்த மேன்மக்களாலுஞ் செய்யப்படுவனவாகிய எல்லாச் செயல்களும், தம் பயனும் புகழுமே கருதி என்பது எல்லாரும் பெரும்பாலும் ஒப்புக்கொள்ளுதற் குரியதேயாம். கைலையைப் பேர்த்த இராவணன் மீண்டு சாமவேதத்தாற் புகழ அவற்குப் பேரும் பெரும்படையு மீந்தான் இறைவனென்பதை நோக்க இஃதொரு வியப்புமன்று இதுபற்றியன்றே "புகழ்ச்சி விரும்பன் போலும், இகழ்ச்சியறியா என்பணிவோனே" எனப் பெரியாரும் பணித்தனர்.

இறைவன் புகழ்ச்சி விருப்பனாயினும், அம்பலத்தாடுவதும், அறங்கூற்ற முதைத்ததும், கேடும் பிறப்பும் அறுப்பதுமாகிய இவையெல்லாம், கைம்மாறு வேண்டா கார்முகிலனைய பெருங் கருணையாலென்பதே இப்பாசுரத்தின் கருத்தாகலின் பெரிய புராணமும்,

ஆடும் மெனவாந் திருப்பாட்டி னமைத்த மூன்று
நீடும் புகழோ பிறர்துன்ப நீத்தற்கோ வென்று
தேடு முணர்வீ ருலகுக் கிவைசெய்த தீசர்
கூடுங் கருணைத் திறமென்றனர் கொள்கை மேலார்

என அருளிச்செய்த தாம்.

கடிசேர்ந்த போது மலரான் கைக்கொண்டு நல்ல
படிசேர்ந்த பால்கொண் டங்காட்டிடத் தாதை பண்டு
முடிசேர்ந்த காலை யறவெட்டிட முக்கண் மூர்த்தி
அடிசேர்ந்த வண்ண மறிவார் சொலக்கேட்டு மன்றே.

(இ-ள்) வாசனை பொருந்திய மலர்களைக் கையிற்கொண்டு, நல்ல நிலத்தில் தாபித்த சிவலிங்கப் பெருமானுக்குப் பாலாபிடேகஞ் செய்து, அர்ச்சனை செய்யுங்காலத்து, அப்பூசனையின் பெருமையுணராது இடையூறு செய்த பிதாவினுடைய தன் மிடியாற் பன்முறை வணங்கப்பெற்றதாளை இற்றுப்போகும்படி வெட்ட பெருமான் அவரைத் தம் மடியிற் சேர்த்த வரலாற்றினை அறிவினர் சொல்லக் கேட்டோம்.

சிவபெருமானிடத்து உண்மையன்புடைய தொண்டர்கள் யாவராயினும், அவர் செய்வன வெல்லாம் தானெனு முனைப்பின்றித் தலைவ னருள்வழிப்பட்டுச் செய்கின்றனவாகலின், அவை அவர் செயலாகாது இறைவன் செயலேயாகும். வேள்வி முதலிய நற்கருமங்களும் அவனருளின்றித் தானெனும் முனைப்புடன் செய்யப்படுமாயிற் பயன்தரா. துன்பமுந் தரும் என்பது.

"அரனடிக் கன்பர் செய்யும் பாவமு மறம தாகும்
பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீய தாகி
நரரினிற பாலன் செய்த பாதகம் நன்மை யாய்த்தே"

என்னும் பிரமாணத்தால் உணரக் கூடியுதாகலின் சேக்கிழார் பெருமானும் இப்பாசுரத்திற்கு,

"கருதுங் கடிசேர்ந்த வெனுந்திருப் பாட்டி லீசர்
மருவும் பெரும்பூசை மறுத்தவர்க் கோறல் முத்தி
தருதன்மைய தாதல் சண்டீசர் தஞ்செய்கை தக்கோர்
பெரிதுஞ் சொலக்கேட் டனமென்றனர் பிள்ளை யார்தாம்"

எனப்பொருள் கூறினர்.

வேத முதல்வன் முதலாக விளங்கி வையம்
ஏதப் படாமை யுலகத்தவ ரேத்தல் செய்யப்
பூத முதலவன் முதலே முதலாப் பொலிந்த
சூத னொலிமாலை யென்றே கலிக்கோவை சொல்லே.

(இ-ள்) வேதங்களாற் புகழ்ந்து கூறப்படுகின்ற அம்முதல்வனே எல்லாப் பொருள்கட்கும் முதல்வனாகி உலகர் துன்ப நீங்கித் தன்னை ஏத்துமாறுதானே அவ் ஆன்மாக்களுக்கு நாயகனாகின்றான். அவனது பெருமையை வேதங்களே போற் புகழ்வன புராணங்களும் (எ - ம்)

சிவபெருமானது பொதுவியல்பு சிறப்பியல்புகளை அவாருளிய வேதங்கள் புகழ்வது போலவே பதினெண் புராணங்களும் உலகத்தவர் துன்ப நீங்குமாறு புகழ்ந்துபோற்ற ஆட, எடுத்த பாதமே யாவற்றினுஞ் சிறந்து நிற்பதென அத்திருவடிப் பெருமையே கூறலின் அவையும் வேதத்தோ டொப்புடையன வென்பார்,

வேத முதல்வ னெனுந்திருப் பாட்டினினோர்
ஆதி யுலகோ ரிடர்நீங்கி டேவத்த வாடும்
பாத முதலாம் பதினெண் புராணங்க ளென்றே
யோதென் றுரைசெய் தனர்யாவும் ஓதா துணர்ந்தார்

எனப்பொருள் கூறினார்.

பாராழி வட்டம் பகையா 'லலிந்தாட்ட வாடிப்
போராழி யான திடர்கண் டருள்செய்தல் பேணி
நீராழி விட்டேற்றி நெஞ்சிடங் கொண்ட வர்க்குப்
பேராழி யீந்த புகழும் புகழுற்ற தன்றே.

(இ-ள்) கடல் சூழ்ந்த வட்ட வடிவமான இப்பூமி பகைவனாகிய சலந்தரனாற் கலக்கப்பெற்று வாட்டமுற, உலகத்தை காக்குந் திருமால் சிவபெருமானை வழிபட்டு அத்துன்பத்தை நீக்கக் கருதித் தான் பள்ளி கொண்ட பாற் கடல் நீங்கிப் பூமியை யடைந்து இடைவிடாது நினைக்க அவர்க்குச் சக்கர மருளியதும் இறைவற்கு ஒரு பெரும் புகழாயிற்று (எ - ம்)

காத்தற் கடவுளாகிய திருமாலும் தனக்குச் சலந்தரனால் விளைந்த இன்னல் நீங்கித் தங்தொழிலைச் செவ்விதி னடத்தத் துணைபுரிந்தது சிவபெருமான் திருவருளே என்பது இப்பாசுர உள்ளக்கிடை யாகலின் சேக்கிழாரும்,

*பாவுற்ற பாராழி வட்டத் திருப்பாட்டி னுண்மை*
*காவற் றொழிலா னெனுங் கண்ணனுங் காவல்பெற்ற*
*தியாவர்க்கு மேலாய வீசனரு ளாழி பெற்று*
*மேவுற்ற சீருற் றது வென்றனர் வேத வாயர்*

*என விளக்கினர்.*

## திருவிழிமிழலை தேவாரம்

*"தருப்ப மிகு சலந்தரன்றனுட றடிந்த சக்கரத்தை வேண்டி யீண்டு, விருப்பமொடுமால் வழிபாடு செய்ய விழி விமானஞ் சேர மிழலையாமே" என்பதும் ஈண்டு கவனிக்கத் தக்கது.*

*மாலா யவ னு மறைவல்ல நான்முகனும்*
*பாலாய தேவர் பகரில்லமு தூட்டல்பேணிக்*
*காலாய முந்நீர் கடைந்தார்க் கரிதா யெழுந்த*
*வாலால முண்டங் கமரர்க் கருள்செய்த தாமே.*

*(இ-ள்) இன்னும் அத்திருவருளைப் புகழுமிடத்து காற்றினால் அசைக்கப்படுகிற கடலைக் கடந்த திருமாலும், பிரமனும் ஏனைய தேவர்களும் அமிர்தம் உண்ணுமாறு செய்து, அக்கடலிற் றோன்றி அவர்கட்கு அச்சம் விளைத்த விடத்தைத் தாமே யுண்டு தேவர்கட்கு அருள் செய்ததனாலும் பெருமை பெற்றதென்க.*

*இரு வினைப் பயன்களாகிய இன்பத் துன்பங்கள் உயிர்களாகிய நமக்கே யன்றித் தமக்கு எஞ்ஞான்று மில்லையாயினும், நீ துன்ப முற்றும் பிறர்க்கு நலமே புரிக என நமக்குச் செய்கையான் உணர்த்தத் திருவுளங் கொண்டே இறைவன் துன்பந் தரும் விஷத்தைத் தாம் உண்டு, இன்பந்தரு மமிர்தத்தை அஞ்சி வந்த அமரர்க்களித்தனர் என்பதே இப்பாசுரக் கிடையாகலின் பெரிய புராணமும் இதனை,*

*"மாலா யவனென்ன வருந்திருப் பாட்டின் மாலுந்*
*தோலா மறைநான் முகனுந் தொடர்வா மமரர்*
*ஏலா வகைசுட்ட நஞ்சுண் டிறவாமைக் காத்த*
*மேலாங் கருணைத் திறம்வெங் குருவேந்தர் வைத்தார்"*

என விளம்பிற்று.

அற்றன்றி யந்தண் மதுரைத் தொகையாக்கி னானுந்
தெற்றென்று தெய்வந் தெளியார் கரைக்கோலை தெண்ணீர்ப்
பற்றின்றிப் பாங்கெதிர் வின்வும் பண்பு நோக்கிற்
பெற்றொன் றுயர்த்த பெருமான் பெருமானு மன்றே.

(இ-ள்) அதுவுமன்றி அழகிய குளிர்ச்சி பொருந்திய மதுரையிற் றமிழ்ச் சங்கம் நிறுவிய பாண்டியன் தெளிந்து தேற்றியுந் தேறாத ஈனர்களாகிய அமணர்கள் வைகை நதியில் எடெதிர்த்துச் செலுதலைக் காண்பாராயின் இடப வாகனத்தையுடைய சிவபெருமானே சிறந்த பெருமா னென் றுணர்வர். (எ-ம்)

மதுரைமாநகரத்தில் தமிழ்ச் சங்கந் தாபித்துத் தமிழை வளர்த்த பாண்டியர் தாம் உண்மை யுணர்ந்து உணர்த்தவும், திருவருள் கூடாமையின் உணராத் சமணர்கள் ஏடெதிர் செல்லக் காண்பரேல், சிவபெருமானே முதற் கடவுளென்றும், அவ்விடத்துச் செய்புமன்பே பயன் தருதலின் அதுவே சிறந்ததென்றும் இப்பாசுரத்தால் உணரப்படுதலின் சேக்கிழாரும்,

ஆனவற் றன்றி யென்றவத் திருப்பாட்டிற் கூடல்
மாநக ரத்துச் சங்கம் வைத்தவன் தேற்றத்தேறா
ஈனர்க ளெல்லைக் கிட்டவேடு நீரெதிர்த்து செல்லில்
ஞான மீசன்பா லன்பே யென்றனர் ஞானமுண்டார்

என அருளினார் என்க.

நல்லார்கள் சேர்புகலி ஞானசம் பந்தனல்ல
எல்லார்களும் பரவு மீசனை யேத்துபாடல்
பல்லார்களு மதிக்கப் பாசுரம் சொன்னபத்தும்
வல்லார்கள் வானோருல காளவும் வல்லாரன்றே.

(இ-ள்) எல்லா நலனும் நிரம்பிய பெரியோர்கள் வாழுகின்ற புகலிப்பதியில் தோன்றிய ஞானசம்பந்தனாகிய நான் அந் நல்லோரனைவருந் துதிக்கின்ற சிவபெருமானைப் புகழ்ந்து பாடிய பலராலும் மதிக்கப்படுகின்ற பாசுரங்களை ஓதவல்லவர் இம்மை

யினும், மறுமையினும் மேன்மை பொருந்திய அரசாக்ஷி பெற்று வாழ்வர் (எ-ம்)

"விண்பொ யதனால் மழைவிழா தொழியினும் விளைவுதான் மிகவுடை மண்பொ யதனால் வளமிலா தொழியினுந் தமதுவண் மைவழுவார் உண்ப கரவா ருலகி னூழிபல தோறுநிலை யானபதிதான் சண்பைநக ரீசனடி தாழுமடி யார்தமது தன்மை யதுவே

என்றும்,

"இருபிறப் போர்ந்து முப்பொழுது குறைமுடித்து
நான்மறை யோதி யைவகை வேள்வி
அமைத்தா றங்க முதலெழுத் தோதி
வரன்முறை பயின்றெழு வான்றனை வளர்க்கும்

பிரமபுரம்" என்றும் பலவிடங்களில் தாம்புகழ்ந்ததற்கேற்ப ஈண்டும் "நல்லார் சேர் புகலி" எனத் திருவாய் மலர்ந்தருளினர்.

தாமருளிய பாசுரத்திற்குத் தாமே பயன் கூறுவது பொருந்துமோ வெனின்:—

கல்வி யறிவு நிரம்பிய புலவர்கள் போலன்றி, சிவபெருமான் திருவருளால் எல்லா வுலகமும் ஈடேறும் பொருட்டே பூமியில் அவதரித்த பெருமான் ஆகலின் கூறுதல் அமைவுடைத்தே யென்க.

திருஞானசம்பந்தப்பெருமான் தாமருளிய எல்லாப் பதிகங்களிலும் முதல் ௭, ௬ பாடல்களினால் சிவபிரான திலக்கணங் கூறி அடுத்த சில பாடல்களினால் மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையிற் கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளுமெனக் காட்ட அரக்கனாகிய இராவணனுக்கு அருள் புரிந்ததையும், சிவபெருமான் அன்புடன் தொழுவார்க்கு எளியரும், ஏனையோர்க்கு அரியரும் என்ப துணர்த்த, பிரம விட்டுணுக்கள் பறவையுங் கருவிலங்குமாய்த் தேடியதையும், அயற்றுறைகள் யாவும் பழியையே தருமென்பது காட்ட சமண புத்தர்களுடைய மதத்தையும் எடுத்தியம்பியும், இவைபோன்ற

பல உதாரணங் காட்டியும், அப்பால் பதிகத் திருக்கடைக்காப்புச் செய்தல் மரபாகலின், இத்திருப்பாசுரப் பதிகத்தும் ௬—௭ ௮—௯—௰ இப் பாசுரங்களால் சண்டேசர்க்கும், திருமாலுக்கும், தேவர்கட்கும், மார்க்கண்டர்க்கும் அருள் செய்த விதத்தைக் கூறியருளினர்.

ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகள் அருளிய திருப்பாசுரப் பொருள் விளக்குந் திருப்பாடல்களைக் கொண்டு ஆராயுமிடத்து 'வாழ்க அந்தணர்' எனத் தொடங்கிய திருப்பாசுரங்களால் உணரக் கூடியன எவை யெனின்:—

உலகந் தழைத்தற் கேதுவாகிய வேத நூலொழுக்கமும், உயிர்கள் வீடு பேறெய்தற் கேதுவாகிய 'சைவ மெய்ந் நெறி யொழுக்கமும், இவற்றிற்கு அந்தணர் தேவ ரானினங்களே காரண மாதலும், இவை கூறும் வாயிலான் வேதாகமங்களிற் கூறப்படுந் தூல சூக்கும உபாசனைகளும், தகரோபாசனையும், ஐந்தெழுத்தாற் புரியும் ஞான பூசையும், இறைவனது பொது வியல்பு, சிறப்பியல்புகளும், அவன் அஷ்ட மூர்த்தியாய் நிற்குமாறும், சுடர் வடிவமாமாறும், வழிபடுவார் வினைகளையும், பிறவிகளையும் அகற்றுந் திருவருள் மாண்பும், முதலு முடிவுமில்லாத அநாதிப் பொருள் என்பதும், அவ்விறைவன் அடியார்க்கருளல் பலவகைப் படுதலின் இவ்வாறென் றுணரக்கூடாமையும், அடைந்தோர் பேரின்பமும், அல்லாதார் பெருந் துன்பமும் உறுவர் என்பதும், தாதையை வென்ற சண்டேசர் முதலியோர்க்கு அருளிய புகழும், கைம்மாறற்ற பெருங் கருணையும், பரம உபகாரமும் உடையரென்பதும், அவர் பாற் செய்யும் அன்பே எல்லாப் பயனும் அளித்தலாற் சிறந்த தென்பதும், ஆகிய பல அரும் பொருள்களாம் என்க.

திருவருட் பெருஞ்செல்வராகிய சேக்கிழார் சுவாமிகளே இப்பாசுரங்களுக்குப் பொருள் கூறி முடித்து,

கழுமலப் பதியில் அவதரித்த திருஞான சம்பந்த சுவாமிகள் அருளிச்செய்த திருப்பாசுரத்தை அவர்களது திருவுள்ளக்

கருத்துணர்ந்து கூறினேனல்லேன். சிறியேனுடைய அறிவுக்கு அவரது திருவருள் உணர்த்திய நெறியே கடைப்பிடித்து, எனது மிகுந்த அன்பினால் தெறிந்தவாறு வழிபட்டுக் கூறினேன் என முடிக்குங்கால் ஒன்றுக்கும் பற்றாத சிறியேன் எவ்வாறு கூறு வேன். நிற்க

வைகை நதியில் இத்திருப்பாசுரங்களை எழுதித் திரு வுடைப் பிள்ளையார் தந்திருக்கையாலிட்ட வேடு மருவிய பிறவி யாற்றின் மாதவர் மனஞ்சென்றாற்போல் பொருபுனல் வைகை யாற்றி லெதிர்த்து நீர் கிழித்துப் போகும் இருநிலத்தோர்கட் கெல்லா மிதுபொருளென்று காட்டி முதற்பாசுரத்தில் "வேந்த னும் ஓங்குக" என்றதனாற் பாண்டியரது கூனும் நிமிர்ந்தது.

எம்பிரான் சிவனே யெல்லாப் பொருளுமென் றெழுது மேட்டிற்
றம்பிரா னருளால் வேந்தன் றன்னை முன் னோங்கப் பாட
அம்புய மலராள் மார்ப னனபாய னென்னுஞ் சீர்த்திச்
செம்பியன் செங்கோ லென்னத் தென்னன்கூ னிமிர்ந்த தன்றே.

முற்றிற்று

---

# ஒரு குறளுண்மை விளக்கம்

[ஜலகண்டபுரம் அ. வரதநஞ்சைய பிள்ளை]

(முன் ௨௧௬-ம் பக்கத் தொடர்ச்சி)

இறைவனை மனமுருகப் பற்றிநிற்கும்போதுண்டாம் இன் பத்தை ஒரு சேர விழுங்கியும், நமக்குத் தெரிவிக்கும் பெருங் கருணையால் திருவாய்மலர்ந்து

கனியினும் கட்டிபட்டகரும்பினும்
பனிமலர்க் குழற்பாவை நல்லாரினும்
தனிமுடி கவித்தாளும் அரசினும்

இனியன் தன்னடைந்தார்க் கிடைமருதனே, எனச் சமயா சாரியப் பெருந்தகையார் சாற்றினர், அச்சுவையைப்பெறு தற்கு முயலாமையின், வேம்புவக்கும் ஒட்டகம்போல் விடய

போகச் சழக்கில் வீழ்வதனையே விழைகின்றோம். பழக்கம் பற்றி என்க

இதுகாறும், 'வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு இடும்பையில' என்பதனைக் காரணத்துடன் ஆய்ந்தனம். இனி, 'யாண்டும் இடும்பையில' என்றது எங்ஙனம் அமையும் என்பது பற்றிக் கூறுவகூறி இதனை முடிப்பாம். ஈண்டு இடும்பை என்னுஞ் சொற்கு மூவகைத் துன்பங்கள், எனப் பரிமேலழகர் உரை கூறினர். அம்மூவகைத் துன்பங்கள், அத்யாத்மீகம், ஆதிதெய்விகம். ஆதிபௌதிகம் என்பன. உயிர்ப்பொருட்களாலும் இடி மின்னலாதி உயிரிஃபொருட்களாலும், காரணமின்றி ஊழ்வினையாலும் நேருவனவாகிய துன்பங்களாம்? இவைகள் எக்காலத்து முளவாகா என்றல் அமையாது. என்னை? இறைவனடி சேர்தல் மாத்திரையானே விருப்பு வெறுப்பற்று, வரும் பிறவிக் குலங்கள் கெடுவனவே யன்றி, எடுத்த வுடம்பு இவ்வுலகில் உடலூழ் கழியுங்காறும் நம்மனோரைப் போலத் துன்பப் பகுதிகட்கு விருந்தளித்தே தீர்தல்வேண்டும். இது நியமமாகலின் எனின் ?

நன்று கூறினை! தம் முழுமனவுணர்ச்சியையும் இறைவனுக்கே செலுத்தி அவ்வுணர்ச்சியில் தம்மை முற்றும் மறந்து இரண்டற நின்ற பேரருட் பெருஞ்செல்வர்கள் எத்துணைத் துன்பம் எய்தினும "நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே" "காயத்திருவாய் நின்னுடைய கழற்கீழ் வைப்பாய்" "இருந்தென்னை யாண்டுகொள் விற்றுக்கொள் ஒற்றிவை" "தன் கடன் அடியேனையுந் தாங்குதல்—என் கடன் பணி செய்து கிடப்பதே" என்று அருளிச் செயல்களின்படி நவ நவமாய் உள்ளத்தெழும் பேரானந்தப் பெருங் கடலிற் குளித்து அவசமுற்று எங்கும் பரமே தோன்றப் பார்த்திருக்கும் அவசரத்தில் தம் முடற் கெய்தும் இன்ப துன்ப வுணர்ச்சிகள் சிறிதும் தோன்றாமையின் அவ்வின்ப துன்பங்களை ஆக்கும் வினைகள் குன்று முட்டிய குரீஇப்போலத் திகைத் தோடுவனவன்றிப் பகைத் தூடுவன வல்லவாதலானும், இங்ஙனம் தம்மையே சார்ந்த மெய்

யன்பர்கட்கு எய்தும் உடலூழை ஏற்கின்றான் ஈசன் என்பது சைவ சித்தாந்த நூற்றுணிபாதலானும், குணங்கள் தாமில்லை அவ்வின்பத்தைக் குறுகிய அவர்க்கு யாதோர் குறையும் நேரா மையானும் அவ்வுடலூழ் சற்றுத் தாக்கிக் கைப்பொருளில்லா னைப் புறக்கணித்து நடக்கும் கணிகையர் குழாம்போற் கால் காய்ந் தொதுங்குமாதலின் எக்காலத்தும் துன்பமின்மைதேற்ற மென்க.

துன்பமே தோற்றாச் சுகவாழ்க்கை. கடவுளைக் கருது வோர்க் குண்டாமென்றறிந்தேம். அவ்வின்பத் தோற்றம் எவ் வியல்பிற்று? என வினவுதிரேல், அஃதுணர்வார்க்கே யுணர்ந் தோம் என்னும் அறிவு அவிழ நின்றனுபவிக்கும் பெற்றித்தாக லின் சொல்லிற் கடங்காதென்க "உரையுணர் விறந்து நின் றுணர்வ தோருணர்வே" "கண்டுங் கண்டிலன் என்ன கண் மாயமே" எனப் பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம் மூழ் கிய புனிதன் மொழியாலிதன் அருமை யுணர்க. அற்றாயினும் வினவினீர்க்கு ஒருவாறு விளங்க உத்தரம் கொடுக்கும் கடப் பாட்டால், ஒன்று உவமையாகக் காட்டுகின்றேன்.

கவிச்சக்கிரவர்த்தியாகிய கம்பர் துறக்கவின்பத்தின் இயல் பை இலங்கையின் பெரும்போகத்தைக் கண்ணுற்ற அநுமன் கூற்றில் வைத்து மொழிகின்றனர்.

" மாண்டதோர் நல்த்திற்றாமென் கணர்த்துதல் வாய்மைத்தன்றால்
வேண்டிய வேண்டினெய்தி வெறுப்பின்றி விழைந்துதுய்க்கும்
ஈண்டரும் போகவின்ப மீறில தியாண்டுக் கண்டாம்
ஆண்டது துறக்கமஃதேயருமறைத் துணிபுமம்மா"

இக்கவியின் திரண்ட பொருள், இலங்கையின் போகம் எத்தகையது என வினவுவோர்க்கு, அது மிகவும் சிறப்புற்ற பெருவள முடையது, என ஒரு வார்த்தையில் கூறுவது. உண் மையை உள்ளபடி உரைத்ததாகாது, துறக்க இன்பம் நேரொக் கும் என்பேன், இங்ஙனம் கூறுங்கால் தெரி பொருளுவமை கூறித் தெரியாப் பொருளை விளக்கவேண்டும், என்னும் தர்க்க

னூலுக்கு முரண்படுமாதலின, துறக்கவின்பமும் இன்னவாறே அமைந்ததென உணர்த்தவேண்டும். அதனைப் பல பகுதிப்பட ஓதுவேனேல், சொல்லுமெனக்கும் கேட்கும் அவர்க்கும் எளிதாகவிருக்கும், ஒருவர் எதை வேண்டுமென அவ்வப்போது கருதுவாரோ அவ்வெல்லாம் நினைத்தவுடனே கைப்படக் கிடைத்து, அவ்வளவு சுலபமாகக் கிடைத்ததனால் அதன் அருமை குன்ற அநுபவிப்பவர்க்குவெறுப்புமுண்டாகாமல், அடையுமுன்னம் என்ன காதல் அதனிடத்திருந்ததோ அக்காதல் சிறிதும் குறைபாடிலாமலே அநுபவித்து, அவ்வாறு மற்றும் பலர் அநுபவிப்பதானல் தன் பெருமிதம் குறையுமாதலால் தனக்கன்றிப் பிறர்க்குக் கிடைத்த லரிதென்னும் கருத்துடன் அவ்வநுபவம் முற்றும் பூரண இன்ப மயமாய், அங்ஙனமிருப்பினும் இவ்வின்பம் மற்றோர்கால் எனக்கு கிட்டுவதரிதாங்கொலோ என எண்ணிக் கவலுறுதபடி அத்தனையும் அழியாதுஎன்றும்நித்தமாய்ப் இருக்கப் பெறுமேல் அவ்வகை யின்பம் யாண்டு பெறுகின்றோமோ அதனையே துறக்கம் என்னலாம். வேதம் பகலும் துறக்கவின்பம் இப்பெற்றித்தேயா மன்றோ, என அநுமன் தன் மனத்தோடு புகன்றனன் என்பதாம்.

நெல்லொக்கும் புல் என்றாற் போல இதனை ஒருவாறு இன்பவுவமானமாகக் கொள்க.

முற்றிற்று.

---

## புறநானூறும் தமிழர் மாண்பும்

[திரிசிரபுரம், ம. பெரியசாமிப்பிள்ளை]

(முன் ௩உ௰-ம் பக்கத் தொடர்ச்சி)

இங்ஙனம் ‘யாண்டு பலவாக’ அவர்கள் நட்பும் பெருகி வளர்ந்ததெனினும் இறுதிக் காலம்வரை ஒருவரை யொருவர் கண்டிலர் ஆயினும் ஒருவர் உள்ளத்தை ஒருவர் நன்கறிந்துள்ளார். இத் தகையவர் நட்பின் திறத்தை என்னென் றியம்புவது! கீழ்வரும் அரிய செய்யுள்களாலன்றி வேறு வகையில் இயம்புதல் சாலாது.

வடக்கிருந்த கோப்பெருஞ் சோழன் [வடக்கிருத்தல்-யாதானும் ஓர் காரணம் பற்றி உலக வாழ்க்கையை வெறுத்து ஊண் உறக்கமின்றி வட திசை நோக்கியிருந்து உயிரை நீத்தல்] 'பிசிராந்தையார் என் நிலைமையை அறிந்து இப்போதே இங்கு வந்து என்னுடன் வடக்கிருப்பார்; ஆகலின் அவற்கு இடனொழிக்க' எனத் தன்னைச் சூழ்ந்திருந்தாரை நோக்கிக் கூறுபவர் "பிசிராந்தையார் உன்னைப் பற்றிக் கேள்விப்பட்டிருத்தலே யன்றி சிறிது பொழுதும் கண்டதில்லை; பல ஆண்டுகளாகத் தவறின்றி மருவி வந்த உரிமையை உடையோராயினும் அரிதே தலைவா! அதன்படி ஒழுகுதல்" என்று கருதி ஐயங் கொள்ளாதீர், நிறைந்த அறிவினையுடையீர்; அவன் என்னை என்றும் இகழ்ந்திலனாய் இனிய குணங்களை யுடையான்; பிணிப்புண்ட நட்பினை உடையான்; புகழழிய வரும் பொய்ம்மையை விரும்பான்; தனது பெயரைப் பிறர்க்குச் சொல்லும்போதும் 'என் பெயர் பேதைச் சோழன்' என்று எனது பெயரைத் தனது பெயராகச் சொல்லும் மிக்க அன்பு பொருந்திய உரிமையையும் உடையன்; அதன்மேல் இப்படி யான் துயருறுங் காலத்து ஆண்டு நில்லான், இப்பொழுதே வருவன்; அவனுக்கு இடமொழிக்க' என்பதனை,

"கேட்டல் மாத்திரை யல்ல தியாவதும்
காண்டல் இல்லா தியாண்டு பலகழிய
வழுவின்று பழகிய கிழமைய ராயினும்
அரிதே, தோன்றல்! அதற்பட ஒழுக'லென்
றையங் கொள்ளன்மின், ஆரறிவாளீர்,
இகழ்விலன் இனியன்; யாத்த நண்பினன்;
புகழ்கெட வரூஉம் பொய்வேண் டலனே;
தன்பெயர் கிளக்குங் காலை என்பெயர்
பேதைச் சோழன்' என்னும் சிறந்த
காதற் கிழமையும் உடையன்; அதன்றலை
இன்னை தோர் காலை நில்லலன்,
இன்னே வருகுவன்; ஒழிக்க அவற் கிடமே." (புறம்-உகஉ)

எனக் கூறினர். என்னே! இவருக்கிருந்த நட்பின் திட்பம். இங்ஙனம் கோப்பெருஞ் சோழன் கூறியவாறே பிசிராந்தையார்

ரும் அங்கு வந்தனர். அதுபோது அங்கிருந்தவரும் சோழனது மற்றொரு நண்பரும் ஆகிய பொத்தியார் என்ற அறிஞர் அவ்விருவருக்கும் உள்ள நட்பின் திறத்தினை வியந்து 'நினைக்குங் காலத்து வியக்கும் தன்மையுடையது, மிகுந்த சிறப்பினையுடைய இவன் (பிசிராந்தையார்) அதனைக் கைவிட்டு ஈங்குவரத் துணிதல்; அதனினும் வியக்கும் தன்மையுடையது, வேற்றரசனது நாட்டின்கண் விளக்கம் அமைந்த சான்றோர் பாதுகாத்துப் புகழ் மேம்பாடாக நட்பே பற்றுக்கோடாக இத்தன்மையான ஓர் துன்புறுங் காலத்து ஈங்குவருதல். இவ்வாறு வருவனென்று துணிந்து சொல்லிய வேந்தனது பெருமையும் அவன் சொல்லியது தவறாது வந்தவன் அறிவும் வியக்குந்தோறும் வியக்குந்தோறும் வியப்பு அளவு கடந்தது; ஆதலால் தன் செங்கோல் செல்லாத (பிறர் ஆளுகையில் உள்ள) தேயத்து உறையும் சான்றோனது (பிசிராந்தையாரது) நெஞ்சத்தைத் தனக்கு உரிமையாகப் பெற்ற பழைய புகழை உடைய அவனை (சோழனை) இழந்த இவ்வுலகம் என்ன துன்பமுறுமோ! இது இரங்கத் தக்கது' என்பதனை

"நினைக்குங் காலை மருட்கை யுடைத்தே,
எனைப் பெருஞ் சிறப்பினோ டீங்கிது துணிதல்;
அதனினும் மருட்கை யுடைத்தே, பிறனாட்டுத்
தோற்றம் சான்ற சான்றோன் போற்றி
இசை மரபாக நட்புக் கந்தாக
இனையதோர் காலை ஈங்கு வருதல்.
வருவன் என்ற கோனது பெருமையும்
அதுபழு தின்றி வந்தவன் அறிவும்
வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந் தன்றே;
அதனால், தன்கோல் இயங்காத் தேயத் துறையும்
சான்றோன் நெஞ்சுறப் பெற்ற தொன்றிசை
அன்னோனை இழந்த இவ் உலகம்
என்னா வதுகொல் அளியது தானே." (புறம் - உகஎ)

எனப்படிப்போர் மனம் கசிந்துருகுமாறு மொழிந்தனர். நட்பின்எல்லைக்கு ஈண்டுக் கூறப்பட்ட செய்திகளின் மிக்கதாய்

வேறு இருத்தல் கூடுமோ? யாண்டும் என்றும் கூடாது. ஆகவின் நட்பாட்சியில் மிகச் சிறந்து விளங்கியவர் தமிழர் என்க.

(தொடரும்)

---

# பழந்தமிழ்

[மாக்றல். கார்த்திகேய முதலியார்.]

(௩௨௨-ம் பக்கத் தொடர்ச்சி)

## சொல்.

சுலா, குடா, கலா, நிலா, பலா, சிலா, குலா, கரா, மாலா, வனிதா முதலிய ஆகார ஈற்றுச் சொற்கள் நாவிற் கெளியனவாகலின் அவை முதலுண்டாய பழந்தமிழ்ச் சொற்களாம்.

சுலா = திரட்சி. ''சுலாவாகிச் சுலாவுக்கோர் சூழலாகி'' (அ—தே) மூலம், கால், தொல், கலம், நால், கணம், பச முதலியனவும் பழந்தமிழ்ச் சொற்களாம். மூலம் = வேர், முளை. மூலம்—முலை = கொங்கை, குழந்தையை வளர்ப்பதென்பது. மூலம் = வளர்ச்சியுமாம். முளையினின்று வளர்ச்சியுண்டாதலால் மூலம், வளர்ச்சியை யுணர்த்திற்று.

(1) மூலம்—மூலம் = வேர். மூலம் மூங்கி லியையுடைச் சொல். மூலம் காரணமுமாம்; வேர் போல்வதென்பது.

(1) மூலம்—முளம் = மூங்கில், கணு, வேர், முளை.
(2) முளங்கை—முழங்கை = கணுவுடைய கையென்பது.
(3) முளம்—முளவன் = சிறுவன். முளவி = சிறுமி.
(4) முளம்—முள = மூங்கில், முளை.
(5) முளம்—முளை = மூங்கில், முளை.

முளையென்பது முதல் மூங்கிலையும் மூங்கிலில் கணு இருத்தலால் கணுவையும், கணுவினின்று முதல் வேரும் பிறகு முளையும் உண்டாதலால் வேரையும் முளையையும் உணர்த்தும்; வித்

தினின்று கீழ் நோக்குவது வேர்; மேனோக்குவது முளை வித்தின் கண்ணும் கணு இருத்தலால் அக்கணுவினின்றுதான் வேர் முதலியன உண்டாகின்றன. முருங்கை முதலியவற்றின் கண்ணும் கணுவினின்றுதான் தளிருண்டாகின்றது. கொடிகளிலும் கணுவினின்றுதான் மற்றோர் கொடி கிளைக்கின்றது. பிரண்டை, அலரி, மல்லிகை, முல்லை முதலியவற்றின்கண்ணும் கணுவினின்றுதான் வேருண்டாகின்றது. உருளைக் கிழங்கை நாலைந்து பத்தைகளாகப் பிளந்து 'கடின்' ஒவ்வொன்றிலும் கணுவினின்றுதான் முளையுண்டாகும். கணு = பொருத்து

பொருத்து னடுவில் முளையுண்டாகின்றது.
மூலம் = வேர். மூலம்—மூல = முள்ளங்கி, (இந்து)
மூலம்—மூலகம்—முள்ளங்கி — ஓர் கிழங்கு.

இங்ஙனம் சொல்வளர்ச்சியும்,பொருள் வளர்ச்சியும் பெருகுமாறு உணர்ந்து கொள்க.

கால் = வேர். முளை முதலியன. கான்மரம் = ஆலமரம், விழுதுவிடுகின்றமரமென்பது. கால் + மரம்: விழுது=வேர். கீழ் நோக்குகின்றமையின் விழுது வேராகின்றது.

தொல் = வேர், முளை முதலியன. தொன்மரம் = ஆலமரம். தொல் + மரம்=விழுதுவிடுகின்ற மரம். தொல் - மூங்கிலையுடைச் சொல்.

தொல்—தோல் = மூங்கில், யானை, மூங்கில் போலும் உட்டுளைக்கை யுடையதென்பது. கணுவினின்று முளையுண்டாதலால் தோல் முளையுமாம். தோல்—தோற்றம்—தோன்றல் = முளைத்தல். தோல்—தோரம் = வாயில், உட்டுளையுடையது. மூங்கிலில் உட்டுளை யிருத்தலால் தோல், தோரமெனத் திரிந்து உட்டுளையை யுணர்த்திற்று.

தோரம்—தோரை = மூங்கிலரிசி. (தெலுங்கு)
தோரம்—தோரமு = வாயில்.
தோரம்—த்வாரம் = வாயில் (ஆரியம்)

தோரம்—தோர் = கதவு. (பெங்காளி முதலியன)

தோரம்—தூரா = " (கிரீக்கு)

தோர்—டோர் = " (ஆங்கிலம்)

தோரம்—தோரணம் = வீதியிற்கட்டுந் தோரணம். வாயிலி லிருந்து கட்டுவதென்பது.

தோரம்—தோரணம் = உட்டுளை.

தோரணக்கல் = ஏரியுள் மதகின்மேற் கல். அதில் துளை யுள்ளது.

கலம் = மூங்கில், ஆரியத்தில் வேறுபட்டுள்ளது.

கலம்—களம் = மூங்கில், மிடறு, மூங்கில்போலும் உள்ளுளை யுடையது.

களம்—களை = மூங்கில்

கழை = " —கழாய் = மூங்கில்

நால் = மூங்கில், வேர், முளை, வளர்ச்சி முதலியன.

"நாலின் குருந்தம்" (வைத்தியம்)

நாறு = முளை. நால் + து = நாறு. து. விகுதி.

நாற்சி = வளர்ச்சி. ஞாற்சி = வளர்ச்சி.

நாலம் = ஞாலம = பூமி, வளர்வது.

நாலல் = பிடுங்கி நடல். வேரூன்றச் செய்தலென்பது.

நால்—நாலி = தென்னை. மூங்கிலின்மென்பது. (போ—நி)

நாளி = தென்னை. (ச—தே)

நால் = முளை. நால்—நாரி = பெண். கருக்கொள்வோளென் பது.

நால் = வளர்ச்சி. நால்—நாரி = பார்வதி. உயிர்களை வளர்ப் பவளென்பது.

நால் = மூங்கில். நாலல் = வளைதல், தொங்கல். நெடிய மூங் கில் வளைவதியல்பாகலின் நாலலென்பது வளைதலை யுணர்த்திற்று.

கணம் = தீ. மூங்கிலில் உண்டாவதென்பது.

கண் = மூங்கில்

கணப்புச் சட்டி = நெருப்புச் சட்டி.

கணம்—கனல்—அனல்—அனலம் = தீ

கனல்—அனல். ஒற்றினீக்கமென்னு மிலக்கணம்.

பசம் = இளமை. பசங்கள் = சிறுவர்கள்.

பசம்—பச்சை—பச்சைக் குழந்தை = இளங் குழந்தை.

வழுதலை = பார்ப்பார முள்ளி.

வள் = கூர்மை. தலம் = இலை.

வளுதலம்—வழுதலை = முள் நிறைந்த இலையுடையதென் பது.

வழுதலம்—வழுதளம்—வழுதணம்—வழுதணை — வழுதணங்காய் = கத்தரிக்காய். முள்ளியி னினமென்பது.

இக்காலத்து வழுதுணையாயிற்று. "வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்"

சம் = பிறப்பு அதாவது உண்டாதல்.

தலைச்சம் பிள்ளை = முதல் பிறந்த பிள்ளையென்பது.

மரீசம் = மிளகு. வைகாசி மழையாலுண்டாவதென்பது.

மாரிசம்—மரீசம்—மிரியல = மிளகு.

"திரங்கலு மிரியலு மிளகே" (பி—நி)

மரீசி—முரசீ—முசிரியாயிற்று.

முசிரி = மேல் கடற்கரையிலுள்ள ஓர் துறைமுகம்.

சேரர்க்கு முக்கிய பட்டணங்களிலொன்று. யவனர்கள் மிளகு முதலியன ஏற்றுமதி செய்ய இதுவே ஏற்ற பட்டினமாக இருந்தது. மிளகு மிகுதி,

"சேரலர்—சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
யவனர் தந்த வினைமா ணன்கலம
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங் கெழுமுசிரி" (அகநானூறு)

வடநூலார் மரீசிபத்தனம், முரசீ பத்தன மென்பர்.

சம்—ஷம் ஆயிற்று, செயற்கை யுச்சரிப்பு.

பக்கம்—பச்சம்—பட்சம்—பக்ஷம்.

பகு—பக்கம். வலம் இடம் என்னும் இரு பிரிவுடையது.

"பச்சமும் வலியும் கருதிய அரக்கன்" (சு—தே) ககரம் சகரமாகும்.

அட்டை = கவளிகை. அக்காலத்து நூல்களைப் படம் போலச் சுருட்டப் படுவதால் அதற்குக் கவளிகை வைத்துச் சுருட்டப்படுவ தென்பது பொருள்.

(தொடரும்)

---

# நாமகள் அருச்சனை அகவல்

[யாழ்ப்பாணம் க. சோமசுந்தரம் பிள்ளை]

பொன்மகள் கொழுநனும் புத்தேள் கூட்டமும்
மன்மலை நட்டு மதித்திட வெழுந்த
தெளிவள ரமுது மொளிவளர் பளிங்கு
முருக்கி வார்த்தன்ன திருக்கிளர் மேனியு
மருண்மழை பொழியும் வரிநெடு விழிகளும்
வாங்கிய புருவமும் பூங்குமிழ் நாசியும்
முத்தமிழ் மதுரப் புத்தமு தொழுகும்
பவளவாய் மலருந் தவளவா ணகையுங்
காரிருள் கடந்த வாரிருங் கூந்தலும்
பொன்புனை களனும் மென்பணைத் தோளும்
மாலையுந் நூலும் யாழு மேந்திய
வாலிய காந்தண் மலரொரு நான்கும்
சாந்தணி தனமுந் தந்தன விடையும்
நெஞ்சி லன்புடனே நினைதொறு உஞ்சுவைக்குஞ்
செஞ்சிலம் பலம்புஞ் சேவடி யிணையும்
வெண்பட் டாடையுந் தண்முத்த மாலையும்
ஆராக் காதலொ டனுதினநோக்கினுந்
தீராப் புதுமைத் தெய்வத வடிவுமாய்
வெண்டா மரைமேல் வீற்றிருந் தருளுந்
தண்டா முத்தமிழ்த் தாயே போற்றி
சங்கரன் மலர்த்தாள் தவமுனி வேண்ட
அங்கவ னருளிய வமுதே போற்றி

அறுமுக னருள்பெறு சிறுமுனி மடிமிசைக்
குறுகுறு நடந்த குருந்தே போற்றி
பூவினின் மேவிய புத்தேள் பொய்யா
நாவினின் மேவிய நங்காய் போற்றி
அல்லியல் கண்டத் தானிட மமரும்
வல்லிதன் கண்ணுய் வதிந்தாய் போற்றி
பூமகள் கேள்வன் புரத்தினிற் பொருந்தும்
மாமக ளொருமரு மகளே போற்றி
ஆடக மதுரை யருந்தமிழ்ச் சங்கக்
கூடலின் வளர்ந்த கொம்பே போற்றி
மன்னுயிர் நாவெனும் வாவியின் மலர்ந்த
பொன்னறி யாநறும் பூவே போற்றி
தென்னவன் சேரன் செம்பிய னென்னும்
மன்னவர் மூவர் வாழ்வே போற்றி
வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென்
றந்நான் கெல்லை யகலிட மாளும்
பன்னுப் பெருமைப் பாரதி போற்றி
மெய்ந்நா விரும்பும் வித்தகி போற்றி
எந்நாட் டவர்க்கு மிறைவி போற்றி
பொருப்பிலே பிறந்து புகழிலே கிடந்து
நெருப்பிலே நின்று நீரிலே தவழ்ந்தென்
சென்னியி னுவிற் சிந்தையிற் கலந்து
மன்னிய கருணை வாரிதி போற்றி
உள்ள நெக்குருக வுரோமஞ் சிலிர்ப்ப
வெள்ளநீர் கலுழ மெய்விதிர் விதிர்ப்ப
நாத் தழுதழுப்ப நயந்துநின் றுன்புகழ்
ஏத்துநர் நெஞ்சத் திருள்கெடுத் தருளித்
தேனினும் பாலினுந் தெவிட்டா தினிக்கும்
வானினுங் காணு மணியே போற்றி
கல்விசற் றில்லாக் கசடனே னெனையும்
வல்லிதி னண்ட மயிலே போற்றி
சிறுமையும் பிணியுந் தீவினை யிருளும்

வெறுமையுஞ் செய்த்த வெயிலே போற்றி
மேவிய பல்கலை விரிபொழி விருந்து
கூவிய வேழிசைக் குயிலே போற்றி
''கற்றவர் விழுங்குங் கனியே,'' போற்றி
மற்றவர் காணு மலையே போற்றி
சேணினு மறியாத் திருவே போற்றி
காணினு மினிக்குங் கரும்பே போற்றி
விண்ணகப் புலவர் வெட்கி வாயூற
மண்ணகத் தெழுந்த மருந்தே போற்றி
கண்ணே போற்றி கருத்தே போற்றி
எண்ணே போற்றி எழுத்தே போற்றி
சுடுபிணி மாற்றிய சுடர்க்கொடி போற்றி
கடுவிடந் தீர்த்த கனங்குழை போற்றி
கூடிய சமணர்கள் கூர்ங் கழுவேற
ஏடெதி ரேறிய வேந்திழை போற்றி
ஆருயிர் வௌவி யருளினை போற்றி
சீரிய ஞானச் செழுஞ்சுடர் போற்றி
செங்கலைப் பொன்னாய்ச் செய்தனை போற்றி
அங்கமும் வேதமு மறைந்தனை போற்றி
என்பினைப் பெண்ணா யெடுத்தனை போற்றி
வன்பினை மாற்று மருளே போற்றி
அரும்பொரு ளின்ப மறங்கதி நான்குந்
தரும்பெருங் கற்பக தருவே போற்றி
அயனுடன் சேர்ந்துல களிப்பாய் போற்றி
புயலுடன் கலந்தவை புரப்பாய் போற்றி
அரனுடன் புணர்ந்தவை யழிப்பாய் போற்றி
உரனுடை நெஞ்சி லொளியே போற்றி
பூவொடு மணமும் போன்றாய் போற்றி
பாவொடு பழகிய பாவாய் போற்றி
ஆவியை யுருக்கு மன்பே போற்றி
பாவியைத் தூக்கும் பதத்தாய் போற்றி
மானே போற்றி மடப்பிடி போற்றி

தேனே போற்றி தெளிவே போற்றி
அழியா ஆழியு மமர்ந்தாய் போற்றி
பழியாச் செழுநிதி படைத்தாய் போற்றி
நோக்கரு நுண்ணுணர் வானாய் போற்றி
வாக்கொடு மனமு மடங்காய் போற்றி
ஊமைக் குரைதரு முத்தமி போற்றி
சேமக் கலையின் செறிவே போற்றி
கல்லொடு வாரிதி கடந்தாய் போற்றி
சொல்லொடு செம்பொரு ளானாய் போற்றி
பொள்ளா முத்தின் பொலிவே போற்றி
உள்ளா நெஞ்சத் தொழித்தாய் போற்றி
உள்ளுதொ றுள்ளுதொ றுள்ளக முருக்குந்
தெள்ளிய பாகின் றிரளே போற்றி
கம்ப னருளிய கவிச்சுவை மாந்திச்
செம்பொற் சிலம்பருள் செய்தாய் போற்றி
இந்தணி செஞ்சடை யிறைவனை யிருளிற்
சுந்தரன் றூதாய்த் தூண்டினை போற்றி
கொழிதமிழ்க் கொங்கு சேரெனக் கூறிக்
கிழிதனை யறுத்த கிளியே போற்றி
உயிரே போற்றி யுணர்வே போற்றி
செயிர்தீ ரறிவின் செல்வீ போற்றி
ஔவைக் கருந்தமி ழருளிய மதுரக்
கொவ்வைக் கனிவாய்க் கொடியே போற்றி
ஆதியு மந்தமு மகன்றாய் போற்றி
சோதிமெய்ஞ் ஞானச் சுடரே போற்றி
முழுதுல காண்ட முதல்வீ போற்றி
பழுதறு செஞ்சொற் பகர்ந்தாய் போற்றி
அன்னக் கொடியுடை யரசி போற்றி
வன்னக் கொடியிடை மடவாய் போற்றி
ஓரெழுத் தறியா வொருவ னென்னையுஞ்
சீரிய கல்விச் செழுநிதி யுதவித்
தெரிவன தெரிந்த செல்வர் கோட்டிக்

சூரியவ னுக்கிய வொண்ணுதல் போற்றி
மறைபிணி கதவந் திறந்தாய் போற்றி
குறைதவிர் கோமளக் கொழுந்தே போற்றி
நிதியே போற்றி நிறைவே போற்றி
கதியே போற்றி கசிவே போற்றி
பொன்னே போற்றி புலனுணர் விறந்த
மின்னே போற்றி விளக்கே போற்றி
அன்னிய மொழிகளு மடிதொழு தேத்த
மன்னிய சிந்தா மணியே போற்றி
எழுதா நான்மறை யென்று நின்றேங்கத்
தொழுதகு தமிழ்மறை சொன்னாய் போற்றி
பழமையும் புதுமையும் படைத்தாய் போற்றி
எழுமையுந் தொடர்தரு மினபே போற்றி
சினத்தொடு புத்தனைச் செறுத்தாய் போற்றி
மனத்துயர் நீக்கும் மாதே போற்றி
நாவலங் கோலாய் நடத்தினை போற்றி
பாவலங் காரப் பழம்பொருள் போற்றி
அரும்பொரு ளொந்து மானாய் போற்றி
விரும்புதல் வெறுத்தல் வேண்டாய் போற்றி
முதலையுண் டிறந்த முதிர்சுவைக் குதலை
மதலையை வாவென வழைத்தாய் போற்றி
நாளுங் கோளும் நலிமிடி பிணியும்
பாழும் வினையும் பறிப்பாய் போற்றி
பாமகள் போற்றி நாமகள் போற்றி
பூமகள் போற்றி புகழ்மகள் போற்றி
முத்தமிழ்க் கல்வியும் நாற்கவிப் புலமையும்
ஐம்புல னடக்கமு மறுமுகற் கன்பும்
எழுவகைப் பிறவியு மெம்மைவிட் டகலா
தெண்வகைச் சித்தியு மெங்களுக் கருளி
இன்பினுந் துன்பினு மிரவினும் பகலினும்
அன்புடன் காத்தரு ளன்னாய் போற்றி
எல்லா வுலகமு மானாய் போற்றி

யாவையு முடனு யறிவாய் போற்றி
அறிந்தருள் செய்யு மணங்கே போற்றி
அறிவினு ளருளா லமர்ந்திருந் தெனக்குக்
குறைவறு புலமை கொடுப்பாய் போற்றி
குறைவறு புலமை கொடுத்திடக் கூறும் ௧௫
நறுந்தமிழ் மாலை நயந்து கொண்டருளி
எவருங் காணா தெங்கணு நிறைந்த
மூவா விளநலங் காட்டி முன்னின்றே
அஞ்சலென் றருளிட வேண்டும்
பஞ்சணி நூபுர பாதபங் கயமே.

---

# தமிழின் பெருமை

[திருச்சி ம. பெரியசாமி பிள்ளை.]

[கொச்சகக் கலிப்பா இவை நான்கும் குளகம்]

தமிழென்னும் மொழியினிடைத் ததும்பிடு மின்னோசைதனில்,
அமிழ்தினினி தாமென்னு மதன்பொருளின் றிறமதனில்,
இமிழ்திரைமாக் கடல்ஞாலத் தியலமொழிக ளனைத்தினுமே
தமிழ்மொழியே முதலதெனத் தக்கபெருஞ் சான்றதனில், ௧

உலகிலுள மொழியனைத்து முன்னரிய எழுத்தாயே
நிலவவரு மெனுமரிய நெறியறிஞர் அறிந்திடுமா
றுலகில்புகழ் மாணிக்க மாய்ந்துரைக்குந் திறமதனில்,
பலபொருளைச் சிலசொல்லாற் பகர்ந்திடு மடபண்பதனில், ௨

இறப்பவுயர் வுடைத்தென்னும மொழியிடையு மில்லாத
புறப்பொருளு மகப்பொருளும் புரையில்வினைத் தொகைமுதலாச்
சிறப்புடைய விலக்கணச்சீர்ச் செறிவதனில், இயலிசையும்
திறப்படுநன் னாடகமுஞ் சேர்சங்கத் தமிழதனில், ௩

வையகத்தா ருள்ளுவவெல லாமுரைக்கும் வள்ளுவன்றன்
செய்யதிருக் குறளதனில், சீர்மூவர் தமிழதனில்,
உய்யவருஞ் சீர்த்திருவா சகமதனில், உன்பெருமை
கையகத்துக் கனியென்னக் காணவரும்; தமிழணங்கே!

## குமரகுருபர சுவாமிகள் பரம்பரை

| பட்டம் | பெயர் | மாதம் | பக்ஷம் | திதி |
|---|---|---|---|---|
| ஆதி | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் | வைகாசி | கிருஷ்ண | திருதியை |
| 2 | சொக்கநாத முனிவர் | மார்கழி | ,, | பஞ்சமி |
| 3 | அருணாசல முனிவர் | ஆனி | சுக்கில | சஷ்டி |
| 4 | அம்பலவாண முனிவர் | ஆவணி | ,, | திருதியை |
| 5 | சடையப்ப முனிவர் | தை | கிருஷ்ண | தசமி |
| 6 | தில்லைநாயக முனிவர் | பங்குனி | ,, | திரயோதசி |
| 7 | குமரகுரு முனிவர் | கார்த்திகை | ,, | சப்தமி |
| 8 | சிதம்பரநாத முனிவர் | மாசி | சுக்கில | தசமி |
| 9 | சடையப்ப முனிவர் | தை | கிருஷ்ண | நவமி |
| 10 | கணபதி முனிவர் | வைகாசி | ,, | சதுர்த்தசி |
| 11 | இராமலிங்க முனிவர் | சித்திரை | சுக்கில | ,, |
| 12 | சொக்கலிங்க முனிவர் | ஆடி | ,, | ஏகாதசி |
| 13 | கணபதி முனிவர் | ஐப்பசி | ,, | ,, |
| 14 | இராமலிங்க முனிவர் | புரட்டாசி | ,, | திரயோதசி |
| 15 | குமரகுரு முனிவர் | ஆடி | ,, | நவமி |
| 16 | பொன்னம்பல முனிவர் | புரட்டாசி | ,, | ஏகாதசி |
| 17 | சோமசுந்தர முனிவர் | கார்த்திகை | ,, | துவாதசி |
| 18 | சொக்கலிங்க முனிவர் | சித்திரை | ,, | பஞ்சமி |

இடம்

ஆதி குமரகுருபர சுவாமிகள் முதல் ஐவர். காசி
தில்லைநாயக சுவாமி முதல் மற்றையோர். பனசை

# தென்னிந்திய தமிழ்ச் சங்கம், திருநெல்வேலி.

## இளந்தமிழ்ப் புலவர்க்குரிய பாடங்கள்

[செல்வி கூ, எ-ம் இதழ்களில்இச்சங்கத்தினரால் நடத்தப்படும் பரீக்ஷைகளின் விவரமும், நடத்தப்படும் இடங்களின் பெயர்களும், பரீக்ஷை விதியும், பரிசு விவரமும், முதலாவதாயுள்ள தமிழ்த்தேர்வுப் பரீக்ஷைக்குள்ள பாடங்களும் வெளிவந்திருக்கின்றன. இந்த இதழில் இளந்தமிழ்ப் புலவர்க்குரிய பரீக்ஷைகளுக்குள்ள பாட விவரங்கள் வெளிவருகின்றன.]

(அடுத்த இதழில் தமிழ்ப்புலவர், பொது, சிறப்புக்குரிய பாடங்கள் வெளிவரும்.)

## இளந்தமிழ்ப் புலவர்

I நீதி நூல்,

திருக்குறள்:—அறத்துப்பால்.

நாலடியார்:—பொருட்பாலில் முதற் பத்து அதிகாரங்கள். உரையுடன் (கழகப்பதிப்பு)

II சிறுகாப்பியம்.

நான்மணிக்கடிகை (கழகப்பதிப்பு),

தஞ்சைவாணன் கோவை, திருவரங்கத்தந்தாதி, மறைசையந்தாதி,

மதுரைக் கலம்பகம் (கழகப்பதிப்பு)

அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் ( ,, )

நீனைவாடசி:—இலக்குமணபிள்ளை (திருவனந்தபுரம்)

III பெருங்காப்பியம்

கம்பராமாயணம், சுந்தரகாண்டம்:—உருக்காட்டுப்படலம், திருவடி தொழுதபடலம்.

பாரதம்:—கிருஷ்ணன் தூதுச் சருக்கம்

மணிமேகலை.—சிறைவிடுகாதை ஆபுத்திரன் நாடடைந்த காதை

நைடதம்:—நளன் தூதுப்படலம்

புறநானூறு:—முதல் ஐம்பது பாடல்

திருமுருகாற்றுப்படை

IV சமயநூல்

அப்பர் திருநேரிசை (தேவாரம்.)

திருவாய்மொழி:—முதற்பத்து முதலாவது திருவாய்மொழி
இரண்டாம் பத்து பத்தாவது திருவாய்மொழி
மூன்றும் பத்து நாலாவது திருவாய்மொழி
நாலாம் பத்து ஏழாவது திருவாய்மொழி
ஐந்தாம் பத்து பத்தாவது திருவாய்மொழி

V இலக்கணம்

நன்னூல் விருத்தி, நம்பியகப்பொருள், இலக்கண விளக்கப்பாட்டியல், புறப்பொருள் வெண்பா மாலை, தண்டியலங்காரம்.

VI வசனம்

கபிலர், நக்கீரர்:—ந. மு. வேங்கடசாமி நாட்டார்.
புலவர் சரித்திரம்:—அ. குமாரசாமிப் புலவர்.
கரிகாற்சோழன்:—L. உலகநாதபிள்ளை.
பண்டைத் தமிழரும் ஆரியரும்:- வேதாசல சுவாமிகள்.
திருக்குறள் நூல்நயம்:—P. R. சேதுப்பிள்ளை.

VII வியாசம்:—பொது

செய்யுளியற்றல்:— வெண்பா, ஆசிரியப்பா.

---

# குறிப்பு.

## மேலைச்சிவபுரிச் சன்மார்க்க சபை

புதுக்கோட்டை அரசினர் ஆட்சியுட்பட்ட மேலைச் சிவபுரி என்னும் இந்நகரில் இறைவன் திருவருளால் நடைபெற்றுவரும் சன்மார்க்க சபையின் பதினாறும் ஆண்டு நிறைவுத் திருவிழா குரோதன ஆண்டு ஆவணித்திங்கள் ௧௧, ௧௨, ௧௫-ம் நாட்களில் சிதம்பரம் ஸ்ரீ மீனாட்சி தமிழ்க் கல்லூரித் தலைமையாசிரியர் (Principal) மஹாமஹோபாத்தியாய பிரம ஸ்ரீ வே. சாமிநாதையரவர்கள் தலைமையில் பெருஞ் சிறப்போடு நடைபெற்றது.

அந் நாட்களில் இராமநாதபுரம் சேது சமஸ்தான வித்வான் ஸ்ரீ. ரா. இராகவையங்காரவர்கள் மகிபாலன்பட்டி வித்வான் ஸ்ரீ.மு. கதிரேசச் செட்டியாரவர்கள் முதலிய சிறந்த பல பண்டிதர்களின் அரிய சொற்பொழிவுகள் நிகழ்ந்தன. அம்மாபெருங் கூட்டத்தில் சேதுசமஸ்தான வித்வான் ஸ்ரீ. ரா. இராகவையங்காரவர்களுக்கு "மகாவித்

வான்” என்னும் பட்டமும், மகிபாலன்பட்டி வித்வான் ஸ்ரீ. மு. கதிரேசச்செட்டியாரவர்களுக்குப் “பண்டிதமணி” என்னும் பட்டமும் சன்மார்க்க சபையார் விரும்பிய வண்ணம் மஹாமஹோபாத்தியாய ஸ்ரீமாந் ஐயரவர்களால் பொன்னுடைகள் புனைந்து மிக்கமகிழ்ச்சியோடு வழங்கப் பெற்றன.

இவ்விரு பெரும் புலவர்கட்கும் வழங்கப்பெற்ற இப்பட்டங்கள் மிகவுந் தகுதியுடையன வென்று அங்குக் குழுமியிருந்த அறிவுடைப் பெரியார் பலர் பாராட்டிப் பேசினர்.

இங்ஙனம்

மேலைச்சிவபுரி, வ. பழ. சா நிநாதன் செட்டியார்,
29 - 8 - 25 தலைவர், சன்மார்க்கசபை.

---

## மதிப்புரை

[வ. சு. செங்கல்வராய பிள்ளை M. A.]

முருகன் :— “ முருகன் ” எனப் பெயர் கொண்ட ஒரு சிறு நூல் எனது நல்வினைப் பயனால் எனக்குக் கிடைத்தது. இந் நூல் வெளிப் பார்வைக்கு மிகச் சிறியது. உள்ளே வரையப்பட்ட பொருளை நோக்குமிடத்து மிகப்பெரியது. இதனை எழுதினோர் “நவசக்தி” ஆசிரியர் தமிழ்ச் செல்வர் திருவாளர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் எனக் கூறும்போதே நூலின் பொருட்சிறப்பு எங்ஙனமிருக்கு மென்பதைத் தமிழ் மக்கள் எளிதில் உணர்ந்து கொள்ளுவர். முருகன் என்னுஞ் சொல்லுக்குள்ள பொருள்களைக் கொண்டே முருகன் சிறப்பைத் தமது நுண்மை வாய்ந்த ஆராய்ச்சித் திறத்தால் “ கையிலங்கு பொற்கிண்ணம் ” எனச் செவ்வனே விளக்கியுள்ளார். அங்ஙனம் செய்யும் ஆராய்ச்சியால் யாண்டாண்டு அழகு பொதிந்துளதோ ஆண்டாண்டு கடவுட் டன்மை மிளிர்கின்றது என்னும் உண்மை நிலையைக் காட்டி இயற்கைப் பேரழகே அழகாதலின் “இன்ப ஊற்றைத் திறக்க வல்ல அழகு இயற்கை வாயிலாகக் காணக்கிடக்கிறது” என்பதையும், அவ் “வியற்கையோடு ஒன்றி வாழ்ந்துவரின் இயற்கைப் பேரழகு”—அஃதாவது “முருகு புலனாகும்” என்பதையும் சுருங்கச்சொல்லி விளங்க வைத்துள்ளார். அழகு கண்டுழி இறைவனைக் காணுதல் அறிவாதலின் பெண்களிடத்தில் அழகைக் காணும் மனம் அறிவோடுகூடி அப் பெண்களை நோக்குமிடத்து இறைவனைக் காணுமன்றோ? இவ்வுண்மையையும் மிக்க அருமையாக விளக்கியுள்ளார். எவும்பினின்றும் இறைவனருளால்

அழகு திரண்டெழுந்த பூம்பாவையைக் கண்டபோது ஞானசம்பந்தப் பெருமான் அவள் மாட்டு யாது கண்டனர்? இறைவன் பெருமையையே அத் தவமுதல்வர் ஆண்டுக் கண்டனரன்றோ? "புண்ணியப்பதி னாறுண்டுபேர் பெறும் புகலிவேந்தர், கண்ணுதல் கருணைவெள்ளம் ஆயிர முகத்தாற் கண்டார்" என்றார் சேக்கிழார் சுவாமிகளும். பின்னும், முருகக்கடவுளை வழிபடுவதின் சிறப்பை முருகைக் கண்ட முதன்மை அடியாராம் அருணகிரிநாத சுவாமிகள் திருவாய்மலர்ந்த திருப்புகழாதிய நூல்களினின்றும் அரிய பாவடிகளால் அழகாக விளக்கியுள்ளனர். பத்தி செய்வோர்க்கு உறுதி இன்றியமையாததென்பதையும் விளக்கி, "உறுதிக்கேற்ற அளவாகவே குறைகள் களையப்படும்" என்னும் உண்மையையும், எடுத்துக்காட்டியுள்ளார். நூலின் சொல்லழகும் பொருளழகைப்போலச் சிறந்ததாய்த் தனது தெள்ளிய உயரிய நிலையால் வெள்ளிலைய வேலன் திருவழகைப்போல அகங்குளிரச் செய்கின்றது. சுருங்கக் கூறுமிடத்து,

> இந்நூல் முருகனடியருக்குத் திருநிறை சேமம்
> தமிழை விழையுநர்க்கு அமிருத கலசம்
> தத்துவ முணர்வோர்க்கு வித்தக நிதியம்.

இந்நூல் இராயப்பேட்டை 'முருகவேள்' புத்தகசாலையிற் கிடைக்கும். விலை அணா 6

"ஊழியன" என்னும் புதுப் பெயரும் புத்துருவும் புத்துணர்ச்சியும் பெற்றுத் தலைவைசிய ஊழியன் என்னும் பத்திரிகையின் முதல் இதழ் வரப்பெற்றோம். ஊழியன் உலக முழுவதும் நல்லூழியம் புரியும் பெரு நோக்கத்துடன் முற்போந்தமை நோக்கிப் பெருமகிழ் வடைந்தோம். ஊழியன் போன்ற உண்மை நெறியைக் கைக்கொண்டு, நன்மை கடைப்பிடித்து வெளிவரும் பத்திரிகைகள் நனி சிலவே. இப்பத்திராசிரியர் திருவாளர். ராய. சொக்கலிங்கஞ் செட்டியார் அவர்கள் ஊக்கமும் தமிழ்ப் புலமையும் நடைத் தெளிவும் வாய்ந்தவராக இருத்தலின் இது தான் மேற்கொண்டகருத்துக்கிணங்க இனிது நடைபெறும் என்பதில் எட்டுணையும் ஐயமின்று. இது வளர்பிறையென வளர்ந்து மக்கள் அகவிருளை நீக்கி அறிவு ஒளியை யாண்டும் பரப்பவேண்டுமெனத் திருவருளை வழுத்துகின்றேன். இஃது ஓர் வாரப்பத்திரிகை வருட சந்தா ரூ. 5 வேண்டுவோர் காரைக்குடி 'ஊழியன்' நிலயத்திற்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

---

Printed by Sivakami Vılasam Press: Published by V. Subbiah
for The S. I. S. S. W. P. Society, Ltd., Madras.

# அழகொழுகும் புதிய தமிழ்ப் புத்தகங்கள்

## க. சைவப்பிரகாசனம்

*யாழ்ப்பாணத்து நீர்வேலிச் சங்கரபண்டிதரவர்கள் இயற்றியது*

இதன் பொருளடக்கம்

**I** இலக்கணம்
*இலக்கண இயல்பு. இலக்கண விபாகம்.*

**II** பிரமாணம்
*பிரமாண இயல்பு, பிரமாண விபாகம், பிரத்தியக்ஷம், பிரத்தியக்ஷப் போலி, அனுமானம், அனுமானப்போலி, ஆகமம், ஆகமப்போலி*

**III** சுருதி நிரூபணம்
*சுருதி இலக்கணம், சுருதி விபாகம், சுருதிப் பிரமாணம்*

**IV** சமய நிரூபணம்
*சமய இலக்கணம், சமய பதார்த்தம், சமய பதார்த்தப் பிரமாணம்*

**V** சைவச்சுருதி நிரூபணம்

**VI** சைவசமய நிரூபணம்
*பதி, பசு, பாசம், பதி கிருத்தியம், பசு கருமம், பசு போகம், முத்தி சாதனம், முத்தி*

*இது சைவஞான சாத்திரங்களை அறிதற்கு இன்றியமையாது வேண்டப்படும் தருக்க அறிவையும் அதனை உபயோகிக்கும் முறையையும் நன்கு விளக்குவது. இதனைக் கற்றுணர்ந்தவர்கள் சிவஞான போதம் முதலிய நூல்களை ஓதி யுணர்தற்கு அதிகாரி களாவர்.*

## உ. குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு

இதில் கந்தர் கலிவெண்பா முதல் கைலைக்கலம்பகம் வரை 15 நூல்கள் உள்ளன. (கைலைக்கலம்பகம் மட்டும் இதுவரை வெளிவராதது) அரும் பொருள் விளக்க உரையினை இறுதியில் 237 பக்கங்கள் சேர்க்கப் பட்டிருக்கின்றன. சமய அறிவையும், முருகனருளையும் பெற விரும்புவார் வாங்கிக் கற்கக்கூடிய ஓர் அருமை நூலாகும். ஷை சுவாமிகளின் திருவுருவபடத்துடன் வழு வழுப்பான உயர்ந்த சீமைக் கடிதத்தில் 656 பக்கங்கள் உள்ளது; அழகிய மழூக் கலிக்காக் கடடிடம் பொன் கிலிட்டுடன் விலை ரூபா **3 8**

## ௩. அகத்தியர் தேவாரத்திரட்டு மூலமும் உரையும்

பன்னிரு திருமுறைகளையும் மாதம் ஒரு திருமுறை வீதம் பல வருடங்களாக 12 திருமுறையையும் 31 முறை ஓதி வந்தவரும், இன்னும் ஓதிவருபவரும், வடமொழி தென்மொழிப்புலமை நிரம்பிய வருமான திரு. கயப்பாக்கம் சதாசிவசெட்டியாரவர்களால் எழுதப்பட்ட பதவுரை, விளக்கவுரையுடன் வழுவழுப்பான உயர்ந்த சீமைக்கடிதத்தில் 384 பக்கங்கள் உள்ளது; அழகிய கலிக்கா கடடிடம் பொன் கிலிட்டுடன். விலை ரூபா **1 12.**

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்
திங்கள்தோறும் வெளிவருவது

சிலம்பு ௩ } மெய்கண்டான் ஆண்டு-௭௱௨ புரட்டாசித் திங்கள் 1925௵ செப்டம்பர்௴—அக்டோபர்௴ { பரல் கூ

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## இறையனார் அகப்பொருள்

[கா. சுப்பிரமணிய பிள்ளை M.A., M.L.]

(௩௩௩-ம் பக்கத் தொடர்ச்சி)

இயற்கைப் புணர்ச்சியினை மெய்யுறுபுணர்ச்சி யென்றும், உள்ளப்புணர்ச்சி யென்றும் இருவகையாகக் கூறுவர் நூலோர். இந் நூலுரையாசிரியர் உழுவலன்பினால் நேர்வது மெய்யுறு புணர்ச்சியாமென்று நிறுவியுள்ளார். அன்பு நிறைந்த உள்ளத்தையுடைய தலைவனும் தலைவியும் தமது இயல்பினை யிழந்து

கூடுமிடத்து உள்ளப்புணர்ச்சி யளவில் தாங்கள் நின்றுவிடுதல் இயலாத தொன்றாகலான் அவர்கள் கூட்டம் உள்ளப்புணர்ச்சி யாதல் சாலா தென்பது உரையாசிரியர் கருத்து. மேலும், ஒருவரை யொருவர் உள்ளிய பின்னர் பிறரைக் கருதாராகலான் அத்தகைய கூட்டத்தாற் போந்த இழுக்கு யாது மில்லை யென்பதும் அவர் கருத்தாகும். மக்களாகலான் உள்ளப்புணர்ச்சி யளவில் கூட்டத்தின் முற்றுப் பேறும் இல்லை. ஆதல் பற்றியும் மெய்யுறு புணர்ச்சியே வேட்கை மிகுதியால் விளைவதாகும். அன்பின் நிலையும் பலபடித்தாமாகலின் உள்ளப்புணர்ச்சியே நிகழ்தற்குரிய ஏதுக்களும் உண்டு. தலைவனும் தலைவியும் தத்தமக்குரிய நான்கு குணங்களையும் முற்றிலும் இழந்து விடாத நிலையில் உள்ளப்புணர்ச்சியே சாலுமென்ப. இக்கருத்துப்பற்றியே 'பெருமையும் உரனும் ஆடூஉமேன, அச்சமு நாணமு மடனுமுந் துறுத்த, நிச்சமும் பெண்பாற் குரிய வென்ப' என்ற இரண்டு செய்யுளுக்கும் உரைகூறிய ஆசிரியர் உள்ளப்புணர்ச்சி மாத்திரம் நிகழ்வதற்கு அச் சூத்திரங்களுள் கூறிய குணங்கள் காரண மென்ப. ஆயினும் அவ்வுள்ளப்புணர்ச்சி நிகழ்ந்து வரைந்து கொள்ளுதல் உலக வழக்கின்பாற் படுமென்றும், நாடக வழக்கின்பாற் படும் களவியலுக்கு அது சிறப்புடையதன்றென்றும் அவ்வாசிரியர் கூறியுள்ளார். ஆசிரியர் திருவள்ளுவரும் புணர்ச்சி மகிழ்தல் என்னும் அதிகாரத்துள் மெய்யுறு புணர்ச்சியே விதந்தோதினார். அது 'கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு மொண்டொடி கண்ணே யுள' என்பதனாலும் 'தாம்வீழ்வார் மென்றோட்டுயில்' என்பதனாலும், 'உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலால்' 'வளியிடை போழப் படாஅ முயக்கு' என்பதனாலும் தெற்றெனப் புலப்படும்.

இயற்கைப் புணர்ச்சிக்குப்பின் நிகழும் ஒருதலை வேட்கை, உள்ளுதல், மெலிதல் முதலியன நிகழற்பாலன வென்று தொல்காப்பிய உரையாசிரியர் கூறாநிற்ப அவை இயற்கைப் புணர்ச்சியின் ஒரு பகுதியை மெய்யுறு புணர்ச்சிக்கு முற்படுவன வென்று நம்பியகப்பொருள்விளக்கம் கூறுகின்றது. அகப்பொருள் விளக்கக் கூற்று அத்துணை பொருத்த முடையதல்ல.

இருவரும் எதிர்ப்படும் பொழிலின் தன்மையைப் பற்றியும் ஆடவர் பெண்டிர் முதலியோர் வழக்கங்களைப்பற்றியும் இந்நூலுரையினால் அறியக்கிடப்பன பல. அக்காலத்தில் சிறுமிகள் பொழிலகத்தே சென்று பூக் கொய்தும் மாலை தொடுத்தும் மயிலொடு மாறாடியும் குயிலொடு மாறுகூவியும் வாசமலர்க் கொடியில் ஊசலாடியும் அருவியாடி அஞ்சுனை படிந்தும் பொழுது போக்கின ரென்பது இதன் உரையாற் புலனாம். செல்வர்கள் தமது இருக்கைக்கு அருகாகப் பல்வகை மலர் மரங்களும் செறிந்த செய்குன்றமைப்பதும் அதன்கண் காட்சி நயமிக்க கட்டிடங்களும் பூங்கொடிப் பந்தர்களும் பொய்கைப் படித்துறைகளும் செம்மையாக அமைத்து மகிழ்ந்தன ரெனவும் தெரிய வருதலால் இக்காலத்தில் மேல் நாட்டினர் கூறும் (Landscape Gardening) காட்சித்திறமிக்க பொழிலமைப்பைப் பண்டைத் தமிழர் அறிந்திருந்தன ரென்பது நன்குபோதரும். இங்கு கூறப்பட்ட பொழி லென்பது மலைச்சார்பகத்தே உள்ளதாதலின் அரசிளங் குமரரும அவர் தோழரும் வேட்டம் போய் விளையாடுவதும் வழக்கமாகக் கூறப்பட்டது. செல்வர்கள் பரிபூட்டிய தேரிற் செல்லுதல் பண்டைக்கால வழக்காயிருந்தது. 'பால் புரை புரவி நால்குடன் பூட்டி' என்ற புறநானூற்று அடியையுங் காண்க. ஆடவர் காலிற் கழலணிவதும், உடம்பில் நறுஞ்சாந்தணிவதும், சுருண்டு நீண்ட தலைமயிரைப் பொன் கயிற்றினாற் பிணிப்பதும் அதிற் பூச்சூடுவதும் வழக்கமாக இருந்ததென்பது தெரியவருகிறது. பெண்டிரது வனப்பை விரித்துரையாது 'ஒளி பொருந்திய நெற்றியுடையோர்' என்ற அளவிற் பெற வைத்தார் இந்நூலுரையாசிரியர். தலைவியின் வனப்புக்கூறும் செய்யுள் முதலியவற்றைப் பாண்டியன்மீது ஒரு புலவர் பாடிய கோவையினின்றும் எடுத்த மேற்கோள்களால் இவ்வுரையாசிரியர் விளக்கியுள்ளார். திருச்சிற்றம்பலக்கோவையிலுள்ள திருப்பாசுரங்களை இவ்வாசிரியர் எடுத்து வழங்காமைக்குக் காரணம் இவ்வுரை யெழுதுங் காலத்து அது எழுதப்படாமை கருதியோ யாதோ தெற்றென விளங்கவில்லை. காட்சி முதலிய துறைகளுக்கு திருக்கோவையாருட் கூறப்பட்ட செய்யுட்கள் சிறந்த

எடுத்துக் காட்டாகும். உரையாசிரியர் காட்டிய பாடலினுள்ளும் தலைவியைப் பூங்கொடியாகவே புனைந்துரை காணப்படும் எனினும் திருக்கோவையாரி லுள்ள திருப்பாசுரம் போல அது அத்தனை பொருள்வள முடையதல்ல.

திருக்குறளுள் தலைவியினது கண்ணினையே மிக நயம்பட ஆசிரியர் புனைந்துரைத்தார். தகையணங் குறுத்தல் என்ற அதிகாரத்துள் ஆறுகுறள் கண்ணின் சார்பாகவே கூறப்பட்டுள்ளன. மக்களது உடம்பிற் சிறந்த பகுதி முகமாகும். முகத்திற் சிறந்த பகுதி கண். கண்ணிற் சிறந்த உறுப்பில்லை யாதலாலும் அகத்துள்ள வேட்கையைக் கண்களே தெளிவாகக் காட்டுவன வாதலாலும் கண்ணினையே விதந்தோதினர் ஆசிரியர். உள்ள வொற்றுமையைத் தெரிவிப்பது கண்ணுகலின் அதன் சிறப்புச் சொல்லொணாதது. உடல் நயத்தோடு உள்ள நயத்தையும் உணர்ந்து இன்பந்துய்க்கும் இயல்புடையார்க்கு பெண்ணின் சிறந்த பண்பாகிய நாணமும் மடநோக்கும் பெரிதும் அழகு செய்வதிற் சிறந்தனவாகலின்,

‘பிணையேர் மடநோக்கு நாணு முடையாட்
கணி யெவனோ வேதில தந்து’

என்றனர். கண்ணிற்கடுத்த நிலையில் ஒளிமிக்க நுதலும் அழகு செய்வதாகும். ஆகலின், அதனைப்பற்றி ஒரு குறள் இருக்கிறது. மாதர்க்குச் சிறந்த உறுப்பு அவரது மார்பாகலின் அதனையும் ஒரு குறளால் ஆசிரியர் கூறினர். அணி முதலியவற்றாலாகிய செயற்கை யழகினும் இயற்கை யழகே சிறந்த தென்பது ஆசிரியர் கொள்கை. காதில் மாதர் குழை யணிவது ஆசிரியர் காலவழக்குப்போலும். அணிபூண்பதற்குரிய சிறுப்புக்களுள் காது சிறந்ததென்பது அவர் கருத்து. சாயலின் மென்மையால் தலைவிக்கு மயிலை உவமை கூறினர். இங்ஙனம் தலைவியினது இயற்கை யழகினையும் அவளது இன்றியமையாத சிறந்த உறுப்பினையும் அவளது உள்ளச் செம்மை யுணர்த்தும் கண்ணின் இயல்பையுமே ஆசிரியர் திருவள்ளுவர் விதந்தோதி உயர்ந்த

வனப்பு இணைத்தென்பதை இனிது காட்டினார். அணியிறுஞ் சிறந்த பன்னிற ஆடையின் வனப்புத் தோன்ற மயிலென்றா ரென்றலும் ஒன்று.

"அணங்கு கொலாய் மயில்கொல்லோ கன்ங்குழை
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு"

இதனால் பண்டைத் தமிழரது உயர்ந்த பாமுறை மிக்க சால் புடைத்தென்பது யாவர்க்கும் விளங்கும். உச்சிமுதல் உள்ளங் கால் வரையுள்ள உறுப்பு ஒவ்வொன்றையும் தத்தமது புனைந் துரையாற்றலுக் கேற்ப உயர்வு நவிற்சியாற் கூறும் செயற்கை முறை ஆரியர்க்கே ஆதியில உரியதன்றிப் பண்டைத் தமிழர் பாற் காணப்படாததாகும். ஆசிரியர் திருவள்ளுவர் காலத்திற் குப் பின் வந்த பாவலர் பலரும் விரிவுற வனப்புக்கூறும் வழக் கத்தைப படிபபடியாகப் பெருக்கி விட்டார்கள்.

திருச்சிற்றம்பலக்கோவையாருள் காட்சித் துறைக்குக் கூறிய திருப்பாட்டானது பண்டை முறையினும் பிற்கால முறை யினும் உள்ள நயங்களை ஒருங்கு கொண்டுள்ளது. மலர்களை யுணர்த்தும் உருவகச் சொற்களினாலே தலைவியின் திருமுகம் முதல் திருவடிவரையுள்ள வனப்பினை செவ்விதின் விளக்கினார். சொற்சுருக்கமும் பொருட்பெருக்கமும் இவ்வாறு அமைதல் மிகவும் அரிது.

திருவளர் தாமரை சீர்வளர் காவிகளீசர் தில்லைக்　　[தெய்வ
குருவளர் பூங்குமிழ் கோங்கு பைங்காந்தள் கொண் டோங்கு
மருவளர் மாலையொர் வல்லியி னொல்கியன நடைவாய்ந்
துருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே'

திரு என்பதற்குக் கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்க மென்று பேராசிரியர் பொருள் கொண்டார். திருமகள் என்பது தவறென்பது நன்றாக விளக்கியுள்ளார். காட்சி யளவிலே உவகை விளைவதை 'திரு' என்ற சொல் குறிக்கின்றது. கண்ணின் சிறப் பையுணர்த்த 'சீர்வளர்' என்றார். ஐந்திணை யொழுக்கத்திற் கேதுவாகிய தலைவி என்பார் ஐந்திணைப் பூக்களையும் தொகுத்

துரைத்தார். தாமரை மருத நிலத்திற்கும், காவிகளாகிய குவளைப் பூக்கள் நெய்தற்கும், குமிழ் முல்லை நிலத்திற்கும், காந்தள் குறிஞ்சி நிலத்திற்கும் சிறந்தமலர்களாகும். தாமரை என்பது முகத்திற்கும், காவிகள் கண்ணிற்கும், குமிழ் மூக்கிற்கும், கோங்கு அரும்பு முலைக் கண்ணிற்கும், காந்தள் கருத்திற்கும் உவமையாகும். மாலை என்ற சொல் கோதை யென்ற சொற்போல பெண்பாலாரைக் குறிக்கும். வல்லியின் ஒல்கி என்றதனால் தலைவி மேனியின் மென்சாயல் விளக்கப்பட்டது. அனநடைவாய்ந்து என்றதனால் திருவடிச்சீர் இயம்பப்பெற்றது. உருவளர் என்றதனால் வளர்ந்தமைந்த காலத்தும் மேலும் வளர்வதாகக் காட்டும் நயமாகிய எழில் கூறப்பட்டது. இவ்வாறு தலைமுதல் கால்வரை சுருக்கமாகவும் விளக்கமாகவும் புனைந்துரை செய்தல் பிறர் கோவைநூலுள் காணப்படா. கண்டார் மனங்கவரும் வனப்பென்பது காமன்றன்வென்றிக் கொடிபோன்றொளிர்கின்றதே என்பதாற் பெறப்படும். குறிஞ்சி நிலத்திற்குரிய காந்தட் பூவினை இறுதியிற் கூறினமையால் புணர்தலும் புணர்தல் நிமித்தமுமாகிய குறிஞ்சியே கூறினரென்றும், பிற நிலப்பூக்களும் இக்குறிஞ்சியையே சிறப்பித்து நின்றன என்றும் திருக்கோவையாருரையாசிரியர் கருதுகின்றார். 'ஈசர் தில்லை' என்றமையால் இம்மை மறுமை வீடு மூன்றும் குறித்தவாறு என்ப. இத்திருப்பாட்டின் சொற்கள் அப்பர்சுவாமிகள் தேவாரத்திற்போந்த ஓர் திருப்பாசுரத்தின் சொற்களோடு ஒத்து நிற்பது வியக்கத்தக்கது.

'திருவமர் தாமரை சீர்வளர் செங்கழுநீர் கொண்ணெய்தல்
குருவமர் கோங்கங்கு ராமகிழ் செண்பகங் கொன்றை வன்னி
மருவமர் நீள்கொடி மாடமலி மறையோர் கணல்லூர்
உருவமர் பாகத் துமையவள் பாகனை யுள்குதுமே'

(திருநல்லூர் - திருவிருத்தம்)

(தொடரும்)

# புறநானூறும் தமிழர் மாண்பும்

[திரிசிரபுரம், ம. பெரியசாமிப்பிள்ளை]

(௩௨௯-ம் பக்கத் தொடர்ச்சி)

கற்பு:—கல்வி என்பதுபோலக் கற்பும் 'கல்' என்னும் வினை அடியாகப் பிறந்த பெயராம். கற்பென்றது ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் மணந்து இல்லறம் நடாத்துங் காலத்து அவர்கட்குரிய ஒழுகலாற்றினை என்னை? கற்க வேண்டியவற்றுள் இது இன்றியமையாதது ஆகலான். தலைவன்—உருவும் திருவும் அன்பும் குணமும் முதலியவற்றாற் சிறந்த ஆண்மகன்; தலைவி—அவையிற்றாற் சிறந்தபெண். இத்தகைய தலைவனும் தலைவியும் ஊழ்வயத்தால் ஒருவரை ஒருவர் அறிந்து ஒத்த அன்புடையராய் விருப்புற்று உள்ளக் கலப்பு (அன்பின் முதிர்ச்சியால் மெய்யுறு கலப்பும் நிகழ்தல் உண்டு) எய்திய பின்னரே மணம் நிகழும் வழக்கம் பழந் தமிழ்மக்களிடைக் காணப்பெறுவது. இங்ஙனம், பிறர் அறியாமல் தலைவன் தலைவி இவர்களிடை நிகழும் கலப்பிற்கு உரிய ஒழுகலாற்றினைக் களவொழுக்கம் என்றும் இதன் பின்னர் மணம் நிகழ்ந்து இல்லறம் நடாத்துங்கால் அதற்குரிய ஒழுகலாற்றினைக் கற்பொழுக்கம் என்றும் நமது பழந் தமிழ்நூல்கள் கூறும் இவ்வாறு மணம் நிகழப்பெற்ற கணவனும் மனைவியும் ஒருவரை யொருவர் உயிரெனக் கருதிக் கூடி ஒழுகுவர். இத்தகைய ஒழுக்கத்தானாய இன்பத்தையே அகப்பொருள் எனத்தமிழ் நூல்கள் கிளந்தோதுவதூஉம் என்க. இதன் விளக்கமெல்லாம் திருக்குறள் காமத்துப் பாலினும் அகப்பொருள்பற்றிய மற்றைத் தமிழ் நூல்களினும் காணலாகும். மணமகன், மணமகள் இவர்கள் மனம் ஒத்த பின்னர் நடைபெறும் மணமே தலைசிறந்தது என்பதனாலேயே தொல்காப்பியம் திருக்குறள் முதலிய நூல்கள் அகப்பொருளைக் களவு, கற்பு எனப் பிரித்துக் கூறுகின்றன. இக்காலத்தோ எனின் மனம் கலந்து அன்பு கொளற்குரிய மணமக்களைத் தேடி மணம் பேசுதல் பெற்றோர் பொறுப்பாய்விட்டது. ஆகலான் பெற்-

உத்தரகாரணாகமம் உபாகோத்ஸவ விதிப்படலத்தில்

"மேஷ சங்கிராந்தி காலேது ஆஸவீஜவிஷுவேதரதா |

"விஷுவகாலேது சம்ப்ராப்தே விப்ராணும் வியாதிபீடிதம்" என்றும் "ஆஷாஷ ஸங்க்ராந்திமேஸ்ப்ருஸ்யபூ பூஜாநாந்துபீடதா" என்றுமுள்ள சுலோகங்களுக்கு முறையே சித்திரைமாதப் பிறப்பாகிய விஷுகாலத்திலே கிரகணமுண்டாயின் பிராமணருக்கு வியாதி பீடையும் ஆடிமாதப்பிறப்பில் கிரகணமுண்டாயின் அரசர்களுக்குப் பீடையு முண்டாமென்பது பொருள். இச்சுலோகங்களிலுள்ள ஆசுவீஜம் ஆஷாடமென்னும் இரண்டையும் சாந்திரமாதங்களாகக் கொள்ளுமிடத்து அவைகளுக்கு முறையே விஷுவென்பதும் சங்க்ரமமென்பதும் இதுகாறும் நூல்வழக்கினும் அனுபவ வழக்கினும் இல்லாமையால் அவைகள் முறையே ஐப்பசி என்னும் ஆடி என்னும் சௌரமாதங்களேயாயின.

மேற்காட்டிய ஆகமம் மாதபூஜாபடல அவதாரிகைகளில் "ஆஸ்வயுஜம்" "ஆஷாடம்" "ஜ்யேஷ்டம் வைசாகம்" "மாகம்" "புஷ்யம" "ஸாபம்" "தனு", என்னு மாதங்களும் இவைகட்கு நிரனிறையே அவ்வவ் வவதாரிகைகளுக்குரிய சுலோகங்களில் "துலாராசி கதேபாநு" "பாநன கர்கடகே" "ஜேஷ்டமாசி" "வருஷே பாநு" கும்பஸ்தேரவி" "மகரஸ்தேதிவாநாதே" "சாபமாஸே" "ஸாபம் ப்ராபதேசவிதரி" என்னு மாதங்களுமிருக்கின்றன. இதனால் ஒருபொருட்குப் பலபெய ரிருப்பதுபோல் தென்மொழியில் சித்திரை முதலிய சௌரமாதங்கட்கே வடமொழியில் மேஷரவி முதலியனவும் சைத்திர முதலியனவும் ஏற்பட்டன. அன்றி அச்சைத்திர முதலியவைகள் ஓர் போதும் சாந்திரமாதங்களாகா.

இதுவேயுமன்றி காமிகாகமம் முகூர்த்த நிர்ணயப் படலத்தில்:—

"மிதுநம்சிம்மமாஸஞ்சமேஷஞ்சவ்ருஷபந்ததா :
புஷ்யபால்குநகம்சைவாஷாண் மாஸமுத்தமம்பவேத்" ||

என்றுங் கூறுமாற்ருல் புஷ்யம், பால்குநகம் என்னும் இரண்டும் முறையே தையும் பங்குனியுமாகிய சௌரமாதங்களேயாம். அங்ஙனமன்றி அவ்விரண்டையும் சாந்திரமாதங்களாகக் கொள் ளுமிடத்து புஷ்யமாசாரம்பம் மார்கழிமாதத்தும் பால்குந மாசாரம்பம் மாசி மாதத்தும் வரும். அங்ஙனம் வருவதில் மார் கழியும் மாசியும் சூன்யமாதமா யிருத்தலின் அம்மாதங்கள் முகூர்த்தங்கட்கு ஆகாமையால் புஷ்யமும் பால்குநமும் சௌர மாதங்களேயாம்.

ஆகமம் பிரபல பிரமாணமென்பதற்கு சங்கர சம்மிதை யுத்தகாண்டத்து கூறு-வது அத்தியாயத்தில்

"ஆஸ்யமத்யேஸ்திதாவேதா தேவதேவஸ்யபூசுர:
அட்சராணி சதந்தேஷுஜிஹ்வாயாந்துசிவாகம: |

பொருள்:— 'கேளீர் பூசுரர்களே! அந்தத் தேவாதி தேவ ருடைய வாயில் எலலா வேதங்களும், அவர் பற்களில் அட்சரம னைத்தும், அவர் நாவில் சிவாகமங்களும் இருந்தன. தேவாதி தேவர் என்பது இங்கே சுப்பிரமணியக் கடவுள். வாயிற் சிறந் தது பற்கள், பற்களில சிறந்தது நாவானதுபோல் வேதங்களில் சிறந்தது ஆகமங்கள் என்ருயிற்று."

அன்னபூரணி யுபநிஷத்தில் :—

"சிவஸ்ஸைவாகமஸ்த்தாநாம்"

பொருள்:—சைவாகம மார்க்கிகளுக்கு சிவனே கர்த்தா.

சிவபுராணம் அகத்திய சம்மிதையில் .—

ப்ரணவாத்யாமகாமந்த்ராத்யகாராத்யட்சராணிச
சிவக்ஞாநாநி திவ்யாநி காமிகாதிநி பூசுராঃ | ஸ்ரீத்தா
லாஸ்ய நாதஸ்ய ஸம்பவந்த்யூர் தவ வக்த்ருதঃ |
புநஸ்யதேவ தேவஸ்ய புருஷார்த்தஸ்ய வக்த்ருதঃ |
ஏகவிம்சதிபேதேநயுக்தருக்வேதமப்ராவீத்
யஜுர்வேதந்த்வேகஸதம்பேதயுக்தமகோரதঃ |
ஸஹஸ்ரஸாகாஸம்யுக்தம்ஸாமவேதந்துவாமதঃ |
அதர்வம் நவதாபிநம்ஸத்யோஜாதேநஸாப்ராவீத் |

பொருள்.—"ஏ பூசுரர்களே! பிரவாணுதி மகாமந்திரங்களும் அகாராதி பக்ஷரங்களும் சிவஞாந மயமாகிய திவ்வியாகமங்களும் சிவபெருமான் ஊர்த்வமுகமாகிய ஈசான முகத்தினின்றுந்தோன்றின. பின்னும் அந்தப் பரமேசுவரனுடைய (அகோர முகங்களில்) தத்புருஷ முகத்தினின்றும்-21-சாகா பேதமாயுள்ள இருக்வேதமும், அகோர முகத்தினின்று 101 சாகாபேதமாயுள்ள எசுர்வேதமும் வாமதேவ முகத்தினின்று 1,000 சாகைகளோடு கூடிய சாமவேதமும், சத்தியோஜாத முகத்தினின்று 9 சாகைகளோடுகூடிய அதர்வண வேதமும் தோன்றின."

முண்டகோப'நிஷத்தில்:—

"த்வேவித்யேவேதிதவ்யே இதீய ஹஸ்மய
ப்ரம்ம - விதோவதந்தி பராசைவாபராச"

பொருள்:—'இரண்டு வித்தைகளறியவேண்டும். பிரம்ம வித்துக்கள் இப்படியே அறிகின்றனர்.'' அவைகள் பரம் அபரமெனப் பேதப்பட்டு நிற்கும். அவற்றுள்

"தத்ராபரா ரிக்வேத யஜுர்வேத் ஸாமவேதோ தர்வி
யவேதோவிக்ஷா வ்யாகரணச் சந்தோ நிருக்
தகல்போ ஜ்யோதிஷமிதி அதபாரயாததக்ஷா
மதிகம்யதே"

பொருள்:—"இருக்கு, எசுர், சாமம், அதர்வண மென்னும் வேதங்களும் சிக்ஷை, வியாகரணம், சந்தசு, நிருத்தம், கல்பம், ஜோதிஷமென்னும வேதாங்கங்களும் அபர வித்தைகள். அட்சரங்களை அதிக்கிரமித்துள்ளது பரவித்தை. "அட்சராதிகம்யம் என்பது நாத நாதாந்தமாகலின் "நாதரூப சிவக்ஞாநம் பரவித்யா சொரூபகம் ஆகமஞ்சேதி விக்யாதம் பரவித்யாமயம் பவேத்" பொருள்:—நாதரூபமாய் சிவஞானமயமாயுள்ள சிவாகமம் பரவித்தை"

சூதசங்கிதை சிவமான்மிய காண்டம் முதலாவது அத்தியாயத்தில்:—

"அஷ்டாதச புராணுநாம் கர்த்தாசத்யவதி சுத:
காமிகாதிப்ரபேதஸ்யயதாதேவோ மஹேஸ்வர:

என்பதற்கு வித்தியாரண்ணிய சுவாமிகள்—"காமிகாதி நாமாகம சம்ஹிதாநாம் சிவேனைவ ப்ரணயநாத் ப்ராமாண்யே யதாவிஸ்ரம்ப: | ஏவம் நாராயணைவ தாரேணவ்யாஸேநப்ரணய நாத் புராணேஷ்வப்ய விஸேஷ:" என்று வியாக்யானஞ் செய்திருக்கின்றனர். அன்றியும், அச்சூத சங்கிதையிலுள்ள பல சுலோகங்களுக்கு 'மிருகேந்திரம், சுப்ரபேதம், காலோத்தரம், சர்வஞானோத்தரம், சித்தாந்த சேகர முதலிய ஆகமங்களைப் பிரமாணங்காட்டியு மிருக்கின்றனர்.

இச்சுலோகத்துக்கு, பதினெண் புராணங்கட்கு - கர்த்தா வியாசர், காமிகாதி யாகமங்கட்கு கர்த்தா மகேசுரர் என்பது பொருள்.

மேற்படி சம்மிதை எக்ஞவைபவ காண்டத்து 20-ஆவது அத்தியாயத்தில் :—

"சைவாகமோதிவோ தர்மோவரிஷ்டோநைவஸம்ஸய :"

என்பது முதலிய மூன்று சுலோகங்களால் காமிகாதி யாகமங்கள் சர்வோத்கிருஷ்டமெனக் கூறுகின்றன.

ஸ்ரீமத் அப்பய தீக்ஷித் சுவாமிகள் சிவதத்துவ விவேகத்தில்:—

"சிவாகமா நாமப்ராமாண்ய ப்ரலாபோ
உபிமூர்க்காணும் களஹஸ்திதா:"

என்பதற்கு "சிவாகமங்கள் பிரமாண மன்றென்று கூறும் மூர்க்கருடைய பித்துரைகள் பிடர்பிடித்துத் தள்ளப்பட்டன."

ஸ்ரீமத் அரதத்த சிவாசாரிய சுவாமிகள் சதுர்வேத தாத்பரிய சங்கிரகத்தில்:—

"வேதப்ரமாணமிதிஸங்கிரமாண்யேவ |
திவ்யந்த்வாகமமவைதிஜந: ப்ரமாணம் |
த்வத்யாநவாக்ய விஷயௌபயிகை: பதார்த்தே |
ராரூடமாகவிதவிக்ரகமாசமூலாத்"

பொருள்:—"வேதத்தை ப்ரமாணமாகக்கொண்ட சனங்களே உம்முடைய திவ்யாகமங்களேயும் பிரமாணமென்று அறிஞர்கள். எதனுலென்ருல் உமது தியானத்தைக் கூறியது வேதம். அதனைச் செய்தற்கு வேண்டற்பாலதாகிய சொரூப லட்சணத்தை ஆகமங் கூறுதலால்"

அமிருத நாதோப நிஷத்தில்:—

"ஆகமாஸ்யா விரோதேந ஊகநந்தர்க உச்சியதே"

பொருள்:—ஆகமங்களுக்கு விரோதமில்லாத யுக்தியினுல் தர்க்கம் செய்க; இனி விரிக்கிற் பெருகும். நிற்க.

இதுகாறுங் கூறியவாறு பிரபல பிரமாணமாயுள்ளவை காமிகாதி ஆகமங்களேயாயின. ஆகவே அவைகளில் காரணுகமம் பூர்வபாகத்தில் மஹோத்ஸவ விதிப்படலத்தில்:—

"ஸௌரமாஸம் ப்ரசஸ்தம்ஹிசாந்த்ரமா ஸோப்ரஸஸ்தகம்"

என்றும்,

காமிகாகமம் முகூர்த்த நிர்ணயப்படலத்தில்:

"பார்ஹஸ்பத்யம் சாந்திரமாநம் ஸௌரஞ்சேதித்
ரிதாமதம் | காரணம் ஸௌரமாநஞ்ச சூக்ஷமம்சாந்
த்ரமிதிஸ்ம்ருதம் | ஸ்தூலம் ஸ்யாத் பார்ஹஸ் பத்யம்ஸ
யாத்மாநத்ர முதாஹ்ருதம் | சூட்சும்ம் ஸ்தூலம் பரித்
யஜ்யக்ருஹேத் காரணமுத்தமம் | ஸௌர மாநேந
கர்த்தவ்யம் ஸர்வகர்ம சுபாவகம் | பரார்த்தே சால
யேஷ்வேஷு ஸௌரமாநேந காரயேத் | ஸௌரமாநம்
விஹாயாத சாந்த்ராதிபி: க்ருதேத்யதி |
ஆயு ஸ்ரீபுத்ர நாசஞ்ச தத்கர்மம் நிஷ்பலம்பவேத்"

என்றுமுள்ள சுலோகங்களின் பொருள் —"சௌரமானம் பிரசஸ்தமுள்ளது சாந்திரமாநம் பிரசஸ்தமில்லாதது. பார்ஹஸ்பத்தியமாநம் சாந்திரமாநம் சௌரமாநமென மாநங்கள் மூன்று விதமாயிருக்கும். அவற்றுள் சௌரமாநம் காரணம், சாந்திரமாநம் சூக்ஷ்மம், பார்ஹஸ்பத்திய மாநம் ஸ்தூலம். ஸ்தூல சூட்சுமங்களை நீக்கிக் காரணத்தை கிரகித்தல் உத்தமம். சௌர

மானத்தாற் செய்யின் எல்லாக் கன்மங்களும் சுபத்தைக்கொடுக்கும். பார்த்தாலயங்களில் சௌரமானத்தாலே செய்யவேண்டும்; சௌரமானத்தை நீக்கி சாந்திரமானத்தாற் செய்வாராயின் ஆயிசு புத்திரன் செல்வம் நாசமாவதோடு, அக்கன்மங்களும் பலன்கொடாது''

சிவபுராணம்

''த்விஜாதிநாம்சாந்த்ரமாநேவ்ரதாநயபி பலந்திஹி:
உபாகர்மஞ்சபித்ர்யஞ்சசிவராத்ரிவிரதம்விநா''

பொருள்:—பிராமணர் முதலிய மூவருணத்தார் சாந்திர மானத்தில் விரதபலனைப் பெற விரும்பினும், உபாகர்மம், பிதுர்கர்மம், சிவராத்திரி விரதம் ஆகிய இவைகளை நீக்கி ஏனைய கன்மங்களைச் செய்க. விரும்பினும் என்ற உம்மையால் செய்யவொண்ணாதென்பதே கருத்தாம்.

ஸ்ரீகாமகோடி பீடாதிபதியாகிய ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் அங்கீகரித்துள்ள தர்மசாஸ்திரச் சுருக்கம் 119-வது பக்கத்தில்,

''துலாஸ்நானம் உஷ்ேஷாபயாகம் க்ருத்திகா தீபமேவச
தநுர்மாஸிஹேரே: பூஜா சிவராத்திரி வ்ருதம் ததா
ஸௌரமானேன கர்த்தவ்யம் சாந்திரமானே நகாரயேத்''

என்னும் வசனம் காணப்படுகிறது. இதன்பொருள்.—தீபாவளி, துலா ஸ்நானம், கார்த்திகை தீபம், தநுர்மாஸ பூஜை, மகா சிவராத்திரி இவைகளை ஸௌரமானப்படிதான் செய்யவேண்டும். சாந்திர மானபபடி செய்யக்கூடாது என்பது. இதுபோல ஒவ்வொரு நூலினும் ஒவ்வொரு கன்மமும் தனித்தனியேனும் சிற்சில கன்மங்கள் சேர்ந்தேனும் சௌரமானத்திலேயே விதிக்கப்பட்டிருக்கும். அது பல புராணேதிகாசங்களை ஆராய்ச்சி செய்யின் வெளிப்படும்.

சிவாலயங்களில் சிவபெருமானருளிய சிவாகம நெறியிலே, நித்திய நைமித்திகாதி பூஜை புரிதல்வேண்டும். சிவாகமத்துக்கு வேறாயுள்ள எந்நெறியினும் எவ்வகைக்கிரியையும் செய்ய

வொண்ணாது. செய்யின் உலகங்கெடும். இதனை "ஆற்றரு நோய் மிக்கவனி மழையின்றிப், போற்றரும் மன்னரும் போர்வலி குன்றுவர், கூற்றுதைத் தான்றிருக் கோயில்க ளானவை, சாற்றிய பூஜை கடப்பிடிற் ருனே" என்னும் திருமந்திரத்தா லுணர்க. அங்ஙனம் ஆகமநெறி வழுவாது பூஜைசெய்யினும், சௌர மானத்திலே செய்யவேண்டும். அன்றிச் சாந்திரமானத்திலே ஒருபோதும் செய்தலாகா. செய்யின் பயனின்றிப் பாவமுண்டா மென்பது ஆகமநூற்றுணிபு.

பிரமாண நூல்களுள் பிரபல பிரமாணமாயுள்ளவை காமிகாதி யாகமங்கள்; அவ்வாகமங்களில் பிரபல பிரமாண மென்றெடுத்தாளப்படுகிறது சௌரமானங்கள். இதனுள் சௌரமாதங்களையே சாந்திரமானங்களெனச் சாந்திரமானிகள் கொண்டனர். அங்ஙனங்கொண்டவர், அம்மாதங்கள் ஒவ்வொன்றிற்கும் சென்ற சௌரமாதச் சுக்கிலப்பிரதமை மாதாரம்பமும், நின்ற சௌரமாத அமாவாசை மாதமுடிவுமாக எல்லைகுறித்து, அவற்றுள்ளே பற்பல விரதாதிகளேற்படுத்தி அவ்வாறே அவர்களும் நடந்து, நூல்களெழுதிவிடுத்தும், எழுதிக்கொண்டு மிருக்கின்றனர். அவர், சௌரமாதங்களைச் சாந்திரமாதங்களாகக் கொள்ளும்போதே, சௌரமாதங்கள் சாந்திரமாதங்களாயின வென்று தெரியாதிருக்கும்பொருட்டு, ஆனி ஆவணிமாதங்களுக்குக் காரணமான முறையே மூலம், அவிட்டம் என்னும் நட்சத்திரங்களுக்குரிய மாதப்பெயர்களை நீக்கி, கேட்டை திருவோணமெனனும் நட்சத்திரங்கட்குரிய ஜேஷ்டம், சிராவணமென்னும் மாதப்பெயர்கள் வைத்துக்கொண்டனர். ஏனைய மாதங்களின் பெயர்கள் மாற்றப்படவில்லை. சென்றமாத சுக்கிலப்பிரதமை மாதாரம்பமும் நின்றமாத அமாவாசை மாத முடிவும்போற் கொண்டவர் அம்மாத வரலாற்றிலக்கணங் கூறாதிருத்தல்வேண்டும். கூறியதனாலன்றோ இவ்வளவு வழக்கிற்கும் இடமுண்டாய்விட்டது. முந்திய மாதத்தில் மாதாரம்பமென்றவர் பிந்திய மாதத்தில் மாதாரம்பமென்றாலென்னை? பிரபவ முதலிய சௌர வருடங்களே சாந்திர வருடங்களாயிருப்பது போல் சௌரமாதங்களே சாந்திரமாதங்களாயிருப்பதை யுணர்ந்

தும் உணராதார்போல் அம்மாதங்களை வேறு வேறாக்கிவிட்டனர். பங்குனிமீ சுக்கிலப்பிரதமை வருடாரம்பமெனக் கொள்ளாது, சித்திரைமாத சுக்கிலப்பிரதமை வருடாரம்பமெனக் கொண்டாலென்னே? இங்ஙனங் கொள்ளுதற்கும் கொள்ளாதிருத்தற்கும் ஆதாரமுண்டாயிற் காட்டவேண்டும். இதுகாறுங் கூறியுள்ள ஞாயங்களைக்கொண்டு நடுநிலையோர் நுணுகி ஆராய்வார்களாயின் அவர்க்கு உண்மை விளங்காதுபோகா. ஓர் நிலையோர் எவ்வாறாய்ந்திடினும் அவர்கட்கு உண்மை விளங்கவே மாட்டாது.

ஆகலின், சாந்திரமானிகள், 'ஆசுவயுஜ' மென்னும் சௌரமாதத்தையே சாந்திரமாதமாகக் கொண்டு அம்மாதம் இக்குரோதன வருடம் புரட்டாசி மாதம் 4-ந் தேதி ஆரம்பமாக வைத்து, அம்மாதம் கிருஷ்ண சதுர்த்தசியான புரட்டாசிமாதம் 30உ தீபாவளி யேற்படுத்தி யிருக்கின்றனர். இவ்வேற்பாட்டிற்கு சாந்திரமான நூல்களே சிறிதும் இடங்கொடாமையால் அவ்வேற்பாடு தள்ளற்பாலன. அன்றிக் கொள்ளற்பாலன வன்று.

'சுதேசமித்திர'னில் இக்குரோதனவருஷ ஆவணிமீ 7உ வெளிவந்த அநுபந்தத்தில் 'நரகசதுர்த்தசி அல்லது தீபாவளி நிர்ணயம்' என்று தலைப்பிட்டு புரட்டாசிமீல் தீபாவளி கொண்டாடுவது முற்றிலும் தவறு என்று எடுத்துக்காட்டியிருந்தோம். பலபெரியோர்களும் அவ்வுண்மையையே பத்திரிகைகள்மூலமாகவும் துண்டுப்பிரசுரங்கள் மூலமாகவும் எடுத்தியம்பினர். உண்மையறியாதார் பலர் மயங்கி புரட்டாசி மாதத்திலேயே தீபாவளி கொண்டாடினரென அறிகிறோம். இது முற்றிலும் தவறாதலின் அவர்கள் திரும்பவும் திருவாவடுதுறை யாதீன சோதிட வித்வான் திருவாளர் இ. மு சுப்பிரமணிய பிள்ளையவர்கள் கணித்து வரும் நம் 'சைவப் பஞ்சாங்க'த்தில் கண்டபடி நிகழும் ஐப்பசிமீ 29உ இரவில் தீபாவளியை அநுஷ்டிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

---

# இமயத்தில் புலிக்கொடி பொறித்தது

[கோயமுத்தூர், சி. கு. நாராயணசாமி முதலியார்]

தொண்டை மண்டல சதகம்

யுகமேழு கோடி யிருப திலக்கமு முள்ளமட்டுஞ்
சகமேழு மேழும் புகழே நிறுத்தித் தமிழ் புனைந்து
புகழ்மேழி வாகைப் பதாகையும் வீரப் புலிக்கொடியு
மகமேரு விற்சென்று தீட்டியதாற் றொண்டை மண்டலமே.

பொழிப்புரை

ஏழுகோடியே இருபது லக்ஷம் யுகமளவும், பதினான்கு லோகத்தும் புகழும்படிக்குள்ள பாமாலை புனைந்து புகழப்பட்ட மேழிக்கொடியையும், தங்கள் வீரத்தாலும் புகழாலும் பெற்ற பராக்கிரம முள்ள புலிக்கொடியையும் இமயமலையிற் சென்று அம்மகா மலையில் வேளாளர் எழுதி வைத்திருக்கின்றதும் இத் தொண்டை மண்டலம்.

வரலாறு

இமயமலையில் பாயும் புலிக்கொடியைத் தமது திக்குவிஜயத்தின் ஞாபகார்த்தமாக எழுது வித்தவனும், "முறஞ்செவி வாரணம் முன்சம முருக்கிய, புறஞ்செவி வாரணம் புக்கிய" உறையூரில், கி. மு. முதல் நூற்றாண்டின் இடைப்பட்ட காலத்தே "உருவ பஃறேர் இளஞ் சேன்னிக்கு, அழுந்தூர் வேள்மகளிடத்தே கருவிலே திருவா யுதித்தவனும்; பரணர், நக்கீரர், மாமூலர், முடத்தாமக் கண்ணியார், கருங்குழலாதனார், கழாத்தலையார், முதலிய நல்லிசைப் புலவர்களால் புகழ்ந்துபாடும் பெருமை படைத்தவனும், உருத்திரங் கண்ணனாரால் "பட்டினப்பாலை" பாடப்பெற்றவனும், நீதிக்திறம், போர்வலிமை, ராஜ தந்திர சூழ்ச்சி, தைரியம், வீரம், ஆண்மை முதலிய பலவகையினும் தனக்கொப்பாரு மிக்காரு மில்லாச் சிறப்புடையவனும், பெரு வீரனுமாய் விளங்கிய கரிகாற் பெருவளத்தான் சேர, பாண்டியர் முதலிய ஏனைய பேரரசர் எவரும் தன்னை எதிர்த்துப் போர்செய்யும் வன்மை யற்றவரா யிருப்பக்கண்டு, போரிலே பேராசையும், தோள் தினவும் உடையவனாய் வடதிசை பெருந் திசை யாதலால், அங்கேனும் பகை பெறலாம் என்றெண்ணிப்

போர் விருப்பத்தோடு புறப்பட்டுச்செல்ல, அங்கும் தன்னை எதிர்ப்பவர் காணப்படாமையால் அப்பாற் செல்லு மளவிலே மலைக்கரசாக விளங்கும் இமயம் வழிமறித்துக் குறுக்கிடுவது போல இவனெதிரிற் காணப்பட, இதுகண்ட கரிகாலன் இது பகையாநின்று என்னை மறித்து எதிரிட்டது என்று கருதி கோபங்கொண்டு அதனைப் புறங்காண்பதற்காகவும், அதற்கு வடக்கிலும் தனது ஆணை செல்வதற்காகவும், தனது புயவலியும் ஜயசீலத்தையும் பகைவர்க்கு ணர்த்தவுமாகச் சாத்தன் என்னும் தெய்வத்தின் அருளால், தான் காஞ்சியில் பெற்ற செண்டெனும் ஆயுதத்தை அவ்விமய மலையிலடித்து அதன் செருக்கடக்கி அம்மலையின் மேற்புறத்திலே தனது கொடியாகிய புலியை வெற்றிக்கு அடையாளமாகப் பதிவித்துக் கோபந்தணிந்து மீண்டனன் என்பதாம். இதற்குச் சான்றாக

"கலியுகத்தி லிலங்குவேற் கரிகாற் பெருவளத்தோன்
வன்றிறற் புலியிமய மால்வரைமேல் வைக்க வேகுவோன்"
(பெரியபுராணம்)

"இமையவ ருறையுஞ் சிமையம் பிடர்த்தலைக்
கொடுவரி யேற்றிக் கொள்கையிற் பெயர்வோன்"
(சிலப்பதிகாரம்)

"வலியுடை வல்லணங்கினோன்
புலிபொறித்துப் புறம்போக்கி" (பட்டினப்பாலை)

"கச்சி வளைக்கைச்சி காமக்கோட் டங்காவல்
மெச்சி யினிதிருக்கு மெய்ச்சாத்தன்-கைச்செண்டு
கம்பக் களிற்றுக் கரிகாற் பெருவளத்தான்
செம்பக் கிரிதிரித்த செண்டு"
(சிலப்பதிகாரம் உரைமேற்கோள்)

"செண்டு கொண்டுகரி காலனொரு காலிலிமயச்
சிமயமால் வரை திரித்தருளி மீளவதனைப்
பண்டு நின்றபடி நிற்கவிது வென்று முதுகிற்
பாய்புலிப் பொறி குறித்தது மறித்த பொழுதே"

"விரித்த வாளுகிர் விழித்தழற் புலியை
மீதுவைக்க விமயத்தினைத் திரித்தகோல்" (கலிங்-பரணி)

"செண்டி ணுலிமகிரி திரித்திரு சென்னி"

(வில்லிபாரதம்)

"தெள்ளருவிச் சென்னிப் புலியேறிருத்திக் கிரிதிரித்து"

(விக்கிரம சோழனுலா)

எனப் பிறநூல்கள் வியந்தோதுவதாலும், புலிக்கொடியை இமயத்தில் தீட்டிப் புகழ் சிறந்தவன் கரிகாலனென்று தெரிவதாயிருக்கப் படிக்காசுப் புலவர் தமது தொண்டை மண்டல சதகத்தின் 98-ம் செய்யுளில் வேளாளர் தீட்டியதாக ஆதாரங்காட்டுவது எக்காரணமா யிருக்கலாமெனச் சிலர் கருதலாம். அது, கரிகாற்சோழன் வேளாண் மரபில் வந்த அழுந்தூர் வேள் மகளுக்கு மகனாகத் தோன்றியும், தானும் அம்மரபில் வந்த நாங்கூர் வேள் மகளை மணந்து கொண்டதனாலும் அவ்வுரிமை பாராட்டி அவர் புகழ் தம் புகழாகக் கொண்டனர் போலும், எனத் தெளிதல் வேண்டும்.

—'கலாசிந்தாமணி'

---

# தமிழர் கலைக்கழகம்

[வி. சங்கரலிங்கம் பிள்ளை]

தமிழ்நாட்டிற்குத் தனியே ஒரு கலைக்கழகம் அமைக்க வேண்டுமென்ற கருத்து சில நாட்களாகப் பல தமிழ் நன்மக்களது நினைவில் முற்பட்டு உலவுகின்றது. தெலுங்கு நாட்டிற்குத் தனியே ஒரு கலைக்கழகமும் மலையாள நாட்டிற்கு அப்படியே பிறிதொன்றும் அமைந்தபின்பு, கன்னடத்திற்கு மைசூர் கலைக்கழகம் அமைந்திருப்பதனாலே, சென்னையில் இப்போதுள்ள கழகத்தினையே தமிழ்க்கழகமாக ஏன் ஆக்கிக் கொள்ளுதல் கூடாது என்ற கேள்வி ஒருபுறம் எழுகின்றது. இப்பொழுதுள்ள சென்னைக் கலா சங்கத்தில் வடமொழியாளர் தம் மொழிக்கு வேண்டிய நன்மைகளை மிகுதியாகச்செய்து தமிழ் வளர்ச்சியைக் கருதாமலிருப்பது அங்ஙனம் ஆக்கிக்கொள்ள முடியாமைக்கு ஓர் காரணமாகுமா? இன்னொரு கலைக்கழகம் நிலைநாட்டுதற்குச் சென்னை சட்டசபையார் புதுச்சட்டம் ஒன்று ஏற்படுத்துதற்குப் பதிலாக இக்கலைக்கழகத்திற்கே தமிழ் வளர்ச்சிக்குத்தக்க வண்ணம் திருத்தச்சட்டம் அமைத்தல் முடியாதா?

அல்லது தமிழ் மக்களது கல்வி வளர்ச்சியைக் கருதுவதற்கு அவருள் ஒரு பகுதியாரே மிக்க அதிகாரம் செலுத்துதற்கிடமாயிருக்கின்ற சென்னைக் கலைக்கழகம் பயன்படாதோ? சட்டசபையில் அவ்வொரு பகுதியாரை யொழித்த பெரும்பகுதியாரது பிரதிநிதிகளின் எண்ணம் பாதிக்கு மேற்பட்டிருக்கும்படி செய்திருப்பதுபோலக் கலைக்கழகப் பெருஞ்சபை (Senate) யிலும் அதன் அதிகாரமிக்க உட்கழகத்திலும் (Syndicate) அப்பகுதியா ரல்லாதாரது ஆட்சி நிலைக்கும்படி இடங்களைச் சேமஞ் (Reservation) செய்துவைத்தல் கூடாததொன்றா? அல்லது புதிதாக ஏற்படுந் தனிக்கலைக் கழகத்திற்றான் இந்நோக்கங்களைச் செம்மையாக நிறைவேற்றமுடியுமா? இப்பொழுது ஏற்படும் கலைக்கழகம் மொழிவளர்ச்சிக்கு மாத்திரமா, தமிழருட் பெரும்பான்மையோர் கல்வி வளர்ச்சிக்கும் பயன்படுவதற்கா? இவ்வினாக்களுக்கு விடைகளை புதுக்கலைக்கழகக் கமிட்டியார் ஆராய்ந்து முடிவுசெய்தல் விரும்பற்பாலதாகும்.

சென்னையில் ஒருகலைக்கழக மிருந்தாலும் திருச்சியிலும் பிறிதொன்று இருத்தல் வேண்டுமென்ற ஒரே கொள்கையையே முக்கிய நோக்கமாக அவர்கள் கொள்ளின் அது தமிழர் கலைக் கழகம் என்பதை நிலைநிறுத்தப் பயன்படுமோ என்ற ஐயம் நிகழ்கின்றது. இப்பொழுதுள்ள ஆங்கிலக் கலாசாலைகளின் தலைவர்கள் சென்னைக் கலைக்கழகத்தைத் தமிழ்மொழி யளவில் எப்படி நடத்துகின்றார்களோ அவ்வாறேதான் புதிதாக வருங் கலைக்கழகத்தை நடத்துதற்குரிய சூழ்ச்சிகளைக் கூறுவார்களாயின் அவைகள் தமிழ் வளர்ச்சிக்கும் தமிழ்மக்களுட் பெரும்பான்மையோர் அறிவு வளர்ச்சிக்கும் தக்கனவாக இருத்தல் அரிது. தமிழிலே ஆங்கில நுண்ணூல்களை மொழிபெயர்க்கவும், வடமொழியிலும் பிறமொழியிலுமுள்ள அரிய நூல்களை மொழிபெயர்க்கவும், தமிழ்நாட்டில் பல இடங்களிலுமுள்ள பல்வகைக் கலைத்துறைகளுக்குரிய ஏடுகளியாவற்றையுஞ் சேர்த்து அவற்றை ஒத்துப்பார்த்து அச்சியற்றவும், தமிழிலே புதுக்கதை (Novel) களாகப் பிழையோடு எழுதப்படுகின்ற புத்தகங்களைத் திருத்தஞ்செய்யவும், பிழை மிக்கனவற்றைக் கண்டித்து ஒதுக்

கவும், தமிழில் இலக்கணம், சங்கநூல், நீதிநூல், பெருங்காப்பியங்கள், சிறுகாப்பியங்கள், சமயநூல், சோதிடநூல், மருத்துவநூல், யோகநூல், இசைநூல், கணக்குநூல், ஓவியம், சிற்பம் முதலியவற்றைத் தனித்தனி செம்மையாக ஆராய்ச்சி செய்யவும், ஆங்கிலத்திலேயுள்ளபடி பலவகைப் பேராசிரியர்கள் அமைக்கவும் வேண்டிய நிலையங்கள் ஏற்படுகின்றவரை தமிழ்வளர்ச்சி செம்மையாக நடைபெறமுடியாது. தமிழ் மொழியைத் தலைமையாகவும் பிறமொழிகளைத் துணைகளாகவும் புதுக்கலைக்கழகத்தில் ஏற்படுத்தாமல் சென்னைக் கலைக்கழகத்திலுள்ளபடி வடமொழிக்கே ஏழு, எட்டு சிரோமணிப்பட்டங்களையும், வித்துவான் பட்டங்களையும், ஆராய்ச்சிப்பட்டங்களையும் பெருக்கிவிடப்படுமானால் தமிழ்வளர்ச்சிக்கு வேண்டிய பணம் இல்லாமற்போகும். தமிழ்மக்களது செல்வமும் அவர்கள் தாய்மொழியைப் போற்றுதற்குப் பயன்படாதொழியும்.

இனி, தொழிற் கல்விகளைச் செம்மையாகத் தழைத்தோங்கும்படி செய்வதற்குரிய முயற்சிகள் புதுக் கலைக்கழகம் அமைப்போரால் கவனிக்கப்படுவதற் குரியன. தமிழ் மக்களுட் பெரும்பான்மையோர் நன்கு கற்றுத் தேர்ந்து ஊதியம் பெறுவதற்குப் பயன்படாமல் இப் புதுக்கலைக்கழகம் ஏற்படுமானால் தமிழ்ச்செல்வர்களது பணம் வீணே வாரி இறைத்ததாக முடியும். தமிழருள் கற்ற ஒரு பகுதியாரைத்தவிர ஏனைப் பெரும்பான்மையோர்களுள் போதகாசிரியர்கள் வேண்டிய அளவிருக்கின்றார்களோ என்பது முக்கியமாகக் கவனிக்கத்தக்கது. அரசாங்கத்தில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் ஏற்பட்டிருத்தல்போல இதிலும் ஏற்படாமற்போனால் தமிழ் தமிழெனச் சொல்லிக்கொண்டு தமிழர் பெரும்பணத்தைச் சூழ்ச்சி மிக்க ஒருவகையார் தமக்கே பயன்படுத்துதல் கூடும். ஆதலால் இங்குக்கூறிய எல்லாவற்றையும் உற்றுநோக்கித் தமிழரிற் பெரும்பான்மையோர்க்குந் தெளிவான நிலைத்தபயன் ஏற்படும்படி இக்கலைக்கழகத்தை நிலைநிறுத்த முன்வரும் யாவரும் தக்க முயற்சிசெய்தல் வேண்டும்.

---

Printed by Sivakami Vilasam Press: Published by V. Subbiah for The S. I. S. S. W. P. Society, Ltd., Madras.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள்தோறும் வெளிவருவது

சிலம்பு ௩ } மெய்கண்டார் ஆண்டு-௭௱௨ கார்த்திகைத்திங்கள் 1925௵ நவம்பர்—டிசம்பர்௴ { பரல் ௧௧

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## இறையனார் அகப்பொருள்

[கா. சுப்பிரமணிய பிள்ளை M.A., M.L.]

(௪௮௨-ம் பக்கத் தொடர்ச்சி)

*நலம்புனைந் துரைத்தலின்பின் பிரிவுரைத்தல் நிகழ்தற்பாலது. இதற்குரிய இயைபினைக் களவியல் உரையாசிரியர் மிகவும் நயமாக விளக்கியுள்ளார். தலைவன் தன்னைப் புகழ்ந்தவிடத்து, தலைவி நாணமெய்தி ஆற்றாளாக, அதனையுணர்ந்த தலைமகன் தலைவி பெருநாணுடையளாகலின் தங்கள் களவொழுக்கத்தைப் பிறர் உணர்ந்தால் மானமிகுதியால் உயிர்நீக்குமோவெனக் கவ*

லைப்படவும், அக்கவலையைக்கண்ட தலைவியும் அவன் தன்மை எய் தினமையால் அத்தன்மையின் வைத்துப் பிரிந்தவிடத்தும் தன் குறிப்பன்றி இரங்குபடாளாதலின் தமது ஒழுக்கம் வெளிப்படா வண்ணம் பிரிதலை அறிவிக்கத் துணிவனென்று ஆசிரியர் விளக்கிப்போந்தார். பிரிவினை யுணர்த்துமுறைமை மிகவும் குறிப்புநயம் தோன்றும் வண்ணம் அகப்பொருட் கோவைகளுள் அமைக்கப்பட்டுள்ளது. தமது ஒழுக்கத்தைப் பிறர் அறிதல் கூடு மாதலால் பிரியவேண்டுமென்று தலைவன் கூறாது 'நின்னிற்பிரி யேன் பிரியினும் ஆற்றேன்' என்ற சொற்றொடரால் பிரிவுணர்த் துதல் தெரிவிக்கப்படுகின்றது. திருச்சிற்றம்பலக்கோவையா ருள்ளும் 'நின்னை யானகன்று ஆற்றுவனோ' என்று இப் பொருளை அமைக்கப்பட்டுளது. தஞ்சைவாணன்கோவையுள் ளும் 'பெண் கொடியே பிரியேன் தரியேன் நிற்பிரியினுமே' என் றது காண்க. திருக்குறள் ஆசிரியரும் பிரிவச்சத்தைக் குறிப் பாகக் கூறியுள்ளார்.

> "உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
> மடந்தையொ டெம்மிடை நட்பு".

இத்திருக்குறட் செய்யுளுள் வெளிப்படையாக ஒழுக்கம் புல னாகாவண்ணம் பிரிவு நேர்ந்தாலும் இருவர்க்கும் உள்ள நட்பு மாறுவதில்லை என்றகருத்தே சிறப்பாக அமைக்கப்பட்டது. அது வன்புறை என்று கூறப்படும்.

பிரிவைப்பற்றிப் பேசியபோது அதனை நினைந்து தலைமகன் கவன்றகாலை உண்மையாகப் பிரிவென்பது கிடையாது, மாறாத உள்ளக்கலப்பு அடைந்தமையால், என்று வற்புறுத்துவது பிரி வச்சத்தின்பின் நிகழற்பாலது. ஆசிரியர் தொல்காப்பியனார் பிரிவச்சங் கூறுதலை 'நகைநனியுறாஅது அந்நிலைபறிதல்' என் னும் சொற்றொடரால் பெறவைத்தார். பிரிவுகேட்ட தலைமகள் 'கவலை எய்துதலை 'மெலிவுவிளக்குறுத்தல் என இயம்பினர். வன்புறையைத் தம் 'நிலையுரைத்தல்' என இயம்பினர். வன்புறை யென்பதற்குக் களவியல் உரையாசிரியர் தனி எடுத்துக்காட்டுக் கூறவில்லை. அது திருச்சிற்றம்பலக் கோவையாருள் 'அருட்குண

முரைத்தல்' என்னும் துறையாக அமைக்கப்பெற்றுளது. இருவர் நட்பும் கடவுளது திருவருளால் அமைந்ததாகலின் அதனை ஒருவருஞ் சிதைத்தல் முடியாது என்ற கருத்து பின்வருந் திருக்கோவையார் அடிகளுள் வந்தமைகாண்க.

> "தேவரிற் பெற்றநஞ்செல்வக் கடிவடிவார் திருவே
> யாவரிற் பெற்றினியார் சிதைப்பார்".

தஞ்சைவாணன்கோவையுள்ளும் 'விதிகூட்ட'நம்மில் பின்னிய காதற் பிரிப்பவர்யார்' என்பது கூறப்பட்டது. தலைவியின் 'மெலிவு விளக்குறுத்தல்' என்பதற்குக் களவியல் உரையுள் தனி உதாரணங் காணப்படவில்லை. 'இடம் அணித்து' என்னும் துறையில் குறிப்பாக அது சுட்டப்பட்டது. தஞ்சைவாணன் கோவையுள்ளும் அவ்வாறே பிரிவச்சம் கூறும் பாட்டினுள் சுட்டப்பட்டது. 'இவ்வண்ணம் நீ இரங்கேல் இரங்கேல்' என்று வந்தமைகாண்க. திருச்சிற்றம்பலக்கோவையார் ஒன்றில்மாத்திரமே இத்துறைக்குத் தனிச்செய்யுள் அமைந்துள்ளது. அதற்குப் 'பருவரலறிதல்' என்னும் சொற்றொடர் ஏற்பட்டுளது.

> "நீங்கிற் புணர்வ ரிதென்றே நெடிதிங்ஙனே யிருந்தா
> லாங்கிற் பழியாமென வோவறியே னயர்கின்றதே".

வன்புறை என்பது இருவர் நட்பின், செறிவு கூறுதல், இடமணித்து என்று கூறுதல் என்று இருபகுதிப்படுமென்பர். நட்பின் மிகுதியை ஆசிரியர் திருவள்ளுவர் இருவருடைய காதறசிறப்பின் வைத்துரைத்தார். திருக்கோவையாருடையார் திருவருட் புணர்ப்பின் வைத்துரைத்தார். தஞ்சைவாணன் கோவை ஆசிரிர் விதியைக் காரணமாகச் சுட்டினர். ஆசிரியர் திருவள்ளுவர் கூறிய முறையே பண்டை முறையாகும். அது

> "யாயும் யாயும் யாரா கியரோ
> எந்தையு நுந்தையு மெம்முறைக் கேளிர்
> யானு நீயு மெவ்வழி யறிதுஞ்
> செம்புலப் பெயனீர் போல
> அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே"

என்ற சங்கச் செய்யுளுள் மிக்க நயம்பெற அமைந்துண்மை காண்க.

> ''புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
> னட்பாங் கிழமை தரும்''

என்ற திருக்குறளின் கருத்திற்கிணங்க எழுமையுந்தொடர்ந்து வரும் உணர்ச்சியொருமையே தலைவனையும் தலைவியையும் இயற்கையாகக் இயைவிக்கும் 'கழிபேரன்பினை விளக்கற்பாலதென்பது ஈண்டு உய்த்துணரக் கிடக்கின்றது.

இடமணித்து என்னும் துறையானது ஆசிரியர் தொல்காப்பியனார் கூறிய ''தெளிவகப்படுத்தல்' என்பதனுள் அடங்கும். அஃதெவ்வாறெனில் இருவர்க்கும் ஒருதலையாய அன்புண்மை உணர்ந்த தலைமகள் அவ்வன்பு வெளிப்படுத்தற் கேதுவாகிய ஒழுக்கம் நிகழ்வதற்குத்தலைவனை அடிக்கடி காணுதற்கு இயை புண்டோவென்று ஐயுற்றகாலை அவ்வையந் தீர்த்தற்பொருட்டு, இடமணித்து (என்பது தலைவனது இடம் அணிமைக்கண் இருப்பதென்று தெரிவித்தல்) இன்றியமையாமைகாண்க. அது

> ''அம்மெல் லோதி விம்முற் றழுங்க
> வெம்மலை வாழ்ந ரிரும்புனம் படுக்கிய
> வரந்தி னவியறுத் தறுத்த சாந்தநும்
> பரந்தேந்தல் குற்றிருந்து தழையுதவும்
> பண்பிற் றெண்ப வண்மை யதனாற்
> பல்கால் வந்துநம் பருவர றீர
> வல்கலும் பொருந்துவ மாகலி
> னொல்கா வாழ்க்கைத் தாகுமென் னுயிரே''

என்ற செய்யுளுள் நன்கு விளக்கப்பட்டமை தெளிக.

தலைவனது இடம் அருகே யுள்ளதென்பதைப் பாநயம் தோன்றும்வண்ணம் கோவைச்செயயுள் குறிக்கும். தலைவனது ஊரில் உள்ள உயர்ந்த மாடங்களிற் கட்டிய கொடித்தொகையின் நிழல் ஒருங்குசேர்ந்து தலைவியினது ஊரிலுள்ள வீதிகட்கு நிழல் தருமென்றும் தலைவியினது குறிஞ்சிப்புனத்தில் காவலரிட்ட தழலின் ஒளியானது தலைவனது ஊர்மன்றத்தின் இருளை

நீக்கவல்லது என்றும் பொருள்படும் செய்யுட்களைக் களவியல் உரையாசிரியர் எடுத்து வழங்கினர்.

> “......................எம்மூர்த்
> தூவணமாடச் சுடர்தோய் நெடுங்கொடி துன்னி நம்மூ
> ராவண வீதியெல்லா நிழற் பாய்நின் றணவருமே”

> “ ...................நுமர்கள்
> குன்றைத்திடைப் புனங் காவலரிட்ட குரூஉச் சுடரெம்
> மன்றத்திடை யிருணீக்கும் படித்தெங்கள் வாழ்பதியே”

திருச்சிற்றம்பலக்கோவையாருள் தலைவனது பதியிலுள்ள மலை போலும் மாளிகைகளின் நுண்ணிதாகிய சாந்தின் ஒளியானது. தலைவியினது ஊரிலுள்ள கரியகுன்றத்தின் மேற்படுவதால் அக் குன்றம் வெண்சட்டை இட்டதுபோலத் தோன்றுமென்று ஒளியின் இயற்கைநயம் தோன்றக் கூறப்பட்டது.

> “..............எம்மூர்ப்
> பருங்குன்ற மாளிகைநுண் களபத் தொளிபாய நும்மூர்க்
> கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுக மேய்க்குங் கனங்குழையே”

தஞ்சைவாணன்கோவையுள்ளும் தலைவனது ஊரிலுள்ள வேங்கைமரமானது தனது பொன்போன்ற பூக்களைத் தலைவியினது ஊரிலுள்ள காந்தள் மலரது கையகத்தே இடும் என்று இத்துறையானது விளக்கப்பட்டது.

> “.....................எஞ்சார லகத்தவர்தேங்
> கணிபொன் சொரியுநின் சாரன்மென் காந்தளங் கையத்தே”

ஈண்டுக்கூறிய பாட்டுக்கள் நுட்பமாகிய உள்ளுறை பொருளையுமுடையன. கொடியின மறைப்பால் நிழலமையுமென்றவிடத்துத் தலைவன் கொடியாடுவதுபோலக் காதல் மிகுதிபற்றித் தலைவிபால் பன்முறை சென்று அவளது பிரிவாற்றாமையாகிய துயரை நீக்குவனென்பதும் தலைவியினது ஒளிமிக்க பேரழகினால் தலைவனது பிரிவுத்துன்பம் நீங்கற்பாலதென்னும் குறிப்பினைப் ‘புனங் காவலரிட்ட குரூஉச்சுடர் எம்மன்றத் திடையிருணீக்கும்’ என்றதனால் அமைந்தும் வருதல்காண்க. திருக்கோவையார்ச்

செய்யுட்கும் இவ்வாறேகொள்க. தஞ்சைவாணன் கோவையுள் அன்புபற்றித் தலைவன் பொன்கொடுக்கத் தலைவிபெறற்குரியவள் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

(தொடரும்)

---

# நம்பியாண்டார் நம்பிகள்

[C. S. இராஜாப் பிள்ளை.]

(௪௪௫-ம் பக்கத் தொடர்ச்சி)

இந்நம்பியாண்டார் நம்பிகள். வேத விதிப்படி உபநயனஞ் செய்விக்கப்பெற்று, எல்லாக் கலைகளையும் இடையறா முயற்சியுடன் ஓதிவரு நாட்களில் ஒரு நாள் தாதையார் வேற்றூர்புக, அவர் இட்ட கட்டளைப்படி அத்திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையாரை வழிபட வேண்டி பூசைத் திரவியங்களனைத்தும் உடன் கொண்டு சென்று திருமுன் பெய்தி, முறைப்படி அபிடேகஞ் செய்து, நிவேதனத்தை வைத்து, எம்பெருமானே! திருவமுது செய்தருள வேண்டுமெனப் பன்முறை வேண்டவும், பெருமான் அமுது செய்யாமை கண்டு மனமறுகி பெருமானே! அடியேன் ஏதேனுந் தவறிழைத்தேனே! அடியேன் கொணர்ந்த திருவமுதைத் தேவரீர் ஏற்றுக்கொள்ளாததேனே! எனக்கவலைகொண்டு ஆங்கோர் சிலையில் தலையை மோதப் புகுந்த காலை, பெருமான திருவுள மிரங்கி, நம்பீ! பொறு எனத் தடுத்து, அந்நிவேதனத்தை அமுது செய்தருள, நம்பிகள் மகிழ்ந்து, விநாயகப் பெருமானை நோக்கி, எந்தையே! இனி அடியேன் பள்ளிக் கேகில் எங்கள் தேசிக னடிப்பன். ஆதலாலே சந்தமறை முதற்கலைகள் நீயே ஓதித் தரல் வேண்டும், எனவேண்டி நிற்ப விநாயகப் பெருமான், ஐயந்திரிபின்றி அனைத்தும் உணர்த்த, உணர்ந்து அன்று முதல் நாடோறும் அக்கடவுளை, அவ்வாறே பூசைபுரிந்து வருவாராயினர். இவ்வரலாற்றினை நமது அபயகுலசேகர சோழ பூபதியாம் இராச ராசன் கேள்வியுற்று, அவ்விநாயகரையும்,

நம்பிகளையுந் தரிசிக்க விரும்பி, வாழைக்கனி, அவல், அப்பம், எள்ளுருண்டை முதலிய பல நிவேதனப் பொருள் கொண்டு, மிகுந்த சேனைகள் புடைசூழ அந்நகரடைந்தான். அடைந்த அரசன் தான் கொணர்ந்த பொருள்களை வைப்பதற்கு அந்நகரில், இடம் போதாமையால், நகரத்தைச் சூழப் பதின்காத தூரம் பரப்பி, நம்பிகளை யடைந்து வணங்கி, யான் கொணர்ந்தவைகளை விநாயகப் பெருமான் அமுது செய்யும்படி அருள்புரிய வேண்டுமெனக் குறை யிரப்ப அவரும் மகிழ்ந்து அவற்றைச் சுத்தி செய்து, நிவேதிக்க. விநாயகப் பெருமான் உவகையுற்று அமுது செய்ய விரும்பித் தமது துதிக்கையை நீட்டியருளினார்.

புகர்முகக்கை புறப்படவே படைத்த வெல்லாம்
புகுந்தவிட மறியாமற் போன பின்னை
அகநெகிழ மெய்யரும்பிக் கண்ணீர் வார
நம்பிகழ லன்பினா லரசன் போற்றி
மிகவுமொரு விண்ணப்ப மடியேற் குண்டு
வேதியனே கேளென்று விளம்புவான் மெய்ப்
புகழதுசேர் மூவர்தமிழ் தொண்டர் செய்தி
பூதலத்தில் விளங்கவெனப் போற்றி நின்றான்.

இவ்விண்ணப்பத்தைக் கேட்ட நம்பிகள், நமது விநாயகப் பெருமானை யடிவணங்கிக் கேட்டு உணர்த்துவதாக விடையளித்துப் பெருமான் திருமுன் பெய்தி, முறையிடக்கேட்ட விநாயகப் பெருமான், மூவர் தமிழும் ஐந்தொழிற்கூத்த னமர்ந்தருளிய சிற்சபையின் மேற்பால் அவர்களது கை யிலச்சினையுடன் சேமிக்கப் பட்டிருக்கின்றதெனக்கூறித் தொண்டர் பெருமையையும் விளங்க வுரைத்தனர். நம்பிகளும் அரசனை யடைந்து, மன்னர் பெருமானே! திருவருட் பெருஞ் செல்வர்களாகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் முதலிய மூவர் தமிழும் தில்லையம்பதியிற் றிருநடம்புரியும் ஞானசபையின் மேல்சார் அவர்கள் கை முத்திரையுடன் சேமிக்கப் பட்டிருக்கின்றன. அவற்றுள் திருஞான சம்பந்தருடைய பதிகம் அம்பிகை செம்பொற் கிண்ணத் தமுத ஞானங் கொடுப்ப அழுகை தீர்ந்து, தாதையார் வினவிய பொழுது, உச்சியின் மேலெடுத்தருளும் ஒரு திருக்கை விரற்

சூட்டிப் பாடிய "தோடுடைய செவியன்" என்பது முதலாக நல்லூர்ப்பெருமணத்துப் பாடிய "கல்லூர்ப் பெருமணம்" என்ப தீறுகப் பதினாறுயிரமும், திருநாவுக்கரசர் திருப்பாடல் சூலை தீரப் பாடிய "கூற்றுயினவாறு" என்பது முதலாகப் புகலூரிற் பாடிய "எண்ணுகேனென் சொல்லி எண்ணுகேனே" என்ப தீறுக நாற்பத் தொன்பதினுயிரமும், பின்னர்ச் சின்னுள் கழித்து, நம்பியாரூரர் பாடியன, தடுத்தாட்கொண்டபோது திருவெண்ணெய் நல்லூரிற் பாடிய "பித்தா பிறைசூடி" என்பது முதலாகத் திருக்கைலைமால்வரையிற் பாடிய "தானெனை முன்படைத்தான்" என்பதீறுக முப்பத்தெண்ணுயிரமுமாம் எனவும், இத்தமிழ்மறை பல தெய்வங்களைப் புகழ்ந்துகூறும் வேதம் போலன்றிச் சிவபெருமான் ஒருவனையே முதற் கடவுளாகக் கூறலின் வேதத்தினுஞ் சிறப்புடையது. ஆற்றிலெதிர்த்துச் செல்லும் ஆற்றலுடையது. எலும்பினைப் பெண்ணுக்குவது. விஷவேகத்தை மாற்றுவது. முதலைவாய்ப் பிள்ளையை யழைப்பது. இன்னும் இவைபோன்ற பற்பல சிறப்புக்களுடையது என அதன் பெருமையையுங் கூறக்கேட்ட மன்னவன் மனமகிழ்ந்து, வித்தக விநாயகன் விரைகழல் போற்றி விடைகொண்டு நம்பிகளுடன் நாற்றிசையும் புகழ்மாட்சிமிக்குடைய சிதம்பரத் தலத்தை யடைந்து, நடராசப் பெருமானை வணங்கித் துதித்துத் தில்லை மூவாயிரவர்க்கும், நாற்பத் தெண்ணுயிரந் திருத்தொண்டர்கட்கும் ஏழாயிரத்துத் தொளாயிரம் மெய்காப்பாளர்க்கும் விநாயகரருளியபடி விளம்ப,

அத்தகையோர் தமிழ்வைத்த மூவர் வந்தால்
அறைதிறக்கு மெனவுரைப்ப வாசன்றானும்
மெய்த்தகுசீ ரம்பலவர்க் குற்றசெல்வ விழா
வெடுத்து விளம்புதமிழ் மூவர் தம்மை
உய்த்தனிவீ தியினிலுலா வருவித் தும்பர்
நாயகன்றன் கோயில்வல மாக்கி யுள்ளே
சித்தமெலா முருக்குதமி ழிருக்கை சேரச்
சேர்த்தியவர் சேர்ந்ததெனச் செப்பிநின்றான்.

நின்றகாலை, ஐயர் நடமாடும் அம்பலத்தின் மேல்பால், அம்மூவர் கை யிலைச்சினையோடு வைக்கப்பட்டிருந்த திருக்காப்பை நீக்கப்,

பொய்யுடையா ரறிவுதனைப் புலன்கண் மூடும் பொற்பதுபோல் போதமிடு பாடல் தன்னை நொய்யசிறு வன்மீக மூடக்கண்டு, அரசன் நொடிப் பொழுதின் மனநொந்து, அவற்றை வெளியிற் கொணர்வித்து, மூடிய வன்மீகப் புற்றை யகற்றித் தைலங்களை நிறையப்பெய்து எடுத்து நோக்கி, அளவிறந்த ஏடுகள் பழுது படக்கண்டு, பரனே! பரனே! என்று பன்முறை கூறிக் கண்ணீர் சொரிந்து, சிந்தை கலங்கி நின்றான். அக்காலையிற் பரசிவப் பெருமான் திருவருளால் வானிடத்தே "சைவநெறித் தலைவ ரனு மூவர் பாடல் வேய்ந்தனபோல் மண்மூடச் செய்தே யீண்டு வேண்டுவன வைத்தோமென் றுலகிலுள்ள மாந்தரொடு மன்னவனுங் கேட்கு மாற்றால்" ஓர் அசரீரி தோன்ற அரசன் அளவிலாக் களிப்பெய்தி, ஆனந்த அருவிசொரிய, உடல் புளகங் கொள்ள, சிவபெருமான் திருவருளைப் பலவாறு புகழ்ந்து, ஆடிப் பாடி, நம்பி கழல் வணங்கி இத்திருமுறையை முன்போல வகுத் தருள்கவென வேண்ட, அவரும் பிள்ளையார் அருளிய பதிகங் களை மூன்று திருமுறைகளாகவும், அப்பர் அருளிய பதிகங்களை மூன்று திருமுறைகளாகவும், ஆரூரர் அருளிய பதிகங்களை ஒரு திருமுறையாகவும் (ஆக 7. திருமுறைகளாக) வகுத்து, திருவா சகம் திருக்கோவையார் இவ்விரண்டையும் எட்டாந் திருமுறை யாகவும், திருமாளிகைத்தேவர் முதலியோர் அருளிய திரு விசைப்பாக்களையும், சேந்தனார் திருப்பல்லாண்டையும் ஒன்ப தாந் திருமுறையாகவும் திருமூலர் திருமந்திரத்தைப் பத்தாந் திருமுறையாகவும் ஆலவா யவிர்சடைப் பரமனருளிய திருமுகப் பாசுர மாதியவற்றைப் பதினோராந் திருமுறையாகவும் வகுத்து, மன்னவன் வேண்டுகோளால் தாமியற்றிய விநாயகர் திருவிரட்டை மணிமாலை, கோயிற்றிருப்பண்ணியர்விருத்தம், திருத்தொண்டர் திருவந்தாதியாகிய இவற்றையும் பதினோராந் திருமுறையுடன் கூட்டினார். பின் இவரியற்றிய நூல்களும் அவ்வப்போது சேர்க்கப்பட்டன. அப்பொழுது தில்லைவாழந்தணர்கள் இவ் வரசனுக்குத் திருமுறைகண்ட இராஜ இராஜன், அருள்மொழி என்னும் பட்டப் பெயரளித்து ஆயிரக்கால் மண்டபத்துத் துலாபாரம் புகச்செய்து, செம்மை செய்தனர்,

அப்பால் அரசன் திருமுறைகட்குப் பண்ணடைவு செய்யக் கருதி, நம்பிகள் முதலிய பெரியார் பலருடன் திருவெருக்கத் தம்புலியூரை யடைந்து, திருக்கோயிலை வலங்கொண்டு பணிந்து, எம்பெருமானே! இத்திருமுறைகட்குப் பண்ணடைவு தரவேண்டுமென வேண்ட அப்பொழுது யாவருங் கேட்ப ஆகாயத்திலே, 'அன்பர்களே! திருநீல கண்டப் பெரும்பாணர் மரபிற்றோன்றிய ஒரு பெண்ணுக்குப் பண்களை அருளிச் செய்தோம்' என ஓர் அசரீரி தோன்றியது. உடனே, அரசனும் நம்பிகளும், அவளை அழைத்து அவள்பால் இசையைக்கேட்டு மகிழ்ந்தார்கள். அப்போது மீட்டும் "ஆங்கவளை அம்பலத்து ளாடுவார் திருமுன்பு, பாங்கினுடன் கொடு வந்து பண்ணடைவு வகுக்க" வென ஓர் அசரீரி கூற அனைவருந் தில்லையை யடைந்து அம்பலத்தின் முன் அமர்ந்து பண்ணடைவு வகுத்தனர்கள். திருமுறைகண்ட சோழன் இத்திருமுறைகளைச் செப்பேடு செய்வித்துத் தனது தலை நகராகிய ஆரூர் சென்று, தியாகராஜப் பெருமான் சந்நிதியில் ஏற்றுவித்தான். அப்பொழுது அந்நகரத்தார் அவனுக்குச் சிவபாத சேகரன் எனப் பட்டப்பெயர் புனைய மகிழ்ந்து, திருமுறைகளைப் பெரிதும் போற்றித் தரணியை யாண்டுப் பின் தன் மகன் இராஜேந்திரனுக்கு முடி சூட்டி, நடராசப்பெருமான் றிருவடி நீழற் பிரியாப் பெரும் பேறுபெற்றான். அப்பால் நம்பியாண்டார் நம்பிகள் தில்லை வாழ்ந்தணர் முதலிய பெரியாருடன் சிலநாள் சிதம்பர தலத்தே வாழ்ந்து, திருமுறைப் பெருமையை அனைவருக்கும் உபதேசித்து, திருஞான சம்பந்த மூர்த்திகளைத் தமக்கு உபாசனா மூர்த்தியாகக் கொண்டு, அவரது திருவடியையே இடையறாது தியானித்து, காழிப்பதி சென்று, அவர் மீது, ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி முதலிய நூல்களியற்றி அந்நகரத்திலேயே வசித்து வந்தனர். இது (மும்-கோவை 5. பாட்டு) "சுத்தர்கள்சேர் காழிச் சுரன்ஞான சம்பந்தன், பத்தர்கள் போம் வாழும் பதி" (பாட்டு 29.) "மாம்பொழில்சேர் வைகை யமண்மலைந்தான் வண்காழிப், பூம்பொழிலே 'சேர்ந்திருப்பர் புக்கு" என்பன முதலாகத் தாமியற்றிய பாசுரங்களாலும் உணரக்கிடக்கின்றது.

இன்னும் இப்பெரியார் நாவுக்கு வேந்தரையும் உபாசனை செய்து அவரருளுங் கைகூடப்பெற்றாரென்பதும் "அலகின் ஞானக் கடலிடைப்படு மமிர்தயோகச் சிவவொளிப்புக, அடியரேமுக் கருளினைசெயும் அரையதேவத் திருவடிக்களே" எனத் தாம்பாடிய திருநாவுக்கரசர் திருவேகாதசமாலையானும் உணரப்படுகிறது.

இவ்வாறு மேற்கூறிய இருபெருங்குரவரையும் இடையறாது வழிபட்டுப் பின்னர்ச் சிலகாலங் கழித்துச் சிவபெருமானோடு இரண்டறக் கலந்தருளினார்.

(தொடரும்)

---

# அகம் புறம்

[க. ப. சந்தோஷம், B. A., L. T.]

(முன் சஙஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

உளத்திற் றோன்றுவது உண்மை. அங்ஙனந் தோன்றியது வெளிப்பொருளுடன் ஒப்பிடப்படுகையிற் றவறாகவாவது திருத்தமாகவாவது இருக்கலாம். தவறாயிருப்பினும் அஃதுண்மையே. தாம்பைப் பாம்பென ஒருவன் பிறழக்கொண்டகாலையும், அவன் வரையிலஃது உண்மையே. இது திரிபு உணர்ச்சியெனக் கூறுவர். ஆனாலிது பிறர்க்குத் திரிபுணர்ச்சியாகத் தெரியுமேயன்றி பிறழ உணர்ந்த மகனுக்குத் திரிபுணர்ச்சியாகாது. தாம்பைப் பாம்பெனக்கொண்டு அது தம்மேல் விழுந்ததன் பயனாகக் குலை கலங்கி நஞ்சேறியவரு முளரெனக் கூறுவர். நஞ்சை உணவென உட்கொண்டு பிழைத்தாருமுளர். ஒன்றை மற்றொன்றாகக் கருதியவர் தாம் பிறழ உணர்ந்ததை அறியுங்காறும் அவர்களகத்திலெழுந்தது எதுவோ அதுவே உண்மை. ஆயின், உண்மை என்பது புறப்பொருட்களுடன் எவ்வகைத் தொடர்புமில்லா ஒன்றோவெனின், எமைப்போல் சிற்றுணர்வுங் குற்றறிவுமுடையோர்க்கு, உளத்திற்றோன்றுவதற்கும் வெளியிலிருப்ப

வற்றிற்கும் மிகுந்த வேற்றுமை காணுமெனினும், தூய உணர்ச்சியும் நல்லறிவுமுடைய மேன்மக்கள் அகத்தைப் புறமாகவும் புறத்தை அகமாகவுங் காணவல்லார் என்றே கொளல்வேண்டும். பல்வேறு நூலறிவைப் படைத்தவர் இதற்கு ஏற்ற விடையளித்தல்கூடும். ஆயினும் நமது தமிழ் முன்னோர்கள் நெஞ்சை முதலாகவைத்து உண்மையை யதன்பாற் சேர்த்தன ரென்பதி லையமில்லை.

இனி, 'உளது' எனுஞ் சொல் 'இருக்கிறது' எனப்பொருள்படுவதால் இவ்விரண்டிற்குமுள்ள பொருத்தத்தை யறிவது நன்று. உளது என்பது உண்டு எனவும்வரும். அதிலும் உள என்பதே முதனிலையாகும். ஒன்று இருப்பதும் இல்லாததும் மக்கள் நெஞ்சில் அது தோன்றுவதும் தோன்றாமையுமே. ஆகலின், இருத்தலும் உளதாதலும் ஒன்றேயாகும். உணர்ச்சிக்கு எட்டாத பொருளைப்பற்றி அறிவுமில்லை பேச்சுமில்லை புலன்களின் வழியாய் அல்லது காட்சியின் வழியாய் ஒன்று கருத்தில் வடிவங்கொண்டபின்னரே, அது இருக்கிறது அல்லது இல்லை என்று பேசுவதற் கிடமுண்டு, "இருப்பதுபொய், போவதுமெய்" என்றதில் இருத்தல் எனுங்கிளவி உயிர்வாழ்தலைக் குறித்தது. இதனால், உயிர்வாழ்தல் என்பதும், அகத்தின் நிகழ்ச்சியே என்பது பெறப்படுகிறது. வாழ்க்கை எனப்படுவது நெஞ்சிற்றோன்றும் நினைவு உணர்வு துணிவுகளின் தொகுதியேயாகும் ஆனால் சொல் செய்கை முதலியவை வாழ்க்கையின் கூறுகளாகாவோவெனின், இவை நினைவு உணர்வுகளின் வெளியீடேயாகுமாதலால் அது கடாவன்று. வடமொழியில் உண்மை என்பது (सत्यं) சத்தியம் என்ற மொழியால் உணர்த்தப்படும். இதன் முதனிலையாகிய(सत्)சத் என்பதன்பொருள் 'இரு' என்ற தமிழ்ச்சொல்லாற் குறிக்கப்படுவது, (तत् सत्) தத், சத்,= அது, இருக்கிறது இந்த சத் (सत्) என்ற முன்னிலையே ஆங்கிலத்தில் Sooth என்று வருவதாக மொழிநூற்காரர் விளம்புகின்றனர். இவ்வாங்கிலச்சொல்லும் 'உண்மை' என்றே பொருள்படும். Forsooth என்ற மொழியுடன் ஒப்பிடுக. இஃதன்றி 'இருத்தல்' என்பது அமர்தலையுங் குறிக்கும். அமர்தல் = உட்கார்தல்.உட்.

கார்தல் என்றசொல் உள் என்ற அடியைக்கொண்டு பிறப்பு தென்று தெரிகிறது. ஆயினும், அமர்தலுக்கும் உள நிகழ்வ தற்கும் யாது தொடர்பு உளதென்று விளங்கவில்லை. பண்டைத் தமிழர் அகத்திற்கும் புறத்திற்குமுள்ள ஒற்றுமை வேற்றுமை களை எவ்வளவு ஆழ்ந்து கருதித் தாம் அறிந்தவற்றைத் தக்க சொற்களில் அமைத்துப் போயினரென்பது இறையனாரகப் பொருளாலும் தொல்காப்பிய பொருட்பகுதியாலும் தெள்ளிதி லறியப்படும். மேல்நாட்டு உண்மை ஆராய்ச்சியாளரிற் சிலர், மக்களுளத்தில் நிகழ்வதேயன்றி வேறு பொருள் உலகத்தி லுண்டோவென்று ஐயுற்று நெஞ்சிற் றோன்றுவது தவிர பிறி தொன்றுங் கிடையவே கிடையாது என்றுங் கூறிப்போந்தனர். இதற்கெதிராக மற்றுஞ்சிலர் வையகத்தில் இல்லாதது கருத் திலும் இல்லை என்றறைந்தனர். இவற்றுடன் தமிழர் கருத்தை ஒப்பிடுக. உண்மை ஆராய்ச்சியில் எனது தேர்ச்சி மிகச் சுருக்க மாகையால் இதைத் தொடர்ந்துபோக நாணுகின்றேன். அவ்வா ராய்ச்சியில் வல்லவர் இதைத் தொடர்ந்து சென்று முடிபு காண் பாராக.

இனி வாய்மை என்பது உண்மைக்கு மறுபெயராய் வழங்கு தலின் அதையுமாராய்தல் நன்று. வாய்மை என்பது சொல்லின் படி வாயின்தன்மை என்று பொருள்படும். ஆகையால், அது உளத்தின் குறிப்பைக்காட்டும். உண்மை என்பதுடன் தொடர் புடையதேயன்றி அதனுடன் ஒன்றாகாது. இயற்கையாய் வாய் பேசுவது, உளத்தில் நேராகத்தோன்றியதையே. ஒருபொரு ளுக்கும் அதன்பெயருக்கும் உள்ள கேண்மை உளத்திற்கும் வாய்க்கும் உண்டு. எங்ஙனம் ஒருபொருளினின்றும் பெயரைப் பிரித்தலரிதோ, அங்ஙனமே, உண்மையினின்றும் வாய்மையைப் பிரித்தலு மரிதாகும். ஆதலின், வாய்மை என்பது செவிக்குப் புலனாகும் உண்மையின் ஒருவடிவமாம். வாய்மை என்பதற்கு இதுபொருள் என்பது மெய்ம்மை என்றசொல்லை உற்றுநோக்கு வதாலும் வெளிப்படும். மெய்ம்மை=மெய்யின் தன்மை; அதா வது 'உடலின் பான்மை' உளத்திலெழுந்தது வாயாலன்றிப் பிறபொறிகளின் வழியாயப் புலப்படுவது மெய்ம்மை ஆகும்.

மெய்ப்பாடு என்பது மக்கள் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்த வாறே புறத்தார்க்கும் புலப்படுவதோர் ஆற்றான் வெளிப்படுதல் என்று உரையாசிரியர் மெய்ப்பாட்டை வரையறுத்தலால் யாம் கூறுவது வலியுறுகின்றது. உண்மை; வாய்மை; மெய்ம்மை ஆகிய மூன்றிற்குமுள்ள தொடர்பை மூதறிஞராகிய தமிழர் எவ்வாறு கருதினார்களென்பதைச் சொற்களி னுதவியால் விளக்கமுயன் றேன். அகம்; புறம் என்று எடுத்துக்கொண்ட பொருளில் இது இடையே தோனறியதாதலால்; இனி இதை நிறுததி முதற பொருளுக்குச் செல்வாம்.

(தொடரும்)

---

# சீவகசிந்தாமணி

## திருத்தக்கதேவர்

[பெங்களூர். நா. செங்கல்வராயன்.]

செநதமிழ் மொழியிற் சிறப்புற்றோங்கும் காவியங்கள்* ஐந் தினுள் முற்பட்டதானது திருத்தக்க தேவரா லியற்றப்பட்ட சீவகசிந்தாமணியாகும். இது பழைமையான இலக்கண இலக்கிய உரைகளில் உரையாசிரியர்களால் மேற்கோளாக எடுத்துக் காட் டப்பட்டுள்ள பிரமாண நூற்களில் ஒன்று. இது, நடையில் ஆதி காலத்துச் சங்கத்தின்கண் வீற்றிருநத தெய்வப் புலவர்க ளியற் றிய இலக்கியங்கள்போற் சிறந்துள்ளது. இதன்கண், வடமொழி யிலுள்ள வான்மீகமபோற எல்லா வருணனைகளுந் தன்பா லமை யப் பெற்றிருத்தலுமன்றி, மகா காவியமென்றுங் கூறப்பட்டிருக் கின்றது. மேலும் இது பிற்காலத்துக் காப்பியப்புலவர்கள் பலர்க்கும் பல கருத்துக்களைப் பல வழிகளில் வருணித்துப் பாடு மாறு நெறிப்படுத்தி யிருக்கின்றது.

இது சீவகனென்னும் ஒரு வேந்தன் தான் பிறந்ததுமுதல், சுவர்க்கம் புகும்வரையிலுள்ள, கதையைப்பற்றிக் கூறுகின்றது.

---

* காவியங்களாவன :—(1) சீவகசிந்தாமணி, (2) சிலப்பதிகா ரம். (3) மணிமேகலை. (4) குண்டலகேசி, (5) வளையாபதி.

இதைப்படிப்பதால், வேந்தன் மந்திரிகளைப் பலமுறை ஆராய்ந்துத் தெளியல் வேண்டுமென்றும், ‘அருங்கடி மங்கையர்த்திறம் திரும்பல்’ மிக்கதுயர் விளைக்குமென்றும், தனது ஆசிரியன் கட்டளைப்படியே எப்பொழுதும் நடத்தல் வேண்டுமென்றும், பகையை வெல்லக் கருதுவோன் உரிய காலமும் இடமும் ஏற்படும் வரையில் தனது எண்ணத்தை வெளிப்படுத்தக் கூடாதென்றும், ஏனைய உயிர்கட்கு இடுக்கண் நேருமாயின், அதனைத் தீர்த்தல் வேண்டுமென்றும், தனக்கு ஒன்னலரல்லாதாரை வருத்தலாகாதென்றும், தாய்தந்தையர்களது வாக்கைச் சிரமேற் கொள்ள வேண்டுமென்றும், தக்கதோழமையிருநதால் தனது எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளலாமென்றும், தனக்கு இன்பம் வந்தகாலத்து வருந்துதலுமின்றி, ‘ஆர்வமெய்தலும், ஆரஞரெய்தலும் ஒருடலியற்கை’ “பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக்கல்” எல்லாம் வினைப் பயனென்று கருதல் வேண்டுமென்றும், எல்லாரிடத்தும் கருணை காட்டவேண்டுமென்றும், பாத்திரமறிந்து பிச்சையிட வேண்டுமென்றும், நெறிகெட்டுப் போவாரை நல்வழிப்படுத்தல் வேண்டுமென்றும், ‘பிறர் செய்த நன்றியைக் கொல்லாக் கொளல்’ வேண்டுமென்றும் தெரியப்படுகின்றன.

இந்நூலைக்கொண்டு இதற்கு முதனூல் இன்னதென்று நிச்சயிக்கக் கூடவில்லை. சீவகன் சரிதத்தைப்பற்றிக் கூறும் நூற்கள் வடமொழியில் நான்குள. மகா புராணத்திலும், ஸ்ரீ புராணத்திலும் சிற்சில பாகங்களில் இக்கதை கூறப்பட்டுள்ளது. ஆனால் அவற்றிற்கும் இதற்கும் கதையில் சில மாறுபாடுகள் உண்டு.

இந்நூலில், முதலில் கடவுள் வாழ்த்தும், கதையைச் சுருக்கிக் கூறுவதாகிய பதிகமும் அமைக்கப்பட்டுள்ளது. பிறகு நாமகளிலம்பக முதலிய பதின்மூன்று இலம்பகவுறுப்பாகப் பகுக்கப்பட்டுள்ளது. இதன்கண் 3145 செய்யுட்களிருக்கின்றன். ஆனால் அவற்றுள் திருத்தக்கதேவரியற்றியது 2700 தான் என்றும், மற்றவை பிறராலியற்றப்பட்டதென்றும் “முந்நீர் வலம்புரி” என்னுந் தூக்கினுரையில் நச்சினார்க்கினியர் எழுதியிருப்பதால் தெரியவரும்.

## இந்நூலாசிரியரின் பெயர்

**திருத்தக்கதேவர்.** இவர் சோழர் குலத்தவர். இளமையிலே கல்விப்பயிற்சி தொடங்கப்பட்டுச் சிறிது கற்ற பின்பு, நல்லாசிரியரிடம் அகத்தியம், தொல்காப்பியம் முதலிய இலக்கண நூற்களையும் தொன்றுதொட்டுவருஞ் சங்கச் செய்யுட்களையும், இன்னும் அக்காலத்து வழங்கிய நூற்கள் பலவற்றையும் ஐயந்திரிபற ஓதியுணர்ந்து, இம்மாதிரியே வடமொழியிலும் பாண்டித்தியமடைந்து, பிறகு தமது மதத்திற்குரிய ஆருகத நூல்களையும் கற்று அவற்றிலும் அதிவல்லராய் நற்குண நன்னடக்கைகள் ஒருங்கே அமையப்பெற்று வயதிற் சிறியராயினும், அறிவிற் பெரியராய் இளமையிலே துறவு பூண்டு தன்னாசிரியரை விட்டகலாது அவர் மனப்படி நடப்பதே தகுதியெனக் கருதி அன்புடன் ஒழுகி பின்பு அவருடன் பாண்டி வளநாட்டிலேயுள்ள திருவாலவாயை யடைந்து ஆங்கு சின்னாள் அமர்ந்தனர். அவவாறமரும் போது, திருத்தக்கதேவர் மதுராபுரியிலே அங்கயற்கண்ணி பங்கனருளினாலே சங்கப் பலகைபெற்று, அதன்கணமர்ந்து தமிழ் மொழியை வளர்த்தருளும் தெய்வப் புலவர்களது மகிமைகளை யுணர்ந்து, அவர்களோடு பழகவிரும்பி ஆசிரியரது உத்திரவு பெற்றுச் சென்று நாடோறும் அவர்களுடன் பயின்று, தமிழ் மொழியிலுள்ள பழைய செய்யுட்களின் சொற்சுவை, பொருட்சுவைகளைப் பாராட்டியும், அவர்களால் பாராட்டப்பட்டும், இங்ஙனம் அவர்களுடன் அளவளாவி எல்லையற்ற பேரின்பக் கடலிலாழ்ந்து நன்கு மதிக்கப்பட்டு வந்தனர்.

இவ்வாறிருக்கும் நாட்களில் ஒருநாள், புலவர்கள் இவரை யண்மி, "உம்மதத்துப் புலவர் பலர் துறவறத்தைப்பற்றிப் பாட அறிந்துகொண்டார்களே யன்றி, சிற்றின்பத்தைப் பாராட்டிப் பாடத் தெரிந்துகொள்ளவில்லையே, அதற்குச் சான்றாகத் தற்காலத்தில் வழங்கும் காமச்சுவையுடைய நூற்கள் ஒன்றேனும் நும்மவர் இயற்றியதாகக் காணப்படவில்லை" என்றனர். அதற்கவர், "இன்பச் சுவையைப் பாராட்டுதலில் எம்மவர் வெறுப்புற்றிருந்தாரே யொழிய பாடத் தெரியாதிருக்கவில்லை." என்று

மொழிய, சங்கப்புலவர்கள், "அங்ஙனமாயின், காமச்சுவை முழுதும் விளங்கத் தாமே ஒரு நூலியற்றுதிர்" என்றனர்.

பிறகு அவ்வண்ணம் பாடத்துணிந்து, தம்மாசிரியரிடஞ் சென்று நிகழ்ந்தன கூறினார். ஆசிரியர் தமது மாணாக்கன் கருத்தை நன்குணர்ந்திருந்தபோதும் ஒருமுறை பரீட்சிக்கக் கருதி, தம்மிருவர்க்கும் எதிரில் ஓடின ஒரு நரியைக்கண்டு, இச்சம்புகனது குலத்தை ஆதாரமாகக் கொண்டு உமக்குத் தோற்றியவாறு ஒரு நூல் இயற்றக் கடவை யென்றார். தேவர் அதனைப் பற்றுக்கோடாகக் கொண்டு யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமை முதலியனவெல்லாம் உள்ளங்கை நெல்லிக் கனிபோல எளிதில் புலப்படுமாறு கூடிய சீக்கிரத்தில் நரிவிருத்தம் என்னும் நூலை யியற்றி ஆசிரியருக்குக் காட்ட, அவர் விம்முற்றுத் தனது மாணாக்கன் துறவறத்தின்கண் மனவுறுதி கொண்டிருத்தலைக் கண்டு கழிபே ருவகைபூத்து, அவருக்குப் புலவர்கள் கூறிய வண்ணம் காமச்சுவை பெரிதும் விளங்கும்படிச் சீவகன் சரிதையை ஒரு காப்பியமாக வியற்ற உத்திரவு கொடுத்ததுமன்றி அஃது இனிது நிறைவேறுமாறும் "செம்பொன் வரைமேல்" என்னுஞ் செய்யுளொன் றியற்றி அதனால் அருகக் கடவுளைத் துதித்து, இச்செய்யுளைக் கடவுள் வணக்கமாகக் கொண்டு நூலியற்றுதிர் எனத் திருவாய் மலர்ந்தருளினார்.

அதனைச் சிரமேற்கொண்ட தேவர் தாம் "மூவர் முதலா' என்னும் பாட்டலால் சித்தனைத் துதித்துக் கொண்டிருக்க அதைக் கேட்ட ஆசிரியர் தான் கூறியதைவிட இது மிகவுஞ் செவ்வியதாயிருந்ததை யறிந்து அதை முதலில் நிறுத்தச் சொல்லவும், அதனை மறுத்தற்கஞ்சித் தனது கவியை முன்னும் ஆசிரியரது கவியைப் பின்னுமாக வைத்துப்பாட ஆரம்பித்து, எட்டு நாளில் நிறைவேற்றித் தனது குருவுக்குக் காட்ட, அவர் கண்டு களிகூர்ந்து புகழ்ந்து ஆசீர்வதித்து "முந்நீர் வலம்புரி" என்னுங் கவியால் ஓம்படை யுரைத்து, தேவரைப் பார்த்து அதை அப்புலவர்களிடம் அரங்கேற்றிவரச் சொன்னார்.

உடனே திருத்தக்க தேவர் பாண்டியன் சபாமண்டபத்தில் யாவரையுங் கூட்டுவித்துத் தனது நூலை வாசித்துக்காட்ட, அவர்

கள் கேட்டு இந்நூல் சகல லட்சணங்களும் அமையப்பெற்று, எல்லா மதத்தார்க்கும், காலம், இடம் முதலியவற்றிற் கேற்ற வாறு அமைந்திருத்தலை யறிந்து இங்ஙனம் பாடுதல் யாவர்க்கும் அரிதரிது என்று சிரகம்பிதத்துடன் கரகம்பிதஞ் செய்து மகிழ்வுற்றனர். பூர்வலனும் அம்மாதிரியே புகழ்நது மிகவுங் கொண்டாடினன்.

இப்படியிருக்கையில், ஆங்கு சிலர் சந்தேகித்து, இளமை முதல் இத்தேவர் துறவு பூண்டிருத்தல் மெய்ம்மையாயின், மற்றச் சுவைகள்போல் காமச்சுவை இவ்வாறு பாராட்டப்படுதல் சாத்தியமன்று. இந்நூலிலோ அச்சுவை மிகவும் அதிகமாயுள் ளது. ஆகையால் இவர் சிறிது சிற்றின்ப அனுபவ முடைய ராய் இருத்தல் வேண்டுமென்று தம்முள் பேசிக்கொண்டனர்.

இதனை யறிந்த தேவர், யாவருங் காணும்படி இரும்பின் கட்டியை நெருப்பில் பழுக்கக் காய்ச்சி "நான் பால சந்நியாசியாக இருத்தல் சத்தியமாயின் இது என்னைச சுடாதொழிக" என்று கட்டுரை யுரைத்து அதனைத் தன் கையினுற் றழுவியும், நாவாற் பரிசித்தும் யாதொரு இடுக்கணு மடையாது சுகமுற் றிருந்தனர்.

இதனைக்கண்டு முன்பு பேசியோர், அஞ்சி, தாம் "தெளி யாது இழைத்த தீத்தண்டம் பொறுத்தி" என்று அடி பணிந் தனர். அவரும் அவர்களை அஞ்ச வேண்டாமென்று அவர்களுக் குப் பல இனிய மொழிகள் கூறினர். இதனைக் கண்ட யாவரும் அவரது துறவொழுக்கத்தைக் கண்டு மிகவும் கொண்டாடினர் கள். பிறகு தேவர் அவர்கள்பால் விடைபெற்றுத் தன் ஆசிரிய ரிடஞ் சென்றனர். பின் நிகழ்ந்தனவற்றை அவருக்குத் தெரி வித்து அவருடன் உறைவா ராயினர்.

## இவருடைய காலம்

இவர் கடைச்சங்கத்தார் காலத்துக்குப் பிந்தியவரென்றும், இவர் செய்த இநநூல் உரையாசிரியர்களால் பிரமாணமாக எடுத் துக் காட்டப்படுதலால் உரையாசிரியர்கள் காலத்திற்கு முந்திய வர் என்றும் தெரியவரும். 1200 ஆண்டுகட்கு முன் இருந்தவ ராகக் கருதப்படுகின்றனர்.

---

# செந்தமிழ்ச் செல்வி வழிபாடு

[க. சோமசுந்தரம் பிள்ளை]

செந்தமிழ்ச் செல்வியைத் தாமரை யாட்டியைத் தென்பொதியச்
சந்தனச் சோலையி னேழிசை கூவுந் தனிக்குயிலைச்
சிந்தையிற் பூத்துச் செந்நாவிற் பழுத்துச் செவிப்புலத்தே
வந்து கனியும் பனுவற் பிராட்டியை வாழ்த்துவமே.

வம்மின் புலவீர்! வம்மின் புலவீர்!
இம்மையு மறுமையு நன்மை பயந்து
தொன்மையும் புதுமையு மென்மையுந் தெய்வத்
தன்மையு நிரம்பி யெழுமையுந் தொடர்ந்து
யாழினுங் குழலினும் பாலினுந் தேனினுங்
காணினுங் கேட்பினுங் கருதினு மினிக்கும்
அமுதுறழ் தலைமைத் தமிண்மொழி யுணர்ந்த
மெய்ந்நெறிப் புலவீர்! வம்மினெல் லீரும்!
அந்தமும் நடுவும் ஆதியுந் தெரியாச்
செந்தமிழ்ச் செல்வியைப் போற்றுதும் யாமெலாம்
நெடுங்கட லுலகி னிடந்தொறு மிடந்தொறும்
வானுயர் சங்க மண்டபம் வகுத்து
மான விதானம் வளங்கெழ வமைமின்!
ஊக்கமு நெருங்கிய வொருமையு மென்று
நீக்கமி லுழைப்பு நேர்மையு மென்று
மாக்குலைக் கமுகும் வாழையு நடுமின்!
தூக்குறு குரும்பையுந் தொடையலுந் தொடுமின்!
பொற்புறு பொறுமைப் பொலங்குட நிரைத்துப்
புத்துணர் வென்னும் பொன்முளை பரப்புமின்!
பழையன திருத்திப் புதியன புனைந்து
தூய்மை நறும்புகை யெடுத்து மீயுயர்
வாய்மை விளக்கம் வயின்றொறு மேற்றுமின்!
ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப் பியமெனுந்
தண்டமிழ்க் கனகத் தாமரைப் பீடிகை
மண்டபம் பொலிய வைத்துப் பண்டைநாள்
வடாஅது வான்றொடு வேங்கட மலையுந்

தெனாஅது குமரித் தெண்டிரைப் பௌவமுங்
குடாஅதுங் குணாஅதுந் தொடுகடற் பரப்புமென்
றந்நாள் வரைந்த விந்நான் கெல்லையுள்
அண்டரும் விழையுந் தண்டமி ழகத்தில்
ஆடகக் குடுமி மாடக் கூடலில்
முதலிடை கடையெனு மாறொரு மூன்றில்
திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளுஞ்
சூர்முத றடிந்த வீரவேன் முருகனுங்
கடன்மிடல் சாய்த்த குறுநெடு முனியுந்
தோலா நாவின் மேலோர் குழுவும்
மந்திர மிருந்து தந்திரம் புரிய
ஆரிய மாதி யயற்புல மடவார்
சீரிய கேண்மையிற் சேவடி பரவப்
படியுயர் மண்டலம் மூன்றும் பிரிக்கும்
முடியுடை வேந்தருங் குறுநில மன்னரும்
அடியுறை யெய்நது குறுவினை யியறறக்
தெரிதமிழ்ப் பலகை யரியணை மீமிசை
உண்ணெகிழ் வேட்கைத் தன்னொளி விரீஇத்
தேம்பிழி குவளைக ணம்பல்வாய் மலர்ந்து
முல்லை யரும்பிப் பவளம் பூத்த
முழுமதி யாயிர மொருவயிற் குழீஇய
காட்சித் தன்ன மாட்சிகண் கவரத்
திருவுறை செங்கை நான்கி னொருகை
புத்தகச் செங்கோ லேந்த; ஒருகை
வித்தகத் திவவின் நல்லியாழ் தடவ; ஒருகை
நச்சுநர் நச்சிய விச்சையி னுதவ; ஒருகை
யச்ச மகற்றி யருண்முறை தெரிக்க
உவமையின் றுயர்ந்த தமிழக மன்றியும்
இமிழ்திரை முந்நீர்ப் பெருநில முழுவதும்
பிள்ளைப் பிறைமுடிப் பெம்மா னுறைதரு
வெள்ளியங் கிரியினு மும்பருந் தனாஅது
தெள்ளிய வாணைத் திகிரிசென் றுலாவ

முறைமுறை யிருந்து தனியர சாண்டும் - அஃதா அன்று
அருளுடை பொதுளித் தெருணிழல் வளங்கி
அன்பு மலர்ந்துய ரின்பம் பிலிற்றும்
மருவா நெறியறி வாதவூ ரெங்கோன்
திருவா சகமெனுஞ் செழும்பொழில் புகுந்து
மருப்பூ முகத்து வல்லிய ராயமொடு
திருப்பூ வல்லி விருப்பொடு கொய்துங்
குயிலொடு கூவியுங் கிளியொடு மிழற்றியும்
பயின்மணிப் பாவை நயமுறப் புனைந்தும்
வாசந் திமிர்ந்து மூச லாடியும்
அம்மனை பாடியுங் கொம்மை கொட்டியுஞ்
சேரன் செய்த திருக்கிளா சிலம்பிற்
கந்துக வரியிற் பந்துவந் தடித்துஞ்
செவிசுவை நிரம்பிய கவிச்சுனை குடைந்தும்
பொழில்விளை யாட லெழில்பெற வாடியும் - அதா அன்று
நீர்மே னடந்தும் நெருப்பிடைக் குளித்தும்
பார்முதிர் கருங்கடல் பாறையிற் கடந்தும்
மறைபிணி கதவந் திறவெனத் திறந்தும்
சுடுபிணி மாற்றியுங் கருவிடந் தீர்த்தும்
அருள்விளை யாட லளவில் புரிந்தும்
நாப்புடை பெயரா நானில மசைக்குங்
காப்புடை வாழ்க்கைக் கலைப்பெரு மாட்டியைச்
செந்தமிழ்ச் செல்வியைத் தேமொழித் தேவியை
சநதனச் சிலம்பியைத் தாமரை யாட்டியைத்
தென்னவன் பாவையைச செம்பியன் பூவையை
மன்னவன் சேரன் வரைதரு மயிலை
இன்னுயிர் நாவமர் பொன்னிறக் கிள்ளையை
ஏழிசை நறும்பொழில் கூவுவெண் குயிலை
விண்ணகப் புலவர் வெட்கிவா யூற
மண்ணகப் புலவர் வாரிவாய் மடுக்கும்
அருள்பெற லமுதைப் பெருஞ்சுடர் விளக்கைத்
தன்னருஞ் சேயிற் றமிண்மகா அர்க் காக்கும்

அன்னையை யன்னவ ளின்னலொ டுறைதருஞ்
சிறுகுடின் மருங்கிற் குறுகுதிர் குறுகிப்
புறமொழி விழைவெனுஞ் செறியிரு ளகன்றன
மறுவறு புலமை வாரண மியம்பும்
தெளிவெனு மாயிர மொளிநிரை பரப்பிப்
புகழெனும் பரிதி கடன்முக டெழுந்தனன்
அடியவ ருள்ளத் தறிவுகண் மலர
வடிவுடை நெடுங்கண் மலர்திறந் தன்னை
தொழுதகு பள்ளி யெழுகென வெழுப்பிச்
செம்பொற் றவிசி னும்பரி னிரீஇ
அன்புநீ ராட்டி வெண்கலை யுடுத்திச்
சைவலப் பூங்குழ லைவகை முடிமின் !
மெய்வகைச் சாந்த விரைக்குழம் பணிந்து
செஞ்சொலிற் றொடுத்த மஞ்சரி வளைமின் !
விதுப்பிறை பழித்த கதிர்ப்புறு நுதலில்
பொங்கிய மகிழ்ச்சிக் குங்கும மிடுமின் !
உய்வகை மும்மையி னுண்மை தெரித்துத்
தெய்வப் புலவன் செய்தருள் மணிமுடி
வணங்காச் சென்னி யிணங்கச் சூட்டி
மென்பணைத் தோளினும் பொன்புணர் மார்பினும்
மூவ ராரமும் முனிவர் கோவையுந்
தேவர்மா மணியு மேவர வமைமின் !
அன்பி னைந்திணை ஆழ்வார் திருமொழி
பொன்புனை மாலை வேய்ந்து மின்பொலி
குண்டலம் வளையெனு மொண்டமி ழிரண்டும்
காதினும் போதுறழ் கையினு மிடுமின் !
தணியாப் புலமைத் தண்டமிழ்ச் சாத்தன்
மணிமே கலையை மருங்குறச் சேர்த்திச்
சேரன் றந்த திருக்கிளர் சிலம்பு
வேரியந் தாமரை மெல்லடி புனைமின் !
நாலடிப் பாதுகை கீழுறக் கொழுவி
நாவணி தந்த பாவணி பலவும்

பொருந்துழி பொருந்துழி திருந்துபு பூட்டி
ஒப்பி லுடல்பொரு ளாவியென் றுரைசால்
அப்ப முப்பழ மமுதமு நல்கி
மெய்ப்பொருள் விளக்கங் காட்டி யற்புட
னூழி முதல்வி! வாழிய வென்று
சொல்லாண் டியம்பும் பல்லாண் டியம்பி
முத்தமிழ் முக்குண மூவுரு வெனாஅ
முத்தொழில் மூவுயிர் மும்மல மெனாஅ
என்று குறித்த முழுவதுங் குறிக்குஞ்
சான்றவ ராய்ந்த தமிண்மொழி மந்திரம்
நாவியன் மருங்கி நவிலப் பாடி
வலமுறை மும்முறை முறைமுறை வாராக்
கண்ணினீர் வார மெய்ம்மயிர் சிலிர்ப்ப
நெஞ்சநெக் குருக வஞ்சலி செய்து
செந்திரு நாணச் சிதையா வரமருள்
சிந்தா மணியே! நந்தா விளக்கே!
ஆருயிர் மருந்தே! யடியவர் விருந்தே!
கற்றவர் களிக்க மற்றவர்க் கொளித்த
கற்பகக் கனியே! யற்புதத் தேனே!
அருட்பெருங் கடலே! யிருட்பெருங் கடற்குப்
புணையே! தோன்றாத் துணையே! பிணையே!
கண்ணு நீயே! கருத்து நீயே!
புண்ணிய முதல்வி போற்றியென் றுற்றவும்
அன்புடை நன்மொழி கூறி முன்புநின்
றழுமின்! விழுமின்! எழுமின்! தொழுமின்!
ஆடலு மாடுமின்! பாடலும் பாடுமின்!
யானறி யளவையி னன்றி நீவிர்
அறிந்தன வறிந்தன புரியின் சிறந்ததன்
மூவா விளநலங் காட்டி வாய்மலர்ந
தஞ்சலிர் வாழியென் றின்சொற் கூறி
வரம்பல நிரம்பவு மீயும்
அறம்பொரு ளின்பம்வீ டடைந்துவாழ் குவமே!

## *உமாபதி சிவாசாரியர் புராணம்

தில்லைப்பதியிலே வாழ்கின்ற திருவுடையந்தணர் மரபினில் உமாபதி சிவாசாரியர் பிறந்து வளர்ந்து, பொன்னம்பலவர்க்குப் பூசனை புரியும் பேறுபெற்றுத் திகழ்ந்தனர். தில்லை மூவாயிரவருள் சிறப்பாக இவர் ஒருவரே சித்தாந்த ஞானத்தை உலகர்க்கு விளக்கினோராவர். * * * * * *

ஸ்ரீ உமாபதி சிவாசாரியர் சிவாகமங்களெல்லாம் இனிது கற்றுத் தவநெறி ஒழுகி இறைவரது ஒப்பற்ற திருவருள் பதிதற்குரிய பருவம் வாய்ந்திருந்தார். அவர் ஒருநாள் கூத்தப்பெருமானுக்கு வழிபாடு முடித்துத் தமது வீட்டிற்கு வழக்கமாக அமைந்த விருதுகளோடு சிவிகைமேற் செல்வாராயினர். அங்ஙனஞ் செல்லுங்கால் வீதியிலே ஒரு திண்ணையில் மறைஞான சம்பந்த சிவாசாரியர் தமது மாணவரோடு வீற்றிருந்தனர். அவர் தமது சீடரை நோக்கி "பட்ட கட்டையிற் பகல் குருடு ஏகுதல் பாரீர்" என்று சொன்னார். இசசொற்களைக் கேட்ட உமாபதி சிவாசாரியர் சிவிகையினின்று விரைவில் இழிந்து மறைஞான சம்பந்தர் திருவடியைப் பேரன்பொடு தொழுது அவர் சொன்ன வாக்கியத்திற்குப் பொருள் கேட்டார். அவர் அதன் பொருள் தெரித்த பின்பு அவர் திருவடித்தொண்டு பூண்டு உமாபதி சிவம் ஒழுகலாயினர். (பட்டகட்டை என்றது சிவிகை.) பகலினும் உபசார விருதாக விளக்கெடுத்துச் சென்றதன் காரணமாகப் பகற் குருடு என்ற வாக்கிய மெழுந்தது. அதனால் நிலையாமை உணர்த்தியவாறும். ஸ்ரீ உமாபதி சிவாசாரியா சிவஞானப் பேறொன்றனையே விரும்பிச் சாதி குலம் பிறப்பென்னும் தடஞ்சுழியைக் கடந்து நின்றார். ஒருநாள் சீடருடைய பக்குவ மறிதற்பொருட்டு மறைஞான சம்பந்தர் கைக்கோளர் தெருவிற் சென்று பாவிற் செலுத்திய கூழின் மிச்சத்தை விடாய் தணித்தற் பொருட்டு வாங்கி உண்டார். அப்போது அவர் புறங்கையில் ஒழுகிய மிச்

---

* மெய்கண்ட சாத்திரத்திற்கு, திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை, M.A., M.L., அவர்கள் எழுதிய முன்னுரையினின்றும் எடுக்கப்பட்டது.

சத்தை உமாபதி சிவம் ஏந்திப் பருகினர். உடனே மறைஞான சம்பந்தர் அவருக்கு ஞானோபதேசஞ் செய்து சிவஞானபோதப் பொருள் உரைத்தனர். இவர் இங்ஙனம் மரபு கடந்து ஞானம் பெற்றதின் சிறப்பை யுணராது ஏனைத் தில்லைவாழந்தணர்கள் இவரைக் குலமுறை பிறழ்ந்தவராகக் கொண்டு நடேசப் பெருமானுக்குப் பூசை செய்யத் தகுதியற்றவரென் றிகழ்ந்தனர். ஆதலினால் அவர் சிதம்பரத்திற்குக் கீழ்த் திசையிலுள்ள கோற்றவன்குடி யென்னும் ஊருக்குச் சென்று அங்கே மடமொன்று அமைத்து அதில் தமதடியார்சூழச் சிவபெருமானை விதிப்படி வழிபட்டிருந்தார்.

ஸ்ரீ உமாபதி சிவாசாரியர் பொன்னம்பலவருக்குப் பூசை செய்தற்குரிய நாள் வரவும், சிற்சபைக்கு அவரைச் செல்லவொட்டாமல் ஏனையோர் தடுத்துவிட்ட படியால் அவர் தம்முடைய மடமெய்தித் தளர்வுற் றிருந்தார். ஏனைத் தில்லைவாழந்தணர்கள் திருமன்றிற் சென்று அழகிய சிற்றம்பல முடையாரது பேடகத்தைத் திறந்து பார்க்கவும் அங்கே திருவடிவத்தைக் காணாமையால் அச்சமுற்றுப் பெருங் கவலை யுற்றனர். அப்போது யாவரும் கேட்க வானில் ஒலித்த மொழியாவது: "நம்மைப் பூசையாற்றுந் தகுதி யுடையவன் உமாபதி யாதலால் அவன்பா லமர்ந்தோம்" என்பது. இதைக் கேட்டவுடனே யாவரும் ஒருங்கு கூடித் தாயிடஞ் செல்லும் கன்றுகள்போல உமாபதி சிவத்தின் திருமடத்திற்கு ஓடிச்சென்று அவரிடம் தங்கள் குற்றத்தை மன்னிக்க வேண்டுமென்றும் அவர் தில்லைப் பெருமானைப் பூசைசெய்தல் வேண்டுமென்றும் குறையிரந்து நின்றார்கள். அவர் அவ்வாறே அம்பலஞ்சென்று கடவுட் பூசைமுடித்துத் தன் திருமடத்திற்கு மீண்டனர்.

அவர் தமது சீடர் பலருள்ளும் புலையர் குலத்திலுதித்த பெற்றான் சாம்பான் என்பார்க்கு முத்திகொடுத்த வரலாறு மிகவும் அதிசயமானது. பெற்றான் சாம்பான் என்பவர் முற்பிறவியிலேயே பெருந்தவம் ஆற்றியும் சிறிது வழுவினால் தாழ்குலத் துதித்தனர். அவர் நடராஜப் பெருமானிடம் அன்புடையவராய்த் திருக்கோயிலுக்கு விறகு வெட்டிக் கொண்டுவந்து சேர்ப்

பதையே தமது பணிவிடையாகக் கொண்டார். அவருக்குக் கன வில் நடேசப்பெருமான் தோன்றித் தன்பால் பேரன்புடைய உமா பதியாருக்குப் பணிவிடை செய்யும்படி கட்டளையிட்டார். அவர் அவ்வாறே சென்று உமாபதி சிவாசாரிய சுவாமிகளது திருமடத் திற்கு விறகு கொடுத்துவந்தார். ஒருநாள் பெரு மழையினாலே அவர் விறகுகொண்டுவரத் தாழ்த்தமையால் மடத்தில் அமுது சமைக்கக் காலந்தாழ்த்தது. அப்போது அதற்குக் காரணமென்ன வென்று சுவாமிகள் தமது மாணவரை வினவச் சாம்பனாரது விறகு வாராமையால் தடையேற்பட்டது என்று அவர்கள் விடை யளித்தார்கள். மறுநாள் அவர் வந்தவுடன் தனக்குத் தெரிவிக்க வேண்டுமென்று உமாபதிசிவம் அவர்களுக்குக் கட்டளையிட் டார். மறுநாள் சாம்பனார் மடத்திற்கு விறகுகொண்டு வருவதற்கு முன் கடவுள் ஒரு பெரியவர் வடிவம்போல் அவருக்குத் தோன்றி ஒரு சீட்டுக்கொடுத்து அதை உமாபதியாரிடம் அளிக்கும்படி பணித்தனர். மறுநாள் திருமடத்திற்கு இரட்டைப்பங்கு விறகு கொண்டுவந்தவுடன் அங்குள்ள மாணவர்கள் உமாபதி சிவத் திற்கு அவர் வரவை அறிவித்தார்கள். அப்போது உமாபதிசிவம் அவர் யாரென்று வினவ, அவர் பெரியவர் கொடுத்த சீட்டை அவரிடம் கொடுத்தார். அந்தத் திருமுகத்தைப்பார்த்துக் கண் களில் ஒற்றிக்கொண்டு உடம்பெங்கும் புளகங்கொண்டு கூத்தப் பெருமானது திருவருளை வியந்தனர். அந்தச்சீட்டில் எழுதி யிருந்த பாட்டாவது :

" அடியாற் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங்
குடியாற் கெழுதியகைச் சீட்டுப்—படியின்மிசைப்
பெற்றான் சாம்பனுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்க முறை."

இத்திருப்பாட்டின் கருத்தின்படி பெற்றான் சாம்பனுருக்கு ஞானதீக்கை செய்யத் தொடங்கவும் அப்போதே அவர் வீடெய் துதற்குரிய பக்குவமுடையவராக விருந்தமையால் அதற்குத் தக்க முறையாக சுவாமிகள் அருள்செய்தவுடன் அவர் முத்தி யடைந்தார். இதன் உண்மையுணராத சாம்பனாரது சுற்றத்தா ரும் மனைவியும் மனங்கலங்கி அரசனிடஞ்சென்று அவரைச்

சுவாமிகள் தீயால் எரித்துவிட்டதாகக் குறைகூறித் துயருழந் தார். அப்போது அரசன் சுவாமிகள்பாற் சென்று அதைப் பற்றி உசாவியபொழுது சுவாமிகள் தீக்கையின் மேன்மையை யெடுத்து விளக்கினார்கள். அரசன் அங்ஙனமாயின் மற்றொரு தீக்கை அவ்வாறு செய்யவேண்டுமென்று வேண்டிக்கொண் டான். அப்போது தமது அடியார் குழாத்தைநோக்கி, அவருள் சத்திநிபாதம் பெற்றவ ரிலராகவே சூழ்ந்து பார்த்துச் சிவபெரு மானது திருமஞ்சன நீராலே வளர்ந்ததாய்க் கோபுரையின் பக் கத்தேயிருந்த முள்ளிச்செடியைத் தக்கது என்று கண்டார். தமது அருட்பார்வையால் அம்முள்ளிச்செடியைப் பார்த்தவுடன் அது ஒளிமயமாகி ஒரு பிழம்பாக வானில் எழுந்து மறைந்து சிவனோடு கலந்தது. அப்போது அதனைக்கண்ணுற்ற அரசன் எல்லையில்லாத வியப்பும் மகிழ்ச்சியுமடைந்து சுவாமிகளுடைய திருவடிகளை வணங்கி அவருக்குப் பொன்னுடை மாலை முதலி யன கொடுத்துத் தன் பிழை பொறுக்கும்படி வேண்டிக்கொண்டு தன் அரண்மனைக் கேகினன்.

பின்னர் ஒருநாள் சிதம்பரத்தில் திருவிழாவிற்குக் கொடி யேற்ற அங்குள்ள அந்தணர்கள் முயன்றபோது கொடியெழாமை கண்டு அவர்கள் கவலையுற்றனர். அப்பொழுது விசும்பில் 'உமா பதி வந்தக்கால் கொடியேறும்' என்ற திருவாக்கு எழுந்தது. உடனே சுவாமிகளிடம் எல்லோரும் போய் வேண்டினர். அவர் களும் அப்படியே விரைவில் தில்லைக்குச் சென்று கொடிக்கவி யென்னும் அழகிய சிறுநூலிலுள்ள முதற்பாட்டைப் பாடிய வுடன் கொடி தானாக ஏறிற்று.

சுவாமிகள் சிவப்பிரகாசமென்னும் சிவஞானபோதச் சார்பு நூலொன்றும், உண்மைநெறி விளக்கம், நெஞ்சுவிடுதூது, வினா வெண்பா, திருவருட்பயன், சங்கற்ப நிராகரணம், போற்றிப் பஃ றொடை என்னும் பிற ஏழு சித்தாந்த நூல்களும் இயற்றியருளி னார்கள். கோயிற்புராணம், சேக்கிழார்புராணம், திருத்தொண் டர் புராணசாரம், திருப்பதிகக்கோவை முதலியனவும் இவரால் இயற்றப்பட்டன என்ப. வடமொழியில் பௌட்கரம் என்னும் உபாகமத்திற்கு இவர் இயற்றிய விரிவுரை ஒன்றுண்டு. மாண

வர்க்கு ஞானநூல் கற்பித்தலும் பதிநூல் இயற்றுதலும் தக்கவருக்கு முத்திப்பேறு உதவுதலும் ஆகிய பேருபகாரங்களைச் செய்தலையே தமது கடமையாகக் கொண்டிருந்து பின் சமாதி நிலையில் நின்று சித்திரை யத்த நாளில் சிவபெருமானோடு இரண்டறக் கலந்தனர்.

''சத்திய ஞானா னந்த தத்துவ வுருப வத்தாற்
பத்திசெய் யடியார் போற்றப் பரனடிக் கமல மெய்தி
நித்திய சுபாவ முத்த நிராகார பூர்த்தி யான
சுத்தவத் துவிதா னந்த சொரூபமே யாகி நின்றார்.''

(உமாபதி சிவாசாரியர் புராணம்.)

---

# தமிழ்த் தோற்றத் தேற்றம்

[திருவனந்தபுரம் T. S. கணேசபிள்ளை]

## காப்பு

தமிழ்த்தோற்றத் தேற்றஞ் சமைப்பான் விழுமத்
தமிழ்த்தோற்றத் தேற்றஞ் சமைப்பான் - அமிழ்தார்முக்
கட்கருணைக் கொற்றவன் கடாஞூன்றொண் கைம்முகத்தென்
கட்கருணைக் கொற்றவன் கடாம்.

## நூல்

### ஓரெழுத் தொருமொழி இயல்

#### நெடில்

ஆ—வினைச்சொல்-ஏவல்-[அ + அ = ஆ] உதார. ஆகுதல்கொள்.

ஆகு. அ-(உத்தேசம்) உள் எண்ணம்-அ-(காரியம்) பயன்பாடாகிய நிறைவேறறம். உள் எண்ணத்தை நிறைவேறறிக் கொள் என்பதே - ஆ என்பது. இது விடுபாடாகிய வீடுபேறு காரணமாக நிகழும் எண்ணமும், நிறைவேற்றமும் ஆதலின் வீட்டியல் எனப்படும். இப்பால் [அ + அங்க = ஆக - ஆகுதலைக்கொள்.] அ-உள் எண்ணம். அங்க - தன்னுட் கொண்டியலும் தொழிற்படுத்திக் கொள்க என்னும்

வியங்கோளே ஏவல் ஆக - ஆ எனப்படுவது, இம்மையிற் படுபாடாகிய பாட்டியல் என்னப்படும். வீட்டியல் மெய்ப் பயன் விளக்கும் - பாட்டியல் உலகத்துள் வாழ்க்கைக்கா வன விளிக்கும். அவ்வீட்டியலின் தலைப்பாட்டில், கல்வி கேள்வி ஆராய்ச்சியினுதல், தீமைக்கஞ்சிப் பொல்லாங்கு கனவினும் நினையாது நன்மையி லீடுபட்டு நற்செயலே கொண்டொழுகுவோனுதல், உண்மை நாடுவோனுதல், துன்பமற்ற இன்ப நிலைபெறு மெய்ப்பொருள் கண்டுகொள் விருப்பத்தின் இடைவிடாது முயல்வோனுதல் முதலானவை கள் நிகழும். வீட்டியலின் இடைப்பாட்டில், அவ்வவற்குப் பொருத்தமாகக் காணப்படும் மதக்கோட்பாடுகட்கிணங்கக் கடவுள் வழிபாட்டிற்குத் தவிர்வன தவிர்ந்து புரிவன புரிந்து பேறுபெறுவோனுதல் அமையும் வீட்டியலின் கடைப்பாடாகிய மேம்பாட்டில் மங்கட் சுட்டாயது தான் எனக் கண்டமைந்து உயர்வற உயர்நலமுடையோனுதல் நிகழும். பாட்டியலின் தென் பாட்டுள், கண்பார்வைக்குத் தோற்றும் வடிவமுடையனவும், செவிக்குக்கேட்கப்படும் பெயர் புகழ் பண்புடையனவும், நாவிற்குத் தட்டுப்படும் சுவையுடையனவும், தேகத்திற் படவும் கை மெய் தொட வும், கூடியனவும், மூக்கினுல் முகர்ந்துணரும் மணமுடையன வும் மனதிற்குப் புலப்படும் பொருத்த முடையனவு மாகிய பலவற்றையும் பற்றி நாடுவோனுதல் விரும்பிக்கொள்ளவோ வெறுத்துத் தள்ளவோ நினைவோனுதல் நிகழும். பாட்டி யலின் இடைப்பாடாகிய ஆள் வினையினுள் வேட்கையும் அவாவும் எழுந்தோங்கி இழுக்க ஒவ்வோர் எண்ணம் கொண்டு அதனவழி முயன்று வாழ்வோனுதல் நிகழும். பாட்டியலின் படுபாடாகிய வீழ்ச்சியில் ஒவ்வொன்றும் தன் எண்ணம் போல ஒத்து வராமலிருக்கும் குறைபாட்டால் மனக்கவலையும் துன்பமுங்கொண்டு ஏங்குவோனுதல் அமை யும். இவைகள் வினை முதல் ஆக்கத்தின் அகத்துறுப்புக்கள். பாட்டியலின் ஏற்பாட்டுள் ஒப்புரவொழுகுவோனுதல், கடம் பாட்டுள் பெற்றோரைப் பேணல், குரவனை வழிபடல், தென்

புலத்தார் தெய்வம் போற்றல் உடைபோறுதல் அடங்கும். பிடிபாட்டின் உடம்பாட்டுள் பிறர் வேண்டுகோளுக் கிணங்கி நடப்போறுதல், பிடிபாட்டின் வழிபாட்டுள் நல்லோர் பெரியோர் கற்பித்த வண்ணம் அமைந்தொழுகுவோறுதல் அடங்கும். இவை வினைமுதல் ஆக்கத்தின் புறத்துறுப்புக்கள். இவ்வண்ணம் தன் வினைப்பாடாய்ப் பலவழியிலும் பண்படிக் குறிப்பு வினையாலணையும்பெயர், தெரிநிலை வினையாலணையும்பெயர் இவ்விரண்டனுள் ஒன்றை முன்னுக் கேற்று 'நல்லவன் ஆ'கு 'தெரிந்தவனு'கு என இருசொல் ஒருமொழிப்பட்டு வரும் ஏவல்களாகவும் அந்த அந்த எண்ணத்துக் குரியவைகளை இடமாகக் கொண்டு, இன்பத்திலாகு துன்பத்திலாகு மேலாகு கீழாகு என நிகழும் ஏவல்களாகவும் வழங்கும். (செய்பொருளில்லாதன)

ஆ - வினைமுதல் தொழிற்பெயர் - [அ-உள்வேட்கை + அ°க= தன்னுள் மிடைந்தோங்கும் அவா] ஆய் = இச்சை என
இச்சை அமைந்தது. இது பாட்டியலின் இடைப் பாட்டெழுச்சியான தொழிற் பண்பு.

(தொடரும்)

---

## இன்னுரை

[கருந்திட்டைக்குடி வி. சாமிநாத பிள்ளை]

ஒல்லும் வகையா னறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல். (திருவள்ளுவர்)

Do all the good you can
By all the means you can
In all the ways you can
In all the places you can
At all the times you can
To all the people you can
As long as ever you can

——John Wesley

ஆற்றுமி னும்மா லாம் அறம் எல்லாம்
ஆற்றுமி னும்மா லாம் வகை எலலாம்
ஆற்றுமி னும்மா லாம் வழி எல்லாம்
ஆற்றுமி னும்மா லாம் இடம் எல்லாம்
ஆற்றுமி னும்மா லாம் போது எல்லாம்
ஆற்றுமி னும்மா லாம் உயிர்க் கெல்லாம்
ஆற்றுமி னும்மா லாம் *கால் அளவே

* கால் - காலம்.

---

# கடிதப் பாசுரம்

[கருந்திட்டைக்குடி வி. சாமிநாதபிள்ளை]

ஓத வினிய வேதமெனலாம் அருட்பாப் யாடிய இராமலிங்கப் பெருந்தகையார், ஓர் கால் காஞ்சீபுரம் மகாவித்துவான் நமச்சிவாய முதலியாரவர்கள்பால் சென்று கல்விபயில விருப்புற்ற ஓர் நன்மாணவருக்குச் சிபார்சுசெய்து, எழுதியனுப்பிய கடிதப் பாசுரம் வருமாறு:—

திருத்தகுசீர்த் தமிழ்மறையின் முதற்பொருளை தமது திருப்
பெயராக் கொண்டு
பொருத்தமுறு மேகம்பப் புத்தமுதை யுண்டுவக்கும்
புனித னேநின்
உருத்தகுசே வடிக்கடியேன் ஒருகோடி தெண்டனிட்டே
யுரைக்கின் றேனின்
கருத்தறியேன் கவிகொடுநின் பாலன்பால் வருபவரைக்
காக்க வென்றே.

அன்பர்களே! இக்கவியினின்று அருள்வள்ளற் பெரியாரின் உயரிய பெருந்தகைமை ஊற்றெடுத்துச் சுரப்பது கண்டு சுவைபீபீராகவென இப்பத்திரிகை வாயிலா எழுதலாயினேன்.

---

மாணவர் பக்கம்

# அறிவுதயம்

(திருவருள் விளக்கம்)

[S. A. திருமலைக் கொழுந்துப் பிள்ளை]

## முதல் அத்தியாயம்

அறிவு :

உயிர்ப் பொருளறிவு

ஓர் ஆசிரியர் தமது மக்கள் பார்வதியையும் தியாகராஜனை யும் அருகிலழைத்து உரையாடு முகத்தால் அவர்கட்கு நல்லறிவு கொளுத்துவா ராயினர்.

ஆசிரியர்:—குழந்தைகாள், நீங்கள் காணும் எப்பொருட் கண்ணும் வெளிப்பட்டோ வெளிப்படாதோ அறிவு உறைகின்ற தென்பதை யறிவீரோ ?

தியாகராஜன்:—எந்தாய், உயிருள்ள எப்பொருட்கண்ணும் அறிவு அமைந்திருப்பதை யுணர்வேன். மரம் கல் மண் முத லான பொருள்களிடம் அறிவு உறைவதை யுணர்கிலேனே.

பார்வதி:—தம்பி, உயிருள்ள எப்பொருட்கண்ணும் அறிவு அமைந்திருப்பதை யறிவேன் என்று கூறி, மரத்தினிடம் அறிவு உறைவதை அறியேன் என்றும் செப்பினை. உன் கருத்தென்ன? மரத்திற்கு உயிருளதோ இல்லையோ, முதற்கண் அதனை யெடுத் துப் பேசு.

ஆசிரியா:—அம்மா, நீ மிகுந்த புத்தியோடு தம்பிக்குக் கேள்வி போட்டாய். தியாகராஜா, அக்காள் போட்ட கேள்விக்கு தக்க விடை கூறு பார்ப்போம்

தியாகராஜன்:—மரத்தினிடம் உயிர் இருக்கவே செய்கிறது. நாம் வளர்ந்து பெரிய வுருவங் கொள்வதுபோல் மரமும் முதலிற் செடியாயிருந்து பின்னர் மரமாக வளரும். வெயிலால் வாடி நீரால் செழிப்புடன் தோன்றும். ஆதலின் மரம் உயிருடைய

பொருளே. ஆயினும் அதனிடம் அறிவு உறைவதைத் தெளிகிலேன். மரத்தைக் கல்லோடு சேர்த்து உயிரிலாப் பொருளென நான் கருதியது அறியாமையே. மன்னிக்க வேண்டும்.

ஆசிரியர்:—அம்மா, மரத்தினிடமேனும் செடி கொடிகளிடமேனும் அறிவு உறைவதை நீ கண்டிருப்பையாயின் சொல்லு, பார்ப்போம்.

பார்வதி:—அப்பா, செடி கொடிகள் முதலாய பொருள்களிடத்தே அறிவு இருப்பதைத் என்னைப்போன்ற குழந்தைகள் யாவரும் கண்டேயிருக்கிறார்கள். ஆயினும் அவர்கள் அதனை ஊன்றிய நோக்கங் கொண்டு அறிவிற் பதித்திலர். தம்பி, ஓர் பீர்க்கஞ் செடி படர்ந்து செல்லும்பொழுது மேற்படர்ந்து செல்ல ஒரு பற்றும் இல்லாதவழி மெல்லிய இளங்கொடிகளைப் (Tendrils) பலவிடத்தும் வீசி, குருடன் கைகளையே கண்களாகக் கொண்டு அருகிருக்கும் பொருள்களை யறிய முயல்வதுபோல், தேட்டங் கொள்வதைப் பார்த்ததில்லையோ!

தம்பி, இவ்வுண்மையை நமக்கு மணிவாசகப் பெருமானார் தமது அருள்வாக்கால் விளக்கியிருப்பதையும் எண்ணிப்பார்.

தியாகராஜன்:—அக்கா, வாதவூரடிகள் எங்ஙனம் விளக்கினார் எடுத்துச் சொல்.

பார்வதி:—* 'கொம்பரில்லாக் கொடிபோல் அலமந்தனன் கோமளமே' எனக்கூறினாரல்லரோ.

ஆசிரியர்:—ஏ கண்மணி, நினது அறிவையும் சாந்த சீலத்தையும் நோக்கிக் களிப்புற்றேன்.

தியாகராஜன்:—அக்கா, நன்றாய்த் தெரிந்து கொண்டேன். உனக்குக் கோடி வணக்கம்.

பார்வதி:—வணக்கமெல்லாம் எல்லாம் வல்ல இறைவனிடமே செல்க.

தியாகராஜன்:—அக்கா, ஒரு கொடி சுவரிலிருக்கும் புடைக்குட் புகுந்து வெளியேறி விடலாமென நினைத்து உட்புகுந்து பின்னர் அவ்வழி செல்லக்கூடாத போழ்து குருடன் முட்டுப்

* திருவாசகம் - நீத்தல் விண்ணப்பம். செ. உ௰.

பட்டுத் திரும்புவதுபோற் றிரும்பாநின்றதையும் பார்த்துளேன். செடிகளின் அறிவு ஓர்வித தூக்கங்கொண்ட தெளிவற்ற அறிவாகத் தோன்றுகிறது.

பார்வதி:—கண்டு கொண்டாய், தம்பி.

திருச்சிற்றம்பலம்

[குழந்தைகள் பசும்பொருளாகிய மருந்துச் செடி (Herbs) களிடத்தும் மற்றைப் பிராணிகளிடத்தும் உயிருடன் அறிவு உறைவதைக் கண்டு கொண்டனர். இனிக் கல், மண் முதலாய உயிரிலாப் பொருள்களிடமும் அறிவு உறைவதை ஆசிரியர் தெரிக்கலுற்றார்.]

---

## இரண்டாம் அத்தியாயம்

அறிவு :

### உயிரிலாப் பொருளறிவு

ஆசிரியர்:—கண்மணிகாள், நேற்று நீங்கள் இருவீரும் பச்சை நிறங்கொண்ட பச்சிலைகளிடத்தும் இடர் விட்டுப் பெயரும் பிராணிகளிடத்தும் உயிரும் அறிவும் உறைவதைச் சிக்கெனப் பிடித்து மனத்துள் மறவாது கொண்டீர். இனிக் கல், மண் முதலாய உயிரிலாப் பொருள்களிடத்தும் அறிவு உறைவதை நீங்கள் காண வேண்டுமே!

குழந்தைகள்:—எந்தையே, தங்களுடைய கேள்வி எமது அறிவை மருட்டப் பார்க்கின்றது. உயிருடைய பொருள்களுக்கு மட்டுமே அறிவு அமைந்திருப்பதாகத் தோன்றுவதன்றி உயிர் பெறாத பொருள்களிடம் அறிவு எங்ஙனம் தோன்றும். ஏதேனுமொரு பொருளிடம் அறிவுதோன்றின் அதற்கு உயிர் இருக்கவே செய்யும்.

ஆசிரியர்:—குழந்தைகாள், நீங்கள் சொல்லும் நியாயம் மிகவும் பொருத்தமானதே. நீங்கள் பேசுவது நீங்கள் நேரிற் கண்ட அநுபவத்தை யொட்டியே. ஆயினும் அரிய இரகசியங்களை யறியப் பேரறிவு வேண்டும். அஃது இன்னதென்பதை விளக்குகிறேன். பேரறிவின் தன்மையை என்சொல்வேன்! அஃது உங்களிடம் விளையுமாயின் காணாத புதுமைகளையும் கேளாத அதிசயங்களையுங் காண்பீர். மரண பயமும் நீங்கும்.

குழந்தைகள்:—எந்தையே, அத்தகைய பேரறிவை எங்கட்கு விளக்கஞ் செய்யவேண்டும். ஓர் பக்கம் அச்சமும் ஓர் பக்கம் ஆசையு மெழாநின்றது.

ஆசிரியர்:—அச்சத்தை யகற்றிச் சிவபெருமான் பக்கல் அன்பை யூன்றிக் கவனத்தோடு நாம் செய்யும் உபதேசத்தை செவிக் கொண்மின். அறிவு இருவகைத்து: எவ்வாறெனின், பேரறிவு சிற்றறிவு என அறிவு இருவகைப்படும். மகான்கள் பேரறிவின் வாயிலாக உலகினர் உணர மாட்டாத அரிய இரகசியங்களை நேரிற் காண்பர்.

நீங்கள் கண்ட அறிவு சிற்றறிவே. எறும்பினிடத்தும், எலியினிடத்தும், பசுவினிடத்தும், யானையினிடத்தும், புலியினிடத்தும், சாதாரண மாந்தரிடத்தும், மற்றுமெல்லாப் பிராணிகளிடத்தும் காணப்படுவது சிற்றறிவே.

குழந்தைகளே, கவனங்கொண்மின். இங்ஙனம் சிதறுண்டு ஒவ்வொரு பிராணியினிடத்தும் தனித்தனி யறிவாய்த் தோன்றும் சிற்றறிவுகள் யனைத்தையும் விளைவித்து அவ்வவ் வறிவுகளைத் தூண்டி நடாத்தும் பேரறி வொன்றுளது. இதுவே ஈசனது அறிவு; இதுவே சிவமெனப் படுவது.

இத்தகைய பேரறிவு உயிருள் பொருளினும் உயிரில் பொருளிலும் மறைந்துறைகின்றது. இதுபற்றியே நம்மாழ்வாரும் 'உடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்' எனப் பேரறிவி னியல்பை விளக்கினர்.

குழந்தைகாள், இத்தகைய பேரறிவே பிரபஞ்ச மனைத்திற்கும் இன்றியமையாப் பற்றுக் கோடாய் நின்று ஜகத்தை நடாத்தா நிற்கும். இதுபற்றியே வேதம்

தெள்ளிய வறிவே முழுமுதல்
(பிரக்ஞானம் பிரஹ்மம்)

எனக்கூறிற்று. மற்றொரு சமயம் இத்தகைய பேரறிவைப்பற்றி விளக்கஞ் செய்வேன்.

குழந்தைகள்:—தங்களது உபதேசம் எங்களைப் பரவசப் படுத்தியது. பரமனார் கரந்துறைவதை நம்மாழ்வார் சுருக்கமாகவும் விளக்கமாகவும் வெளியிட்ட பெருமை சாலவும் மனத்தை

யுருக்குகின்றது. அதனை மற்றுஞ் சிறிது விளக்கஞ் செய்யின் சாலவும் மகிழ்வோம்.

ஆசிரியர்:—அங்ஙனமே செய்கிறேன். குழந்தைகாள், நமது உடலில் உயிரானது எங்கணும் பரவிநிற்பினும் அவ்வுயிரை வேறு பிரித்து இதுவே யுயிரெனக் காட்டக் கூடுமோ! கூடாதன்றே. ஆயினும், நீங்கள் நான் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருக்கும் போழ்தே ஓர் எறும்பு உங்களைக் காலிற் கடிக்குமாயின் உடனே அதனை எவ்வாறு அறிகின்றீர்கள்?' உங்களது உயிர் உடல் எங்கணும் பரவிநிற்பதால் உடலில் எவ்விடத்தேனும் ஒரு பொருள் தட்டநேரின் உங்களது அறிவு உயிரின் வாயிலாகச் சென்று அதனை யறியும். இதுபோலவே பேரறிவு சகல பொருள்களையும் விரவிநின்று தன்னைக் காட்டாது மண்ணாகவும், கல்லாகவும், நீராகவும், காற்றாகவும் வெளியுருவங்காட்டித் தான் எவற்றையு மறிந்து தன்னை யொருவரு மறியா வகையாய் உறையும். இவ்வரிய வுண்மையை மகா சிவயோகியான திருமூலதேவர் எவரும் எளிதே யறிந்து கடைத்தேறும் வண்ணம்

'மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதம்'

எனும் அரிய திருமந்திரத்தால் விளக்கஞ் செய்தார்.

பார்வதி:—எங்கட்குத் தெய்வமாக விளங்கும் எந்தையே, இவ்வரிய மந்திரத்தை எங்களறிவிற் புகும்வண்ணம் துலக்கஞ் செய்யப் பிரார்த்திக்கிறேன்.

தியாகராஜன்:—அண்ணலே, அங்ஙனமே எனக்கும் ஆவல் பெருகிற்று. அருள் செய்க.

ஆசிரியர்:—குழந்தைகாள், நீங்கள் விரும்பிய வண்ணமே தெளிவாக விளக்குகிறேன். கருத்தை ஊன்றிச் செவிக் கொண்மின். கைவல்லானாகிய தச்சன் ஓர் மரத்தை யானை யுருவாக அமைத்துளான். கட்டையே யாயினும் அசதியில் நோக்குவார்க்கு அவ்வுருவம் யானைபோல் மருட்டி அச்சத்தைத் தரும். அச்சம்

நீங்கி எம்மரத்தாலாய வுருவென ஊன்றி நோக்குமிடத்தில் யானை போனவிடம் தெரியவில்லை. நிற்பது மரமே. அங்ஙனமே இப் பிரபஞ்சத்தை யூன்றிய நோக்கங்கொண்டு பாராமல் மேலாகப் பார்ப்பதால் கல்லெனவும் நீரெனவும் தீயெனவும் காற்றெனவும் பஞ்சபூத மயமாகத் தோன்றும். ஆழ்ந்து நோக்கினாலோ மெய்யா யிருப்பது சத்தே; பிரபஞ்சம் போனவழி தெரியாது மறையும். இந்த சத்தே பேரறிவாய் அருளே மயமாய் நீங்காத ஆனந்த மயமா யிருப்பது. இதுவே திருமூலரது மந்திரத்தின் பொருள்.

**குழந்தைகள்:**—அப்பனே, பிரபஞ்சத்திற்கு பற்றுக்கோடாய் அதனை ஆண்டு நிற்கும் பேரறிவை யறிந்து கிட்டி அம்மயமாக நாம் நம்மை யாக்கிக் கொள்வ தெங்ஙனம்?

**ஆசிரியர்:**—பேரறிவாகிய சத்தி னியல்பையும் அதனைக்கண்டு அதனோ டொன்றும் வழியையும் நாளையதினம் உபதேசிப்பாம். போய் வம்மின். (தொடரும்)

---

# தமிழ் நீதி

[S. A. திருமலைக் கொழுந்துப் பிள்ளை]

## அருளும் அறிவும்

குழந்தைகள்! உலகத்தில் மிக்க அருமையான பொருள் அருளே. இது பற்றியே அருளெனப் பெயர் கொண்டது. அருள் தான் யாதெனின் தன்னுயிர்போல் ஜீவ பேதங்கள்மேல் வைக்கும் இரக்கமாம். 'கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி, எல்லா வுயிருந் தொழும்' எனத் தெய்வவாக்கனும் கூறினனல்லனோ! ஆகவே ஜீவகாருண்ணியம் ததும்பியெழும் நெஞ்சத்தவர் கடவுட்டன்மை படைத்தவராவர். பெருங்கருணை வாய்ந்த புத்தமகான் நாற்கால் பிராணிகளை நமது சகோதரராகப் பாவித்து அன்புடன் அவற்றை யாதரிக்கும்படி நன்மதி கூறியிருக்கிறார். நிற்க:

அருளுடையாரை நல்லறிவும் பின்றொடரும். அருளைப் போற்றாது அறிவொன்றையே வளர்ப்பவர், உலகிற்குக் கேடு விளைப்பதில் பிரதம ஸ்தானத்தைக் கொள்வர். நல்லறிவு எல்லா நன்மையையும் பயக்க வல்லதே; அறிவை வளர்ப்பது மிகவும்

நன்றே யாயினும் அருளைக் கைவிட்டு அறிவை மட்டும் பெருக்கு வது பெருங்கேடாம். புத்திமான்களா யிருப்பவர் அருளையும் அறிவையும் ஒருங்கே போற்றக்கடவர். இனி உதாரண முகத் தால் அருளைச் சில கதைகளால் விளக்குதும்.

## அருள்விளை கதைகள்

### அருளால் நிலைபெற்ற தீபஸ்தம்பம்

ஆங்கில நாட்டின் தென்கிழக்கு மூலையில் கடற்கரையோரமாக விருக்கும் ஓர் பாறையில் கடலிற் றிரிதரும் கப்பல்களுக்கு வழிகாட்டியாக அமையுமாறு ஓர் தீபஸ்தம்பத்தைக் கட்டினார்கள். கடவுளாணையால் கரையின்றி யமைந்த சமுத்திரமோ சில மாதங்களில் அதனை யுடைத்தெறிந்தது. மற்றும் ஒன்றைக் கட்டினர். அதனையும் கடற்கர்த்துத் தள்ளிற்று. இங்ஙனம் ஓர் தம்பமும் நிலையாதிருப்பதைக் கண்ட அருள் வயப்பட்ட ஓர் சிற்பி (An Engineer) ஈசனருளை நெஞ்சத்திருத்தி ஓர் தீபஸ்தம்பத்தைக் கட்டுவித்து அதனடியிற் கீழ்க்கண்ட வேத வசனத்தைக் கல்லிற் பொறித்தார்.

Except the Lord breedeth the house they labour in vain that build it.

[ஈசனே கட்டின் நிலைபெறுவதன்றி மாந்தர் கட்டும் வீடு நிலை பெறுமோ ?]

அதுமுதற்கொண்டு அக் கலங்கரை விளக்கம் நிலைத்து நின்றது.

இதுவே Eddystone Light House.

### அருளைக்காட்டிய ஆசிரியர்

ஆங்கில நாட்டில் ஓர் பிரபு தனது குமாரனை எல்லாக் கலைகளும் நிறைந்தவோர் ஆசிரியரிடம் அகலாத அணுக்குத் தொண்டனாக வமையும்படி பணித்தார். அங்ஙனமே சிறுவன் ஆசிரியரைவிட்டுப் பிரியாது கலைகளைப் பயின்று வருநாளில் வழக்கம் போல் இருவரும் ஓர்நாள் உலாத்தச் சென்ற போழ்து ஒருசெடியில் அங்கி தொங்க அதனடியிற் காலிற்கிடும் பூட்ஸ் (boots) இரண்டும் காணப்பட்டன. இவை அயலே வயிலில் வேலைசெய்து

கொண்டிருந்த வோர் கிழவரது உடைமை. இவர் எளியவராதலின் வயிற்றுப்பாட்டிற்காக இவற்றை யிங்ஙனம் களைந்து வைத்துவிட்டு புலத்திற் பாடுபட்டுக் கொண்டிருந்தார். சிறுவன் ஓர் விளையாட்டைச செய்யலாமென வெண்ணி தனது ஆசிரியரிடம் 'நான் இந்த பாதரக்ஷைகளிரண்டையும் ஒளித்து வைத்து விடுகிறேன்; நாமிருவரும் மறைந்திருப்போம். வேலை முடிந்து கிழவர் வந்து திண்டாட்ட முறுவதைக் கண்டு மகிழ்வோ' மென்றனன்.

அப்பொழுது, ஆசிரியர் இளைஞனைப் புன்முறுவலோடு நோக்கிக் 'குழந்தாய், நீ விரும்புவது பாவமற்ற சிறிது ஆனந்தம். நீ கருதும் விளையாட்டால் உனக்குச சிறிது களிப்பு விளையுமாயினும் ஏழையாகிய கிழவர் மனம் புண்படும். நான் ஓர் சூழ்ச்சி சொல்கிறேன். அங்ஙனம் செய்வையாயின் உனக்கு ஆனந்தம் பிறப்பதுடன் கிழவருக்கும் ஆனந்தம் பிறக்கும்; எனக்கும் பரம சுகத்தை நல்கும்' என்றார். உடனே இளந்தோன்றல் அவரை நோக்கித் 'தாங்கள் கூறும் வண்ணம் செய்ய வோர் தடையுமில்லை; உடனே வெளியிடுக' வெனக் கெஞ்சினன். ஆசிரியர் தனது மாணவனை மிக்க வருளுடன் நோக்கிக் 'குழந்தாய், நீ யோர் குறைவற்ற செல்வவான்; இவ்வெளிய கிழவரது பாதரக்ஷைகளிரண்டினுள்ளும் ஒவ்வொன்றிலும் ஒரு சிறிய தங்கக் காசை வைத்துவிட்டு நாமிருவரும் மறைந்திருக்கலாம்; அப்போது நிகழ்வதைக் கண்டு களிப்பாம்' 'எனக் கூறினர். அங்ஙனமே பிரபுவின் குமாரன் செய்தலும், இருவரும் ஓரிடத்தில் மறைவிருந்தனர். சூரிய பகவானும் அத்தமித்தார்.

இருள் கவியவே புலத்தில் வேலை செய்துகொண்டிருந்த கிழவர் அதனை விட்டு நீங்கித் தனது குப்பாயமும் பாதரக்ஷைகளும் இருக்குஞ் செடியைக் குறுகி அங்கியை அணிந்து கொண்டபின் பாதரக்ஷைகளைக் காலிற் பூட்டுதற்காக வலதுகாலைத் தமது பாதரக்ஷைகளிலொன்றிற் புகுத்தவே உள்ளிருந்த பொற்காசு காலில் உறுத்திற்று. உடனே காலை எடுத்துவிட்டு பாதரக்ஷைக்குள்ளிருப்பது யாதெனக் கையிலெடுத்துப் பார்த்தவளவில் சாயங்கால வெளிச்சத்தில் காசு மினுக்கென ஒளிவீசிற்று. கிழவரெவரேனுந் தமக்கு வம்பு செய்யக் கருதிய சூழ்ச்சியோ வெனச் சுற்றுமுற்

றும் பார்த்தார்; ஒருவரும் தென்படவில்லை. உடனே அவர்பாலெழுந்த வானந்த மேலீட்டை என் சொல்வேன்! மிகக் கொடிய வறுமையால் மொத்துறும் தமக்கு ஈசனே யருள் புரிந்ததாகக் கருதி அக் கிழவர் வானத்தை நோக்கி 'ஈசா இன்று கிடைத்த சொற்ப கூலியைக் கொண்டு எங்ஙனம் வீடு செல்வேன், கடன்காரர்களுக்கு என சொல்வேன், குழந்தைகளை எங்ஙனம் பசி ஆற்றுவேனென மிக்க துக்கத்திலாழ்ந்து நின்ற எனக்கு இன்று விசாரத்தை யகற்றிய நினதருளிற்கு மிகவும் வந்தனம்' எனக்கூறி இடது காலைத்தமது பாதரக்ஷையிற் புகுத்தவே மற்றுமொரு தங்கக்காசு கிட்டிற்று. இதனைக் காணவே கிழவர் மிகவும் பரவசமுற்று முழந்தாட்பணியிட்டு 'எங்கும் நிறைந்த பொருளே, எளியேனென்பால் பேரருளைச் சுரந்து விட்டாய் போலும். எனக்கிருக்கும் கடன்கள் யாவும் ஒழியும். சிலநாள வரை வயிறார ஆகாரமுங் கிடைக்கும். குழந்தைகள் மகிழ்வர், மனைவியும் களிப்படைவள், இங்ஙனம் ஓர் சிறிதும் எதிர்பாராத நன்மையை விளைத்த கருணைத்திறத்திற்கு வணக்கம்' எனப் பன்முறை இருகண்களிலும் ஆனந்த அருவி பொழிய, வணங்கினன். இதனை மறைவிலிருந்து கண்ணுற்ற ஆசிரியரும் மாணவகனும் தாமும் அருள்வயப்பட்டுக் கண்களில் நீர்ததும்பி நின்றனர். அப்போழ்து ஆசான் தமது இளந்தோன்றலை நோக்கி, 'இளையாய், நீ புரிந்த செயல் எத்தகைய இன்பத்தைப் பயந்தது! கிழவரிடமும் நம்மிடமும் எத்தகைய வுயர்ந்த தெய்வசிந்தையை விளைவித்தது! இதுமட்டோ! இக்கிழவர் தமது வீடு சென்றவுடன் தமக்குத் தெய்வம் புரிந்த எவரும் எதிர்பாராத உபகாரத்தை மனைவிக்கும் குழந்தைகளுக்கும் தெரிவிக்கவே அக்குடும்பமுழுதும் எத்தகைய பேரின்ப சுகத்துள் ஆழும்; உனது தந்தையாரிடம் நீ புரிந்த அருட்செயலை யுரைப்பின் அவருக்கு எத்தகைய சுகம் விளையும்! இதுவே அருள் விளையாட்டு' எனக்கூறினர் சிறுவன் தான் பிறந்தது முதற் காணாத பேரின்பத்தைத் தனக்குத் தனது வாத்தியார் விளைவித்த அற்புத உபதேசத்தை என்றும் மறவாத சிந்தையனாய் மேன்மேலும் அறிவிற் பெருக்கமடைந்து அருளையும் வளர்த்து வந்தான்

**Printed by Sivakami Vilasam Press: Published by V. Subbiah for The S. I. S. S. W. P. Society, Ltd., Madras.**



தடாதகைப் பிராட்டியார் திருமணம்
(இதனைத் தந்தத்தில் செய்தவர் திருநெல்வேலி எம். சுப்பிரமணிய ஸ்தபதி.)

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள்தோறும் வெளிவருவது


| | | |
|---|---|---|
| சிலம்பு ௫ | மெய்கண்டான் ஆண்டு-௭௱௩ மார்கழித்திங்கள்<br>1925௵ டிசம்பர்௴—1926௵ ஜனவரி௴ | பரல் ௧௨ |


திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## இறையனார் அகப்பொருள்


[கா. சுப்பிரமணிய பிள்ளை M.A., M.L.]



(௪௭௯-ம் பக்கத் தொடர்ச்சி)


தலைவன் இடமணித்து என்று கூறினமையால் தலைவி தெளிந்தா ளென்னுங் கருத்தை ஒரு துறையாக வைத்துத் தஞ்சைவாணன் கோவையார் செய்யுள் செய்துள்ளார். இது திருச்சிற்றம்பலக் கோவையாருட் காணப்படவில்லை. ஆதலால் இது பிற்காலத்து முறையென்று கொள்ளவேண்டியதா யிருக்கிறது.

"எத்துந் தமதுரை தேறிநின் றேனையிங் கேதனியே
வைத்தங் ககன்று மறைந்துறை யார்........."

என்றது காண்க.

இதை இன்னொரு முறையாகத் திருவள்ளுவரது காதற் சிறப்பின்கூண் காணுதல்கூடும். காதலர் தனது உள்ளத்தில் என்ஞான்றும் உறைவதினால் அவர் பிரிந்தாரென்பது தவறென்று தலைவி கூறுவதாகத் திருக்குறட் செய்யுளொன்று அமைந்திருக்கின்றது.

"உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவர்
ஏதில ரென்னுமிவ் வூர்" —குறள்

இன்னும் புதுவதாய துறைச் செய்யுளொன்று தஞ்சைவாணன் கோவையுட் காணப்படுகின்றது. அதாவது தலைவி அணிந்த அணிகள் இருவருங் கலந்தகாலை வேறுபாடெய்தியிருத்தலைக் கண்ட தலைவன் தலைமகளைத் தெளிவித்தற்பொருட்டு அவ்வணிகளைப் பாங்கியணிந்தவாறே தானுமணிந்ததாகக் கூறித் தெளிவுபடுத்துவது. இது தஞ்சைவாணன் கோவையுள் பிரிவச்சத்திற்கு முன்னே கூறப்பட்டுள்ளது. களவியலுரையுள், தலைவியைப் பிரிவறிவுறுத்துவதற்குமுன் தலைவன் 'கருங்குழற் கற்றை மருங்கு திருத்தி அளகமும் நுதலுந் தகைபெறநீவி ஆகமுந் தோளும் அணிபெறத் தைவந்து குளிர்ப்பக் கூறினன்' என்று மொழியப்பட்டது. இதன்கருத்தை விரித்தோ, பிற எக்காரணம் பற்றியோ தஞ்சைவாணன் கோவையுட் கூறிய துறை அமைந்திருத்தல் கூடும். அது நம்பியகப்பொருளுள் ஐயந்தீர்த்தல் என்ற துறையின்பாற் படுமென்பர்.

"நாவியுங் காரகி லாவியுந் தோய்குழ ஞணியஞ்சேல்
வாவியுஞ் சோலையுஞ் சூழ்தஞ்சை வாணன்றென் மாறைவயற்
காவியுஞ் சேலுங் கமலமுங் காட்டுநின் கண்மலரும்
ஆவியும் போலினி யாரணி யாக வணிந்தனனே."

—தஞ்சைவாணன் கோவை

'அணிகள் திருத்தல்' என்பது களவியல் உரையுள் இடந் தலைப்பாடு, பாங்கற்கூட்டம் என்பவற்றிற்குப் பின் வருவதாகக் கூறப்பட்டது. தஞ்சைவாணன் கோவையுடையார் தமது கருத்துக் கேற்றவாறு துறைகளை முன்னும் பின்னும் மாறிவைத்தல் முன்னேயே சுட்டப்பட்டது.

இனி இருவரும் முதலிற் கண்டு கலப்பதற்குமுன் விளையாட்டுக் காரணமாகவே பொழிலிடத்து தலைவி வந்தமையால், இடமணித் தென்றபின் பிரிவுணர்த்துங்காலை தலைவன் தலைவியை நோக்கி நீ சிறிது விளையாடு, நான்போய் விரைவில் வருகின்றேன் என்று கூறுதல் மரபு. அதனை ஒரு துறையாகக் களவியல் உரையாசிரியர் கூறவில்லை. ஆசிரியர் தொல்காப்பியனாரும் அதனைத் தெளிவாக எடுத்துக் கூறிற்றிலர். திருச்சிற்றம்பலக்கோவையாருள் அது இடமணித்தெனக் கூறிய துறையின் அமைந்துள்ளது. அத்துறையையே 'பிரிந்து வருகென்றல்' என்னுந் துறைக்கீழ்த் தஞ்சைவாணன் கோவையுடையார் கூறினார். ஆயின் அதனை இடமணித்து என்னும் துறைக்குமுன் வைத்தார். பிரிவு கூறியபின் தலைவன் ஊர்சேய்த்தோ அணித்தோ வென்று தலைமகள் கவலைப்பட இடம் அணித்து என்று தலைவன் கூறியதாகத் தஞ்சைவாணன் கோவையுள் செய்யுட்கள் அமைந்துள்ளன. ஆதலால் ஆடிடத்துய்த்தல் என்பது சிறப்பாகத் திருச்சிற்றம்பலக் கோவையாருட்டான் காணப்படுகின்றது. ஆனால் மேற்குறித்த இரு கோவைச் செய்யுட்கும் பொருள் ஒன்றே.

> "..........முன்னியாடுபின் யானளவா
> வெளிவளர் தில்லையொருவன் கயிலையுகுபெருந்தேன்
> றுளிவளர்சாரற் கரந்துங்ஙனேவந்து தோன்றுவனே"
>
> —திருக்கோவையார்

> "..........ஊங்குயர் சோலையி னூடொளித்து
> நின்றே வருவலிங் கேவிளை யாடுக நீ சிறிதே."
>
> —தஞ்சைவாணன் கோவை

தஞ்சைவாணன் கோவையுள் பிரியேன் என்று கூறிய செய்யுளுக்கு அடுத்த பாட்டில் பிரிந்து வருகென்றல் கூறப்

படுதல் அத்துணைப் பொருத்தமுடையதல்ல. பிரிவச்சங் கூறிய பின் வன்புறை நிகழ்ந்தே பிரிவு நேர்தல் முறை. அக்கோவையுள் இடமணித்து என்றதற்குப் பின் மேற்கூறிய செய்யுளையே அமைத்து ஆடிடத்துய்த்தல் என்று அதனை வழங்குதல் கருதத் தக்கது. இத்துறைக்குப் பின் தலைவி மீண்டு ஆயவெள்ளத்தை அடைந்தகாலை அவளது அருமை நோக்கித் தான் அவளோடு கலந்தது கனவோ நனவோவென்று எண்ணுதல் அருமையறிதல் என்னுந் துறையாகும். இதற்குக் காரணம் தலைவி பிரிந்து சென்ற காலை தலைவன் ஒரு மருங்கு மறைந்து அவள் செலவைப்பார்த்து நிற்பதே. இது களவியல் உரையுள்ளும் விளக்கமாகக் கூறப் பட்டது. 'தான் கலந்தது கனவோ நனவோவென்றும் மெய்யோ பொய்யோ வென்றும் ஐயுறுவதாகவும், கனவே, பொய்யே என்று திரிபுணர்ச்சி எய்துவதாகவும் செய்யுள் வருதல் காண்க.

"கனவே நனவாய்விடினு மெய்த்தா தினிக் கண்ணுறவே"

'புணர்ப்போ கனவோ பிறிதோ அறியேன் புகுந்ததுவே'

—திருக்கோவையார்

"........பெண்ணணங்கின்
திருநலஞ்சேர்ந்ததெல்
லாங்கனவே யென்று சிந்திப்பேனே"

"பொய்யே யினிமெய்ம்மையா யினுமில்லைப்புணர் திறமே"

தஞ்சைவாணன் கோவையுள் அருமையறிதல் என்பது நிகழ்வதற்குமுன் செல்லுங்கிழவியின் செலவுகண்டு உளத்தோடு சொல்லல் என்னும் ஓர்துறையும் பாகனொடு சொல்லல் என்னும் ஓர் துறையும் காணப்படுகின்றன. இத்துறைகட்குச் செய்யுள் பண்டை நூல்களிலுங் காணப்படுகின்றது. அது பின்வருமாறு:

"காணு மரபிற் றுயிரென மொழிவோர்
நாணிலர் மன்ற பொய்ம்மொழிந் தனரே
யாஅங் காண்டும்மே யரும்பெற லுயிரே
சொல்லு மாடு மென்மெல வியலுங்

கணைக்கா னுணுகிய நுசுப்பின்
மழைக்கண் மாதர்ப் பணைப்பெருந் தோட்டே''

இதனைக் களவியல் உரையாசிரியர் அருமையறிதல் என்னும் துறைக்குப்பின் தலைவன் இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த இடம் விட்டு நீங்குங்கால் கூறிச் செல்வதாக அமைத்துள்ளார்.

''என்னுயிராயத் திடையிதுவோ நின்றியங்குவதே.''

என்றது காண்க.

இத்துறைக்குக் கூறிய செய்யுட்கள் பலவுள்ளும் தலைவியைத் தலைவன் தனது உயிராகக் கருதுவதாக மொழிகின்றமையால் அவளோடு பின் சேர்வதற்கு இருமுறையுள் ஒன்றினைக் கைப்பற்றுவானென்பது உணரக் கிடக்கின்றது. களவொழுக்கம் கூடாதென்று தலைவன் கருதுவானாயின் அவளை மணத்தற்கு முயல்வன். அங்ஙனங் கருதானாயின் மீண்டும் கூட்டத்திற்கே முயல்வன். அருமையறிந்து ஆற்றானாகிய தலைமகன் தலைமகள் ஆயத்தொடு செல்லாநின்றபோது அவளை நோக்க அவள்தனக்கு மிகவும் நெருங்கிய நட்புடைய தோழியொருத்தியையே பலகால் கடைக்கண்ணால் பார்க்கக் கண்டு அவள் வாயிலாகத் தனது கருத்து நிறைவேறப் பெறலாமென்று உணர்ந்து ஆறுதல் அடைதல் ஓர்முறை. அது திருச்சிற்றம்பலக் கோவையாருள்ளும் தஞ்சைவாணன் கோவையுள்ளும் கூறப்பட்டது. களவியல் உரையாசிரியர் அதனை விரித்திலர். களவியல் ஐந்தாம் சூத்திரத்துள் தோழிமாட்டு இரந்து குறையுறுதல் என்பதனால் அது பெறப்படும்.

''திருமான் முகமலாச் சேயரி பாய்கயல் சென்றுசென்றவ்
வொருமா னகைமுக மாமல ரோடை யுலாவருமே.''

—தஞ்சைவாணன்கோவை

பாங்கியறிதல் என்ற துறையோடு இயற்கைப் புணர்ச்சியென்னும பகுதியானது முடிகின்றது. அதற்குப்பின் தலைவன் களவொழுக்கம் மேல் நிகழ்த்தக் கருதியகாலை தனது பாங்கனால் அது வாய்க்கப் பெறுதல் பாங்கற் கூட்டம் எனப்படும். அவ்வா

றன்றி மீட்டும் முன்னிடத்திற்கே சென்று தலைவியைக் கண்டு கூடுதல் இடந்தலைப்பாடு என்று கூறப்படும். இவ்விரண்டும் எல்லா நூல்களானும் கூறப்பட்டனவே. ஆசிரியருட் சிலர் இடந் தலைப் பாட்டினைப் பாங்கற் கூட்டத்திற்கு முன் அமைத்துள்ளார் கள். பாகனொடு கிளத்தல் தஞ்சைவாணன்கோவையுள் மாத்தி ரமே இயற்கைப் புணர்ச்சிப்பகுதியுள் காணப்படுகின்றது. பார்த் திபற்குக் கண்ணன் அமைந்ததுபோல, பாகனே பாங்கனுயிருந்தா லொழிய அத்தகைய கூற்று நிகழ்தல் சாலாதென்க. அதுவும் இயற்கைப் புணர்ச்சியுள் அமைவதில்லை. களவொழுக்கத்துள் தானே கூடுதல், பாங்கன் கூட்டக்கூடுதல் என்பனவே பெறப் படும். பாங்கி கூட்டக்கூடுதல் என்பது கிடையாது. பாங்கி வாயிலாகத தலைவன் குறையிரந்து நின்று 'தலைவியைச் சேருதல் தலைவன் தானே கூடுதல் என்னும் பகுதியுள் அடங்கும். தலை வன் குறையிரந்து நில்லாதவிடத்து பாங்கனைப்போலத் தானாக இருவரையும் கூட்டுவதில்லை யாகலினென்க. தலைவன் பின் கூட்டத்திற்கு வெளிப்படையாக முயல்வதுபோலப் பாங்கி வாயி லாகத் தலைவி முயலாமையுங் காண்க. களவொழுக்கத்திற்கே யுன்றி வரைவு நிகழ்தற்கும் பாங்கன் வாயிலாவா னாகலின் பாங்கற் கூட்டம் ஓர் சிறந்த பகுதியாகும். அது பின்வரும்.

(தொடரும்)

---

# கண்ணகி கற்புமாண்பு

[திருச்சி பண்டிதர், மு. வேங்கடசாமி நாட்டார்]

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்."

குமரியொடு வடவிமயத் தொரு மொழிவைத் துலகாண்ட வேந்தர் பெருமானாகிய இமயவரம்பன் நெடுஞ் சேரலாதற்கு மைந் தரும் ஆரியமன்னர் ஈரைஞ் ஞூற்றுவர்க்கு ஒருதானாகி அமர் கடந்து இமிழ்கடல் வேலியைத் தமிழ் நாடாக்கிய சேரன் செங் குட்டுவனென்னும் வீரருள் வீரற்கு இளையாரும் ஆகித் தமி

ழெனும் அளப்பருஞ் சலதியைக் கடந்து நின்று, சிந்தை செல்லாச் சேணெடுந் தூரத்து அந்தமில்லின்பத்து அரசாள் வேந்தாகப் பற்றறத் துறந்த இளங்கோவடிக ளென்னும் நற்றவக்குரிசில் தமிழகத்தின் பல்வகைப் பெருமைகளையும், தமிழ்மொழியின் ஒப்புயர்வற்ற மாட்சியையும் விளக்குவதாகத் தமது முத்தமிழ்ப் புலமையும் வித்தகக் கவித்திறலும் தோன்ற ஓர் காப்பியம் இயற்றக் கருதியிருந்தனர். இருந்தார்க்குத் தக்கதோர் செவ்வியும் வாய்த்தது. அஃதென்னை யெனின், செங்குட்டுவன் மஞ்சு சூழ் சோலை மலைவளங் காணற்பொருட்டுத் தேவியாகிய வேண்மாளுடன் நால்வகைப் படையும் புடைசூழப் புறப்பட்டு வந்து பேராற்றங் கரையிலுள்ள மணற்குன்றிலே தங்கி யிருப்பானாயினன். இளங்கோவடிகளும் உடன்வந்து அவணிருந்தனர். மலைவாணராகிய வேட்டுவர்கள் ஒருங்கு திரண்டு யானை வெண்கோடும், அகிலின் குப்பையும், மான்மயிர்க் கவரியும், மதுவின் குடங்களும், சந்தனக் குறையும், சிந்துரக் கட்டியும், அஞ்சனத் திரளும், அணியரிதாரமும், ஏல வல்லியும், இருங்கறி வல்லியும், மற்றும் பல பலவுமாகிய மலைபடு பொருள்களைக் காணிக்கையாகச் சுமந்து வந்து தந்து, செங்குட்டுவனை நோக்கி 'மன்னவர் மன்ன, ஏழ்பிறப்படியேம் வாழ்க நின்கொற்றம்; யாம் வாழும் மலைப் பக்கத்தில் ஒரு வேங்கை மரத்தின் நிழற்கண்ணே கொங்கை யொன்றிழந்த நங்கையாகிய பத்தினி யொருத்திவந்து நின்றாள்; அவள்பொருட்டு இந்திரன் றமர்வந்து திரண்டு, அவளது காதற் கொழுநனை அவட்குக் காட்டி, அவளோடும் எங்கள் கண்காணும் படியாக விண்போயது பெரியதோர் வியப்பா யிருந்தது; அவள் எந்நாட்டாள் கொல், யார் மகள் கொல்லோ அறிந்தருள்க' என்று சொல்லிப் போயினர். தண்டமிழாசானாகிய மதுரைக் கூல வாணிகன் சாத்தனார் அப்பொழுது அங்குவந்து செங்குட்டுவனைக் கண்டு களிப்புற்றிருந்தவர், தீவினைச் சிலம்பு காரணத்தாற் கோவலன் கொலையுண்டது முதலாக மதுரையில் நிகழ்ந்த வரலாறனைத்தையும் அரசற்குக் கூறினர். அவனுடன் கேட்டுக்கொண் டிருந்தார் இளங்கோவடிகள். அடிகளின் மாசற்ற உள்ளத்தில் மூன்று சிறந்த நீதிகள் ஊன்றிப் பதிந்தன. அவை,

அரசநீதியிற் சிறிது பிழைப்பினும் அவ்வரசரை அறக்கடவுளே கூற்றமாய் நின்றுகொல்லு மென்பதும், புகழமைந்த பத்தினியை மக்களேயன்றித் தேவரும் முனிவரும் முதலாயினோர் ஏத்துவ தியல் பென்பதும், ஊழ்வினையானது அதன் பயனை நுகர்வித்தல் ஒரு தலையென்பதும் ஆம். இம் மூன்றுஞ் சிலம்பு காரணமாக நிகழ்ந்தமையின் சிலப்பதிகாரம் என்னும் பெயரால் ஓர் காப்பியம் இயற்றல் வேண்டுமெனத் துணிந்தனர். தாம்கேட்ட வரலாற்றிலிருந்து அடிகள் தாம் இயற்றப் போகும் காப்பியத்திற்குப் பாவிகம் எனப்படும் உள்ளுறை அமைத்துக்கொண்ட வியப்பைக் காட்டிலும், அதற்குப் பெயர் தந்த வியப்பு மிகவும் பெரிய தொன்றாகும். வரலாற்றுடன்பொருந்திய மூன்று உள்ளுறைகளை ஒருங்கு தெரிப்பதாய், அதனை (பெயர்) தன்னை ஆராய்ந்த துணையானே காப்பியத்தின் பண்பினை யுணருமாறு உதவி புரிவதாயுள்ள பிறிதொரு பெயர் யாதுளது? இங்ஙனம் துணிந்து வைத்த அடிகள் சாத்தனாரைப் பார்த்து,

"அரசியல் பிழைத்தோர்க் கறங்கூற் றாவதூஉம்
உரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலும்
ஊழ்வினை யுருத்துவந் தூட்டு மென்பதூஉம்
சூழ்வினைச் சிலம்பு காரண மாகச்
சிலப்பதிகார மென்னும் பெயரால்
நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்"

என்று கூறினார். சாத்தனாரோ

"முடிகெழு வேந்தர் மூவர்க்கு முரியது
அடிகள் நீரே யருளுக"

என்றனர். என்றலும் இளங்கோ வடிகள் தமிழ்த்தெய்வத்தின் திருவடிச் சிலம்பாகிய இதனைத் தமிழ் மக்களின் செவியகத்தே ஒலித்துக்கொண்டிருக்குமாறு இயற்றி யளித்தனர். முத்தமிழ்ப் புலமை சான்று இதற்கு அரியதோர் உரைவகுத்தருளிய அடியார்க்கு நல்லாரே இக்காப்பியத்தின் பெருமையைக் குறித்து,

"எழுத்தின் றிறனறிந்தோ வின்சொற் பொருளின்
அழுத்தந் தனிலொன் றறிந்தோர்—முழுத்தும்
பழுதற்ற முத்தமிழின் பாடற் குரையின்
றெழுதத் துணிவதே யான்."

என்று கூறியிருப்பரேல் இதன் அருமை பெருமைகளை நாம் எங்ஙனம் அளவிட்டுரைத்தல் சாலும்? இனி, இளங்கோவடிகள் இத்தொடர்நிலைச் செய்யுட்குத் தலைசிறந்த மூன்று நீதிகளை உள்ளுறையாகக் கொண்டார் எனினும், அவற்றுள் இடைநின்ற பத்தினியை உயர்ந்தோர் ஏத்தலுண்டென்பதில் அவர் பெருநோக்குடையரென்பது தெளிவாகின்றது. என்னை? பதிகத்தின் பின்னர் இவ்வுரை யிடையிட்ட பாட்டுடைச் செய்யுளின் முதற்கண் நிற்பது உரைபெறு கட்டுரை. அதில், அடிகள்,

க. "அன்று தொட்டுப் பாண்டியனாடு மழைவறங் கூர்ந்து வறுமையெய்தி வெப்பு நோயுங் குருவுந் தொடரக் கொற்கையிலிருந்த வெற்றிவேற் செழியன் நங்கைக்கு..........விழவொடு சாந்திசெய்ய நாடுமலிய மழைபெய்து நோயுந் துன்பமும் நீங்கியது."

உ. "அதுகேட்டுக் கொங்கிளங் கோசர் தங்கணாட்டகத்து நங்கைக்கு விழவொடு சாந்திசெய்ய மழை தொழிலென்றும் மாறாதாயிற்று."

ங. "அஃதுகேட்டுக் கடல் சூழிலங்கைக் கயவாகு வென்பான் நங்கைக்கு நாட்பலி பீடிகை கோட்டமுந்துறுத்தாங்கு அரந்தை கெடுத்து வரந்தரு மிவளென ஆடித்திங்க ளகவயினாங்கோர் பாடிவிழாக்கோள் பன்முறை யெடுப்ப மழை வீற்றிருந்து வளம் பல பெருகிப் பிழையா விளையுளுடாயிற்று."

ச. "அதுகேட்டுச் சோழன் பெருங்கிள்ளி கோழியகத்து எத்திறத்தானும் வரந்தரு மிவளோர் பத்தினிக் கடவுளாகுமென நங்கைக்குப் பத்தினிக்கோட்டமுஞ் சமைத்து நித்தல் விழாவணி நிகழ்வித்தானே."

என, தமிழ் நாட்டரசர்களும் இலங்கை யரசனும் கண்ணகியைத் தெய்வமாகவே கொண்டு அவட்குக் கோட்டஞ் சமைத்துத் திரு

விழா முதலியன புரிந்தமையையும், அதனால் அவரவர் நாட்டில் மழை வளம்பெருகி, நோயும் துன்பமும் நீங்கினமையையும் கூறியருளினர். இக்காப்பியத்தின் இறுதியிலுள்ள வரந்தருகாதையில் சேரன் செங்குட்டுவன் பத்தினிக் கோட்டம் வகுத்து நித்தல் விழாவணி நிகழுமாறு நிபந்தஞ்செய்து, கோயிலை மும்முறை வலமாகவந்து வணங்கிநின்றபொழுது, சிறையினின்றும் நீங்கிய ஆரியமன்னர்கள் முதலாயினோரும், குடகக்கொங்கரும், மாளுவ வேந்தரும், கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும் தத்தம் நாட்டிலே சேரர் பெருமானின் நாளணி வேள்விசெய்யும்பொழுது வந்து அருள்புரிய வேண்டுமென வணங்கிவேண்டாநிற்க 'வரம் தந்தேன்' என்றோர் ஒருகுரல் எழுந்தது; என்று கூறப்பெற்றுளது. இதன்பின்னே நிகழ்ந்த வரலாறாகிய, அரசர் பலர் பத்தினிக் கோட்டஞ் சமைத்து விழாக்கொண்டாடியதனை, இளங்கோவடிகள் காப்பியத் தொடக்கத்திற்றானே கூறிவைத்தது அவர் பத்தினியை யேத்துங் குறிப்பினராதலை நன்கு புலப்படுத்தும். இதனைக்கற்கப்புகுவார்க்கும் அத்தகைய குறிப்பு நிகழவேண்டுமென்பதும் அடிகள் கருத்தாதல் கூடும். இந்நுட்பங்களை வுணர்ந்தன்றே இதற்கு உரைவகுத்த அடியார்க்கு நல்லார், மங்கலவாழ்த்துப்பாடல் உரைக்கண் "கண்ணகியை முற்கூறினர், பத்தினியை யேத்துதல் உட்கோளாகலான்" என்று கூறிவைத்தனர். அரும்பதவுரைகாரரும் "இவளை முன் கூறிற்று, கதை நாயகியாதலின்" என்றனர். எனவே, இக்காப்பியத்திற்குப் பிறிதொரு பெயர் கூற வேண்டுமென்னில் 'கண்ணகி கற்பு' என்று கூறுதல் சாலும். இராமாயணம் என்பதற்குச் 'சிறையிருந்தாளாகிய சீதையின் ஏற்றங் கூறுவது' என்று ஒருசார் அறிஞர் பொருள் கொள்ளுதலுங்காண்க. ஆனால், அங்கே, இராமன் காப்பியத்தலைவனாதற்கு வேண்டிய இலக்கணமெல்லாம் ஒருங்குடையனா யிருத்தலின் 'இராமவதாரம்' என அதற்குப் பெயர் கூறுதல் சாலும். இங்கே கோவலன் அத்தகையனல்லன். கண்ணகியே தலைவி யாதல் வேண்டு மென்க. இனி, கண்ணகியின் உயரிய பண்புகளாக இக்காப்பியத்தால் அறியலாவனவற்றை எடுத்துக்காட்டுதும்.

(தொடரும்)

# நம்பியாண்டார் நம்பிகள்

[வேலூர் C. S. இராஜாப்பிள்ளை]

(௪௭௫-ம் பக்கத் தொடர்ச்சி).

## நம்பிகள் அருளிய விநாயகர் இரட்டைமணிமாலை

என்னை நினைந்தடிமை கொண்டென் னிடர்கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான்—புன்னை
விரசு மகிழ்சோலை வியனுறை யூர்முக்கண்
அரசுமகி ழத்திமுகத் தான்.

திருவருள் பெறுதற்குரிய னல்லே னெனத் தன்னைக் கருதிய வாற்றால், "என்னை நினைந்து" எனத் தன்னை இழிவுபடுத்திக் கூறினார். அன்றி என்னை நினைந்தது எனக்கே அதிசய மாகின்ற தெனவுங் கூறலாம்.

சிவபெருமான் தாமாகவே அருள் செய்தாலன்றி, உயிர்கள் எவ்வித இடையூறும் நீங்கப்பெறாராகலின், 'அடிமை கொண்டு என் இடர்கெடுத்து' என்றார். அப்பெருமானைத் தியானிப்பதும் அவர் உணர்த்தினாலல்லது ஆகாதென்பது போதர, "தன்னை நினையத் தருகின்றான்" என்றார்.

"தொண்டனேன் நுகருமா நுகரே"

"புந்திப் பரிவிற் குருளையை ஏந்திய பூனையைப்போல், எந்தைக் குரியவன்கா ணத்தனே கயிலாயத்தனே" என்பன முதலிய அருமைத் திருவாக்குகளும் உணரற்பாலன.

இந்நகர்த் தலவிருக்ஷம் புன்னை மரமாகலின், சோலையைப் புகழ்வார் அதனையுங் கூட்டி "புன்னை விரசு மகிழ்சோலை" என்றார். "சோலை வியனுறையூர்" என்பது நீர்வள நிலவளங்கள் அமையப்பெற்ற தென்பதை உணர்த்தும்.

முக்கண் அரசு - சிவபெருமான். முக்கண் - சூரியன், சந்திரன், அக்கினி. எல்லா உயிர்கட்குந் தலைவனாகலின் 'அரசு' என்றார்.

மகிழ் அத்திமுகத்தான் = மகிழ்தற் கேதுவாகிய விநாயகர். அத்தி = யானை; கரமுடைய தாகலின், கரியென்பது போல.

எந்நாளும் இன்பந் தருகின்றானாகலின் "முக்காலத்தினு மொத்தியல் பொருளைச், செப்புவர் நிகழுங் காலத்தானே" என்னும் இலக்கண முறைப்படித் "தருகின்றா" னென நிகழுங் காலத்தாற் கூறினார்.

இவ்வெண்பா மிகுந்த பொருளாழ முடையதாயும், சொல் நயம் பொருந்தியதாயும், பல சாத்திரக் கருத்துக்களை யுடையதாயும், இலக்கண நயந்தழுவியதாயும் இருப்பது காண்க.

இந்நம்பிகளியற்றிய பிரபந்தங்கள் பெரும்பாலனவும் அகப்பொருள் தழுவியும், சிறுபாலன புறப்பொருள் தழுவியும் இருத்தலினாலும், பலவகைப்பட்ட செய்யுட்களுடன் நூல்கள் முடிந்திருப்பதனாலும், பொருள் இலக்கணம் யாப்பிலக்கண முதலிய வற்றில் தெளிவுபெற்றுத் தேறிய புலவர்சிகாமணி யென்பதும் போதரும். (கலம்பகம் ௬எ.) "கருமங்கேண்மதி" எனத் தொடங்கும் அகவற்பாவில் ஆற்றுப்படை யிலக்கணம் அமைந்திருக்கிறது. பொருள் வேட்டாரொருவர் ஒரு வள்ளலை யடைந்து தாம் பெற்ற வளப்பங்களைத் தம்மெதிர்ப்பட்ட வறிஞர்க்குணர்த்தி அவரை அவ்வள்ளல்பாற் செலுத்தலே ஆற்றுப்படையாம்.

"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்"
(தொல் - பொ - புறம் ௩௬.)

என்ற சூத்திரத்தான் இஃதுணரற்பாற்று.

ஆறு - வழி. படை - படுத்தல்; எனவே வழிவந்தா னொருவனை வழிப்படுத்தல் என்பது பொருளாம்.

இது பாணரைப்பற்றியதாகலின், பாணாற்றுப் படையாம்.

"கருமங் கேண்மதி கருமங் கேண்மதி
திருமதிப் பாண கருமங் கேண்மதி

.................................... ..............
நின்றுழி நிலாவு வன்றுயர் போயொழிந்
தின்புற்றிருநிதி எய்து மதுநன
துள்ளத் துள்ள தாயின்...............
.............................................
கழுமல நாதன் கவுணியர் குலபதி
தண்டமிழ் விரகன் சைவ சிகாமணி
பண்டித ரின்பன் பரசமய கோளரி
என்புனை தமிழ்கொண் டிரங்கியென் உள்ளத்
தன்பினை யருளிய வாண்டகை தன்புகழ்
குறைவறத் துள்கி நிறைகடை குறுகி
நாப்பொலி நல்லிசை பாட
மாப்பெருஞ் செல்வ மண்ணுதி நீயே"

இவ்வடிகளால் மேற்கூறிய இலக்கணம் அமைந்தமை காண்க.

இன்னும் இவ்வடிகள் அகப்பொரு ளமையப் பாடியது பின் வருஞ் செய்யுளால் விளங்கும்.

தலைமகளை விரும்பிய ஓர் தலைமகன் அவள்பாற் களவுப் புணர்ச்சி கருதி, அதன் பொருட்டுத் தோழியை வசப்படுத்த வுன்னிக் குறிப்பாக ஊர், பேர் முதலியன வினவித் தன் கருத்து வெளிப்படுத்தல் பாங்கி மதியுடன் பாடு என்னு மியலில் கேழல் வினதலென்னுந் துறை.

## ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி ருரு

குண்டகழ் சூழ்தரு கொச்சைத் தலைவன்றன் குன்றகஞ்சேர்
வண்டக மென்மலர் வில்லியன் னீர்வரி விற்புருவக்
கண்டக வாளி படப்புடை வீழ்செங் கலங்கலொடும்
புண்டகக் கேழல் புகுந்ததுண் டோநுங்கள் பூம்புனத்தே.

இதுபோற் சிற்றம்பலக்கோவையிற் கலைமான் வினதல், வேழம் வினதல் முதலாப் பலதுறைகள் உள்ளன. (உ-ம்)

## வேழம் வினதல்

இருங்களி யாயின்றி யானிறு மாப்ப வின்பம் பணிவோர்
மருங்களியா வனலாட வல்லோன் றில்லையான் மலையீங்
கொருங்களி யார்ப்ப வுமிழ்மும் மதத் திருகோ டொருகைக்
கருங்களி யார்மத யானை யுண்டோ வரக்கண்டதுவே.

இவ்வாறு வினவிய தலைமகன் குறிப்பைத் தோழி யுணர்ந்து இவர் யார்? இவரெண்ணம் யாது, என ஆராய்ந்து தெளிதல்.

அந்தாதி ௫௬

புனத்தெழு கைம்மதக் குன்றமொ டாயங்கொர் புன்கலையாய்
வனத்தெழு சந்தனப் பைந்தழையாய் வந்துவந் தடியேன்
மனத்தெழு பொற்கழல் ஞானசம்பந் தன்வண்கொச் சையன்னான்
கனத்தெழு செங்கைக ளாயல் குலாய்த்திவூர் கட்டுரையே.

இதுபோற் றிருக்கோவைச் செய்யுள்.

ஆழ மன்னோ வுடைத் திவ்வையர் வார்த்தை யனங்கனைந்து
வீழமுன் னோக்கிய அம்பலத்தான் வெற்பி னிப்புனத்தே
வேழமுன் னாய்க் கலையாய்ப் பிறவாய்ப் பின்னுமென் றழையாய்
மாழைமென் னோக்கியிடையாய்க் கழிந்து வந்துவந்தே.

மாணிக்க வாசக சுவாமிகள் நூலைப் புகழ்ந்தது

வருவா சகத்தின் முற்றுணர்ந் தோனை வண்டில்லை மன்னைத்
திருவார் வூர்ச்சிவ பாத்தியன் செய்திருச் சிற்றம்பலம்
பொருளார் தருதிருக் கோவை கண்டேயு மற்றப்பொருளைத்
தெருளாத வுள்ளத் தவர்கவி பாடிச் சிரிப்பிப்பரே.

தாம் பேறுபெற்ற மகிழ்ச்சிகூறல்

யாரேயெம் போல வருளுடையா ரின்கமலத்
தாரேயுஞ் சென்னித் தமிழ்விரகன் — சீரேயுங்
கொச்சை வயன்றன் குரைகழற்கே மெச்சி
அடிமை செயப்பெற்றே னறிந்து.

கலம்பகத்தாற் சொற்பொலிவு முதலியனவும், அந்தாதியால் பெரிய கதையைத் திரட்டிக் கூறுமியல்பும், உலா மாலை முதலிய வற்றால் இன்னும் பல அரிய பொருள்களுங் கூறப்படுகின்றன. நூலாராய்ச்சி மிகவிரியுமாதலின், இதனோடு நிறுத்துகிறேன்.

இதுகாறுங் கூறியவாற்றான் நமது முன்னோர்கள் செய் தருளிய திருமுறைகளின் பெருமையும், அவை மத்திமகாலத் திடையே எழுந்தனவென்பதும், இராஜராஜன்வரலாறும், சோழர் ஆட்சி முறையும், திருமுறைகண்ட விதமும், நம்பிகள் அரசனுக்

ருதவிய வரலாறும், நம்பிகள் அவதரித்த நாவலூர்ச் சிறப்பும், திருமுறையும் பண்ணும் வகுத்ததும், நம்பிகள் வீடுபேறும், நூல்களில் இரண்டொரு பாடல்களின் ஆராய்ச்சிகளும், பிறவும் சுருக்கி உரைக்கப்பட்டன.

முற்றிற்று

---

# சேக்கிழார் பெரியபுராணம்

[வேலூர் C. S. இராஜாப்பிள்ளை]

கல்வி, அறிவு, ஆக்க முதலியவற்றாற் சிறந்த பெரியோர்களே! முழுமுதற் கடவுளாகிய பரசிவப்பெருமான் திருவருட்டுணைகொண்டும், எனது ஆன்றோர் ஆணை சென்னிமேற்கொண்டும் இன்று என் சிற்றறிவுக்கேற்ப ஈண்டு ஆராய்ச்சிசெய்ய எடுத்துக்கொண்டது சேக்கிழார் பெரிய புராணம் என்பதாம். இத்தொடர் மொழியை விரிக்கும் வழி சேக்கிழார் பாடிய பெரிய புராணம் எனப் பொருள்படும். இத்தொடர் மொழியின் முன் மொழியாகிய சேக்கிழாரைப் பற்றிக் கூறும்வழி, அப் பெரியார் வந்தருளிய நாடு, நகரங்களின் மாண்பும், மரபும், அம்மரபின் ஏற்றமும், குடியும் அவரெய்திய ஆக்கப்பாடும், அக்கால அரசரிவரென்பதும், வாழ்நாளியல்பும், முடிவும் எனப்பல திறப்படும். பின் மொழியாகிய பெரிய புராணத்தைப் பற்றி ஆராயுமிடத்து, புராணம் என்னுஞ் சொற்பொருளும், புராண இலக்கணமும், இந்நூல் பெரிய புராணமெனப் பெயர்பெற்ற தன்மையும், நூல் யாப்பும், நூல்செய்யப்பெற்ற திருப்பதியும், காலமும், இஃதோர் திருவருட் காவியமென்பதும், அரங்கேறிய அரசவையும், இந்நூல் தொடங்கிய காலத்தெழுந்த அசரீரி வாக்காகிய "உலகெலாம்' என்ற திருவாக்கின் சிறப்பும். திருநெறித் தமிழ்ப் பயன் விளங்கப் பாடிய திறமும், தனியடியாருந் தொகை யடியாருமான இருவகை நாயன்மார்கள் சரிதங் கூறுமியல்பும், பல புராணங்களில் விரவப் பாடிய சரிதமும், இல்லறம், மணப்பருவம், அன்பு, கற்பு, நானிலத் தைந்திணை வளம், நாடு நகரங்களின்

சிறப்பைத் தெள்ளிதிற் கூறும் பெருமை. சிவவேடப் பொலிவு, சோழ மன்னவர் அரசியுலேற்றம் ஆதிய பல அருமைகளை விளக்கும் அருங்கவிகளும், இவற்றை விளக்கும் வாயிலாக நூலாசிரியருடைய சொற்பொருள் வனப்பு, சைவ உயர்ச்சி, அடியார் மாண்பு முதலியவற்றை விளக்குந் திறமும் என்பனவாகப் பலவகையான் விரியுமாகலின், அவற்றுள் முதலாவதாக நூலாசிரியரது சரித்திரத்தை ஆராய்ந்து பின்னர் ஏனையவற்றிற் செல்வோமாக.

சேக்கிழார் சுவாமிகள் அவதரித்த நாடு, பாலிநாடு, தொண்டை நாடு, தண்டக நாடு, துண்டீர நாடு எனப் பல பெயரொடு திகழ்தலின் இப்பெயர்க் காரணங்களவையென ஆராய்வது இன்றியமையாததாம்.

வறுமையுற் றுழியுந் தொண்டை வளமலிநாட்டோர் தங்கள்
இறுமுடல் வருத்தியேனு மீவதற் கொல்கா ரற்றே
தெறுகதிர் கனற்றும் வேனிற் பருவத்துஞ் சீர்மைகுன்றா
துறுமணலகடு கீண்டு மொண்புன லுதவும்பாலி.-காஞ்சிபுரா.

எனப் பெரியோராற் போற்றப்படுகின்ற பாலாறு வளஞ்சுரந்து நல்கமல்கும் பெருமை யுடைத்தாகலிற் பாலி நாடெனப்படும். மேல் இந்நாடு தொண்டைநாடெனப் பெயர் வாய்ந்தமை விளம்புவோமாக.

நாகருலகத் தரசனாகிய சேடன் பல்லாண்டு மகப்பேறின்றிப் பொன்னுலகினுஞ் சிறந்த பூவுலகெய்திப் பல திருப்பதிகளுஞ் சென்று அருந்தவம் புரிந்தும், தனது எண்ணம் நிறைவு பெறாதொழிய, முடிவில் நாகைக்காரோணம்புக்கு வழிபட அமலனருளால் ஓர் பெண்மகவு பெற்று, அன்புடன் போற்றி வளர்க்குநாளில், அவ்வருந்தவப்பயனாங் கன்னிகைக்கு மூன்று தனங்கள் முகிழ்ப்பக்கண்டு கவலை பெரிதுங்கொண்டு இறைவனை வேண்ட அந்நாள் வானிடத்தே அசரீரியாக,

முலையொரு மூன்று தாங்கு முற்றிழை தன்னைச் சின்னாள்
அலைகடற் காரைக் காரோணத் தண்ணலா ரொருபான் மேய
கலையுணர் வரிய மேன்மைக் கருந்தடங் கண்ணி பாதம்
நிலையுறப் பூசை செய்து நேர்தொழு திரைஞ்சச் சென்றால்.

"அனையமா தேவிசெய்யு மாரருள் நிரம்பப் பெற்று
தனைநிகர் பெருமை வாய்ந்த சருவ்புட் கரணிப் பாங்கர்ப்
புனையிழை யுலவுங்காலைப் புரவல னொருவன் றோன்றும்
நினைதரு மவற்காண் போதே நிறத்தினென் றழுந்தாநிற்கும்"

"பின்னர் மற்றவனே வந்து பிறங்குற மணப்பான்"

என்றொரு வாக்கு நிகழக் கண்டு, சேடன் தன்மகளை நோக்கி, நீ பூமியிற் சிறந்து பொலிதருகின்ற நாகைக் காரோணத் திறைவியை நாடோறுஞ் சென்றுவணங்குக வெனக் கட்டளையிட, அவ்வாறே அவள் செய்துவருங் காலத்து ஒரு நாள் சர்வதீர்த்தக் கரையில் உலாவிக்கொண்டிருக்க, அந்நாளில் அந்நகர்ப்புரவலனாகிய சாலீசுகனெனப் பெயர் பெற்ற சோழபூபதி ஆண்டடைய அவனைக் கண்ணுற்ற மாத்திரமே, வானிழல் அருளியபடி வனமுலையொன்று மறைய, அவனே தன்னை மணத்தற்குரியனெனக் கருதி, மணாளனைக்கண்ட நாணத்தாற் றலை கவிழ்ந்து, மறைந்து தன்னிடஞ் சேர்ந்தாள். தந்தைபால் உற்றன மொழிந்தாள். அவனும் கழிபேருவகை பூத்தான். இஃதிவ்வாறாக,

சர்வதீர்த்தக் கரையையடைந்த சாலீசுகனும், அதுபோது அத்திருமகளைக் கண்ணுற்றதனால் காதல் மீக்கூர்ந்து, அரண்மனை சென்று, அவ்விரவை அரிதிற்கழித்து, மற்றைநாட் புலருங்காலை எழுந்துநீராடித் தாஞ்செய்யு நியமங்கள் முடித்துத், திருக்கோயிலை யடைந்து, சந்நிதியில் வீழ்ந்தெழுந்து, 'எம்பெருமானே! எல்லாம் வல்ல இறைவனே! வேண்டுவார் வேண்டுவதே ஈயும் விகிர்தனே,' எனப்பலவாறு துதித்து அடியேன் நெருநற்கண்ட அக்கன்னிகையைக் கடிமணம்புரியக் கருணைபுரிய வேண்டுமென வேண்டி, அழனிறக் கடவுளருளால் ஆதிசேடன் அருந்தவப்பயனுங் காதலிவாழும் நாகலோகஞ் செல்லுதற்குரிய வழியினைக் கண்டு, அவ்வழியே சென்று நாகர்தலைவனையடைந்தான். அடைந்த அரசனைக்கண்ட ஆதிசேடனும் இவனே நமது மங்கையை மணக்கும் மணாளன் என்று உன்னி 'நீ யாவன்? கருதிய கருமம்யா' தென வினவ, சாலீசுகனும்

"ஏற்றமா ரொருமார்த் தாண்ட னியலமை பெருங்குலத்திற்
றோற்றமே வினன்யான் சாலீசுக னெனுநாம முள்ளேன்
ஆற்றலின் பாங்க ரொன்று கருதிவந் தடைந்தேன்"

எனக்கேட்ட சேடன் மகளை நோக்க அவளுங் குறிப்பான் உணர்த்த உணர்ந்து விதிப்படி அவ்விருவர்க்கும் மணம் புரிவிக்க மருவி மகிழ்வானுயினன். இவ்வாறு சில நாட்கள் செல்ல, ஓராண் மகவைப் பெற்று, பின்னர்ச்சின்னுள் கழிய மனைவியை நோக்கி, 'காதலி! யான் பூவுலகடைய விரும்பினேன்' என, அவளும்

எனைவலிந்துவந் தெழின்மணம் புணர்ந்தனையி ருமையுந்தரவல்ல
தனையுனைக் கனிந்துதவினை பிரிவெனுந் தகைமைசார் துயர்தந்தாய்
அனகநிற்கொரு நீதியுமாவதே அழகிதென் னொருமைந்தன்
புனைவருந் திருப்புணரகிலா திவண் போதுமோ புகலென்றாள்.

எனவும், மன்னன் தேவியை நோக்கி, 'எனக்கு அவ்வுலகில்முன்னமே மணந்த ஒரு மனைவியும் மகனும் உளர். முறைப்படி அவனே அரசியற் குரியன், எனினும் நின்மகன் நானளித்த இத் தொண்டையங் கொடியினை நல்லதோர் குறிப்பாகக் கடலில் எறிவானுயின் அது வழிவிட அவ்வழியே என்னையடைந்து அரசுரிமை பெற்றுச் சிறப்படைவான்' என்று சொல்லி ஓர் தொண்டைக் கொடியை அவள்பாற் கொடுத்து விடைகொண்டு, தன்னுடுபுக்கு மணமகள் மகிழ வாழ்ந்தானு. அப்பால் அவன் பணித்த வாறே மகன் தன்னைச்சார ஏற்று அவனைப் பாலி நாட்டின் காவலனுகச் செய்தான். இவனே தொண்டைமான் இளந்திரையன். இவன் ஆண்டதுபற்றியே தொண்டை நாடெனும் பெயரும் வழங்கிவருகின்றது.

'திரைகடந்து வந்தடைந்ததோர் பரிசினுற் செம்பியன் திருமைந்தன், திரையனென்றிடச் சிறந்தனன் தொண்டையாற் செறித்தலிற் றிரிபின்றிக், கரைதருந் தொண்டைமானென யாருங் கட்டுரைத்திடலானுர்' எனவும்

" இருநிலங்கடந்த திருமறு மார்பின்
முந்நீர் வண்ணன் புறங்கடை யந்நீர்த்
திரைதரு மரபின் உரவோன் உம்பல்

மலர்தலை யுலகத்து மன்னுயிர் காக்கும்
முரசு முழங்கு தானை மூவருள்ளும்
இலங்குநீர்ப் பரப்பின் வளைமீக் கூறும்
வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பின்
அல்லதுகடிந்த அறம்புரி செங்கோற்
பல்வேற் றிரையன்'

எனவும் எழுந்த ஆன்றோர் வாக்குகளும் இக்கருத்தே பற்றியன.

கடியலூர் உருத்திரங்கண்ணனார் தொண்டைமான் இளந்திரையன் மீதுபாடிய பெரும்பாணாற்றுப் படைக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் எழுதிய உரைநடையும் ஈண்டுக் கவனித்தற்குரியது. அதுவருமாறு:—

திரையன் என்றதனால் நாகபட்டினத்துச் சோழன் பிலத்துவாரத்தால் நாகலோகஞ்சென்று நாக கன்னிகையைப் புணர்ந்த காலத்து அவள் யான்பெற்ற புதல்வனை என்செய்வேனென்ற பொழுது தொண்டையை அடையாளமாகக் கட்டிக் கடலிலேவிட, அவன் வந்து கரையேறின், அவற்கு யான் அரசுரிமை எய்துவித்து, நாடாட்சி கொடுப்பல் என்று அவன் கூற அவளும் புதல்வனை அங்ஙனம் வரவிடத் திரைதருதலின் திரையனென்று பெயர்பெற்ற கதை கூறினார்.

இனித் துண்டீர நாடென்பது:—

திருக்கயிலைமலையிற் சிவபெருமானைத் தரிசிக்கச்சென்ற சிவ கணத்தவருள் ஒருவனாகிய துண்டீரன் என்பான் ஆண்டு உமையவளை வழிபடுவான் பல மாதருடன் எய்திய மாலதி என்னுந் தெய்வமகளைக் கண்டு காதல்கூர, அவளும் அத்தகையாளாகப் பெருமான் இருவரையும் நோக்கி "மண்ணுலகடைந்து மகிழ்வோடு வேட்ட இன்பந் திளைத்துப்பின் ஈண்டடைக" எனக் கட்டளையிட, அவ்வாறே அவன் பிறந்து மன்னனாகி ஆண்டமையின் துண்டீரநாடாயிற்று. தலைநகராகிய காஞ்சியுந் துண்டீரபுரமென வழங்குவதாயிற்று. இதனைப் பின்வருங் காஞ்சிப்புராணத் திருவிருத்தத்தானும் உணர்க.

எற்று தெண்டிரை வேலைசூழ் ஞாலம்
ஏந்து தோளிணை பரித்திகல் கடந்து
முற்றுசீர்த்தியின் வயங்கு துண்டீரன் முழுத்த கேள்விய
னாண்ட காரணத்தாற்
கற்றை வார்சடைத் தெய்வநாயக ரேகம்ப நாயகர்
காக்கு நாயகர்வாள்
பொற்றமாநகர்க் காஞ்சி துண்டீரபுர மெனப்பெயர்
பெற்றது மாதோ.

இனி, இந்நாட்டில்

“ஏயுமாறுயல் லுயிர்களுக் கெல்லையில் கருணைத்
தாயனான் தனியாயின தலைவரைத் தழுவ
ஆயுநான்மறை போற்றநின் றருந்தவம்”

புரிந்த வரலாற்றைக் கூறுவோம்.

முன்னொரு காலத்து மந்தரமலையின்கட் பரசிவப்பெருமானும், மலைமடந்தையும் தனித் தமர்ந்து பல்வகைத் திருவிளையாடல் நிகழ்த்தியகாலை, தேவியார் பின்புறமெய்திப் பெருமானுடைய இருசுடர் தமக்காதாரமாகிய திருவிழிகளைப் புதைத்தருள, உலகமெல்லாம் இருண்மயமாகி, படைப்பாதித் தொழில் நின்று யாகமுதலிய நற்கருமங்களும் அழிந்து, முனிவருந் தேவரும் மற்றுளார் பலரும் மிகத் துயரமுற்றனர். எம்பெருமாட்டியும் சிறுபொழுதிற் றமது திருக்கரத்தை நீக்க எல்லாப் பொருள்களும் இன்பமுற்றன. யாவரும் மகிழ்ச்சியெய்தினர். அப்பொழுது பெருமான் இறைவியைப்பார்த்து, ‘உமையே, நீ நமது கண்களைப் புதைத்தது நமக்குச் சிறுபொழுதேனும், உலகத்திற்கு அது பல்லூழிக் காலமாய், யாவும் நிலைதடுமாறி, அனைவருந் துன்பமுற்றனர். அதனால் நின்னைத் தீமை தொடர்ந்தது. எனக்கும் எனது உண்மையடியார்கட்கும் உனக்கும் பாவம் அணுகுவதில்லையெனினும், நாம் வேதத்தில் விதித்த முறைகளை உலகங் கைக்கொள்ளுமாறு நாமுங் கைக்கொள்வதே முறையாகலின், நீ பூவுலகிற் சிறந்த நாவலந் தீவிற் பரதகண்டத்துத் தென்றிசையில், யாவருந் தனையடைவதும் மண்மேலென்று முள்ளதுமாய காஞ்சி நக

ரஞ் சேர்ந்து, ஆண்டு மாவமர்ந்த நம் இருக்கையில் பூசை புரிவா யாக' எனத் திருவாய் மலர்ந்தருள, தேவியாருந் தமது தலைவ ரைத் தணந்து செல்ல மனமில்லாதவரா யும், சிவாகமவிதிப்படி அவரைப் பூசை புரிவதில் மகிழ்ச்சியுடையவராய்ப் பிரிந்து, காஞ்சி நகர்க்குறுகித் தம்பிரானிருக்கையை எங்கும்நாடவும் திரு விளையாட்டால் ஏகமாமுதல் எதிர்ப்படாதொழிய மாதவஞ்செய்து காண வேட்கைகொண்டு,

நெஞ்சமீசனைக் காண்பதே விரும்பி நிரந்தரந்திரு
வாக்கினி னிகழ்வ
தஞ்செழுத்துமே யாகவாளுடைய அம்மைசெம்
மலர்க் கரங்குவித் தருளித்
தஞ்சமாகிய அருந்தவர்புரியத் தரிப்பரேயவள்
தனிப்பெருங் கணவர்
வஞ்சநீக்கிய மாவின்மூலத் தின்வந்து தோன்றினார்
மலைமகள் காண.

அவ்வாறு தோன்றிய

ஆனாத பேரறிவா யகம்புறமு நிறைந்தெல்லா
தானாகி நின்றருளுந் தனிமுதலை யேகம்பத்
தேனோரும் வழிபடயா றெளிவந்த தெள்ளமுதை
ஊனாதி கசிந்துருக வுயர்பூசை புரிகுவாள்.

சுருக்கமிலா கமவிதிபா லைவகைச சுத்தியு மமைத்து
மருக்குழல்பூங் குழல்மடவார் மாறுது பணிகேட்ப
ஒருக்குமனத் தினளாகி உயர்கீர்த்தி மதிதீர்த்தந்
திருக்கிளர்பால் தயிரனைத்துஞ் சிவமனுவா லாட்டினாள்.

நுழையிழைநூற் கலிங்கத்துத் திருமேனி நொய்தொற்றி
விழைதருகோ வணமரைநாண் மேதகுபட் டுடையணிந்து
குழைவிரைச்சந் தனசசேறு கொட்டிமணத் துகளட்டி
இழைவருக்கந் திருமேனி யெங்குமெடுத் தலங்கரித்தாள்.

சுவையாறும் பழுத்தொழுகு தூயநால் வகையுண்டி
நவைதீர்ந்த பொற்கலத்தி னயந்தமுது செய்வித்தங்

கவிர்தூப தீபமுதற் பணிமாற்றி அன்பாற்றின்
இவர்தரு சைவாகமநூல் விதியெலா மியற்றினாள்.

இவ்வாறு பூசைபுரிந்து, அந்நகரத்திலுள்ள பதுமமென்னு நாகத்தின் வேண்டுகோளால் அதுவாழும் பிலமே தனதிடமாக ஏற்று ஆண்டுத்தங்கி பூசைபுரிந்துவந்த மலைமகட்குப் பெருமான் மீண்டுந் திருவிளையாட்டாகவே திருவருள்புரியக்கருதி ஒருநாட் பூசைபுரியுங்காலத்து கம்பைமாநதி பெருகிவரச் செய்ய, இறைவி தடுத்தும் நில்லாது மேலோங்கக்கண்டு, இஃது எம்பெருமான் மீதும் வந்துறுமேயெனப் பெரிதுமஞ்சித் தமது இருகரங்களாலும் இறுகத்தழுவிக்கொள்ளத், திருமேனி குழைந்துகாட்டி வளைத்தழும்புடன் முலைச்சுவடணிந்து முன்னின்று காட்சி கொடுத்து, வேண்டுவரங்கள் வேண்டுவாயென, யான்செயும் பூசனையை எந்நாளும் ஏற்றருளவேண்டும், எக்காலத்தும் அழிவில்லாத இந்நகரில் யான் முப்பத்திரண்டு தருமங்களையுஞ் செய்ய அருள்புரியவேண்டும் என வேண்டினாள். இறைவரும் அதற்கிசைந்து அறம்வளர்க்கும் வித்தாக இருநாழி நெல்லளிக்கப் பெற்று முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்த்த காஞ்சி நகரத்தைத் தன்னிடத் துடைமையாற் பெருமை பெற்றதும் இத் தொண்டை நாடே என்க.

(தொடரும்)

---

## சிவதலங்களின் திருப்பெயர் வரலாறும் சீகாழிப் பன்னிரு திருப்பெயர் வரலாறும்

[கோயமுத்தூர் C. K. சுப்பிரமணிய முதலியார் B. A.,]

(முன் ௪௱௧-ஆம் பக்கத் தொடர்ச்சி)

சிவதலங்களின் திருப்பெயர்கள் என்னென்ன பொருள்களைக் காட்டி நிற்கின்றன என்பதும், அத்திருப்பெயர்களை உச்சரித்தலானும் நினைத்தலானும் எத்தனை பெரிய பயனுண்டாகும் என்பதும், அத்திருப்பெயர்கள் தமது தூயவரலாறுகளை நமக்கு நினைப்பூட்டிப் பெரும் பேற்றினைத் தேடித்தருகின்றன என்ப

தும் ஒருவாறு பொதுவகையாக முன் ஆராய்ந்தோம். இனிச் சீகாழியாகிய மூதுரைப்பற்றிச் சிறப்பு வகையாகச் சில பேசி இக் கட்டுரையை முடிப்போம்.

சிவதல வரலாறுகளை அறிவிக்க நமக்குத் தற்காலத்திலே சில புதிய போதகாசிரியர்கள் தோன்றியிருக்கிறார்கள். இவர்கள் யாரென்றால் இரயில்வேக்காரர்களும், தபாலாபீசுக்காரர்களும், ஏனைவண்டிக்காரர்களும் இவர்கள் போன்றவர்களுமே. சிவதலங் களின் பெயர்களைப் பலவாறு சிதைவுபடுத்தி இன்னார் வழங்கு வர். அதனைப் பின்பற்றியே நாமும் அவற்றின் முன்னைச் சிறந்த பொருள்களின் உண்மையை எட்டுணையேனும் நினையாமல் சிதைவு படுத்தி வழங்குவோமாயினோம். எடுத்துக்காட்டாகத் திருவாரூர் என்பது சோழநாட்டுத் திருத்தலங்களிலே சிறந்துவிளங்குவதாம். காவிரிக்குத் தென்கரையிலே 87-வது தலம். அத்திருப்பெயரைச் சிதைத்து இரயில்வேயும் தபாலாபீசும் திருவாலூர் என வழங்க அப்படியே நாமும் திருவாலூர் என்றே பேசவும் எழுதவும் தொடங்கிவிட்டோம். திருவெறும்பியூரைத்(காவிரிக்குத் தென்கரை யிலே ஏழாவது தலம்) திருவரம்பூர் என்று இரயில்வேக்காரர் எழுதிவிட அவ்விதமே நாம் வழங்கி வருகிறோம். அத்தனை பெரிய திருவாரூருக்கு 'வரல்' வைத்து வாலூர் ஆக்கியவர்கள் சீகாழியைச் சும்மா விடுவார்களா? சீகாழி இவர்கள் கையிலே சிய்யாழி ஆய்விட்டது. நாமும் அவ்விதமே வழங்குவோ மாயி னோம். என்ன கொடுமை! என்ன புதுமை! என்ன அவமானம்! நமது திருத்தலங்களின் பெயர்களைத் தானும் சரியாகச் சொல்ல வும் வழங்கவும் தெரிந்துகொள்ளாத நிலைமையில் நாமும் நம் மைச் சைவர்கள் என்றும் தமிழர்கள் என்றும் சொல்லிக்கொள்ள வேண்டியிருக்கிறது. இன்னார்களை நாம் ஏன் திருத்த முயலக் கூடாது? நாம் தெரிந்து கொண்டாலன்றோ பிறரைத் திருத்த முயலலாம். நிற்க.

சீகாழிக்குப் பன்னிரு பெயர்கள் உண்டு என்பதை நேயர் கள் அறிவார்கள். ஒரு பொருளைக் குறிப்பதற்குப் பலபெயர்கள் இருப்பானேன்? ஒருபொருள் குறித்த பலசொற்களும் பல பொருள் குறித்த ஒரு சொல்லும் ஒரு மொழியிலே இருத்தல்

அம்மொழிக்கு அழகு தருவனவாகிய இயல்புகளாகும் என்பார் ஒரு சாரார். அற்றன்று; அவை அம்மொழியின் குறைபாட்டினை வெளிப்படுத்துவனவாம் என்பர் வேறுசிலர். பலபெயர்களால் அழைக்கப்படுதலாலேயே ஒருபொருள் ஏற்றமுடையதாய் விடுமோ என்று வாதிப்பர் பின்னும்சிலர். அது எப்படியாயினும் ஆகுக. அதுபற்றிய விசாரணை நமக்கு இங்கே வேண்டுவதில்லை. ஆனால் இங்குச் சீகாழிக்குப் பன்னிரு திருப்பெயர்கள் இருத்தல் அவ்வாறு ஒரு பொருள் குறித்த பல சொல்லாகவே குறித்து விடலாமோ எனின்; கூடாது. இப்பன்னிரு திருப்பெயர்களும் பொருட்டன்மையிலே ஒன்றாகிய ஒரே தலத்தைக் குறிப்பனவாயினும் வெவ்வேறு காரணம்பற்றி வெவ்வேறு காலங்களிலே அத் திருத்தலத்திற்கு அமைந்த பெயர்களாம்.

இத்திருத்தலத்திற்குப் பன்னிரண்டு திருப்பெயர்கள் உள்ளன என்பதையும் அவற்றை எவ்வாறு வைத்துப் பாராட்டுதல் வேண்டுமென்பதையும் இத்தலத்தே திருவவதரித்த பரமாசாரிய மூர்த்திகளாகிய நமது திருஞானசம்பந்தப் பெருமான் எவ்வாறு நமக்குக் காட்டியருளியிருக்கின்றார்கள் என்று பார்ப்போம். அவர்கள் திருப்பதிகங்களையெல்லாம் பதினொரு திருப்பாசுரங்களாக அமைத்தருளும் நியதியுண்டு. அஃதிலேயும் எட்டாவது திருப்பாட்டிலே இராவணன் பெரும்பிழை செய்தானாயினும் அடைந்து உய்ந்த ஆக்கப்பாட்டினையும், ஒன்பதாவது திருப்பாட்டிலே பிரம விட்டுணுக்கள் துதித்துய்ந்த படியினையும், பத்தாவது திருப்பாட்டிலே சமணர் புத்தர் மொழிகள் ஏதந்தருவன என்பதையும் ஆக இம்முறையே அமைத்தருளுவது காணலாம். பதினொன்றாவதாகிய கடைசித் திருப்பாட்டிலே தமது திருப்பெயர் இலச்சினையைப் பொறித்துப் பதிகத்துப் பயன் சொல்லித் திருக்கடைக் காப்பாக வைத்துப் பதிக முடித்தருளுவர். இந்நியதியும் வைப்பும் சுவாமிகள் திருப்பதிகங்களிலே எங்குங் காணலாகும். இந்தப் படி சுவாமிகள் திருப்பதிகங்களிலே பாட்டு முறை வைப்புள்ளதை ஸ்ரீசேக்கிழார் சுவாமிகள் பல இடங்களில் எடுத்துக் காட்டியிருக்கின்றார்கள். எட்டாவது பாட்டிலே இராவணனைக் குறிப்பது பற்றி

"மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையிற்
கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளு மெனக்காட்ட
எண்ணமிலா வல்லரக்க னெடுத்துமுரிந் திசைபாட
அண்ணலவற் கருள்புரிந்த வாக்கப்பாட் டருள்செய்தார்"

என்றும், ஒன்பதாவது பிரம விட்டுணுக்களைக் குறித்த பாட்டினைப்பற்றி,

"தொழுவார்க்கே யருளுவது சிவபெருமா னெனத்தொழார்
வழுவாய மனத்தாலே மாலாய மாலயனும்
இழிவாகும் கருவிலங்கும் பறவையுமா யெய்தாமை
விழுவார்க ளஞ்செழுத்துந் துதித்துய்ந்த படிவிரித்தார்."

என்றும், பத்தாவது பாட்டாகிய சமணர் புத்தர்களைப்பற்றிய பாட்டினைப்பற்றி,

"வேதகா ரணராய வெண்பிறைசேர் செய்யசடை
நாதர்நெறி யறிந்துய்யார் தம்மிலே நலங்கொள்ளும்
போதமிலாச் சமண்கையர் புத்தர்வழி பழியாக்கும்
ஏதமே யெனமொழிந்தார் எங்கள்பிரான் சம்பந்தர்"

என்றும், இவ்வாறு பதிகம் நிறைவித்தருளியபின் அதன்மேலே உள்ள பதினொன்றாவது திருப்பாட்டினை

"திருப்பதிகம் நிறைவித்துத் திருக்கடைக் காப்புச்சாத்தி"
என்றும், விரித்து வகுத்துக் காட்டியருளினார்கள்.

பதிகம் என்பது பத்துப் பாட்டுக் கொண்ட தொகை என்ப பொருள் பெறும் என்பதைப் "பாடியவப் பாட்டான பத்தும் பாடனிரம்பிய பின்னும்" (பெரிய புராணம் - சம்பந்தர்-582) என்ற திருவாக்கானும் அறியலாம். சுவாமிகள் திருப்பதிகப் பாட்டு முறை வைப்பானது மாறுபடாத இத்தன்மையையும் பொருள் கோள்களையும் கொண்டதாம். பத்தாவது திருப்பாட்டிறகு "தொடுத்த வெஞ்சமண்பாட்டு" என்ற பெயரே வைத்து அருளினார்கள் ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள். சீகாழிக்குச் சுவாமிகள் அருளியனவாக இப்போது நமக்குக் கிடைத்துள்ளன 67

திருப்பதிகங்களாகும். இவற்றிலே திருப்பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு ஆகிய தனித்தனித் திருப்பெயர்களை அமைத்து அந்த அந்தப் பெயராலே தனித்தனிப் பதிகங்கள் பல உள்ளன. இவையெல்லாம் நாம் மேலே குறித்த நியதிப்படி பதினொரு திருப்பாசுரங்களையே உடையன. ஆனால் இத்தலத்தின் பன்னிரண்டு திருப்பெயர்களையும் கொண்டு விளங்கும் பதிகங்களும் பல உண்டு. இவை பல்பெயர்ப்பத்து, திருவிருக்குக்குறள், திருமொழிமாற்று, திரு ஏகபாதம், திருச்சக்கரமாற்று (இரண்டு பதிகங்கள்), திருக்கோமுத்திரி, வழிமொழித்திருவிராகம், திரு ஈரடி, திருவியமகம் ஆகிய பத்துத் திருப்பதிகங்களாம். இவற்றிலெல்லாம் சுவாமிகள் தமது பதிகங்களைப் பதினொரு பாட்டாக அருளுவதாக நாம் மேலே கண்ட நியதியின் மேற்பட்டுச் சென்று திருப்பெயர்கள் ஒவ்வொன்றுக்கு ஒவ்வோர் திருப்பாட்டாக பன்னிரண்டு திருப்பாட்டுக்களிலே பதிக முடித்தருளினார்கள். எனவே, தனித்தனித் திருப்பெயர்களாலே பதிகம் போற்றியருளிய சுவாமிகள் இத்தலத்துப் பன்னிரு பெயர்களையும் ஒருங்கே நாம் போற்றியுய்தல் வேண்டுமென்று காட்டுவதற்குத் திருவுளங்கொண்டு பன்னிரண்டு திருப்பாட்டுக்களாலே பதிகம் கட்டளையிட்டருளினார்கள் என்றால் இத்தலத்திற்குப் பன்னிரண்டு திருப்பெயர்கள் உண்டு என்பதற்கும் அவற்றை நாம் எவ்வாறு பாராட்டிப் போற்றல் வேண்டும் என்பதற்கும் வேறு ஆதாரந் தேடவும் வேண்டுமோ!

இத்திருப்பெயர்கள் எப்போது வந்தன? உலகிலே ஊழிகள் பல உண்டாகும். அவ்வூழி முடிவிலே எல்லாவூர்களும் அழிந்துபடும். ஆனால் இத்திருத்தலம் மட்டும் அழியாது ஊழி வெள்ளத்திலே தோணியாகி மிதக்கும். அத்தோணியிலே வீற்றிருப்பார்கள் திருத்தோணியப்பரும் பெரிய பிராட்டியாரும். இக்காரணம் பற்றியே இதற்குத் தோணிபுரம் என்று ஒரு பெயர் வந்தது. இதுபோல ஊழிகள் தோறும் வெவ்வேறு காரணங்களால் இத்தலம் வெவ்வேறாகப் பெயர்பெற்று இப்படியாகப் பன்னிரண்டு திருப்பெயர்களைக் கொண்டு விளங்குவதாகும் இத்திருத்தலம். இது

"துயரிலங்கு முலகிற் பலவூழிகள் தோன்றும் பொழுதெல்லாம்
பெயரிலங்கு பிரமாபுர மேவிய பெம்மா னிவனன்றே"

என்ற திருஞானசம்பந்த சுவாமிகள் திருவாக்கினால் அறியப்படும்.

"வசையில்காட்சி யிசைநனிவிளங்க
முன்னுணிகழ்ந்த பன்னீருகத்து
வேறுவேறுபெயரி னூறின்றியன்ற
மையறுசிறப்பிற் றெய்வத்தன்மைப்
புகலி..................."

பதினொராந் திருமுறை-பட்டணத்துப்பிள்ளையார் (திருக்கழுமல மும்மணிக்கோவை—௫)

இப்பன்னிரு பெயர்கள்தாம் யாவை ?

'பிரமபுரம் வேணுபுரம் புகலிபெரு வெங்குருநீர்ப்
பொருவில்திருத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன்
வருபுறவஞ் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்
பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால்"

என்பது சேக்கிழார் சுவாமிகள் திருவாக்கு.

(1) பிரமபுரம் (2) வேணுபுரம் (3) புகலி (4) வெங்குரு (5) தோணிபுரம் (6) பூந்தராய் (7) சிரபுரம் (8) புறவம் (9) சண்பை (10) காழி (11) கொச்சைவயம் (12) கழுமலம் என்பன இத் திருப்பெயர்களாம். இவற்றை எந்த வரிசையிலே வைத்துச்சொல்ல வேண்டும் என்றால் மேலே காட்டிய இந்த வரிசையிலேதான் சொல்லவேண்டும் என்று தெரிகிறது. இத்தலம் ஊழிகள் தோறும் ஒவ்வோர் பெயர் பெற்றதாக மேலே கண்டோமாகலின் இப்பெயர்கள் அந்தக்காலக்கிரமத்திலேகிடைத்தன. அந்தப்படி காலக்கிரமத்திலே வரிசைப்படுத்தி (Chronological Order) வைத்தபடியே நாம் வழங்குவது தகுதி. இவ்வரிசையை மாற்றி வழங்கலாகாது. ஏன் ? இதுதான் திருஞானசம்பந்த சுவாமிகளாகிய நமது பரமாசாரியரின் திருவுள்ளம் என்று தெரிகிறது.

சுவாமிகள் இப்பன்னிரு பெயர்களையும் வைத்துக் கட்டளையிட்டருளிய (மேலே நாம் குறித்த) பத்துப் பதிகங்களிலேயும் இத்திருப்பெயர்களை இவ்வரிசையிலேயே வைத்து அருளியிருக்கின்றது காணத்தக்கது. பல்பெயர்ப்பத்து, திருவிருக்குக்குறள், திருமொழிமாற்று, திருஏகபாதம், வழிமொழித் திருவிராகம், திருஈரடி, திருவியமகம் ஆகிய இத்திருப்பதிகங்களிலெல்லாம் இக் குறித்த வரிசையிலேயே இத்திருப் பெயர்களைக் காணலாம். திருவெழுகூற்றிருக்கையிலேயும் இவ்வரிசையிலேயே திருப்பெயர்கள் விளங்குவனவாம். திருச்சக்கரமாற்று இரண்டு திருப்பதிகங்களிலும் திருக்கோமுத்திரிப்பதிகத்திலும் இரண்டு முதலாகிய திருப்பாட்டுக்களில் இவ்வரிசையானது அந்த அந்தப்பதிகங்களிற் கொண்ட அணியின் பொருட்டு மாறிவைத்திருப்பதாகக் காணப்படினும் முதற்பாட்டிலே இவ்வரிசையே வைத்திருப்பது காணலாகும். இப்பதிகங்களிற் குறித்த அணிகளின்படி தொடங்கிய நிலைக்கே பின்னர் வந்து கூடும்படியான அமைப்பு உள்ளதாகையால் இவை முழுதும் அவ்வரிசை பிறழாமையும் காணலாகும்.

இவ்வரிசையானன்றி இத் திருப்பெயர்கள் மாற்றிச் சொல்லத்தக்கனவல்ல என்பதற்குச் சுவாமிகள் வேறு சில குறிப்புகளும் வைத்தருளியிருக்கின்றார்கள்.

“நான்முக னாதியாய பிரமாபுரத்து
மறைஞான ஞானமுனிவன்” (கோளறு திருப்பதிகம்-௧௧)

நான்முகன் பூசித்த காரணத்தினாற் பெற்ற பிரமாபுரம் என்பதைத் தனக்குரிய திருப்பெயர்களில் ஆதியாகிய திருப்பெயராகக் கொண்டு விளங்குவது என்று பொருள் கொள்ளக்கிடக்கின்றது காணலாம்.

“.........ஒன்றிரண்டொரு மூன்றொடுசேர்பதி
பூவிலந்தணனொப்பவர்பூந்தராய்போற்றுதுமே”
காந்தாரபஞ்சமம் - பூந்தராய் - (செ. ௨)

என்ற திருப்பாட்டிலே பூந்தராய் என்பதைத் தனக்குரிய ஆறாவது திருப்பெயராகக்கொண்டு விளங்கும் தலம் என்ற பொருள் பெறுகின்றோம்.

"கடல்வரையோதமல்குகழிகானல்பானல்கமழ்காழியென்றுகருதப்
படுபொருளாறுநாலுமுளதாகவைத்தபதியானஞானமுனிவன்"

பியந்தைக்காந்தாரம் : திருநனிபள்ளி - (செ. கக)

என்ற திருப்பாட்டிலே காழி என்பதனைத் தனக்குரிய பெயர் முறையிலே பத்தாவது திருப்பெயராகக் கொண்டு விளங்கும் என்னும் பொருள் பெறுகின்றோம். மேலே கண்ட வரிசையிலே பூந்தராய் ஆறாவது திருப்பெயராகவும் சீகாழி பத்தாவது திருப்பெயராகவும் உள்ள அமைப்பினைக் காண்க. இதுபற்றியே சேக்கிழார் சுவாமிகளும் மேற்குறித்த திருப்பாட்டிலே இவ்வரிசையிலே திருப்பெயர்களை அமைத்து அருளினார்கள்.

இனி இத்திருப்பெயர்களின் வரலாறுகளைப் பற்றிச் சிறிது ஆராய்வோம். இவ் வரலாறுகளை திருஞானசம்பந்த சுவாமிகள் பல்பெயர்ப்பத்து, வழிமொழித் திருவிராகம் என்ற இரண்டு திருப்பதிகங்களிலேயும் குறிப்பாகக் காட்டியருளி யிருக்கின்றார்கள். திருப்பெயர்கள் வந்த வழியை மொழிவதனாலே அந்தத் திருப்பதிகத்திற்கு வழிமொழித் திருவிராகம் என்ற பெயர் அமைத்திருக்கிறார்கள் போலும். அன்றியும் அத் திருப்பெயர்களின் வழியே ஒவ்வொருபாட்டும் பாட்டின் அடிகளும் ஒவ்வொரு சீரும் எதுகையாக அமைந்துள்ள சந்த இனிமையையும் காணலாம். இன்னும் அங்கங்கே பற்பல பதிகங்களிலும் இவ் வரலாறுகளை ஒரேவழிச் சுட்டியருளியு மிருக்கின்றார்கள்.

க. பிரமபுரம்: பிரமதேவர் பூசித்துப் பேறுபெற்ற காரணத்தால் வந்தபெயர்.

"ஏடுடைய மலரான் முனைநாட்பணிந்தேத்த அருள்செய்த
பீடுடைய பிரமாபுரம்"

என்பது சுவாமிகளது முதல் திருப்பாட்டு.

"சரியாநாவின் வேதகீதன் றாமரை நான்முகத்தன்
பெரியான் பிரமன் பேணியாண்ட பிரமபுரத்தானே"

பல்பெயர்ப்பத்து—(க)

"வரமருள வரன்முறையி னிரைநிறைகொள்
வருசுருதி சிரவுரையினாற்
பிரமனுய ரரனெழில்கொள் சரணவிணை
பரவவளர். பிரமபுரமே"

வழிமொழித் திருவிராகம்—க

உ. வேணுபுரம்: சூரபன்மன் பூசித்தபோது சிவபெருமான் வேணு=(மூங்கில்) வாக முளைத்து அருள் புரிந்தசரிதம் புராணத்துக் கேட்கப்படும். அல்லாமலும், தேவேந்திரன் தனது ஆசாரியனிடத்தே அபசாரப்பட்ட பழியினை நீக்கிக்கொள்ளவும் விருத்திராசுரனைக் கொன்ற பழியினைப் போக்கிக்கொள்ளவும் அகத்தியமுனிவர் திருவார்த்தையின்படி தேவலோகத்திலே இருந்து வேணு = (மூங்கில்) வழியாக 'இத்தலத்தே இறங்கியடைந்து பூசித்தான் என்ற சரித வரலாறும் கேட்கப்படுகிறது. இக்காரணங்களினாலே இத்தலம் 'வேணுபுரம் என்று பெயர் பெற்றது.

"இயலானடாவியின்பமெய்தி இந்திரனாண்டமண்மேல்
வியலார்முரசமோங்குசெம்மைவேணுபுரத்தானை—"

பல்பெயர்ப்பத்து—உ

"..............................சேணமரர் கோன்
வேணுவினை யேணிநகர் காணிறிவி காணநடு வேணுபுரமே"

வழிமொழித்திருவிராகம்—உ

இந்திரன் சூரபன்மனாதியர்க்குப் பயந்து தன் தேவியோடும் விண்ணுலகைவிட்டு இம்மண்ணுலகில் வந்து

"......தெக்கினதேயம் புக்குப்
பத்து டனிரண்டு நாமம் படைத்ததொல்காழி நண்ணி
இத்தலமினிதே என்று இருந்தனன்......"

கந்தபுராணம் இந்திரன் காந்துறை படலம்—௩௧

அங்கு ஒரு நந்தனவன முண்டாக்கிச் சிவபெருமானை வழிபட்டிருக்குங்காலைச் சூரன் விடுத்த ஒற்றர்கள் வரக்கண்டு பயந்து தன்தேவியோடு வேணுவாகி (மூங்கில் உருவமெடுத்து) மறைந்து

தவஞ்செய்து கொண்டிருந்த வரலாறும் கந்தபுராணத்துட் கேட்கப்படும்.

"..........அமரர் கோன்றுணைவி யோடு
மற்றவன் வேணுவாகி மறைந்து நோற்றிருந்தான் மாதோ"
கந்தபுராணம் ஷெடி படலம்—௪௪

மூன்றாவது புகலி:—சூரபன்மனுதியர்களால் கடுந்துன்பமடைந்த தேவர்கள் புகலடைந்து அடைக்கலமாக வந்து தங்கிச் சிவபெருமானை இத்தலத்தே வழிபட்டமையால் புகலி எனப் பெயர் பெறறதாம்.

"அகலாதுறையுமாநிலத்திலயலின்மையாலமரர்
புகலான்மலிந்தபூதகலி......" பல்பெயர்ப்பத்து—௩

இவ்வாறு புகலடைந்த தேவராதியர் பரமேசுவரனது திருவாணையின்படி (தமது பகைவர்கள் அழியும்பொருட்டு) முருகக் கடவுள் திருவவதரிக்க வேண்டுமென்னும் கருத்துடன் இத்தலத்தே சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்திருந்தனர் என்பது

"பகைகளையும்வகையிலறுமுகவிறையை
மிகவருளநிகரிலிமையோர்
புகவுலகுபுகழவெழிறிகழநிகழ்லர்பெருகு
புகலிநகரே" வழிமொழித் திருவிராகம்—௩

என்ற திருப்பாட்டினல் விளங்கும்.

நான்காவது வெங்குரு:—பிரமதேவரால் இகழப்பட்ட அசுர குருவாகிய சுக்கிரன் நாரதமுனிவரிடம் உபதேசம் பெற்று இத்தலத்தை யடைந்து பூசித்துத் தேவகுருவுக்குச் சமானமான தன்மையைப் பெற்றார். அல்லாமலும் யாவரும் தன்னைக் கொடியன் என்று இகழும்படியான பழி நீங்கும்படி எமதருமராசன் பூசித்துப் பூர்வ உணர்வுபெற்று மோனமா யிருக்கும் அருளை இத்தலத்தே பெற்றார் என்பதும் ஒருவரலாறு ஆகும். இது

"செங்கோனடாவிப்பல்லுயிர்க்குஞ்செய்வினைமெய்தெரிய
வெங்கோத்தருமன்மேவியாண்டவெங்குரு......"

என்ற பல்பெயர்ப்பத்து—ச-வது திருப்பாசுரத்தால் விளங்கும்.

**ஐந்தாவது தோணிபுரம்:**—யுகக்கடை நாளிலே உலகமெல்லாம் பெருவெள்ளத்துள் அழுந்தும் பிரளயசலதியிலே, தான் அழியாமலும் ஆழாமலும் இருந்து பிரணவ உருவமாகிய தோணியாய் மிதக்க அதிலே சிவபெருமான் பெரிய பெருமாட்டியுடன் வீற்றிருக்கப்பெற்ற காரணத்தால் திருத்தோணிபுரம் எனப் பெயர் பெற்றது. ஆலயத்திலே திருத்தோணியாகிய வமைப்பு இன்றும் காணத்தக்கதாம். அவ்வாறு தோணியாக மிதந்த காலத்திலே தேவர்கள் பறவை உருவெடுத்து வந்து தாங்கி நின்றார்கள் என்பது

"பார்கொண்டுமூடிக்கடல்கொண்டஞான்றுநின்பாதமெல்லாம்
நாலஞ்சு புள்ளினமேந்தின என்பர்"

என்ற திருநாவுக்கரசு சுவாமிகள் திருவிருத்தத்தா லறியலாம்.

ஊழிநீர்ப் பெருக்கிலே தோணியாக மிதந்த வரலாறு:—

"அணிநீருலகமாகியெங்குமாழ்கடலாழ்ந்தெழுங்கத்
துணிநீர்பணியத்தான்மிதந்த தோணிபுரம்"
பல்பெயர்ப்பத்து—ரு

"......................................ஏணிமுறையிற்
பாணியுலகாள மிகவாணின்மலி தோணிநிகர் தோணிபுரமே"
வழிமொழித்திருவிராகம்—ரு

'பாணிமூவுலகும்புதையமேன்மிதந்த தோணிபுரத்துறைந்தனை...'
(திருவெழுகூற்றிருக்கை)

"கடல்கொளமிதந்தகழுமலவளநகர்"

என்ற சுந்தரமூர்த்திகள் திருக்கழுமலத் தேவாரமாதிய திருவாக்குகளும் பிறவும் வலியுறுத்துவனவாம்'

**ஆறாவது பூந்தராய்:**—இரணியாக்கன் என்னும் அரக்கனை விட்டுணு மூர்த்தியானவர் வெள்ளைப்பன்றியாக உருவெடுத்து வந்து கொன்று தன் கொம்பினாலே அவன் ஒளித்து வைத்த

பூமியைத் தாங்கி வந்து, அந்தக்கோலப் பழி போகுமாறு பூசித்த காரணத்தால் பூந்தராய் எனப்பெயர் பெற்றது. (பூ-பூமி, தராய் - தரிக்கப்பெற்றது?)

"அராமிசை யிராசெழி றராயர பராயண வராகவுருவா
தராயனை விராயெரி பராய்மிகு தராய்மொழி விராயபதியே"

வழிமொழித்திருவிராகம்—சு

ஏழாவது சிரபுரம்:—தலையினுற் பூசிக்கப்பெற்ற தலம்-தலையாவது இராகு: தேவர்கள் அமுதுண்டகாலத்திலே சயிங்கேயன் என்னும் ஒரு அசுரன் வேற்றுருவந் தாங்கி வந்து அவர்களினிடையே யிருந்து அமுதமுண்ணப் புகுந்தான். அவனைச் சூரியன் காட்டிவிடவே அவன் விட்டுணுமூர்த்தியால் வெட்டுண்டனன். அவ்வாறு வெட்டுண்ட தலை இராகு என்றும் உடல் கேது என்றும் பெயர் பெற்று உள்ளன என்பது புராணவரலாறு. எனவே, இராகு பூசித்து ஒன்பது கோள்களில் ஒன்றாயிருக்கும் பேறு பெற்றமையால் சிரபுரம் எனப் பெயர் பெற்றதாம்.

"பரவமுது விரவவுடல் புரமுறு மரவையரி சிரமரியவச்
சிரமரனுசர மமைவை பரவிரு கிரகமமர் சிரபுரமதே"

வழிமொழித்திருவிராகம்—எ

எட்டாவது புறவம்:—புறு பூசித்த காரணத்தால் வந்த பெயர். புறுவாவது அக்கினிதேவன். முன்னொருகாலத்திலே இந்திரன் பருந்து உருவமும் அக்கினிதேவன் புறு உருவமும் எடுத்து சிபிச்சக்கிரவர்த்தியைச் சோதிப்பதற்காக புறுவைப் பருந்து துரத்திக்கொண்டுவர புறு சிபியினிடம் அடைக்கலம் புக்கது. பருந்து தனது இரையினைக்கேட்கவே அரசன் அடைக்கலம் புக்க பொருளைக் கொடுத்தல் தகாது என்று அதற்குச் சமமாகத் தனது தசை கொடுப்பதாக இசைந்து அவ்வாறே தனது தசையை அறிந்து துலையிலிட்டுப் புறவின் எடைக்குப் போதாமை கண்டு தான் துலையேறித் தன் புகழை நிலை நிறுத்தினன். இச் சரிதம்,

"துலையிற் புறவினிறை யளித்த சோழர்"

பெ. புராணம்-கோச்செங்கட்சோழ நாயனார் புராணம்—க

என்று ஸ்ரீ சேக்கிழார் பெருமானால் விதந்து பாராட்டப் பெற்றது. புறா உருவெடுத்த அக்கினி சிபியினிடத்துச் செய்த அபசாரமாகிய அப்பாவம் போகுமாறு இத்தலத்திலே பூசித்துப் பேறுபெற்றனன். சிபியினுடலும் முன்போல வளர்ந்து ஒளி வீசிற்று.

"குறைவின் மிக நிறைதையுழி மறையமரர்
நிறையருள முறையொடுவரும்
புறவினெதிர் நிறைநிலவு பொறையனுடல்
பெறவருளு புறவமதுவே"

வழிமொழித்திருவிராகம்—அ

மேலே குறித்தபடி சிபியின் அற்புத சரிதம் முழுமையும் புறவம் என்னும் இத்திருப்பெயர் காட்டி நிற்கிறது.

ஒன்பதாவது சண்பை:—உம் குலத்தவன் ஒருவன் வயிற்றிற் பிறந்த இருப்பு உலக்கை உங்களை நாசம் செய்யும் என்று கபிலமுனிவர் இட்ட சாபப்படி ஒரு இருப்புலக்கை பிறந்தது. அது தம் குழந்தை அழிக்காதவண்ணம் பொடி செய்து கொட்டிவிடவும் அந்தத் துகள் சண்பைப்புல்லாக (சம்பை என வழங்கும்) முளைத்தன. அவற்றை ஆயுதமாகக் கொண்டு ஒருவர்க்கொருவர் போர்செய்து யாதவர்கள் மடிந்தனர். இக்கொலைப்பழியானது தம்மை யணுகாத வண்ணம் கண்ணபிரான் பூசித்துப் பேறுபெற்றனர். சண்பை காரணமாக வந்த பழி போக்கியதாற் சண்பையாயிற்று.

"மண்பரியு மொண்பொழிய நுண்புசகர்
புண்பயில விண்படரவச்
சண்பைமொழி பண்பமுனி கண்பழிசெய்
பண்புகளை சண்பைநகரே"

வழிமொழித்திருவிராகம்—கூ

பத்தாவது சீகாழி:— சிவபெருமானுக்கு நடனத்திலே தோல்வியுற்ற காளியம்மையார் பூசித்துப்பேறுபெற்றதுடன் இத்தலத்தைக் காவல் செய்கின்றார் என்ற காரணத்தாலும் காளிதன் என்னும் பாம்பு பூசித்துக் காவல்புரிகின்ற காரணத்தாலும் இப்பெயர் பெற்றது என்பது வரலாறு.

"கீழிசைகொண் மேலுலகில் வாழரசு சூழரசு வாழவரனுக்
காழியசில் காழிசெய் வேழுலகி லூழிவளர் காழிநகரே"
வழிமொழித்திருவிராகம்—௰

"அழலாயுலகங் கவ்வைதீர வைந்தலை நீண்முடிய
கழலுகரையன் காவலாகக் காழி யமர்ந்தவனே"
பல்பெயர்ப்பத்து—௰

"மோடி புறங்காக்குமூர்" திருச்சக்கரமாற்று—அ

பதினோன்றாவது கோச்சைவயம்:—ஆற்றினிடையே பராசரர் மச்சகந்தியைப் புணர்ந்ததனாற்பெற்ற துர்க்கந்தமும் பழியும் போகும்படி பூசித்து அவ்வாறே பேறுபெற்றார் என்பது சரிதம். அதனாலே இத்தலம் கோச்சைவயம் எனப் பெயர்பெற்றதாம்.

"மச்சமத நச்சிமத மச்சிறுமி யைச்செய்தவ வச்சவிரகக் [மே"
கொச்சைமுர வச்சர்பணி யச்சுரர்க ணச்சிமிடை கோச்சைவய
வழிமொழித்திருவிராகம்—௧௧

பன்னிரண்டாவது கழுமலம்:—உரோமச முனிவர் இத்தலத்தை யடைந்து ஞானோபதேசம் பெற்று தம் மலங் கழுவப் பெற்று விளங்கியதாற் கழுமலமாயிற்று. "தங்கண் மலங்கழுவ வார்வந்து சார்தலினால், எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த பொங்குமடுவில்" என்ற திருவாசகச் சொல்லாட்சியையும் காண்க.

"ஒழுகலரி தழிகலியி லூழியுலகு
பழிபெருகு வழியைநினையா
முழுதுடலி லெழுமயிர்க டழுவுமுனி
குழுவினொடு கெழுவுசிவனைத்

தொழுதுலகி லிழுகுமல மழியும்வகை
கழுவுமுரை கழுமலநகர்''

வழிமொழித்திருவிராகம்—கஉ

இதுகாறும் கூறியவாற்றாற் பெற்றமுடிவுகளாவன:—

சிவதலங்களின் திருப்பெயர்கள் வெறும் இடுகுறிப்பெயர்களல்லாது காரணவகையாலே பலபொருள்களைக் காட்டிநிற்கின்றன. அவைகளைச் சிந்திப்போமாஞல் பெரும்பயன் விளையும். மக்களில் உயர்ந்தோர் தாழ்ந்தோர் தேவர்கள் நாகர்கள் முனிவர்கள் அரக்கர்களாதிய உயர்திணையுயிர்களும், விலங்கு பறவையாதி அஃறிணையுயிர்களும்சிவபெருமானை இப்பூவுலகத்திலே ஒவ்வோர் தலங்களிலே வழிபட்டுப் பேறுபெற்றன. சிவபெருமான் வீரங்கள் செய்தும் அடியாரைக் காத்த கருணைத்திறத்தினை வெளிப்படுத்தும் தலங்களும் பலவுள்ளன. இத்தலங்களெல்லாம் தததம் பெயர்வகையிஞலேயே சிவபெருமானுடைய பெருங்கருணையையும், அவர் தம்மை அன்பாயடைந்தார்கள்யாவராயினும் பேரருள் செய்து நிற்கும் எளிமையையும், உயிர் வருக்கங்கள் அவரையே அடைந்து கதிபெறவேண்டிய கடமையையும் காட்டிநிற்கின்றன. அவைகள் அவ்வந்நாட்டிலே வரிசையாகவைத்து எண்ணப்பெறும். இவற்றுள்ளே சீகாழி என்பது ஒரு சிறந்த திருத்தலம். அது பன்னிரண்டு திருப்பெயர்களையுடையது. அப் பெயர்கள் ஒவ்வோர் ஊழியிலேயும் முறையே காலக்கிரமத்தின் வரிசையாகப் பெறப்பட்டன. அவற்றின் வரிசையில் மாற்றி வைத்து எண்ணுவதுதகாது. அம்முறையிலேயே **திருஞானசம்பந்தசுவாமிகள்** அமைத்து வகுத்தருளித் **தனித் தேவாரப் பதிகங்களும்** கட்டளையிட் டருளியிருக்கின்றார்கள். இப்பன்னிருபெயர்களும் சிவபெருமான் திருவருள் சார்ந்த ஒவ்வோர் சரித வரலாறுகளைக் காரணமாகக்கொண்டு பெறப்பட்டன. இத்திருத்தலப்பெயர்களை அவ்வரிசையிலேயே வைத்தெண்ணிப் பயனடைதல் அறிஞர் கடனாகும்.

முற்றிற்று

---

# அகம் புறம்

[வேலூர். க. ப. சந்தோஷம் B.A., L.T.,]

(௪௭௮-ம் பக்கத் தொடர்ச்சி)

அகப்பட்டது என்று சொல்லுங்கால், ஒரு பொருள் பொறிகளின் வழியாய் அகத்திற்கு எட்டிற்று என்பது கருத்து. முன் கண்டவாறு ஒரு பொருள் அகத்திற்கு எட்டாவிடின் அது இருந்தும் இல்லாததேயாகும். அகம் என்பது யாது? அது பொறி புலன்களைத் தன்னிலடக்கி யவற்றினின்றுந் தனித்தியங்கு மொன்று. ஏனெனின், அகம் பாராவழி, கண்கள் பாரா, காதுகள் கேளா. செவியிற்பட்டதும் கண்ணிற்பட்டதும் அகத்திற் படா தொழிதலுமுண்டு. யாதாயினு மொன்று காலிற்பட்டது அல்லது கையிற்பட்டது என்று சொல்வதோடொக்க உளத்திற் பதிந்ததை அகப்பட்டது என்று சொல்லுகிறோம். மேற்கூறியவற்றால் 'அகம்' என்பதும், 'நான்' என்பதும் ஒரு பொருட் கிளவிகள் என்பது தெரிகிறது. வடமொழியில் 'அகம்' என்ற சொல் (Latin Ego) நான் என்று பொருள் தருவதைத் தமிழர் ஆராய்வாராக,

'அகப்பட்டது' என்பதன் பொருளுக்கிசையவே, 'புறப்பட்டது' என்பது 'வெளிவந்தது' என்று பொருள் தரும். "கப்பல் புறப்பட்டது" எனின், அது துறையைவிட்டு வெளியே சென்றது என்பதுவே முதற்பொருள். இப்போது 'புறப்பட்டது' என்றால் அசைந்தது, ஊர்ந்தது, நகர்ந்தது, தோன்றியது என்று பொருள் செய்கிறோம். இதில் தவறொன்றுமில்லையாயினும் முதற்பொருளின்னதென்பதை நாம் மறக்கலாகாது. புறப்பாடு என்ற சொல் புறப்படுகையை யுணர்த்துவதுடன் உடம்பிலெழும் பரு, கட்டி (Boil) இவற்றையுங் குறிக்கும். இப் பொருளில் அச்சொல்லின் நேரான கருத்து அமைந்திருத்தல் காண்க. நம்மைச் சேராதவரை 'புறத்தியார்' என்று சொல்வது வழக்கு. அகத்தோடு பொருந்தாதவரை யங்ஙனங் கூறுவது ஒக்கும். 'புறத்தியார்' என்பது 'பிறத்தியார்' எனவும் வரும். இரண்

டாவது மொழி 'பிறர்' என்பதுடன் தொடர்புடையது. 'புறத்தியார்' 'பிறர்' என்பவற்றிற்குள்ள கேண்மை தெளிவாய்த் தெரியவில்லை.

இனி, அகம் என்பது வீட்டையும், புறமென்பது வெளியையு முணர்த்தி ஒன்றிற்கொன்று எதிர்மறையாய் நிற்பதைச் சற்று ஆழ்ந்து நோக்குவாம். வீடும் வெளியும் பார்வைக்கு எதிர் மறையாய்த் தோற்றினும் உண்மையி லவை முரண்படுவன வல்ல. வீடென்பது வெளியிற்றோன்று மொன்றே யன்றி யதனின்றும் வேறுபட்டதன்று. வெளியிலொரு பகுதியில் சுவரெழுப்பித் தடுப்புச் செய்து ஆக்கப்படு மொன்றே வீடென வழங்குவது. உண்மை யிங்ஙனமிருப்ப, எவ்வாறு அது வெளியுடன் முரண்படும்? வெளியைத் தடுப்பதனாலன்றோ மனைக்கு விலங்கென்று பெயர் எழுந்தது. விலங்கென்பது தளை; தளை என்பது கட்டு; கட்டப்பட்டது வீடு. வெளியைக் கட்டி வளைத்து வீடெழுப்புவர். கட்டுதல்=அடைத்தல்; 'நீர் கட்டுதல்' என்பதனானுணர்க. ஆதலின், வெளியின் ஒரு வேற்றுமையே வீடாவதன்றி வேறு தனிப்பொருளன்று. இரண்டும் நிலம், புனல், எரி, வளி, விண் என்பவற்றின் கூட்டமேயாகும். ஆயினும், வெளியிற்கிடையாத ஒரு வகை அமைதியு மின்பமும் வீட்டிலுண்டு. இது உடலின் கண்ணமைந்த அகத்திற்கும் பொருந்தும். வாயில், நடை, முற்றம், பள்ளியறை, கூடம், அடுப்பங்கரை, தோட்டம் ஆகிய இவற்றின் சேர்க்கையால் மாத்திரம் ஓரிடம் வீடாகி விடாது. கை, கால், தலை முதலியவை அகமாகா. காதலிருவரின்றி வீடமையாது. இவர்களுள் காதலியே பெரும்பாலும் வீட்டில் திகழ்பவள். காதலியை மனைவி என்றும் இல்லாள் என்றும் தமிழர் கூறுவர்; கணவனை யவ்வாறு கூறார். தன்னினும் ஒருவாறு வேறுபட்டு, அன்பினால் தன்னுடன் ஒன்றாய் இணைக்கப்பட்ட ஓருயிர்த்துணை யில்லாவிடின் அறமேது வீடேது? வெளியிற் றிரிந்து தொழிலியற்றுங் கணவனும் வீட்டிலிருந்து இனிமை செய்யுங் காதலியும் நுகரு மின்பங்களில்லா வீடு வீடாகுமோ? வையக வாழ்விற்கென்று பலவகைத் தொல்லைக் குட்பட்டுழலும் மகன், அன்புடைய மனைவி யுறையுமிடஞ் சேர்ந்ததும் கவலை

நீங்கி யமைதி பெறுதல் இயல்பு. பொருள் தேடுதலிலும், தன் நோக்கத்திற்கு எதிராய் நிற்பவரை மேற்கொள்ளுதலிலும் ஒருவன் படும் வருத்தங்களும் துன்பங்களும் மனையிலு மனைவியின் தொடர்பாலு மல்லவோ அவ்வுறைவிடம் யாது. பயனைத் தரும்? இங்ஙனம் ஒரு மகனுக்கு அமைதி தரும வீட்டைப்போல் மறுமையில் உயிருக்கு அமைதி தருமொன்றைத் தமிழர் வீடென்றே சொல்வர்.

பொருள் வயிற் பிரிந்த காதலன் வரவை எதிர்நோக்கியுருகி மெலிந்து நெஞ்சு புண்ணுகுந் தலைவியின் தன்மையைக் கூறும் அகப்பாடல்களின் சுவை நனி இனிது. இவ்வகப்பாடல்களில் கருதத்தக்க தொன்றுண்டு. காதலர்களைப்பற்றிப் பிறமொழி மக்கள் எழுதிய நூல்களில் காதலர்களின் தோற்றம் நுண்மையாய் விரித்துரைக்கப்படும். அவர்களது உடையின் சிறப்பு, அணிவகை, உறுப்பமைப்பு முதலியவை ஒவ்வொன்றும் நவிற்சி பெறும். கற்பவர் உளத்தி லக்காதலரின் வடிவம் பதியுமாறு அடிமுதல் முடிவரை யவரைச் சொற்களால் எழுதிக் காட்டுவர். பண்டைத் தமிழ் நூல் வல்லோர் அங்ஙனஞ் செய்யவில்லை. காதலரின் அழகைப் படிப்பவர் வியந்து நோக்கவேண்டுமென்று அவர் விரும்பினரில்லை. அவர் கொண்ட கருத்திற்கு அது பொருந்தாது. புணர்தல், ஊடல், இரங்கல் முதலிய உணர்ச்சிகளையே யவர் கற்பவர் உளத்திற பெருக்க முயன்றிருக்கின்றனர். ஆதலின் பண்டைத் தமிழ்ப்புலவர் அகப்பாடல்களில் உயிரின் வெவ்வேறு நிலைகளாகிய புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் என்பவற்றையே பெரிதுங் கருதிப் பாட்டல்கள் அமைத்தனர் என்பது விளங்கும். அறம், பொருள், இன்பம், வீடு என்பன ஒருவனைக யில் இம்மையையும் பிறிதொரு வகையில் மறுமையையுஞ் சுட்டுகின்றன. தமிழான்றோர் எப்போது மிரண்டையுங் கூட்டியே நூல் செய்தார். நாம் ஆராயப்புகுந்த வீடு என்ற சொல் இருமைக்கும் பொதுவாதல் நோக்கி இவ்வளவு கூற நேர்ந்தது.

தடுப்புச் சுவரிடிந்தால் வீடு வெளியாகும். கட்டு நீங்கினல் அகம் புறமாகும். அகமாகிய 'நான்' புறமாகிய வெளியிற் கலத்தலைத் தமிழர் வீடு என்பர். வீடு=விடுதலை; விடுதி என்ற மொழி

யைய்யு மாராய்க. வெளி என்பது பெருவெளி, வெட்டவெளி; வெட்டவெளி=இறைவன். வீடு கட்டப்படுமாறே, யாக்கையுங் கட்டப்பட்டதாகும். யாத்தல்=கட்டுதல். அகம் புறமென்றெடுத்துக்கொண்ட இவ்வாராய்ச்சி உயிரையு மிறைவனையுஞ் சுட்டி இரண்டு மொன்றுமாறு காட்டிற்று.

முற்றும்.

---

## தடாதகைப்பிராட்டியார் திருமணம்

### (திருவிளையாடல்)

உமையம்மையார் மலயத்துவசனென்னும் பாண்டிய மன்னனுக்குப் புத்திரியாய்ப் பிறந்து அவனுக்குப் பின் தடாதகைப் பிராட்டியார் என்னும் பெயரோடு மதுரைமாநகரிலுள்ளார்க்குத் தாய்போலிருந்து அரசுசெய்துகொண்டிருக்கும்நாளிலே, அவளுக்குத் திருக்கல்யாணஞ் செய்யும் பருவம் வந்தடுப்ப, அதுகண்டு மாதாவாகிய 'காஞ்சனமாலை எம்பெருமாட்டியைநோக்கி, உனக்குக் கன்னிப்பருவம் வந்தும் இன்னமும் விவாகம் இல்லையே என்று, துன்பமுற்றாள். தடாதகைப்பிராட்டி, தாயே! நீ நினைந்த எண்ணம் ஆம்பொழுது ஆகும்; நீ இரங்கவேண்டாம். நான் போய் இப்பூமண்டலத்தினும் எண்டிசைகளினும் என் வெற்றியை நாட்டி மீளுவேன்; நீ இங்கே இரு என்று கூறி சுமதியென்னும் மந்திரிகளுடனும் நால்வகைச் சேனைகளுடனும் 'வடதேசத்திலுள்ள அரசர்களை வென்று, பின் இந்திரன் முதலிய திக்குப் பாலர்களை வென்று, திறைகொண்டு, திருக்கைலாயமலையை நோக்கிச்சென்றாள். தடாதகைபபிராட்டியுடைய படைவீரர்கள் திருக்கைலாய மலையை வளைந்து கொண்டார்கள். அது கண்ட திருநந்திதேவர் கைலாசபதியாகிய சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கி, நிகழ்ந்தனவற்றை விண்ணப்பஞ்செய்தார். பரமசிவன் புன்னகைசெய்து, பினாகவில்லையும் படைக்கலங்களையும் திருக்கரத்தில் எடுத்துக்கொண்டு, இடபவாகனத்தின் மேலேறி யுத்தகளத்திற் சென்றார். அங்கே பெண்சிங்கம்போல நிற்கும் தமது தேவியாருடைய திருவுருவத்தையும் வீரத்தையும் எதிர் கண்

டார். தடாதகைப்பிராட்டியும், ஒருவீரக்கழல் கட்டிய திருவடியும், புலித்தோலுடையும், மழுப்படை யேந்திய திருக்கரமும் திருவெண்ணீறணிந்த உபவீதம் பொருந்திய திருமார்பும், சடாமுடியும், தன்னையே நோக்குகின்ற பெருங்கருணைத் திருநோக்கும், பெற்ற தன்னுடைய வலப்பாதியை எதிர்கண்டாள். கண்டபொழுது நடுவிலுள்ள ஒரு தனம் மறைந்தது. உடனே உள்ளத்தில் நாணமும் மடனும் அச்சமும் உதிக்க, முன்னையன்பு வந்து குடிகொள்ள, அளகம் பிடரியிலே தாழ, கண்கள் புறவடியை நோக்க, தலைகுனிந்து நின்றாள். முன்னாளிலே தோன்றிய அசரீரி வாக்கை அறிந்த சுமதி தடாதகைப்பிராட்டியை வணங்கி நின்று, தாயே! இந்தக் கைலாசபதியே உன்மணவாளன் என்றான். எம்பெருமாட்டி அதுகேட்டு, பேரன்பு பெருக நின்றாள். கைலாசபதி பிராட்டியை நோக்கி, நீ திக்குவிசயத்தின் பொருட்டு எப்பொழுது புறப்பட்டாயோ, அப்பொழுது தொடங்கி நாமும் மதுரையைவிட்டு, உன்னைப் பிரியாது தொடர்ந்து வந்தோம். இதற்கு எட்டாநாளாகிய சோமவாரத்திலே சுபவேளையிலே உன்னை மணஞ்செய்ய வருவோம்; நீ மதுரைக்குப் போ என்று திருவாய்மலர்ந்தருளினார். அது கேட்ட தடாதகைப்பிராட்டி மதுரையை அடைந்து மகளிர்கள் அட்டமங்கலத்தோடும் எதிர்கொள்ளச் சென்று, திருமாளிகையிலே புகுந்தாள். மந்திரிமார்கள் திருக்கல்யாண வோலை எழுதி, எல்லாத் தேயங்களுக்கும் விடுத்து, மதுரை நகரமெங்கும் மணமுரசு அறைவித்து இந்திர லோகமும் காணும்படி சிறப்பித்தனர். சிவபெருமான் தாம் வாக்கருளியபடி பிரமாதி தேவர்களுடன் மதுரைக்கெழுந்தருளி, தடாதகைப்பிராட்டியாரைத் திருமணம் புரிந்தருளினர். அப்போது தேவர்கள் பூமாரி பெய்தார்கள்; அரம்பையர்கள் நடித்தார்கள்; விஞ்சையர்கள் கீதம் பாடினார்கள்; முனிவர்கள் அரகர என்று தோத்திரஞ்செய்தார்கள்; தேவர்கள் உரோமஞ்சிலிர்ப்பப் பரவசரானார்கள்; சிவகணர்கள் சிரசின்மேற் கைகுவித்தார்கள். அங்குள்ளார் யாவரும் திருக்கல்யாண தரிசனத்தாலாகிய பேரின்ப வெள்ளத்தில் மூழ்கினார்கள்.

---

# தமிழ் நிதி

[S. A. திருமலைக்கொழுந்துப் பிள்ளை B.A.]

## ஆப்பிரிக்கா தேசத்திய அதிசயங்கள்

௧. கரியர் வாழும் பூமியாகிய ஆப்பிரிக்கா அநேக அதிசயங்களைக் கொண்டுளது. சிலவற்றை மட்டுங் கூறுதும் :

குதிரை கொல்லி ஈயென்ப தொன்றுண்டு. இவ்வீ குதிரையைக் கடித்த மாத்திரையானே இரையெடுக்க வோர் சிறிதும் இயலாமல் மூர்ச்சித்து குதிரை இரண்டொரு தினத்தில் மடியும். மற்றைப் பிராணிகளைக் கடிப்பினும் அவை குதிரையைப்போல் மரணமுறுவதில்லை. இங்ஙனம் இந்த ஈ கடித்து மரணமடையாத குதிரை பின்னர் இக் கடியால் அவத்தை யுறுவதில்லை. ஆப்பிரிக்காவில் இத்தகைய குதிரைகளுக்கு விலையதிகம்.

இதுவன்றி, காலாக்கினி எறும்பொன் றுளது. இவ் எறும்புகள் ஒன்றுகூடி வரும்பொழுது ஓர் பிராணியும் எதிர் நிற்கலாற்றாது. புலியாயினுஞ் சரி சிங்கமாயினுஞ் சரி எதுவும் இவற்றிற்கு இரையாகிவிடும். இவ் வெறும்புகள் கோடிக் கணக்காய் தேகத்திலேறி பிராணியை என்பும் மிஞ்சாவண்ணம் தின்றுவிடும். இவ் வெறும்புக் கூட்டத்தைக் கண்டால் கிராமத்தார் அனைவரும் ஊரைவிட் டப்பாற் செல்வர். இக் கூட்டம் தொலைந்த பின்னரே ஊருக்குத் திரும்புவர். பின்னர் புசித்தற்கேற்ற பண்டம் ஒன்றும் அவர்க்குக் கிட்டாது தவிப்பர்.

மீற்றும், குட்டி மனிதரெனும் மாந்தர் வர்க்கமும் அவண் காணப்படும். இவர்கள் சாதாரண மனிதர் அளவில் பாதியுயரமே வளர்ந்திருப்பர். அறிவு மிகக் குறுக்கம்.

மற்றப்படி யங்கே காணக்கூடிய அரியவை . ஒட்டகத்தையும் சிவிங்கியையும் ஒன்று கூட்டினாற்போன்ற வோர் பிராணி, ஒன்று. இது Giraffe எனவும் Cameleopard எனவும் பெயர் பெறும். நீர்க்குதிரை எனப் பெயர்கொண்ட வோர் பிராணியொன்று. இதுவே Hippopotamus. இதன் வாய் திகிலை விளைக்கும். பற்கள் மிக்க விலையுயர்ந்த தந்தங்கள். தீக்கோழியொன்று இதன் இறகு விலையுயர்ந்தது.

நீலநதி வடக்காயோடி எகிப்து நாட்டிற் பாயா நிற்கும். காங்கோவெனும் நதி சாலவும் பெரிது. சாம்பசி என்னும் நதி அதியற்புத அருவிகளை யுடைத்து.

---

## தென்பூமியாகிய ஆஸ்திரேலியாவின் அதிசயங்கள்

௨. தென்பூமியாகிய ஆஸ்திரேலியாக் கண்டம் பலவகைத் தானும் நாம் வாழும் வடபூமிக்கு மாறுமாறான தேசம். உத்தராயண காலத்தில் நமக்கு சூரிய வெப்பம் மிகக் கடுமை; அக்காலம் தென்பூமியில் பனி மிகுதி. அங்ஙனமே நமக்கு தக்ஷிணாயனமாகும் காலத்தில் நமக்குக் குளிரும் அவண் இருப்பார்க்கு வெப்பமும் மிகுதி.

அன்னப்புள் சாலவும் வெண்மை நிறமுடையதா யிருப்ப ஆங்கோ காக்கையினும கரியதாயிருக்கும். இத்தகைய காரன்னமே யன்றி, முட்டையிடும் விலங்கும், குட்டிகளைக் காத்தற் கேற்ற பைகளை நெஞ்சிற்கொண்ட ஒரு வகை மான்போன்ற கங்காரு என்னும் பிராணியும் அவண் காணப்படும்.

அவண் உறையும் பூர்வீக மாந்தர் 'பூமராங்கு' எனும் வளை கொண் டெறிவதில் மிகவும் வல்லார்.

ஆதியில் அந்நாடு ஆங்கில நாட்டில் பெருங் குற்றஞ்செய்த துட்டரைத் தேச பிரஷ்டஞ்செய்து அனுப்புதற்காக ஏற்பட்டிருந்தது. பின்னர் அங்கே தங்கம் விளைவதுதென்படவே நரக பூமிபோற் றோன்றிய அத்தேசம் சொர்க்க லோகம்போல் மாறியது.

இதற்குத் தென்பால் மாந்தர் வாழ்தற்கு மிக இனிமையான ஓர் த்வீபம் உளது. இதுவே தாஸ்மானியா (Tasmania.)

---

## காதற்ற ஊசியும் வாராதுகாணும் கடைவழிக்கே

௩. இவ் வாசகம் எழுதிய முறிவொன்றைக் கண்ட மாத்திரையானே நவகோடி நிதிபடைத்த பட்டினத்தார் சடக்கென யாவற்றையும் உதறிவிட்டுத் துறவுபூண்டார். அவர் உலகிற்குக் கூறிய உறுதி யாது?

"பிறக்கும் பொழுதுகொ டுவந்த தில்லை பிறந்துமண்மேல்
இறக்கும் பொழுதுகொ டுபோவ தில்லை இடைநடுவிற்
குறிக்குமிச் செல்வம் சிவன்தந்த தென்று கொடுக்கறியாது
இறக்குங் குலாமருக் கென்சொல்லுகேன் இறைவா கச்சியேகம்பனே."

பெருந்தனம் படைத்தீர், அருளைக் கைவிடாதீர். மமதை கொள்ளாதீர், ஏழைகள்மீது இரக்கம் வைமின். பெரியாரைத் துணைக்கொண்மின்.

---

## அருள் குறுகிய செல்வர்க்கு வரும் அரிய நோய்

பெருத்திடு செல்வமாம் பிணிவந் துற்றிடில்
உருத்தெரி யாமலே ஒளிம ழுங்கிடும்
மருத்துள தோவெனில் வாகடத் தில்லை
தரித்திர மென்பதோர் மருந்திற் றீருமே."

பெருஞ் செல்வமென்னும் நோய ஒருவனை வந்து பீடிக்குமானால் தன்னைக் காணவரும் பழய சிநேகிதர்களையும் இனங் காணவண்ணம் கண்ணொளி மழுங்கிப்போம். இந்நோய் தீரும் மருந்து ஏதேனு முளதோவெனின் வயித்திய நூல்களிற் கிடையாது. ஆயின் தீருமவழி ஒன்றுங் கிட்டாதோவெனின் தரித்திரம் எனும் மருந்தைக் கொடுப்பின் கண்ணிற்கு நல்லொளி திரும்பவும் வரும்.

துரோணாசாரியர் தனது சிநேகன் தானேயென நினைந்து துருபதனிடஞ் சென்ற பொழுது அவன் அவரை அவமதித்த விதத்தைப் பாரதத்திற் காண்க.

---

## எளியார்க்கு உபதேசம்

௫. வறுமை எவ்வளவு வாட்டினும் தெய்வத்தை யிகழாது 'இது நாம் முன்செய்த தீவினையின்பயன்' எனக்கருதி பொறுமையாய்த் தாங்குக. பாவமற்ற பட்டினத்தடிகளைக் கழுவிலேற்றப் பார்த்தபொழுது அவர் யாதே கூறினர்? 'பிறப்பதற்கு முன் செய்த தீவினையோ இங்ஙனே வந்து மூண்டதுவே' எனத் தம்மையே நொந்துகொண்டாரல்லரோ?

'என்னினும் மிக்க தாழ்ந்த அறிவும் ஆற்றலுமுடையான் இங்ஙனம் நன்றாய் வாழ நான் கஷ்டத்திலுழல்வது நியாயமா' எனப் பொறாமையேனும் தெய்வநிந்தனையேனும் பிறவாமலிருக்க வேண்டும். எல்லாம் மாய விளையாட்டெனத் தெளிந்து தெய்வம் விட்ட கதிக்கண் அமைக. கடிதில் எதிர்பாராத சுகம் உதயமாகும்.

'மறந்தும் பிறன்கேடு சூழற்க' எனத் தெய்வப் புலவர் கூறியவண்ணம் நெறியல்லா நெறியொழுகி பாவத்திற்கு ஆளாக வேண்டாம். பொய்யுரைத்துப பாவத்தை மூட்டை கட்டவேண்டாம்.

சிறிதுகாலம் மானத்தை முட்டின்றிக் காப்பின் அருள் தக்கபடி வழி காட்டி நல்குரவை யோட்டும். தரித்திரத்தை ஓர்வகைப் பரீட்சையாகக் கருதி அறத்தின் வழியை விட்டு அகலாது அதன்கண் வெற்றிபெறுக.

---

## நிதியாளர்க்கு உபதேசம்

பிறக்கும்பொழுது தேகத்தையேனும் கொண்டு வந்தோம், இறக்கும் பொழுதோ அதனையும் விட்டு ஓடுகின்றோம். ஆகவே இம் மண்ணுலகில் நமக்கென யாதே பொருள்? எல்லாம் ஈசனதே. 'எல்லாம் உன் உடைமையே, எல்லாம் உன் அடிமையே' என்றனர் தாயுமான சுவாமிகளும். ஊன்றி நோக்கில் தற்சுதந்தரமற்று மாயை வயப்பட்ட நமக்கு உடல்தான் சொந்தமாமா? உயிர்தான் சொந்தமாமா. எல்லாம் பொய்யுறவே. ஆதலின், புண்ணியவயத்தால் நமக்கிருக்கும் சம்பத்தால் நாமே மகிழாது நம்மாலியன்ற வுதவியை உறவினர்க்கும் வறிஞர்க்கும் மனமகிழ்ந்து புரிவோமாக.

நிதிச்செருக்கால் வரும் மமதைக்கு ஆளாகாதிருக்கக் கடவோம். வீணான டம்பச் செலவை செய்யாதிருக்கக் கடவோம்.

தெய்வ சிந்தனையை ஓர் கணத்தும் விடாத பரமசாதுக்களைத் துணைக்கொண்டு, காலத்தை நல்வழிக்கண் ஓட்டுவோமாக. அத்தகைய பெரியார் ஒருவரையேனும் ஆதரித்து ஈசனது அரு

ளிருந்துப் பாத்திரமாகக் கடவோம். இதனினும் நமக்கு வேறே எதுவே பெருநிதி?

ஜனகர் ஓர் இராஜவிருடி. அவர் யாக்ஞவல்க்க முனிவரைத் தம்மை விட்டகலாத தோழராகக் கொண்டு பிரம விசாரமே காலப்போக்காகக் கொண்டு முத்திக்கு வித்தான விதத்தை மறவாதிருப்போமாக.

பசித்தோர் முகத்தைக் காணலுமே, அவர்களை அன்புடன் வரவேற்று பசிப்பிணியை நீக்கக்கடவோம்.

சேற்றிலோடும் பிள்ளைப் பூச்சியைப்போல் எத்தகைய சம்பத்துடையோயினும் பிரபஞ்ச மாயைக்கள் ஒட்டிக்கொள்ளாது ஒழுகவல்லவனே ராஜயோகியும் ஆவன்.

---

## மகிழ்ச்சிக் குறிப்பு

புதிய ஆண்டிற்கு அரசியலார் தமிழன்பர்கள் சிலர்க்கு அளித்திருக்கும் பட்டங்கள் குறித்துப் பொதுவாக மிக மகிழ்கின்றோம். சிறப்பாக, தமிழ் நாட்டு அமைச்சரும், திருநெல்வேலித் தென்னிந்திய தமிழ்ச் சங்கத் தலைவரும், நமது புரவலருமாகிய சென்னை வளர்ச்சிநெறி யமைச்சர் திருவாளர் திவான் பகதூர் T. N. சிவஞானம் பிள்ளை, B.A., அவர்களுக்கு 'சர்' என்னும் பட்டமும்; தமிழன்பரும், தமிழ்ப் பண்டிதர்களின் பாதுகாவலரும், சென்னை அரசியல் தேர்ச்சியாளரின் அமைச்சரும் ஆகிய திருவாளர் R. கிருஷ்ணராவ் பான்சலே அவர்கட்கு 'இராவ் பகதூர்' என்னும் பட்டமும்; தமிழ்ப் புலவரும் (Retired Veterinary Supdt) ஆகிய திருநெல்வேலி, வெள்ளகால் திருவாளர் V P. சுப்பிரமணிய முதலியார் அவர்கட்கு 'இராவ் சாகேப்' என்னும் பட்டமும் கிடைத்திருப்பதுபற்றி நாம் மிக மகிழ்கின்றோம். இவர்கள் இன்னும் நீடுவாழ்ந்து பெரும் பட்டங்கள் பெற்றுத் தமிழுக்கும் தமிழ்மக்கட்கும் தமிழ் நாட்டிற்கும் வேண்டுவன செய்து அழியாப் பெரும்புகழ் எய்துமாறு எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகின்றோம்.

சித்தாந்த நூற்பதிப்புக்கழக ஆதரவில் நடைபெற்றுவரும்

## திருநெல்வேலி,
## தென்னிந்திய சைவசித்தாந்த சங்கம்

இச் சங்கத்தாரால் மூன்றாவது ஆண்டாக நாளது குரோதன வருடம் 1101-ம் ஆண்டு ஐப்பசித் திங்கள் 15, 16-ஆந்

தேதிகளில் (31வ அக்டோபர், 1வ நவம்பர், 1925) திருநெல்வேலி, தூத்துக்குடி, ஓட்டப்பிடாரம், நாகர்கோயில், திருவனந்தபுரம், தஞ்சாவூர் முதலிய இடங்களில் நடத்திய திருக்குறள், சமயபாடம், பெரியபுராணம் முதலிய பரிசுப்பரீட்சைகளிற் றேர்ந்தவர்களின் பெயர் முதலியன நாளது தைத் திங்கள் வெளிவரும். 'செந்தமிழ்ச் செல்வி'யின் நான்காம் தொகுதி முதல் இதழில் வெளியிடப் பெறும். அதற்குரிய பரிசுகளும், தேர்ச்சி இதழ்களும் வருகிற சூன்மீ நடைபெறப்போகும் நமது சங்க ஆண்டு விழாவிற் கொடுக்கப்படும். சென்ற 2-வது ஆண்டைவிட இவ்வாண்டில் இருமடங்கு அதாவது 152 மாணவர்கள் மனுச் செய்திருந்தார்கள். வாராமலிருந்தவர்கள் மிகச் சிலரே. வருகிற ச-வது ஆண்டுப் பரீட்சைக்கு இன்னும் நூற்றுக்கணக்கான அன்பர்கள் வருவார்களென்று தெரிந்து மகிழ்கிறோம்.

---

# தென்னிந்திய தமிழ்ச் சங்கம்

## திருநெல்வேலி

தலைவர் : **சர். T. N. சிவஞானம் பிள்ளையவர்கள்** B.A. M.L.C.

சென்னை வார்ச்சிநெறி யமைச்சர்.

பரீட்சைக்குரிய பாடமுறைகள் முன்னமே 'செந்தமிழ்ச் செல்வி' 3-வது தொகுதி 7, 8-ம் இதழ்களில் வெளிவந்திருக்கின்றன.

இத் தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தார் ஏற்படுத்தியிருக்கும் தமிழ்த் தேர்வு (Entrance or Matric) இளந்தமிழ்ப்புலவர் (F.A.) தமிழ்ப்புலவர் (B.A.) சிறப்புப் பட்டத்திற்குரிய பாடப் பகுதி (B. A. Honours' Course) முதலிய தேர்வு முறைகளுக்குரிய பரீட்சைகள் திருநெல்வேலி, திருச்சிராப்பள்ளி, சிதம்பரம், சென்னை, திருவனந்தபுரம் ஆகிய ஐந்து நகரங்களிலும், பதின்மருக்கு மேல் விண்ணப்பங்கள் இருக்குமானால் முக்கியமான பிற இடங்களிலும் 1926 ஜூன்மீ 28, 29, 30-ந் தேதிகளில் நடத்தப்படும்.

| எண். | தேர்வுப் பாடம். | மாதம். | நாள். | பகல். | அம்சம். |
|---|---|---|---|---|---|
| க. | இலக்கணம். | ஜூன். | முதல் நாள். | 10-1, 2-5. | 100, 100. |
| உ. | இலக்கியம். | ,, | உ-ம் நாள். | 10-1, 2-5. | 100, 100. |
| ங. | வசனம். | ,, | ங-ம் நாள். | 10-11½ | 75. |
| ச. | வியாசமெழுதல். | ,, | ங-ம் நாள். | 12-1½ | 75 |
| ரு. | செய்யுளியற்றல். | ,, | ங-ம் நாள். | 2½-4½ | 50. |

இப்பரீட்சைவிஷயத்தில் மொத்தத்தில் 100-க்கு 60 எண்கள் வாங்குவோர் முதல் வகுப்பினர். 100-க்கு 50-க்குமேல் 60வரை வாங்குவோர் இரண்டாம் வகுப்பினர். 100-க்கு 40-க்குக் குறையாமல் வாங்குவோர் மூன்றும் வகுப்பினர். இம்முறை எல்லா வகுப்புத் தேர்வுக்கும் உரித்து. தேர்ச்சிக்குத் தகுதியாவார் ஒவ்வொரு பாட வகையிலும் 100-க்கு 25-க்குக் குறையாமல் எடுக்கவேண்டும்.

மேற்படி தேர்வுகளில் தேர்ந்தவர்கள் யாவர்க்கும் சங்கத்தாரால் தேர்ச்சி இதழ்கள் தலைவரவர்கள் கையெழுத்துடனும், சங்க முத்திரையுடனும் அனுப்பப்பெறும். தேர்வுகளிற் றேர்ந்தவர்கள் விவரம் 'செந்தமிழ்ச் செல்வி' முதலிய இதழ்களில் வெளியிடப்பெறும்.

| எண். தேர்வு | முதற் பரிசு. | இரண்டாம் பரிசு. | மூன்றும் பரிசு. |
|---|---|---|---|
| 1. தமிழ்த் தேர்வு. (Entrance or matic.) | 50 ரூபாய் பெறத்தக்க தங்கப்பதக்கம். | 30 ரூபாய் பெறத்தக்க வெள்ளிப் பதக்கம் | 20 ரூபாய் |
| 2. இளந்தமிழ்ப் புலவர் (F.A.) | 75 ரூபாய் பெறத்தக்க தங்கப்பதக்கம் | 50 ரூபாய் பெறத்தக்க தங்கப் பதக்கம் | 30 ரூ. பெறத்தக்க வெள்ளிப் பதக்கம் |
| 3. தமிழ்ப்புலவர். (B.A. & B.A. Hons) | 100 ரூபாய் பெறத்தக்க தங்கத்தோடா | 75 ரூபாய் பெறத்தக்க தங்கப் பதக்கம் | 50 ரூ. பெறத்தக்க தங்கப் பதக்கம் |

தமிழ்த் தேர்வு முறைக்கு ரூபாய் ஒன்றும், இளந்தமிழ்ப் புலவர் தேர்வுக்கு ரூபாய் இரண்டும், தமிழ்ப்புலவர் தேர்வுக்கு ரூபா மூன்றும் சிறப்புப்பாடங்களாகிய (1) காப்பியம் (2) நீதிநூல் (3) சங்க நூல் (4) இலக்கணம் (5) சமய நூல் (a) சைவ சித்தாந்தம் (b) வைணவ சித்தாந்தம் வகை 7-ன்றும் ஒருவரே ஒரே முறையில் பல சிறப்புப் பாடப் பகுதிப் பரீட்சைக்கு வருவதானாலும் ஒவ்வொன்றிற்கும தனித்தனி செலுத்தவேண்டிய கட்டணத் தொகை ரூ. 3 ஆகும். இத்தொகை விண்ணப்பத்துடன் ஒவ்வொரு ஆண்டும் சித்திரைத் திங்கள் முதல் தேதிக்கு முன் சங்க அமைச்சர் விலாசத்துக்கு அனுப்பப் பெறவேண்டும்.

தேர்வுக காலங்களிற் பெண்பாலர்களுக்கு வேண்டிய சௌகரியங்கள் செய்து கொடுக்கப்பெறும்.

பரீட்சை விண்ணப்ப பாரங்களும் பாட முறைகளும் வேண்டுவோர் மேற்படி சங்க அமைச்சர் அல்லது சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத் (லிமிடெட்) தாருக்கு ஒரு அணு தபாற்றலை அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.

இதன் சம்பந்தமாக ஏதேனும் தெரிந்துகொள்ளவிரும்புவோர் சங்க அமைச்சருக்கு ரிப்ளைப் போஸ்ட் கார்டு எழுதித் தெரிந்துகொள்ளலாம்.

அமைச்சர், தென்னிந்திய தமிழ்ச்சங்கம்.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக மேடை,

கீழரதவீதி, திருநெல்வேலி.

---

Printed by Sivakami Vilasam Press: Published by V. Subbiah, for The S. I. S. S. W. P. Society, Ltd. Madras.